உ

கணபதிதுணை.

திருச்சிற்றம்பலம்.

---

மதுராபுரேசர்

# திருவிளையாடற்புராணம்

## மதுரைக்காண்டம்.

---

## பரஞ்சோதிதேசிகர்

மொழிபெயர்த்தருளியது.

திருக்கைலாசபரம்பரைத்திருவாவடுதுறை ஆதீனத்து

மகாசந்நிதானமாகிய

ஸ்ரீலஸ்ரீ

## அம்பலவாணதேசிகசுவாமிகள்

கட்டளையிட்டருளியபடி

மதுராபுரிவாசியாகிய

இ. இராமசுவாமிப்பிள்ளை என்று

வழங்குகின்ற

## ஞானசம்பந்தப்பிள்ளை.

செய்த உரையுடன்.

இராமநாதபுர சம்ஸ்தான இராஜாசேதுபதி ஸ்ரீமத்ஹிரணியக

ர்ப்பயாஜிரவிகுல முத்துவிஜயரகுநாத இராஜா மஹாராஜராஜஸ்ரீ

## மு. பாஸ்கரஸேதுபதியவர்களும்

பாலவனத்த ஜமீந்தாரவர்களாகிய ம-ா-ா-ஸ்ரீ

## பாண்டித்துரைத்தேவரவர்களும்

விரும்பியவண்ணம்

இந்துதியலாஜிகல் யந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

நந்தன௵ மகரமதி.

ஸிவஞாந ரெட்காபிறயிட்.

இதின்விலை ரூபா-௫.

உ

சிவமயம். ஆ.

# மதுரைக்காண்டப்படலசூசிகை.



மதுரைக்காண்ட முற்றியது.

மெய்கண்டதேவர் திருவடிவாழ்க.

சிவஞானயோகிகள் திருவடிவாழ்க.

சிவமயம்.

பரஞ்சோதிதேசிகர்

# சரித்திரச்சுருக்கம்.

இந்நூலாசிரியராகிய பரஞ்சோதியார், சற்றேறக்குறைய இருநூற்றைம்பது வருஷத்திற்குமுன், செய்யப்பொன்னித் திருநதி சூழ்ந்த சோழநாட்டிலே, திருமறைக்காட்டிலே, பரம்பரைச் சைவர்களாகிய அபிஷிக்த பண்டாரங்கள் மரபிலே, மீனாட்சிசுந்தரதேசிகரிடத்தே அவதரித்து, ஒழுக்கம் அன்பு அருள்முதலிய நற்குணங்களோடு வளருவாராயினர்.

பின்பு தக்க பிராயத்திலே, வித்தியாரம்பஞ் செய்விக்கப்பெற்றுச், சிறிது கல்வி கற்றவளவிலே, பிதாவின்மாட்டுச் சமயதீக்ஷையும் விசேஷதீக்ஷையும் பெற்றுப், பல இலக்கணங்களும், இலக்கியங்களும், வடமொழியும் கற்றுணர்ந்தனர்.

பின்னர் நிருவாணதீக்ஷை பெற்றுச், சிவாகமங்களையும், தேவாரம் திருவாசகம் திருவிசைப்பா திருப்பல்லாண்டு பெரியபுராணம் என்னும் அருட்பாக்கள் ஐந்தனையும், சிவஞானநூல்களாகிய மெய்கண்டசாஸ்திரங்களையும் மற்றைய நூல்களையும் ஓதியுணர்ந்து, அபிஷேகம் பெற்று, அருட்சத்தியாகிய ஸ்ரீ மீனாக்ஷிதேவியாரிடத்தே தம்முடைய பிதாவைப்போலப் பெரிதும் அன்புடையராய் அமர்ந்தனர்.

பின்பு பரஞ்சோதிதேசிகர், வேதபுருடனாற் பூசிக்கப்பெற்ற வேதாரணிய க்ஷேத்திரத்திலே அமர்ந்திருக்கும் பொழுது, அவ்வேதாரணிய புராணத்தை மொழிபெயர்த்துப் பாடியருளினர்.

பின்னர் ஆசிரியர் பரஞ்சோதியார் சிவக்ஷேத்திரயாத்திரை செய்யத்தொடங்கி, விராட்புருஷனுக்கு மூலாதார ஸ்தானமாகிய திருவாரூரையும், சுவாதிஷ்டான ஸ்தானமாகிய திருவானைக்காவையும், மணிபூர ஸ்தானமாகிய திருவண்ணாமலையையும், அநாகத ஸ்தானமாகிய ஸ்ரீ சிதம்பரத்தையும், விசுத்தி ஸ்தானமாகிய திருக்காளத்தியையும் மற்றுமுள்ள சிவக்ஷேத்திரங்களையும் தரிசித்துக்கொண்டு, செந்தமிழ்ப்பாண்டிவளநாட்டிலே அவ்விராட்புருடனுக்குத்துவாதசாந்த ஸ்தானமாய், எத்தலங்களையும் படைக்கு முன்னர் முதலிலே விளையாடற் பொருட்டுச் சிவபிரானாலே படைக்கப் பட்டதாய், மேருமலை கைலாசமலை மந்தரமலை கேதாரம் காசிமுதலிய க்ஷேத்திரங்களிலே சிவலிங்கப்பெருமான்கள் முளைத்தருளுதற்கு முன்னமே மூலலிங்கமூர்த்தி முளைத்தருளியிருப்பது நோக்கி, ஸ்ரீவாகீசசுவாமிகள் திருவாய் மலர்ந்

சுருளிய "முளைத்தனை யெல்லார்க்கு முன்னேதோன்றி" என்னுந் திரமிட சுருதியையுடையதாய், உமாதேவியார், சிவபிரான், இவர்களுடைய குமார ராகிய உக்கிரபாண்டியர் என்னு மூவராலே ஆளப பெற்றதாய், எல்லாத்தீர்த் தங்கட்கு மூலமிலே சிவபிரானுலே உண்டாக்கப்பெற்றதும் மேல் உண்டாக் குந் தீர்த்தங்கட்கு மேலானது மாகிய பொற்றாமரைத் தீர்த்தத்தையுடைய தாய் விளங்கும் மதுரையம்பதிசார்ந்து வதிந்தபொழுது, அப்பதி, வசிப்போர் க்கு இம்மையிலே ஜீவன்முத்தியும இறுதியிலே பரமுத்தியும் தரதக்கதா யிருத்தலையும், அங்கே வீற்றிருந்தருளுஞ் சோமசுந்தரக் கடவுள் "உருத்தி ரன் விசுவத்திற்கு அந்தரியாமி" என்னுஞ் சுருதிபபிரமாணத்தை வலியுறுத் தற் பொருட்டுத், தந்திருவுருவில் அரிமர்த்தனபாண்டிய ராஜன் பிரம்பினுலே அடிக்கப்பெற்ற அடித்தழும்பு உயிர்கள் தோறும் படச்செய்ததையும் பற்பல முறை உற்று நோக்கி ஆனந்த வெள்ளத்தில அமிழ்ந்திக், காலந்தோறும் ஸ்ரீ மீனாக்ஷி சுந்தரேசுவரரைத்தரிசனஞ் செய்து கொண்டு சரசுவதிபண்டாரம் என்னும் ஓர் விற்பன்னர் வீட்டில அருட்செலவராய அமர்ந்திருந்தார்.

அங்ஙனம் அமருந்தேசிகர்மாட்டு வேப்பத்தூராரால் செய்யப்பட்ட திருவிளையாடற்புராணம வடமொழிக்கு விரோதமாயும் பத்திரச ஞானரசங் களின்றிப் போலியாயும இருத்தலால், மற்றொன்று வடமொழிக்கு இணங்கக் காவியலக்ஷணத்தோடு செய்தருளவேண்டு மென்று அப்பதியில வதியும் பெரியோர் பிரார்த்தித்தனர்; அதனைச் சிந்தித்துக்கொண்டு பரஞ்சோதிதே சிகர் நித்திரைசெய்யும்போது, ஸ்ரீ மீனாக்ஷிதேவியார் சிறுபருவப் பிராமணப் பெண்போல எழுந்தருளி, "எம்பெருமான்திருவிளையாடலைப்பாடு" என்று அருளிச்செய்து மறைந்தருளினார்; உடனே ஆசிரியர் பரஞ்சோதியார் எழுந்து ஆச்சரிய மடைந்து திருவருளைச் சிந்தித்துத் துதித்து நமஸ்கரித்து, "சத்தி" எனனும் மங்கலமொழியை முதலிலேவைத்துக் காப்பு முதலிய செய்யுட்கள் செய்தருளினர்.

மற்றைத்தினமுதலாகச் சில தினங்களிலே, நாட்டுப்படல நகரப்படலங் களைப்பாடி, வடமொழி ஆலாசிய மான்மியத்தை மொழிபெயர்த்துக்கொ ண்டு, கதாபாகங்களைச் சாரமாகவும சாதுரியமாகவும் கற்பனைகளோடு பக் திரச ஞானரசங்கள் பெரிதும் விரவியவாகவும மற்ற விஷயங்களை விடாமலும் விசேடமாகவும் அமைத்து அதிமதுர கதலீபாகச் செய்யுட்களாகப் பாடியரு ளினார்; முற்றிய பின்னர் வடமொழியோடும இரண்டாமுறை ஒப்புநோக்கிச் செபபஞ் செய்துகொண்டு, சோமவார சுதினத்திலே, சொக்கலிங்கப் பெரு மான் சந்நிதியிலே, ஆறுகாற் பீடத்திலே அப்பதி யாசனும் பட்டர்கள் முத லாகிய பெரியோர்களும் திருத்தொண்டர்களும் சமஸ்கிருத பண்டிதர்களும் தமிழ்ப்பண்டிதர்கள் முதலியோருஞ் சூழ்ந்த மகாசபையிலே அமர்ந்து மதுராபுரேசர் திருவிளையாடற் புராணத்தைச் சரசுவதிபண்டாரம் படிக்கப் பரஞ்சோதிதேசிகர் பிரசங்கித்துச் சிலமாசங்களிலே சமாப்தி செய்தனர்.

பின்பு அறுபத்து நான்கு திருவிளையாடற் போற்றிக்கலிவெண்பா மதுரைப் பதிற்றுப்பத்தந்தாதி முதலிய பிரபந்தங்களும் இயற்றியருளினார்.

இங்ஙனம் லோகோபகாரமாகப் பலநூல்கள் இயற்றிப் பலருக்குக் கற்பித்துத் தமிழ்மொழியை அபிவிர்த்திசெய்து, சிவப்பேற்றிற்குக் காரணமாகிய சிவத்தியானத்தில் வதிந்த பரஞ்சோதிதேசிகர் மதுரையம்பதியிலே சிவபரிபூரணதசை யடைந்தனர்.

---

இத்திருவிளையாடற் புராணம் பிற்காலத்தே பலபிழையுற்றிருத்தலை நோக்கி, மதுரைப்பதிமுதலியவற்றிலேயுள்ள முற்காலத்து ஏட்டுப்பிரதிகளையும், வித்துவச் சிரோமணி ஆறுமுக நாவலரவர்கள் ஒரு முறைபரிசோதித்த பிரதியையும், மதுரை ஸ்ரீஞானசம்பந்ததேசிகசுவாமிகள் ஆதீனத்து வீற்றிருக்கின்ற ஸ்ரீலஸ்ரீ மகாசந்நிதானஞ் செய்தருளிய வடமொழி ஆலாசிய மான்மிய பிரதிபதவியாக்கியானத்தையும் வைத்து ஒப்புநோக்கி, முதலிலே மூலபாடத்தைச் செப்பஞ் செய்துகொண்டு, அதற்கு இணங்க என் புல்லறிவுக்குப் புலப்பட்டமட்டும் ஒருரைசெய்து அச்சிடுவித்தேன்; இன்னும் நலலறிவுடையோர், பொருத்தமில்லாதவைகளைத் திருத்தியருளினால், அவைகளையுந்தழுவி இரண்டாமுறை அச்சிடுவிப்பேன்.

பழைய ஏட்டுப் பிரதிகளிற் சிலவற்றிலே, தலவிசேடப்படலத்திலே, ஆறுஞ் செய்யுளிலே,

"திருவால வாயென்று கேட்டவரே யறம்பெறுவர் செல்வ மோங்குந்
திருவால வாயென்று நினைத்தவரே பொருளடைவர் தேவ தேவன்
றிருவால வாயதனைக் கண்டவரே யின்பநலஞ் சேர்வ ரென்றுந்
திருவால வாயிடத்து வதிந்தவரே பரவீடு சேர்வா ரன்றே."

என்றிருத்தலே வடமொழிக்கும் யுக்திக்கும் பொருத்தமாயிருக்கிறது.

மற்றும் பல ஏட்டுப்பிரதிகளிலும், பலரால் அச்சிடப்பட்ட மூலப் பிரதிகளிலும், உரைப்பிரதிகளிலும்,

"திருவால வாயென்று கேட்டவரே யறம்பெறுவர் செல்வ மோங்குந்
திருவால வாயென்று நினைத்தவரே பொருளடைவர் தேவதே (வைத்)
திருவாலவா (யிடத்து) க்கண்டவரே யின்பநலஞ் சேர்வ ரென்றுந்
திருவாலவா யிடத்து வதிந்தவரே (வீட்டுநெறி) சேர்வா ரன்றே."

என்று பொருத்தமில்லா திருப்பதுபோலச் சிலவிடங்களிலிருப்பவைகளைப் பழைய சுத்தப் பிரதிகளுக்கும் வடமொழிக்கும் இணங்கச் செப்பஞ் செய்திருத்தலைப் பண்டித சிரோமணிகள் கண்டு கொள்ளக் கடவர்கள்.

இங்ஙனம்,
இராமசுவாமிப்பிள்ளை.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.
மதுராபுரேசர்

# திருவிளையாடற்புராணம்

## மூலமும் உரையும்.

## மதுரைக்காண்டம்.

### விநாயகர்காப்பு.

கலிவிருத்தம்.

சத்தி யாயச்சிவ மாகித் தனிப்பர
முத்தி யான முதலைத் துதிசெயச்
சுத்தி யாகிய சொற்பொரு ணல்குவ
சித்தி யானைதன் செய்யபொற் பாதமே.

இதன்பொருள். (உயிர்கள் போகங்களை நுகர்ந்து பரிபக்குவம் அடைதற் பொருட்டுச்) சத்தியாகியும் சிவமாகியும் (பரிபக்குவம் உற்றபின் மீளாத வீடுபேறடைதற்பொருட்டு) ஒப்பில்லாத பரமுத்திஸ்தானமுமான முதற்கடவுளை (இடையூறின்றி யான் இனிது) புகழும் வண்ணம் யானைமுகத்தையுடைய சித்திவிநாயகமூர்த்தியின் சிவந்த பொன்போலும் திருவடிகள் தூய்மையாகிய சொற்களையும் பொருள்களையும் அருளிச்செய்வன என்றவாறு. உயிர்கள் போகம்நுகர்தற்குச் சத்தியோடு சிவம் கூடுதல் கூறுமுகத்தாற் சத்திப்பிரதானஸ்தலம் என்பது தோன்றச் சத்தியைமுதலில்வைத்து ஒடுங்குமுறையாக ஓதினர். சத்தி - அருள்.

---

## பாயிரம்.

### வாழ்த்து.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மல்குக வேத வேள்வி வழங்குக சுரந்து வானம்
பல்குக வளங்க ளெங்கும் பரவுக வறங்க ளின்பம்
நல்குக வுயிர்கட் கெல்லா நான்மறைச் சைவ மோங்கிப்
புல்குக வுலக மெல்லாம் புரவலன் செங்கோல் வாழ்க.

இ - ள். வேதவிதிப்படி செய்யும் யாகங்கள் விருத்தியடைக. (பருவகாலங்களில்) மேகங்கள் நீர்சுரந்து பொழிக. உலகமெங்கும் (பலவகையாகிய) செல்வங்கள் பெருகுக. தருமங்கள் பரம்புக. உயிர்களுக்கெல்லாம் இன்பம்கொடுக்கப்படுக. நான்கு வேதங்களின்சம்பந்தமான வைதிகசைவம்(மற்றைய சமயங்களைக்கீழ்ப்படுத்தித்)தழைத்தோங்கி எவ்வுலகங்களினும் நிலைபெறுக. (இவைகளைக்காக்கின்ற) அரசனது செங்கோல் வாழ்க.—எ - று.

நல்கப்பூகே எனறபாலது நல்குக எனப் படுசொல் தொககது. வேதத்திற்கூறும் வேள்விமுதலியவற்றைக் காரணகாரியமுறையாக வாழ்த்தி, இவையனைத்தும் அரசன் செங்கோல் இல்லாதவழி நடவா என்னும் தலைமைதோன்றப் புரவலன செங்கோல்வாழ்க என இறுதியிற் கூறினர். (க)

## புராணங்கேட்பவர்பேறும்பேறு.

எண்சீரடியாசிரியவிருத்தம்.

திங்களணி திருவால வாயெம் மண்ணல் றிருவிளையாட் டிவையன்பு செயது கேட்போர், சங்கநிதி பதுமநிதிச செல்வ மோங்கித் தகைமைதரு மகபபெறுவர் பகையை வெல்வர், மங்கலநன் மணம்பெறுவர் பிணிவந் தெய்தார் வாழ்நாளு நனிபெறுவர் வானு டெய்திப், புங்கவரா யங்குள்ள போக மூழ்கிப் புண்ணியராய்ச் சிவனடிக்கீழ் நணணி வாழ்வார.

இ - ள். சந்திரனை அணிநத (சடைமுடியையுடைய) திருவாலவாயில் எழுந்தருளியிருக்கின்ற எம்மிறைவராகிய சோமசுநதரககடவுள் செய்தருளிய திருவிளையாடல்களை உள்ளம் உருகிக்கேட்பவா, (வறியராய்ப் புத்திரபபேறில்லாதவராயிருப்பின்) சங்கநிதி பதுமநிதிகளைப்போலச் செல்வத்தையுடையராய் உயர்ந்து நல்லொழுக்கமுடைய புத்திரரைப் பெறுவர். (பகையை வெல்லக்கூடாதவரா யிருப்பின்) பகையை வெல்வர். (விவாகமில்லாதவராயிருப்பின்) மிகக மங்களமாகிய விவாகததைப் பெறுவர். (நோயுடையராயிருப்பின் நோய் நீங்கி மீட்டும்) நோயானது வந்தடையப்பெறார். (குறைந்த ஆயுளுடையராயிருப்பின்) நிறைந்த ஆயுளையும பெறுவர். (இங்ஙனம் இம்மைப்பயன்களை அநுபவித்தபின்) விண்ணுலகிற்சென்று தேவராய் அங்குள்ள போகங்களை மிகநுகர்ந்து பதிபுண்ணியமுடையராய்ச் (சிவலோகத்திலே) சிவபிரான்றிருவடிநிழலிலே தங்கிப் (பேரின்பந்நுகர்ந்து) வாழ்வார்.—எ-று. இவை-பகுதிப்பொருள் விகுதி. (உ)

---

# கடவுள்வாழ்த்து.

சிவம்

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வென்றுளே புலன்க ளைந்தார் மெய்யுண ருள்ளந் தோறுஞ்
சென்றுளே யமிழ்த மூற்றுந் திருவருள் போற்றி யேற்றுக்
குன்றுளே யிருந்து காட்சி கொடுத்தருள் கோலம் போற்றி
மன்றுளே மாறி யாடு மறைச்சிலம படிகள் போற்றி.

இ - ள். அகத்தின்கண்ணே காமமுதலிய உட்புலன்கள் ஆறினையும்வென்று களைந்தவரது தத்துவப்பொருளை உணரும் இருதயங்கள்தோறும் சென்று அவ்விடங்களிலே பேரின்பமாகிய அமிழ்ததனைப் பொழிகின்ற திருவருள்காக்க. வெள்ளிமலை போன்ற இடபத்தின்மீது தோன்றித் தரிசனம்தந்தருளுகின்ற திருக்கோலம் காக்க. வெள்ளியம்பலத்திலே மாறிநடஞ்செய்தருளும் வேதங்களாகிய சிலம்புகளை அணிந்த திருவடிகள்காக்க.—எ-று. 'காமமுதலியன'-காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாற்சரியம். (ஙு)

சத்தி.—வேறு.

சுரும்புமுரல் கடிமலர்ப்பூங் குழல்போற்றி யுத்தரியத் தொடித்தோள் போற்
கரும்புருவச் சிலைபோற்றி கௌணியர்க்குப் பால்சுரந்த கலசம் போற்றி [றி
யிரும்புமனங் குழைத்தென்னை யெடுத்தாண்ட வங்கயற்க ணெம்பி ராட்டி
யரும்புமிள நகைபோற்றி யாரணநூ புரஞ்சிலம்பு மடிகள் போற்றி.

இ - ள். இரும்பினை யொத்த வலிய உளத்தை உருகச்செய்து (பிறவிக்கடலில் அழுந்திய) என்னை (அக்கடலினின்றும் கருணைக்கையால்) எடுத்து அடிமை பூண்டருளிய எம்பிராட்டியாராகிய மீனாக்ஷியம்மையாருடைய் வண்டுகள் இசைபாடப்பெற்ற மணந்தங்கிய மலர்களை அணிந்த அழகிய அளகம் காக்க. உத்தரியத்தையும் தொடியையும் புனைந்த தோள்கள் காக்க. தநுசுபோலும் வளைந்த கரியபுருவங்கள் காக்க. திருஞானசம்பந்தமூர்த்திநாயனாருக்கு ஞானப்பால்சுரந்தருளிய பொற்கலசம்போலும் தனங்கள் காக்க. விளங்குகின்ற இளநகை காக்க. வேதங்களாகிய நூபுரங்கள் ஒலிக்கின்ற பாதங்கள்காக்க—எ-று. (௪)

பரசிவம்.

கலிநிலைத்துறை.

பூவண்ணம் பூவின் மணம்போல மெய்போத மின்ப
மாவண்ண மெய்கொண் டவன்றன் வலியாணை தாங்கி
மூவண்ண றன்சந் நிதிமுத் தொழில்செய்ய வாளா
மேவண்ண லன்னான் விளையாட்டின் வினையை வெல்வாம்.

இ - ள். (பூவும்) அதனிறமும் அதன் வாசமும் (அத்துவிதமாய்நிற்றல்) போலச் சச்சிதானந்தங்களே திருவுருவாககொண்டருளியவரும் தம்முடைய சத்தியின் ஏவலை ஏற்றுப் பிரமா விஷ்ணு உருத்திரராகிய முத்தேவரும் தம்முடைய சந்நிதியிலே படைத்தல் காத்தல் அழித்தலாகிய முத்தொழில்களையும் செய்யாநிற்க சைவற்றிருக்கும் இறைவருமாகிய உயர்ந்தபரசிவனது திருவிளையாடல் (களைக்கற்றல் கேட்டல்) களால் (யாம்) கன்மபாசத்தைக் களைவாம்.—எ-று. (௫)

சிற்சத்தி.

அண்டங்க ளெல்லா மணுவாக வணுக்க ளெல்லா
மண்டங்க ளாகப் பெரிதாய்ச் சிறிதாயி னானு
மண்டங்க ளுள்ளும் புறம்புங் கரியாயி னானு
மண்டங்க ளீன்றா டுணையென்ப ரறிந்த நல்லோர்

இ - ள். (தம்மளவை நோக்கும் வழி) அண்டங்கள் அனைத்தும் அணுபரிமாணமாக மகத்தாயினவரும் அணுக்கள் அனைத்தும் அண்டங்களாக அணுவாயினவரும் அண்டங்கள் உள்ளும் புறமும் சான்றாயினவருமாகிய பரமசிவனை (வேதசிவாகமங்களால்) உணர்ந்த பெரியோர் அவ்வண்டங்களைப்பெற்ற உமாதேவியாருக்குத் துணையாக நிற்பவரென்று கூறுவர்.—எ-று. (௬)

# திருவிளையாடற்புராணம்.

## சொக்கலிங்கமூர்த்தி.

*கலிவிருத்தம்.*

பூவி னாயகன் பூமக னாயகன்
காவி னாயக னாதிக் கடவுளர்க்
காவி நாயக னங்கயற் கண்ணிமா
தேவி நாயகன் சேவடி யேத்துவாம்.

இ-ள். தாமரைமலரில் இருக்குந் தலைவனாகிய பிரமன், இலக்குமிநாயகனாகிய விஷ்ணு, கற்பகச்சோலையையுடைய விண்ணுலகநாயகனாகிய இந்திரன் முதலிய தேவர்களுக்கு உயிர்போன்ற தலைவரும் பெருமைபெற்ற மீனாக்ஷிதேவியாருக்குக்கணவருமாகிய சொக்கலிங்கக்கடவுளின் சிவந்த திருவடிகளை (யாம்) துதிப்பாம்.—எ-று. காவையுடைய விண்ணுலகைக்காவென உபசரித்தார். ௧(எ)

## மீனாக்ஷியம்மையார்

*அறுசீரடியாசிரியவிருத்தம்.*

பங்கயற்கண் ணரியபரம் பரனுருவே தனக்குரிய படிவ மாக்கி
யிங்கயற்க ணகனுலக மெண்ணிறந்த சராசரங்க ளீன்றுந் தாழாக் [ட
கொங்கயற்கண் மலர்க்கூந்தற் குமரிபாண் டியன்மகள்போற் கோலங்கொண்
வங்கயற்க ணம்மையிரு பாதப்போ தெப்போது மகத்துள் வைப்பாம்.

இ-ள். (ஏனைய தேவர்க்கேயன்றிப்) பிரமனுக்குங் கிட்டுதற்கரிய சிவபிரானுடைய திருவுருவமே தமக்குரிய திருவுருவமாக்கி இரண்டறத்தழுவி) இவ்வுலகத்தும் அயலாகிய இடமகன்ற மற்றையவுலகத்தும் உள்ள அளவுகடந்த சர அசர வுயிர்களைப்பெற்றுந் தளராத தனங்களையும தேன்பொருந்திய மலரையணிந்த இருள்போன்ற அளகத்தையுமுடைய குமரியாராகிய மலயத்துவஜ பாண்டியராஜன் புத்திரியாரைப் போலத் திருக்கோலங்கொண்டருளிய மீனாக்ஷிதேவியாருடைய செந்தாமரைமலர்போலும் இரண்டு திருவடிகளையும் எஞ்ஞான்றும் உள்ளத்தில்வைத்து (யாம்) சிந்திப்பாம்.—எ-று. பங்கயற்குமென்னும் இறந்ததுதழீஇய எச்சவும்மை விகாரத்தாற்றொக்கது. கொங்கை கொங்கய் எனப் போலியாயிற்று. ௨(அ)

## சபாநாயகர்.

உண்மையறி வானந்த வுருவாகி யெவ்வுயிர்க்கு முயிராய் நீரின்
றண்மையனல் வெம்மையெனத் தனையகலா திருந்துசரா சரங்க ளீன்ற
பெண்மையுரு வாகியதன் னானந்தக் கொடிமகிழ்ச்சி பெறநக யார்க்கு
மண்மையதா யம்பலத்து ளாடியருள் பேரொளியை யகத்துள் வைப்பாம்.

இ-ள். சச்சிதானந்தமே திருமேனியாகக்கொண்டு உயிர்கள் எல்லாவற்றிற்கும் உயிராய் நுண்பொருளாகியும் நீரிலே தட்பமும் நெருப்பிலே வெப்பமும் நீங்காமைபோலத் தம்மை நீங்காதுதழுவிச் சராசரவுயிர்களைப் பெற்றருளிய பெண்ணுருவாகிய சிவகாமவல்லியம்மையாருக்கு மகிழ்ச்சிமிகும்படி அனைவருக்கும் அணிமையாகிக் கனகசபையிலே திருநிருத்தஞ் செய்தருளும் மிக்க ஒளியையுமாகிய திருநடராஜரை எமது சித்தத்தில் வைத்துச்சிந்திப்பாம்—எ-று. உயிராயும் என்னும் உயர்வுசிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. தன்-சிவம். ஆனந்தம்-காமம். கொடி-வல்லி. (௩)

# பாயிரம். ஸ்ரீ




## சுந்தரபாண்டியர்.

*சடைமறைத்துக் கதிர்மகுடந் தரித்துநறுங் கொன்றையந்தார் தணந்து வேப்பந்*
*தொடைமுடித்து விடநாகக் கலனகற்றி மாணிக்கச் சுடர்ப்பூண் பூண்டு*
*விடைநிறுத்திக் கயலெடுத்து வழுதிமரு மகனாகி மீனநோக்கின்*
*மடவரலை மணந்துலக முழுதாண்ட சுந்தரனை வணக்கஞ் செய்வாம்.*

இ-ள். சடைமுடியை மறைத்து ஒளிவிடுகின்ற இரத்தினமகுடந்தரித்து அழகிய நன்மணத்தையுடைய கொன்றைப் பூமாலையைக்களைந்து வேப்பம்பூமாலையை வேய்ந்து விடத்தினையுடைய சர்ப்பாபரணத்தை விலககிப் பிரகாசமுள்ள மாணிக்கமுதலிய இரத்தினாபரணங்களைப் புனைந்து இடபக்கொடியைவிட்டு மீனக்கொடியைத் தாங்கிக் கயல்போலும் கண்களையுடைய தடாதகைப்பிராட்டியாரைத்திருமணஞ்செய்து மலயத்துவஜபாண்டியராஜனுடைய மருகராகி உலகமுழுவதுஞ் செங்கோல்செலுத்தி ஆட்சிசெய்தருளிய சுந்தரபாண்டியராஜராகிய கடவுளை (யாம்) வணங்குவாம்.—எ-று. மாணிக்கம்-உபலக்கணம். விடையும் கயலும் ஆகுபெயர்கள். (௧௦)

## தடாதகைப்பிராட்டியார்.

*செழியர்பிரான் றிருமகளாய்க் கலைபயின்று முடிபுனைந்து செங்கோ லோச்சி*
*முழுதுலகுஞ் சயங்கொண்டு திறைகொண்டு நந்திகண முனைப்போர்சாய்த்துத்*
*தொழுகணவற கணிமணமா லிகைசூட்டித் தன்மகுடஞ் சூட்டிச் செலவந் [த்*
*தழைவுறுதன் னரசளித்த பெண்ணரசி யடிக்கமலந் தலைமேல்வைப்பாம்.*

இ-ள். பாண்டியர்குலத் தலைவனாகிய மலயத்துவஜபாண்டியராஜனுடைய புத்திரியாராய்த் திருவுருக்கொண்டு வேதசிவாகமமுதலிய கலைகளை ஓதாதுணர்ந்து முடிசூடிச் செங்கோல்செலுத்தி உலகமுழுவதுந் தம்மடிக்கீழ்ப்படுத்தி (அயலரசர் அளக்குந்) திறையையேற்றுத் (திருக்கைலாசமலைக்குச் சென்றபோது) எதிர்ந்த திருநந்திதேவாமுதலிய சிவகணர்களைப் புறங்கண்டு (அரிபிரமேந்திராதிதேவரும்) வழிபடப்பெற்ற தம்முடைய கணவராகிய சிவபிரானுக்கு அழகிய திருமணமாலைபுனைந்து தம்முடைய மகுடத்தைச் சூட்டிச் செல்வமிக்க தம்மரசியலையுங் கொடுத்த மங்கையர்க்கரசியாராகிய தடாதகைப்பிராட்டியாரது திருவடித்தாமரைகளை முடிமீது (யாம்) சூடுவோம். ()-

## வெள்ளியம்பலவாணர்.

*பொருமாறிற் கிளர்தடந்தோ ளொருமாறன் மனங்கிடந்த புழுக்க மாற*
*வருமாறிற் கண்ணருவி மாறாது களிபபடைய மண்ணும் விண்ணு*
*முருமாறிப் பவக்கடல்வீழ்ந் தூசலெனத் தடுமாறி யுழலு மாக்கள்*
*கருமாறிக் கதியடையக் கான்மாறி நடித்தவரைக் கருத்துள் வைப்பாம்.*

இ-ள். போர்புரியுந் துறையில் எழுச்சியுறும் பெரியபுயங்களையுடைய ஒப்பில்லாத இராஜசேகரபாண்டியராஜனது மனத்தின்கண்ணதாகிய வருத்தம் ஒழியவும், வாராநின்ற ஆற்றுநீர்போல அவ்வரசன்கண்களினின்றும் ஆனந்தபாஷ்பம் இடையறாதுபெருகி மகிழவும், (மேலுங்கீழும் போவதும் வருவதுமாகிய) ஊசல்போல மேலுலகிற் செல்வதுங் கீழுலகில் வருவதுமாகிய அச்சுமாறிப் பிறவிக்கடலில் வீழ்ந்துமனந்தடுமாறிச் சுழலுமாநுடர் அப்பிறவிக்கடலினின்றும் முத்தியாகிய கரையை அடையவும் (வெள்ளியம்பலத்திலே) திருவடிமாறி நடித்தருளிய திருநடராசரைச் சித்தத்தில்வைத்து (யாம்) சிந்திப்பாம்.—எ-று. பொருமாற்றில் வருமாற்றில் எனற்பாலன எதுகைநோக்கிப் பொருமாறில் வருமாறிலென றகரவொற்றுக்கள் தொக்குநின்றன. (௧௨)

# திருவிளையாடற்புராணம்.

## தக்ஷிணாமூர்த்தி.

கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி
வல்லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைககப் பாலா
யெல்லாமா யல்லதுமா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச்
சொல்லாமற் சொன்னவரை நினையாம னினைந்துபவத்தொடக்கைவெல்வாம்

இ - ள். (அருள்வடிவாகிய) கல்லாலமர நிழலிலே எழுந்தருளியிருந்து நான்குவேதங்கள் ஆறங்கங்கள்முதலிய எல்லா நூல்களையுங்கற்றுணர்ந்த கேள்வியில் வல்லுநராகிய சநகர் சநந்தனர் சநாதனர் சநற்குமாரர் என்னும் நான்கு முனிவருக்கும் (மன) வாக்குக்களுக்கு எட்டாத நிறைவாய் வேதங்களுக்கு அப்பாலாய் எல்லாமாய் அல்லதுமாய் உள்ள தம்முண்மைவடிவை (அசைவற) இருந்த வண்ணம் இருந்துவிளக்கி உபதேசிக்குமுறையினால் உபதேசித்தருளிய தக்ஷிணாமூர்த்தியைச் சிந்திக்கு முறையிற் சிந்தித்துப் பிறவிக்கட்டினை(யாம்) ஒழிப்பாம் —எ-று. கல்லால்-ஆகுபெயர். நான்குவேதங்கள்-இருக்கு, யசுர், சாமம், அதர்வம் என்பனவாம். ஆறங்கங்கள்-சிட்சை, கற்பசூத்திரம், வியாகரணம், நிருத்தம், சத்தோவிசிதி, சோதிடம் என்பனவாம். இனம் பற்றி மனம் வருவிக்கப்பட்டது. (கசு)

## சித்திவிநாயகக்கடவுள்.

உள்ளமெனுங் கூடத்தி லூக்கமெனுந் தறிநிறுவி யுறுதி யாகத்
தள்ளரிய வன்பென்னுந் தொடராபூட்டி யிடைப்படுத்தித் தறுகட் பாசக்
கள்ளவினைப் பசுபோதக் கவளமிடக் களித்துண்டு கருணை யென்னும்
வெள்ளமதம் பொழிசித்தி வேழத்தை நினைந்துவரு வினைக டீர்ப்பாம்.

இ - ள். உள்ளமாகிய கூடத்தில் மனவுறுதியாகிய கட்டுத்தறியை நாட்டி (ஒருவராலும்) பேதிக்கப்படாத அன்பாகிய சங்கிலியை வலிமைபெறப்பூட்டி அத்தறியிடத்தேகட்டிக் கொடிய மலசம்பந்தமான கன்மவினையையுடைய சீவபோதமாகிய கவளத்தைக்கொடுக்க (அதனை) மகிழ்ச்சியோடும் உண்டு திருவருளாகிய மதப்பெருக்கை (அன்பர்க்குப்)பொழிகின்ற யானையாகிய சித்திவிநாயகக்கடவுளை (யாம்) சிந்தித்து(ப் பிறவிதொறுந் தொடர்ந்து) வராநின்ற கன்மபாசத்தைக்களைவாம்.—எ-று. உள்ளத்தின் மனவெழுச்சியோடு பேரன்புற்று விநாயகமூர்த்தியைத் தியானிப்பவர்க்குப் பசுபோதத்தைக்கெடுத்துச் சிவபோதத்தைக் கொடுத்தருளுவனென்பது கருத்து. (கஎ)

## முருகக்கடவுள்.

கறங்குதிரைக் கருங்கடலுங் காரவுணப் பெருங்கடலுங் கலங்கக் கார்வந்
துறங்குசிகைப் பொருப்புஞ்சூ ரரப்பொருப்பும் பிளப்பமறை யுணர்ந்தோ
மறங்குலவு மகத்தழலு மவுணமடவார்வயிற்றி னழலு மூள [ராற்று
மறங்குலவு வேலெடுத்த குமரவேள் சேவடிகள் வணக்கஞ் செய்வாம்.

இ - ள். ஒலிக்கின்ற அலைகளையுடைய கரியகடலுங் கருமைபெற்ற அசுரராகிய பெரியகடலுங் கலங்கவும், மேகங்கள்வந்து துயிலுஞ் சிகரங்களையுடைய கிரவுஞ்சமலையும் சூரனது மார்பமாகிய மலையும் பிளவுபடவும், வேதங்களையுணர்ந்த அந்தணர்செய்யும் விளங்காநின்ற அறவடிவாகிய வேள்வித்தீயும் அசுரமகளிர்வயிற்றில்(அச்

சத்தால்) உண்டார்தியும் விருத்தியடையவும் வீரம்விளங்கும் வேற்படையை ஏந்தி யருளிய முருகக்கடவுளது சிவந்த திருவடிகளை (யாம்) வணங்குவாம்.—எ-று. (௧௫)

சரசுவதிதேவி.

பழுதகன்ற நால்வகைச்சொன் மலரெடுத்துப் பத்திபடப் பரப்பித் திக்கு
முழுதகன்று மணந்துசுவை யொழுகியணி பெறமுக்கண் மூர்த்தி தாளிற்
றொழுதகன்ற வன்பெனுநா ரொடுத்தலங்கல் சூட்டவரிச் சுரும்புநதேனுங்
கொழுதகன்றவெண்டோட்டுமுண்டகத்தாளடிமுடிமேற்கொண்டுவாழ்வாம்.

இ-ள். குற்றம் நீக்கிய பெயர் வினை இடை உரியென்னும் நால்வகைச் சொற்களாகிய மலர்களை எடுத்து வரிசைபெறவைத்து எண்டிசைகளினுஞ் சென்று (புகழ்) மணங்கமழ்ந்து (வீரமுதலிய எண்வித) மதுரம் ஒழுகி அலங்காரம் அமையப் பேரன்பாகிய நாரினாற் பாமாலையாக இயற்றிச் சிவபெருமானுடைய திருவடிகளில் வணங்கி அணியும்படி வரிபொருந்திய ஆண்வண்டும் பெண்வண்டும் குடைதலால் விரிந்த இதழ்களையுடைய வெண்டாமரைமலரில் இருக்குஞ் சரசுவதிதேவியின் திருவடிகளைச் சிரமீது சூடி (யாம்) வாழ்வாம்.—எ-று. எண்விதமதுரம்,வீரம், அச்சம், இழிப்பு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை (௧௬)

திருநந்திதேவர்.—வேறு.

வந்திறை யடியிற் றாழும் வானவர் மகுட கோடி
பந்தியின் மணிகள் சிந்த வேத்திரப் படையாற் றாக்கி
யந்தியும் பகலுந் தொண்ட ரலகிடுங் குப்பை யாக்கு
நந்தியெம் பெருமான் பாத நகைமலர் முடிமேல் வைப்பாம்.

இ-ள். (திருக்கைலாசமலையில்) வந்து சிவபெருமான்றிருவடிகளில் வணங்கும் அரிபிரமேந்திராதி தேவர்கள் (நெருக்கமுறுவண்ணம்) அவர்கள் முடியுறுப்பு வரிசைகளினின்று இரத்தினங்கள் சிதறும்படி பிரப்பங்கோலால் அடித்துப் பகற்பொழுதினும் இராப்பொழுதினும் அடியார்கள் திருவலகிடுகின்ற குப்பையாகச்செய்யும் எம்பெருமானாகிய திருநந்திதேவரது விளங்காநின்ற திருவடித்தாமரைகளை (யாம்)சிரத்திலே தரிப்பாம்.—எ-று (௧௭)

ஸ்ரீஞானசம்பந்தமூர்த்தி.

கடியவிழ் கடுக்கை வேணித் தாதைபோற் கனற்கண் மீனக்
கொடியனை வேவ நோக்கிக் குறையிரந் தனையான் கற்பிற்
பிடியன நடையாள் வேண்டப் பின்னுயி ரளித்துக் காத்த
முடியணி மாடக் காழி முனிவனை வணக்கஞ் செய்வாம்.

இ-ள். வாசனைமிக்க கொன்றைப்பூமாலையணிந்த சடைமுடியையுடைய தம்முடைய பிதாவாகிய சிவபிரான் (மீனக்கொடியனாகிய மன்மதனை எரியும்வண்ணம்) அக்கினிக்கண்ணினாலே பார்த்துப் பின்பு அவன் மனைவியாகிய இரதி குறைகூறி வேண்டுதல்செய்ய அம்மன்மதனுக்கு உயிரைக்கொடுத்துக் காத்தருளியது) போல (த்தாம் எழுந்தருளியிருந்த மடாலயத்திலே சமணர்கள் இட்டதீயைப் "பையவேசென்றுபாண்டியற்காக" எனத் திருப்பதிகம் ஓதி ஏவி அவ்) வக்கினியாகிய வெப்புநோயின்கண் மீனக்கொடியனாகிய கூன்பாண்டியனை வருந்தச்செய்து பின்பு அவன் மனைவியார

ய கற்பினையும் பெண்யானையின் நடைபோலும் நடையினையும் உடைய மங்கைய ர்க்கரசியார் குறைகூறி வேண்டுதல் செய்ய (த் திருநீற்றுப்பதிகம் ஓதி விபூதியணி ந்து அவ்வெப்புநோயை நீக்கி) அவனுயிரைக்கொடுத்துக் காத்தருளிய சிகரங்கள் பொ ருந்திய மாடங்கள்நெருங்கிய சீர்காழியின்கண் அவதரித்தருளிய திருஞானசம்பந்த மூர்த்திநாயனாரை (யாம்) வணங்குவாம்.—எ-று. கடுக்கை-ஆகுபெயர். (கஅ)

ஸ்ரீவாகீசமூர்த்தி.

அறப்பெருஞ் செல்வி பாகத் தண்ணலஞ் செழுத்தா லஞ்சா
மறப்பெருஞ் செய்கை மாறா வஞ்சக ரிட்ட நீல
நிறப்பெருங் கடலும் யார்க்கு நீந்துதற் கரிய வேழு
பிறப்பெனுங் கடலு நீத்த பிரானடி வணக்கஞ் செய்வாம்.

இ - ள். (முப்பத்திரண்டு) அறங்களையும் (வளர்த்த) பெருஞ்செல்வியாரா கிய உமாதேவியாரைப் பாதித்திருமேனியில் வைத்தருளிய சிவபெருமானுடைய திரு நாமமாகிய ஸ்ரீபஞ்சாக்கரமென்னும்புணையினாலே (பழிக்கு) அஞ்சாத பெரும்பாவச்செ ய்கைகளினின்றுநீங்காத கபடர்களாகிய சமணர்கள் (கல்லோடு பிணித்துப்) போடு வித்த கரிய நிறத்தையுடைய பெரியகடலையும் (தேவர்முதலிய) யாவர்க்குங் கடத் தற்கரிய எழுவகைத்தோற்றமாகிய (பிறவிக்) கடலையும் (எளிதிற்) கடந்த திருநாவுக் கரசுநாயனாரது திருவடிகளை (யாம்) வணங்குவாம்.—எ-று ஏகதேசவுருவகம் (கக)

ஸ்ரீமத்சுந்தரமூர்த்தி

அரவக லல்கு லாரபா லாசைநீத் தவர்க்கே வீடு
தருவமென் றளவில வேதஞ் சாற்றிய தலைவன் றன்னைப்
பரவைதன் புலவி தீர்ப்பான் கழுதுகண் படுக்கும் பானா
ளிரவினிற் றூது கொண்டோ னிணையடி முடிமேல் வைப்பாம்.

இ - ள். பாம்பின் படம்போலும் அகன்ற வல்குலையுடைய மடவாரிடத்து இச்சையை ஒழித்தவர்க்கே மோக்ஷவின்பத்தைக் கொடுப்போமென்று அளவிடப்படாத வேதங்களிற் கூறியருளிய பதிப்பொருளாகிய சிவபெருமானையே பரவையாருடைய ஊடலை ஒழிக்கும்பொருட்டுப் பேயுமுறங்கும் அர்த்தராத்திரி காலத்திலே (தோழமை யினாலே) தூதாகச்செலுத்திய (பேரன்பினையுடைய) சுந்தரமூர்த்திநாயனாரது இரண்டு திருவடிகளையும் (யாம்) சிரமீது தரிப்பாம்—எ-று. அரவு-ஆகுபெயர். தலைவன்றன்னை யே என்னும் பிரிநிலை ஏகாரம் தொக்கு நின்றது. கழுதுமென்னும் உயர்வு சிறப்பும்மை விகாரத்தாற்றொக்கது. (உ0)

ஸ்ரீமந்மாணிக்கவாசகமூர்த்தி.

எழுதரு மறைகள் தேறா விறைவனை யெல்லிற் கங்குற்
பொழுதறு காலத் தென்றும் பூசனை விடாது செய்து
தொழுதகை தலைமீ தேறத் துளும்புகண் ணீருண் மூழ்கி
யழுதடி யடைந்த வன்ப னடியவர்க் கடிமை செய்வாம்.

இ - ள். எழுதுதற்கரிய வேதங்களாலுந் தெளியப்பெறாத சிவபிரானைப் பகற் பொழுதினும் இராப்பொழுதினும் உள்ள ஆறுகாலங்களினும் எந்நாளும் இடைவிடாது

ஞானபூசைசெய்து குவித்த திருக்கைகள் முடிமேலேற (ச்சிவபோத வாசனையுங்கரைந்து பேரன்பினால்) அழுது (சிவானந்தமேலீட்டாலே) பெருகாநின்ற ஆனந்தக்கண்ணீரிலே (திருமேனி) முழுகித் திருவடி (வியாபகத்தில் வியாப்பியமாய் இரண்டறக்) கலந்தமாணிக்கவாசகசுவாமிகளுடைய திருத்தொண்டர்களுக்கு (யாம்) அடிமையாகிவழிபடுவோம்.—எ - று மறைகளும் என்னும் உம்மை தொகை. ஆறுகாலங்கள் காலை, உச்சி, எற்பாடு, மாலை, யாமம், வைகறை. (௨௧)

சண்டேசுரநாயனார்முதலியநாயன்மார்.—வேறு.

தந்தைதா ளொடும்பிறவித் தாளெறிந்து நிருத்தர்திரு தாளைச் சேர்ந்த
மைந்தர்தாள் வேதநெறி சைவநெறி பத்திநெறி வழாது வாய்மெய்
சிந்தைதா னரனடிக்கே செலுத்தினராய்ச் சிவாநுபவச் செல்வ ராகிப்
பந்தமாந்தொடக்கறுத்த திருத்தொண்டர் தாள்பரவிப் பணிதல் செய்வாம்

இ - ள், தம்முடைய பிதாவினது பாதத்தோடு பிறவிவேரையுஞ்சேதித்துச் சிவபெருமானது திருவடிகளை அடைந்த சிவகுமாரராகிய சண்டேசுரநாயனாரது திருவடிகளையும் வைதிக மார்க்கத்தினும் சைவமார்க்கத்தினும் பத்திமார்க்கத்தினும் வழுவாது மனவாக்குக் காயங்களாகிய முக்கரணங்களையும் சிவபிரான்றிருவடிக்கே செலுத்தினராயும்சிவாநுபூதிப் பெருவாழ்வினராயும் பாசமாகிய தொடர்பினைக்கெடுத்த ஏனையநாயன்மார் திருவடிகளையும் (யாம்)துதித்து வணங்குவாம்.—எ - று வைதிகமார்க்கம் - வேள்விமுதலிய செய்தல். சைவமார்க்கம் - சரியை, கிரியை, யோகம், ஞானம். பத்தி மார்க்கம் - பொதுவாக விபூதிமுதலியனவற்றில் விசுவசித்து வழிபடுதல். (௨௨)

கடவுள்வாழ்த்துமுற்றியது.

---

மொழிபெயர்க்குமுறைகூறல்.—வேறு.

அண்ணல்பாற் றெளிந்த நந்தி யடிகள்பாற் சநற்கு மார
னுண்ணிறை யன்பி னுய்ந்து வியாதனுக் குணர்த்த வங்கப்
புண்ணிய முனிவன் சூதற் கோதிய புராண மூவா
றெண்ணிய விவற்றுட் காந்தந் தீசசங் கிதையின் மாதோ.

அறைந்திடப் பட்ட தாகு மாலவாய்ப் புகழ்மை யீந்தச்
சிறந்திடும் வடநூ றன்னைத் தென்சொலாற் செய்தி யென்றிங்
குறைந்திடும் பெரியோர் கூறக் கடைப்பிடித் துறுதி யிங்குப்
பிறந்திடும் பிறப்பி லெய்தப் பெறுதுமென் றுள்ளந் தேறு.

திருநகர் தீர்த்த மூர்த்திச் சிறப்புமூன் றந்த மூர்த்தி
யருள்வினை யாட லெட்டெட் டருச்சனை வினையோன் றாக
வரன்முறை யறுபத் தெட்டா மற்றவைப் படல மாக
விரிமுறை விருத்தச் செய்யுள் வகைமையால் விளம்ப லுற்றேன்.

இ - ள். சிவபிரான்மாட்டுக் கேட்டுத்தெளிந்த திருநந்திதேவரிடத்தே சநற்கு மாரமுனிவர் அகத்தின்கண்ணே நிறைந்த அன்பினால் (வழிபட்டு) ஆராய்ந்து வியாசமுனிவருக்கு உணர்த்தி அவ்விறவடிவினராகிய வியாசமுனிவர் சூதமுனிவருக்குச் சொல்லியருளிய புராணங்கள்பதினெட்டாம். மதிக்கத்தக்க அவற்றுள் (ஒன்றாகிய) கந்தபுராணத்திலே சங்கரசங்கிதையிலே திருவாலவாயாகிய திருப்பதியின் புகழ்ச்சி சொல்லப்பட்டதாகும். சிறந்த அந்த வடமொழி ஆலாசியமான்மியத்தைத் தமிழ்மொழியாற் செய்வாய் என்று இம்மதுரைப்பதியிலே வதிந்தருளும் பெரியராயினார் ஆஞ்ஞாபிக்க, அவ்வாஞ்ஞையை மறவாது (சிரமேற்) கொண்டு அடைந்த இப்பிறவியிற்றானே ஆன்மலாபத்தை அடைவோமென்று உளந்தெளிந்து, தலவிசேடம் தீர்த்தவிசேடம் மூர்த்திவிசேடம் ஆகிய மூன்றும் அம்மூர்த்தியானவர் தமது திருவருளினாலே செய்தருளிய திருவிளையாடல்கள் அறுபத்துநான்கும், அர்ச்சனைச் செய்கை ஒன்றும் ஆக அறுபத்தெட்டாகிய அவைகளை வைத்த முறைப்படி படலங்களாக அமைத்து விரித்து விருத்தமாகிய செய்யுள்வரிசையால் (யான்) கூறத்தொடங்கினேன்.—எ - று. (உ௫)

---

## அவையடக்கம்.

நாயகன் கவிக்குங் குற்ற நாட்டிய கழக மாந்தா
மேயவத் தலத்தி னோர்க்கென் வெள்ளறி வுரையிற் குற்ற
மாயுமா றரிதன் றேனு நீர்பிரித் தன்ன முண்ணுந
தூயதீம பாலபோற் கொள்க சுந்தரன் சரிதந் தன்னை

இ - ள். சோமசுந்தரக்கடவுள் (தருமிபொருட்டுத்) திருவாய்மலர்ந்தருளிய திருப்பாசுரத்துக்கும் குற்றங்கூறிய (நக்கீரர்முதலாகிய) சங்கப்புலவர்கள் தங்கிய உயர்ந்த மதுரைப்பதியினராகியபுலவர்க்கு மந்தமதியாற்கூறிய என்னுடையசொற்களிலே குற்றம் ஆராய்கின்றதன்மை எளிதாயினும் நீரோடு (கலந்த நாவுக்கு) இனிய தூயபாலைப்பிரித்து அன்னப்பறவை அருந்துதல்போல (க் குற்றச்சொற்களாற்பொதியப்பெற்ற) சுந்தரேசருடைய (செவிக்கினிய நிருமலமான) திருவிளையாடலை (ப்பிரித்து அப்புலவர்) அங்கீகரிக்கக்கடவர்.—எ-று. கவிக்கும் உம்மைசிறப்பு. அகரச்சுட்டு உயர்வின்மேலது. அவையடக்கம் என்பது அவையை அடக்கல் என்றும் பொருள்கொண்டு அதற்கு இசைய வெள்ளறிவுஎன்பது தூயஅறிவுஎன்றும், குற்றம்மாயுமாறு அரிதன்று எனப்பிரித்து, குற்றம் ஒழிந்ததன்மைஎளிது என்றும், எனுநீர்பிரித்து என்பதை அன்னத்திற்கு அடையாக்கி, அன்னம் உண்ணும் பால்போற்கொள்க என்றும் கொள்ளலாம். (உ௬)

கலிநிலைத்துறை.

சுவைக்கெ ழுந்தழ லுச்சுவை கண்டவூ னிமையோர்
சுவைக்க வின்னமிழ் தாயின துளக்கமில சான்றோ
ரவைக்க ளம்புகுந் தினியவா யாலவா யுடையா
செவிக்க ளம்புகுந் தேறுவ சிறியனேன் பனுவல்.

இ - ள். சுவர்பட்டுச் சுவாலிக்கின்ற அக்கினிதேவன் நாவினாற் சுவைபார்த்த ஊன்கள்(சுத்தமாய்த்)தேவர்கள் உண்ண இனிய அமிர்தம்போலாயின (அதுபோலக்கல்வியறிவிற்) சிறியேன்கூறியசெய்யுட்கள் கலக்கமில்லாத (அறிவிற்) பெரியோர் அவைக்களத்திற்சென்று(குற்றம் நீங்கி) மதுரமுடையனவாய்த் திருவாலவாயையுடைய சிவபிரான்திருச்செவியிற் சென்றேறுவனவாம்.—எ - று. பனுவல் - ஆகுபெயர். (உ௭)

பாய வாரியுண் டேவர்கெடுத் துலகெலாம் பருகத்
தூய வாக்கிய காரெனச் சொற்பொரு டெளிந்தோ
ராய கேள்வியர் துகளறுத் தாலவா யுடைய
நாய னார்க்கினி தாக்குப நலமிலேன் புன்சொல்.

இ-ள். மேகங்கள், பரந்தகடல்நீர்களையுண்டு (அந்நீரினுள்ள) உவர்ப்பைக்கெடுத்து உயிர்களெல்லாம் உண்ணும்வண்ணம் பரிசுத்த முடையனவாக்குதல்போலச்சொல்லியலையும் பொருளியலையும் (முற்றும்) உணர்ந்தவரும் சிறந்த கேள்வியில் வல்லுநருமாகிய பெரியோர் (அக்கேள்வி) நல (ஞ்சிறிது) மில்லாத எளியேனுடைய புல்லிய சொல்லின்கணுள்ள குற்றங்களைப்போக்கித் திருவாலவாயென்னுந் திருப்பதியை யுடைய சிவபெருமானார்க்கு இனியதாகச் செய்வர்.—எ-று. (உ௮)

அல்லை யீதல்லை யீதெனு மறைகளு மனமைச்
சொல்லி னுற்றுதித் திளைக்குமிச் சுந்தர னாடற்
கெல்லை யாகுமோ வென்னுரை யெனசெய்கோ விதனைச்
சொல்லு வேனெனு மாசையென் சொலவழி கேளா.

இ-ள். (இத்தன்மையதெனச் சுட்டிக்கூறமுடியாது) இதுவும் அல்லை இதுவும் அல்லை என்று வேதங்களும் அன்மைமொழியினாற்புகழ்ந்து (வருந்தி) மெலிதற்குக்காரணமாயுள்ள உயர்ந்த சுந்தரேசருடைய திருவிளையாட (லைக்கூறுத) ற்கு என்மொழி அளவுபடுமோ (படாது என்னுங் கருத்தினால் யான் வாளாவிருந்தாலும்) இதனையான் கூறுவேனென்று உளத்தில எழும் விருப்பம் நான் கூறுகின்ற வழியைக் கைக்கொள்ளாது (ஆதலால் யான் என்செய்வேன்.)—எ-று. இகரச்சுட்டு உயர்வின்மேலது. கேளாதுஎன்னுந்துவ்வீறு தொகை. (உகூ)

பாயிரமுற்றியது.

---

# சிறப்புப்பாயிரம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

அறுகாற்பீ டத்துயாமா லாழிகடைந் தமிழ்தையரங் கேற்று மாபோ
லறுகாற்பே டிசைபாடுங் கூடன்மான மியத்தையரு தமிழாற் பாடி
யறுகாற்பீ டியர்முடியார் சொக்கேசர் சந்நிதியி லமரர் சூழு
மறுகாற்பீ டத்திருந்து பரஞ்சோதி முனிவனரங் கேற்றி னானே

இ-ள். காலிலியாகிய ஆதிசேடன் என்னுஞ்சயனத்தில (நித்திரைபுரியும்) உயர்ந்த விஷ்ணு திருப்பாற்கடலைக்கடைந்து (அதினுண்டாகிய) அமிர்தத்தைத்தேவர் கூட்டங்களுக்குப் பகுத்துக்கொடுத்த முறைபோல ஆறுகாலையுடைய பெண்வண்டுகள் கீதம்பாடப்பெற்ற சோலைகள்சூழ்ந்த ஆலாசிய மான்மியமாகிய வடமொழியை அரிய செந்தமிழினல் மொழிபெயர்த்துப்பாடி (அடியார் அர்ச்சனைசெய்த) அறுகினாலே மகிமைபெற்ற சடைமுடியையுடைய சொக்கலிங்கக்கடவுள் சந்நிதியிலே தேவர்கணங்கள்சூழ்ந்த ஆறுகால்களையுடைய மண்டபத்திருந்து பரஞ்சோதிதேசிகர் அரங்கேற்றினார்.—எ-று. முதலடியில் அறுகால் அற்றகால், அது அன்மொழித்தொகை. (௩௦)

ஆகச்செய்யுள் - ௩௧.

# பாண்டித்திருநாட்டுப்படலம்.

கலிநிலைத்துறை.

கறைநி றுத்திய கந்தர சுந்தரக் கடவு
ளுறைநி றுத்திய வாளினூற் பகையிரு ளொதுக்கி
மறைநி றுத்திய வழியினூல வழுதியாய்ச் செங்கோன்
முறைநி றுத்திய பாண்டிநாட் டணியது மொழிவாம்.

இ - ள். விடத்தினைவைத்த மிடற்றினையுடைய சுந்தரேசர் பாண்டியராஜராகி உறையிட்ட வாட்படையாகிய ஒளியினூற் பகைவராகிய இருளினைப் போக்கி (ததாம்) வேதங்களிற்கூறிய (நீதி) முறைமையாற் செங்கோலை முறையாகச்செலுத்தி அரசாட்சிசெய்த பாண்டிநாட்டின் சிறப்பினை (யாம்)கூறுவாம்.—எ-று. இரட்டுறமொழிதலால் வாள் ஒளியுமாம். சிவபிரான் அரசாட்சிசெய்யும்போது தம்மகிமைபற்றிப் பகைவர் அடங்கி வழிபட்டமையாற் போரின்மையின் உறைநிறுத்திய வாளினூற் பகையிருளொதுக்கி என்றூர். அது பகுதிப்பொருள் விகுதி. (க)

தெய்வ நாயக னீறணி மேனிபோற் சென்று
பௌவ மேய்ந்துமை மேனிபோற் பசந்துபல லுயிர்க்கு
மெவ்வ மாற்றுவாள் சுரந்திடு மின்னரு ளென்னக்
கௌவை நீர்சுரந் தெழுந்தன கனைகுரன் மேகம்.

இ - ள். ஒலிக்கின்ற ஒலியையுடைய மேகங்கள், தேவர்களுக்குத் தலைவராகிய சிவபெருமானுடைய விபூதியணிந்த திருமேனிபோல் (வெள்ளிய நிறமாகச்) சென்று கடல் நீரையுண்டு உமாதேவியார் திருமேனிபோற் பசியநிறமாகிப் பலவுயிர்களுக்கும் (பிறவித்) துன்பத்தை ஒழிப்பவராகிய அத்தேவியார் இனிய திருவருள்சுரக்குந்தன்மை போல முழக்கமுடைய நீர்சுரந்து (மேல்) எழுந்தன.—எ - று. (உ)

இடித்து வாய்திறந் தொலலெனு வெல்லொளி மழுங்கத்
தடித்து வாள்புடை விதிர்த்துநின் றிந்திர சாபம்
பிடித்து நீளம்பு கோடைமேற் பெய்துவெம் பெரும்போர்
முடித்து நாமென வருதல்போன் மொய்த்தன கொணமூ.

இ - ள். ஒல்லென்று வாய்திறந்து முழங்கிச் சூரியன் ஒளியும் மழுங்கும்படி மின்னலாகிய வாட்படையை (நாற்) புறத்தும் அசைத்து நின்று இந்திரதனுசை ஏந்தி நீண்ட நீர் (ஆகிய அம்பினைக்) கோடை (யாகிய பகைவன்) மீது சொரிந்து வெவ்விய பெரியபோரினை யாம் முற்றுவிப்போமென்றுவருவதுபோல மேகங்கள்நெருங்கின.—எ - று. ஒளியும் என்னும் சிறப்பும்மை தொகை. ஏகதேசவுருவகம். (ஈ)

முனித வீள்வளை யுச்சிமேன் முழங்கிவா னிவந்து
தனித நீர்மழை பொழிவன தடஞ்சிலை யிராமன்
கனித வீர்மையா லாலவாய்க் கண்ணுதன் முடிமேற்
புனித நீர்த்திரு மஞ்சன மாட்டுவான் போலும்.

இ-ள். மேகங்கள் அகஸ்தியமகாமுனிவருடைய உயர்ந்த பொதியமலையின் முடிமேல் (எறிச்சூல்முதிர்ந்து) குமுறி ஆகாயத்தில் உயர்ந்து (சளசளவென்னும்) ஒலியோடு நீரினைப்பொழிவன (வாகிய செய்கை) பெரிய கோதண்டத்தையுடைய இராமர் கனிந்த தமது அன்போடு நெற்றிக்கண்ணையுடைய திருவாலவாயுடையார் திருமுடியின்கண்ணே பரிசுத்தமுடைய திருமஞ்சனமாகிய தீர்த்தத்தை அபிடேகித்தல்போலும்.—எ-று. (௪)

சுந்த ரன்றிரு முடிமிசைத் தூயநீ ராட்டு
மிந்தி ரனறனை யொத்தகா ரொழிவிதென் மலைமேல்
வந்து பெய்வவத் தனிமுதன் மௌலிமேல் வலாரி
சிந்து கின்றகைப் போதெனப் பன்மணி தெறிப்ப.

இ-ள். மலயாசலத்தின்மீது போந்து (மழை) பொழிவனவாகிய கரியமேகங்கள் சுந்தரேசரது திருமுடிமீது பரிசுத்தமுள்ள தீர்த்தத்தினால் அபிடேகஞ்செய்யும் இந்திரனைப் போன்றன. (அம்மேகங்களினின்றும்) சிதறுகின்றனவாகிய பலஇரத்தினங்கள் ஒப்பில்லாத அம்முதல்வரது திருமுடிமேல் (அவ்) விந்திரன் கைகளினால் அர்ச்சிக்கின்ற (பலநிற) மலர்களை நிகர்த்தன.—எ-று. மேகத்தில் மணிகள் கடல்நீர் உண்ணும்போது கலந்தன. (௫)

உடுத்த தெண்கடன் மேகலை யுடையபார் மகட
னிடத்து தித்தபல் லுயிர்க்கெலா மிரங்கித்தன் கொங்கைத்
தடத்து நின்றிழி பாலெனத் தடவரை முகடு
தொடுத்து வீழ்வன விழுமெனத் தூங்குவெள் ளருவி.

இ-ள். சூழ்ந்த தெள்ளிய (நீரையுடைய) கடலாகிய ஆடையினையுடைய பூமிதேவி தன்மாட்டுத் தோன்றிய சர அசர உயிர்களுக்கெல்லாம் இரக்கமுற்றுத் தனது தனமாகிய உயர்ந்த விடத்தினின்றும் பாலைப் பொழிதல்போலப் பெரிய பொதியமலையின் முடிதொடங்கி அசைகின்ற வெள்ளிய அருவிகள் இழுமென்னும் ஒலியோடும் வீழ்வன.—எ-று. (௬)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருநிற மேக மென்னுங் கச்சணி சிகரக் கொங்கை
யருவியாந் தீம்பால சோர வகன்சுனை யென்னுங் கொப்பூழ்
பொருவிலவே யென்னு மென்றோட் பொதியமாஞ் சைலப் பாவை
பெருகுதண் பொருநை யென்னும் பெண்மகப் பெற்று ளன்றே.

இ-ள். கறுத்த நிறத்தினையுடைய மேகமாகியகச்சினையணிந்த சிகரமாகியதனத்தினின்று அருவியாகிய இனியபால் ஒழுகும்படி அகன்றசுனையாகிய நாபியும் ஒப்பில்லாத மூங்கிலாகிய மெல்லியதோளுமுடைய பொதியமலையாகிய பெண்ணானவள் பெருகாநின்ற குளிர்ந்த தாமிரபர்ணியாகிய பெண்குழந்தையைப்பெற்றாள்.—எ-று. அன்றே அசை. (௭)

கல்லெனக் கரைந்து வீழுங் கடம்புனற் குழவி காணத்
தொல்லெனத் தவழ்ந்து தீம்பா லுண்டொரீஇத் திண்டோண் மள்ளர்
செல்லெனத் தெழிக்கும் பம்பைத் தீங்குரல் செவிவாய்த் தேக்கி
மெல்லெனக் காலிற் போகிப் பணைதொறும் விளையாட் டெய்தி.

அரம்பைமென் குறங்கா மாவி னவிர்தளிர் நிறமாத் தெங்கின்
குரும்பைவெம் முலையா வஞ்சிக் கொடியிறு நுசுப்பாக் கூந்தல்
சுரும்பவிழ் குழலாக் கஞ்சஞ் சுடர்மதி முகமாக் கொண்டு
நிரம்பிநீள் கைதை வேலி நெய்தல்சூழ் காவில் வைகி.

பன்மலர் மாலை வேய்ந்து பானுரைப் போர்வை போர்த்துத்
தென்மலைத் தேய்ந்த சாந்த மான்மதச் சேறுபூசிப்
பொன்மணி யாரந் தாங்கிப் பொருநையாங் கன்னி முந்நீர்த்
தன்மகிழ் கிழவ னாகந் தழீஇக்கொடு கலந்த தன்றே.

இ-ள். கல் என்று ஒலித்துக் கொண்டு (பொதியமலையினின்று) வேகமாகவருகின்ற நீரினையுடைய தாமிரபர்ணியென்னும்பெண்குழந்தை முல்லைநிலத்தில் ஒல் என்னும் ஒலியோடு தவழ்ந்து இனியபாலையுண்டு (அவ்விடத்தினின்று)நீங்கி வலியதோள்களையுடைய பள்ளர்கள் மேகம்போல முழக்கும் பம்பையினது இனியவோசையைக் காதிலே நிரப்பி மெல்லக் காலினூற் சென்று வயல்கள்தோறும் விளையாடுதலைப் பொருந்தி வாழைமரமானது மெல்லிய தொடையாகவும் மாமரத்தினது விளங்காநின்ற தளிரானது நிறமாகவும் தென்னங்குரும்பையானது விருப்பந்தருந் தனமாகவும் வஞ்சிக்கொடியானது முறிகின்ற இடையாகவும் கூந்தற்பனையின் பாளையானது வண்டுகள் பரந்த அளகமாகவும் செந்தாமரை மலரானது விளங்குகின்ற மதிக்கத்தக்க முகமாகவுங் கொண்டு (மங்கைப்பருவம்) நிரம்பி நீண்ட தாழைகளை வேலியாகவுடைய நெய்தனிலத்தைச் சூழ்ந்த சோலையிலே தங்கி, பலவித மலர் மாலைகளை அணிந்து வெள்ளிய நுரையாகிய போர்வையைப் போர்த்து மிருகமதத் தோடு (கலந்த) பொதியமலையில் அரைபட்ட சந்தனக் குழம்பைப் பூசிப் பொன னாரத்தையும் முத்தாரத்தையும் பூண்டு தன்னிடத்தே மகிழ்கின்ற கணவனாகிய சமுத்திரராஜனது மார்பத்தைத் தழுவிக் கொண்டு கலந்தது.—எ-று. வீழுங் கடும்புனற் பொருநை யாங்கன்னிக் குழவி என அந்நுவயஞ் செய்க. பாலுண்டு என்பது பாற்குடங்களைத் தள்ளி என்றும், செவிவாய்த்தேக்கி என்பது அழகைத் தன்னிட்டத்து நிரப்பி என்றும், காலிற்போகி என்பது கால்வாய்வழியே போய் என்றும், பணைதொறும் விளையாட்டெய்தி என்பது வயலகளிற்பாய்ந்து என்றும் நதியின் பரமாகக் கொள்ளுக. இப்பொருட்குச்செவ்வி செவி எனநின்று அழகாயிற்று. கூந்தல், கஞ்சம் ஆகுபெயர்கள். அன்றே - அசை. (க0)

வல்லைதா யிருபால வைகுஞ் சிவாலய மருங்கு மீண்டி
முல்லையா னைந்து தேனுந் திரைக்கையான் முகந்து வீசி
நல்லமான் மதஞ்சாந் தப்பி நறுவிரை மலர்தூய் நீத்தஞ்
செல்லலாற் பூசைத் தொண்டின் செயல்வினை மாக்கள் போலும்.

இ-ள். தாமிரபர்ணி நதியானது விரைவாகச்சென்று தனது இரண்டுபக்கத்தும் தங்கிய சிவாலயங்களிடத்தே சேர்ந்து முல்லைநிலத்தில் உள்ள பஞ்சகவ்வியங்களையும் தேனையும் அலையாகிய் கையினாலேமொண்டு வீசியும் நல்லகஸ்தூரி சந்தனங்களை அப்பியும் நன்மணங்கமழும் பூக்களைத்தூவியும்செல்லுதலால், சிவபூசையாகிய தொண்டினைப் புரிதலுஞ்செய்யும் திருத்தொண்டரை யொக்கும்.—எ-று. மருங்கும் உம்மை-அசை. பஞ்சகவ்வியும் - பால், தயிர், நெய், கோஜலம், கோமயம். (கக)

அரும்பவிழ் பூங்க வாளி யலைதர வாகம் பொன் போர்த்
திரங்கிவா லந்த மேந்தி யிருகையுஞ் சங்கஞ் சிந்தி
மருங்குசூழ் காஞ்சி தள்ளி வரம்பிற வொழுகும் வாரி
பரம்பரற் கையம பெய்யும் பாரப்பன மகளிர போலும்.

இ - ள். அரும்புகளையும் விரிந்தமன்மதபாணமாகிய மலர்களையும் அலைகள் ஒதுக்கத் தன்னுடல (முற்று)ம் பொன்மணலையுடையதாய் ஒலித்து வெள்ளிய அன்னப்பறவைகளைத் தாங்கி இரண்டு கரைகளிலும் சங்குகளைவீசிப் பக்கங்களிற்சூழ்ந்த காஞ்சிவிருட்சங்களைத் தள்ளி எல்லைகெடப் பெருகவெடுத்துச் செல்லும் தாமிரபர்ணிநதியானது (அரும்புகள் மலர்ந்த காமபாணங்கள் வருத்தத் தம்மேனி முழுவதும் பொற் பிதிர் போன்ற தேமல்பூத்து மனம் வருந்தி வெள்ளிய சோற்றினை ஏந்தி இரண்டுகைகளிலும் உள்ள சங்குவளையல்கள் கழன்று இடையில் அணிந்த காஞ்சியாகிய இருகோவை யாபரணஞ் சோர்ந்து தமதுகற்புநிலைகெடப் பிக்ஷாடனமூர்த்தியாய் எழுந்தருளிவந்த) சிவபெருமானுக்குப் பிட்சையிடும் தேவதாருவனத்து முனிவர்பத்தினிகளை ஒக்கும்.—எ-று. பொன் ஆகுபெயர். (கஉ)

வரைபடு மணியும பொனனும் வைரமுங் குழையும் பூட்டி
யரைபடு மகிலுஞ் சாந்து மப்பியின் னமுத மூட்டிக்
கரைபடு மருத மென்னுங் கந்நியைப் பருவ நோக்கித்
திரைபடு பொருநை நீத்தஞ் செவிலிபோல் வளர்க்கு மாதோ.

இ - ள். அலையுள்ள தாமிரபாணிநதி மலையினுள்ள மணி பொன் வயிரம் குழைகளைப் பூட்டி அரைபட்ட அகில்சந்தனங்களை அப்பி இனிய அமிர்தை ஊட்டி வரம்புள்ள மருதநிலப்பெண்ணைப் பருவத்தினை ஆராய்ந்து செவிலித்தாய்போல் வளர்க்கும்—எ - று. குழை - தளிர். அமுதம் - பால், நீர். செவிலி-வளர்ப்பவள். (கங)

மறைமுதற் கலைக ளெல்லா மணிமிடற் றவனே யெங்கு
நிறைபர மென்றும் பூதி சாதந நெறியி டென்று
மறைகுவ தறிந்துந் தேறா ரறிவெனக் கலங்கி யந்த
முறையின்வீ டுணர்ந்தோர் போலத் தெளிந்தது பூரி வெள்ளம்.

இ - ள். நீலகண்டரோ எங்கும்வியாபித்த பரமபதி என்றும் திருநீறு கண்டிகைகளையணிந்து திருவைந்தெழுத்தை யுச்சரித்தலாகிய சித்தாந்தசைவவழி ஒழுகுதலே வீடுபேற்றிற்கு ஏதுவென்றும் வேதமுதலியநூல்கள் ஓதுதலை உணர்ந்தும் தெளியாதவர் உணர்வுபோல வலியவெள்ளம் கலங்கி அச்சைவநெறியே நின்று நிட்டைகூடி வீட்டினையுணர்ந்த மெய்யன்பர் திருவுள்ளம்போலத் தெளிந்தது.—எ - று. வீட்டிற்கு ஏதுவை வீடென உபசரித்தார். (கச)

மறைவழி கிளைத்த வெண்ணெண் கலைகள்போல வருநா மவள்ளந்
துறைவழி யொழுகும் பல்கால் சோலைதண் பழனஞ் செய்தே
னுறைவழி யோடை யெங்கு மோடிமன் றுயிரார்க் கன்பர்
நிறைவழி யாத வுள்ளத் தன்புபோ னிரம்பிற் றன்றே.

இ - ள். வேதத்தின்வழியேகிளைத்த அறுபத்துநான்கு கலைகள்போல வருகின்ற தாமிரபர்ணி நீர்த்துறையினின்று கிளைத்துச் செல்லும் பலகால்களால், சோலை தண்ணியமருதநிலம் செய் தேன்றுளிசிந்தும் ஓடை மற்றும் இடம் ஆகிய இவைகளிற்சென்று சிவபிரான் அடியார் உளத்து நிறைதல் நீங்காத அன்புபோல நிறைந்தது.—எ - று. அன்றே அசை. (கரு)

கலிநிலைத்துறை.

இழிந்த மாந்தர்கைப் பொருள்களு மிகபரத் தாசை
கழிந்த யோகியர் கைப்படிற் றூயவாய்க் களங்க
மொழிந்த வாறுபோ லுவரியுண டுவர்கெடுத தெழிலி
பொழிந்த நீரமிழ் தாயின புவிக்குமவா னவாக்கும்.

இ - ள். (பழிபாவச்செய்கைளாற்) கீழான மாநுடர்கையாற் கொடுக்கும் பொருள்களும் பூ போகத்தும் சுவர்க்கபோகத்தும் விருப்பம் ஒழிந்த சிவயோகிகளதுகையிற் சேர்ந்தவளவிலே பரிசுத்த முடையனவாய்க் குற்றஙகளினின்று நீங்குமுறைமை போல மேகம், கடல்நீரைப் பருகி (அதிலுள்ள) உவரினைப் போக்கிப் பொழிந்த நீர்கள் உலகத்துள்ள வுயிர்களுக்கும் தேவர்கட்கும் அமிர்தம் போலாயின.—எ - று. பொருள்களும் உம்மை இழிவுசிறப்பு. ஒழியுமென்னும் தெளிவுபற்றி ஒழிந்தவென்றார். இக பரங்கள் ஆகுபெயர்கள். பிறப்பு இடையறுமையால் எப்பொழுதும் உயிர்கள் உடம்பொடு காணப்பட்டு வருதற்கும், தேவர்களுடைய நித்தியபூஜை உற்சவங்களுக்கும் ஏதுவாயிருத்தலின், அமிழ்தாயின வென்றார். (கசு)

ஈறி லாதவ ளொருத்தியே யைந்தொழி லியற்ற
வேறு வேறுபேர் பெற்றென வேலைநீ ரொன்றே
யாறு கால்குளங் கூவல்குண் டகழ்கிடங் கெனப்போ
மாறி யீறில்வான் பயிரெலாம் வளாப்பது மாதோ.

இ - ள். நித்தியமாகிய சிற்சத்தி ஒருத்தியே சிருட்டியாதி பஞ்சகிருத்தியங்கள்செய்ய (ஜநநியாதியாக) வெவ்வேறு திருநாமங்கள்பெற்றாற்போலக் கடல்நீர் ஒன்றே நதி,கால், குளம், கிணறு, நீர்நிலை தோண்டிய கிடங்குகளாகநாமம் மாறி அளவில்லாத உயர்ந்த பயிர்களை வளர்ப்பதாம்.—எ - று. மாதோ அசை. (கஎ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

களமர்கள் பொன்னேர் பூட்டித் தாயர்வாய்க் கனிந்த பாடற்
குளமகிழ் சிறாரி னேறு மொருத்தலு முவகை தூங்க
வளமலி மருதம் பாடி மனவலி கடந்தோர் வென்ற
வளமரு பொறிபோ லேவ லாற்றவர் வினையின் மூண்டார்.

இ - ள். உழவர் பொன்னேரைப்பூட்டித், தாய்மார் வாயின் (உண்டாகும்) கனிந்த பாடலுக்கு மனமகிழும் சிறுவரைப்போல, எருதுகளும் எருமைக்கடாக்களும் மகிழ்ச்சிமிக வளப்பமிக்க மருதப்பண்பாடி, மனவலியைக்கடந்த மகான்கள் வென்ற சுழல்கின்ற ஐம்பொறிகள் (அவர்கள் ஏவல்வழி நிற்றல்) போல் (அவ்வேறும் ஒருத்தலும் தம் ஏவல்வழிநிற்பப் பயிர்செய்யுந்) தொழிற் கண்ணே தலைப்பட்டனர்.—எ - று. ஏவலொற்றுமைபற்றி அலமரு அளமரு வென்னின்றது. (கஅ)

பலநிற மணிகோத் தென்னப் பன்னிற வேறு பூட்டி
யலமுக விரும்பு தேய வாள்வினைக் கருங்காலு மள்ளர்
நிலமக ளுடலங் கீண்ட சால்வழி நிமிர்ந்த சோரிச்
சலமென நிவந்த செங்கேழ்த் தழன்மணி யிமைக்கு மன்றே.

இ-ள். பலநிற இரத்தினங்களைக் கோவைசெய்ததுபோலப் பலநிற எருதுகளைப் பூட்டிக் கலப்பைமுகத்துள்ள கொழுத்தேய உழுதொழில்புரியும் வலியகாலையுடைய மருதநிலமாக்கள் பூமிதேவியின் உடலைக்கிழித்த படைச்சால்வழியே எழுந்த உதிரவெள்ளம்போல மேலோங்கிய சிவந்தநிறமுடைய நெருப்புப்போன்ற மாணிக்கங்கள் விளங்கும்.—எ-று. மன்றே அசை. (கக)

உழுறுசெய் படைவாய் தேய வுழுநரு நீகால் யாத்துச்
சேறுசெய் குநரு தெய்வந் தொழுதுதீஞ் செநெல் வீசி
நாறுசெய் குநரும் பேர்த்து நடவுசெய் குநருந் தெவ்வின்
மாறுசெய் களைகட் டோம்பி வளம்படுக் குநரு மானார்.

இ-ள். (பூமியைக்) கிழிக்கின்ற கலப்பைமுகந் தேயும்படி உழுகின்றவரும் நீரைக் கால்வழியாகக் கட்டிச் சேறுசெய்கின்றவரும் இந்திரனைவணங்கி இனிய செந்நெல் முளைகளை விதைத்து நாறுசெய்கின்றவரும் (அவைகளைப்) பெயர்த்து நடுகின்றவரும் பகைவரைப்போல (ப்பயிரோடு) மாறுபட்டோங்கும் களைகளைக் களைந்து வளஞ்செய்கின்றவரும் (ஆகஅவ்வுழவர்) ஆயினர்.—எ-று. செந்நெல் - ஆகுபெயர். (உo)

பழிபடு நறவுந் தானே கடைசியர் பருகிச் செவ்வாய்
மொழிதடு மாற வேர்வை முகத்தெழ முறுவ லூன்ற
விழிசிவந் துழலக் கூந்தன் மென்றுகில் சோர வுள்ளக்
கழிபெருங் களிப்பு நல்கிக் கலந்தவ ரொத்த தன்றே.

இ-ள். பழிக்கப்பட்ட மது, பள்ளமகளிரால் பருகப்பெற்று (அவரது) சிவந்த வாயிலே (எழுகின்ற) மொழிகள் முறைபிறழவும் முகத்திலே (குறு) வியர்வை தோன்றவும் (காரணமின்றிப்பெரு) நகை உண்டாகவும் விழிகள் சிவந்து சுழலவும் அளகமும் மெல்லிய ஆடையும் நழுவவும் மனத்தின் மிக்கபெருங் களிப்பைக் கொடுத்துப் புணர்ந்த புருடனைப் போன்றது—,எ-று. அன்றே - அசை. (உக)

பட்பகை யாகுந் தீஞ்சொற் கடைசியர் பவளச் செவ்வாய்க்
குட்பகை யாம்ப லென்று மொண்ணறுங் குவளை நீலங்
கட்பகை யாகு மென்றுங் கமலமென் முகத்துக் கென்றுந்
திட்பகை யாகு மென்றுஞ் செறுதல்போற் களைதல் செய்வார்.

இ-ள். பண்ணுக்குப் பகையாகிய இனியமொழிகளையுடைய பள்ளப்பெண்கள் பவளம்போலும் (தங்கள்) சிவந்தவாய்களுக்குச் செவ்வல்லி மலர்கள் உட்பகை (யாம்) என்றும் கண்களுக்கு ஒள்ளிய நன்மணச் செங்குவளை மலர்களும் கருங்குவளை மலர்களும் பகையாம்என்றும் மெல்லிய முகங்களுக்குச் செந்தாமரை மலர்கள் எந்நாளுந் திண்ணியபகையாம் என்றும் சேதித்தல்போல (அவைகளை)ப்பறித் தெறிவராயினர்.—எ-று. ஆம்பல்முதலியனஆகுபெயர்கள். (உஉ)

கடைசியர் முகமுங் காலுங் கைகளுங் கமல மென்னார்
படைவிழி குவளை யென்னார் பவளவாய் குமுத மென்னா
ரடையவுங் களைந்தார் மள்ளர் பகைஞரா யடுத்த வெல்லை
யுடையவ னாணை யாற்று லொறுப்பவாக் குறவுண் டாமோ.

இ - ள். உழத்தியருடைய முகம் கால் கைகள் செங்கமலமலரையும் வேற்படை போன்ற கண்கள் நீலமலரையும் பவளம் போன்ற வாய்கள் குமுதமலரையும் ஒப்பன வென்று (உறவாகக்) கருதாமல் (அம்மலர்கள்) அனைத்தையும் (பயிர்க்குப்பகையாக நெருங்கினவென்று தலைவன் ஏவலால்) உழவர் களைந்தனர். (உறவினர்) பகைவராய் நெருங்கிய காலத்திலே தலைவன் ஆணைவழியே தண்டிப்பவர்க்கு நண்பை எண்ணுதல் கூடுமோ (கூடாது). —எ - று. என்னார் என்பன முற்றெச்சங்கள். (௨௩)

புரையற வுணர்ந்தோர் நூலின் பொருளினு ளடங்கி யந்நூல்
வரையறை கருத்து மான வளர்கருப் புறம்பு தோன்றிக்
கரையமை கல்வி சாலாக் கவிஞர்போ லிறுமாந் தந்நூ
லுரையென விரிந்து கற்பின் மகளிர்போ லொசிந்த தன்றே.

இ - ள். வளர்கின்ற கரு, (ஐயந்திரிபாகிய) குற்றமறக் கற்றுணர்ந்தோர் (இயற்றிய) நூலின்கண்ணே (அடங்கியிருக்கும்) பொருள்போல உள்ளே அடங்கியிருந்து அந்நூலின் (பொருளுக்கு) அமைந்த கருத்துரை(யின் தோற்றம்) போல வெளிப்பட்டு (இலக்கண) வரம்பு பெற்ற கல்வி நிரம்பாத புன்கவிஞர் (இறுமாத்தல்) போலத் தலை நிமிர்ந்து அந்நூலின் பொருள் (விரிதல்) போல விரிந்து கற்புடைமகளிர் (தந்தாளை நோக்குதல்)போல(த் தாளைநோக்கித் தலை) வளைந்தது.—எ - று. கரு - ஈண்டுக்கதிர். அன்றே அசை. (௨௪)

அன்புறு பத்தி வித்தி யார்வநீர் பாய்ச்சுந் தொண்டர்க்
கின்புரு வான வீச னின்னருள் விளையு மாபோல்
வன்புறு கருங்கான் மள்ளர் வைகலுஞ் செவ்வி நோக்கி
நன்புல முயன்று காக்க விளைந்தன நறுநதண் சாலி.

இ - ள். அன்பு மிக்க பத்தியாகிய விதையை விதைத்து ஆசையாகிய நீரைப்பாய்ச்சுகின்ற அடியார்களுக்கு ஆனந்தமே திருவுருவாக்கொண்ட சிவபிரானது இனிய திருவருட் (பயன்விளைவு) விளையுமாறுபோல வலிமைமிக்க கரியகாலையுடைய பள்ளர்கள் தினந்தோறும் பருவம்பார்த்து நல்லகழனிகளை (எருவிடல்முதலிய) முயற்சிகள் செய்து பாதுகாக்க நன்மணமுந் தண்மையுமுள்ள நெற்பயிர்கள் விளைந்தன.—எ - று.

அகனில வேறு பாட்டி னியல்செவ்வி யறிந்து மள்ளர்
தகவினை முயற்சி செய்யக் காமநூல் சாற்று நான்கு
வகைநலார் பண்பு செவ்வி யறிந்துசேர் மைந்தர்க் கின்ப
மிகவிளை போகம் போன்று விளைந்தன பைங்கூ ழெல்லாம்.

இ - ள். உழவர், அகன்ற நிலவேற்றுமைத்தன்மையும் (அந்நிலத்தேபயிரிடும்) பருவமும் உணர்ந்து (அவற்றிற்குத்) தக்க தொழில்முயற்சிகள் செய்யப் பசிய பயிர்கள் அனைத்தும், காமநூலிற்கூறிய நால்வகைமகளிர் தன்மையும் பருவமும் உணர்ந்து புணரும் புருடருக்கு மிகவிளையும் ஆனந்தபோகம் போலவிளைந்தன.—எ - று. நால்வர் பதுமினி, சித்தினி, சங்கினி, அத்தினி. (௨௫)

கொடும்பிறை வடிவிற் செய்த கூனிரும் பங்கை வாங்கி
முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமல நீல
மடங்கவெண் சாலி செந்நெல் வேறுவே றரிந்தீ டாக்கி
நெடுங்களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்போர் செய்தார்.

இ-ள். வளைந்த பிறைவடிவுபோற் செய்த அரிவாளை (உழவர்) கைக்கொண்டு முடங்கிய கால்களும் வரிகளும் உள்ள வண்டுகள் (மேலெழுந்து) ஒலிக்கும்படி முள்ளை நாளத்திலுடைய தாமரை மலர்களும் நீலமலர்களும் அடங்க வெண்ணெல் செந்நெல் விளைவுகளை வெவ்வேறாக அரிந்து கற்றைகளாக்கி நெடிய களத்திலே அழகிய பொன்மலைவரிசைகள்போலப் பெரியபோர்கள் செய்தனர்.—எ-று. (உஎ)

கற்றைவை களைந்து தூற்றிக் கூப்பியூர்க் காணித் தெய்வ
மற்றவர்க் கற்ற வாறீக் தளவைகண் டாறி லொன்று
கொற்றவர் கடமை கொள்ளப பண்டியிற் கொடுபோய்த் தென்று
றற்றவா சுற்றந் தெய்வம் விருந்தினர்க் கூட்டி யுண்பார்.

இ-ள். திரளாகிய வைக்கோல்களைப்போக்கி (நெற்களை) த்தூற்றி(ப்பொலிகளாக) க்குவித்துக் கிராமதேவதைகளுக்கும் வறியர்களுக்கும் வரையறுத்தமுறைப்படி கொடுத்து அளவுசெய்து ஆறில் ஒன்று அரசர் தம் இறைப்பொருளாக ஏற்றுக்கொள்ள (எஞ்சியவைகளை) ப்பண்டியிற் கொண்டுசென்று பிதிர ரிஷி நால்வர்க்கும் உண்பித்துத்தாமும் (அந்நிலத்தலைவர்) உண்பார்.—எ-று. தம்மோடுளப்பட ஐவராதலால் மற்றொருகூறு அரசர்க்குச் செலுத்துவாராயினர். (உஅ)

சாறடு கட்டி யெள்ளு சாமைகொள் ளிறுங்கு தோரை
யாறிடு மதமால் யானைப் பழுக்குலை யவரை யேனல
வேறுபல் பயறோ டின்ன புன்னில விளைவு மற்று
மேற்றொடு பண்டி யேற்றி யிருநிலங் கிழியு வுய்ப்பார்.

இ-ள். (கருப்பஞ்) சாற்றாலாகிய வெல்லம் எள்ளு சாமையரிசி கொள்ளு சோளம் மலைநெல் பெருகுகின்ற மிக்கமதமுடைய யானைமுகம்போதற் பழுக்கத்தக்க (வாழைக்)குலை அவரை தினையரிசி பலவகைப்பயறு மற்றுமுள்ளனவாகிய இப்புன்னிலப் பொருள்களை எருதுகள் மீதும் பண்டிகள் மீதும் ஏற்றிப் பெரிய பூமி கிழிய (உழவர்) செலுத்திப் போவார்—எ-று. யானை-ஆகுபெயர். இதனை "கருங்கதலிப் பெருங்குலைகள்களிற்றுக்கைமுகங்காட்ட" எனப் பெரியபுராணத்திற் கூறியதனாலும் உணர்க. (உகூ)

துறவின ரீச னேசத் தொண்டினர் பசிக்கு நல்லூண்
டிறவினைப் பிணிக்குத் தீர்க்கு மருந்துடற் பனிப்புக் காடை
யுறைவிடம் பிறிது நல்கி யவரவ ரொழுகிச் செய்யு
மறவினை யிடுக்க ணீக்கி யருங்கதி யுய்க்க வல்லார்.

இ-ள். துறவிகள் சிவநேசத் தொண்டர்கள் என்பவரது பசிக்கு நல்லுணவும் (பழ) வினைவகையாலாகிய நோயைப் போக்கு மருந்தும் உடலை நடுக்குங் குளிருக்கு வஸ்திரமும் வசிக்கும் இடமும் ஏனைய பொருளும் (அந்நாட்டார்) கொடுத்து அவ்விரு

துறத்தாரும் தத்தம் நிலைகளில் (வழுவாது) ஒழுகும் அறத் தொழில்களின் இடையூறு களைப்போக்கி (அவரை) அரியவீட்டுநெறியிற் செலுத்தவல்லவராவார்.—எ - று. பிணிக்கு உருபுமயக்கம். கதிநெறியைக் கதியென உபசரித்தார். (௩௦)

நிச்சலு மீச னன்பர் நெறிப்படிற் சிறுர்மேல் வைத்த
பொச்சமி லன்பு மன்னா புதலவரைக் கண்டா லன்ன
வச்சமுங் கொணடு கூசி யடிபணிந் தினிய கூறி
யிச்சையா றொழுகி யுள்ளக் குறிப்பறிந் தேவல் செய்வார்.

இ - ள். தினந்தோறும் சிவபிரான் அடியார் வழியிலே எதிர்ப்பட்டால், (தம்) புத்திரர்மீதுள்ள மெய்யன்பும் அரசருடைய புதல்வரைக் கண்டாற் போன்ற அச்சமுங் கொண்டு (சிவமாய்விளங்கும அவருயர்வும் தம்மிழிவும் நோக்கிக்) கூசிப் பாதங்களிலே பணிந்து இனிய மொழிகள் சொல்லி (அவரது) விருப்பவழி நடந்து திருவுளக் குறிப்பினை உணர்ந்து (அந்நாட்டார்) பணிவிடை செய்வார்.—எ - று. பொச்சம்-பொய். நிதலல் - நிச்சலெனமரிஇயிற்று. (௩௧)

நறைபடு கனிதேன் பெய்த பாலொடு நறுநெய் வெள்ள
நிறைபடு செம்பொன் வணணப் புழுக்கலா னிமிர்ந்த சோறு
குறைவற வுண்டு வேண்டும் பொருள்களுங் கொண்மி னென்ன
மறைமுத லடியார் தம்மை வழிமறித் தருத்து வார்கள்.

இ - ள். சிவபெருமான் திருத்தொண்டரை (நேர்பட்டால்) வழியிலேதடுத்துத் தேன்பொருந்திய கனியும் தேன்கலந்தபாலும் நன்மண நெய்ப்பெருக்குநிறைந்த வெந்தசெம்பொன்னிறப் (பருப்) பால் ஓங்கிய அன்னமும் குறைவில்லாது திருவமுதுசெய்து வேண்டிய (ஆடைமுதலிய) பொருள்களும் ஏற்றுக்கொள்ளுவீர் என்று (அந்நாட்டார்தம்வீட்டிற்கு அழைத்துவந்து) உண்பிப்பார்.—எ - று. (௩௨)

பின்னெவ னுரைப்ப தந்தப் பெருநதமிழ் நாடாங் கன்னி
தன்னிடை யூர்க ளென்னு மவயவந் தாங்கச் செய்த
பொன்னியற் கலனே கோயின் மடமறப் புறநீர்ச் சாலை
யின்னமிழ் தருத்து சாலை யெனவுருத் திரிந்த தம்மா.

இ - ள். அச்சிறப்புடைய (செந்) தமிழ்ப்பெரு நாடாகிய கன்னி யிடத்துள்ள மற்றையூர்க ளென்னும் உறுப்புகள் தாங்கிய பொன்னால் இயன்ற அணிகளே திருக்கோயில் மடாலயம் தருமசத்திரம் தண்ணீர்ப்பந்தர் இனியஅன்னம் உண்பிக்குஞ்சாலை என்னுமிவைகளாக வடிவம் வேறுபட்டனவென்று கூறுவதன்றி வேறேயாதுசொல்லத்தக்கது.—எ - று. அம்மா அசை. (௩௩)

திணைமயக்கம்.—கலிநிலைத்துறை.

இன்ற டம்புனல் வேலிசூ ழிந்நில வரைப்பிற்
குன்ற முல்லைதண் பணைநெய்தல் குலத்திணை நான்கு
மன்ற வுள்ளமற் றவைநிற்க மயங்கிய மாபி
னென்றொ டொன்றுபோய் மயங்கிய திணைவகை யுரைப்பாம்.

இ - ள். இனியநீருள்ள தடாகங்கள் வேலியாகச் சூழ்ந்த இப்பாண்டிநாட்டெல்லையுள்ளே குறிஞ்சி முல்லை தண்ணியமருதம் நெய்தல் எனச்சிறப்புடைய நாற்றிணைகளும் பிரசித்தமாகத் தனித்தனியுள்ளன அவைநிற்க. மயங்கிய முறை யுடையதாக ஒருதிணைப் பொருளொடு பிறிதொரு திணைப்பொருள் சென்று கலந்த திணைமயக்கப் பகுதியை (யாம்இனி) க்கூறுவாம்.—எ - று. (ரு௪)

கொல்லை யானிரை மேய்ப்பவர் கோழிணர்க் குருந்தி
னெல்லை தாயதிற் படர்கறிக் கருந்துண ருகுப்ப
முல்லை சோறெனத் தேன்விராய் முத்திலைழ சிற்றி
லெல்லை யாய்மோ டாடுப வெயின்சிறு மகளிர்.

இ - ள். முல்லைநிலப் பசுக்கூட்டத்தை மேய்க்கும் ஆயர் கொழுவிய பூங்கொத்தையுடைய குருந்தமரத்தில் விரைந்து ஏறி அதிலே (குறிஞ்சிநிலத்தினின்று) படர்ந்த மிளகுக் கொடியினுள்ள கரிய கொத்துக்களை உதிர்ப்பார். பாலை நில வேடச்சிறுமியர் (நெய்தனிலத்துள்ள) முத்தாற் கோலிய சிறுவீட்டினுள்ளே (முல்லைநில) முல்லையரும்பு சோறாக (அதனோடு) தேன்கலந்து பெண்கள் கூட்டதனோடு விளையாடுவர்.—எ-று. கறி, முல்லை - ஆகுபெயர்கள். ஓரிடத்தே முல்லைகுறிஞ்சிகளும், ஓரிடத்தே பாலை, நெய்தல், முல்லைகளும் கலந்துள்ளன; இப்படியே வருவனவுங் கொள்க. (ருரு)

கன்று நெங்களி வண்டுவாய் நக்கவீர்ங் கரும்பு
மென்று பொன்சொரி வேங்கைவா யுறங்குவ மேதி
குன்றி னந்தினை மேய்ந்துபூங் கொழுநிழன் மருதஞ்
சென்று றங்குவ சேவக மெனமுறச் செவிமா.

இ - ள். (மருதநில) எருமைகள் (தங்) கன்றுகளும் மதர்த்த வண்டுகளும் (தங்) கடைவாயை நக்கும்படி குளிர்ந்த கரும்புகளைத் தின்று (குறிஞ்சிநிலத்திலே) பொன்போலும் பூக்களைச் சொரிகின்ற வேங்கை மரநிழலில் உறங்குவன. குறிஞ்சிநிலத்து முறம்போன்ற செவிகளையுடைய யானைகள் முதிராத தினைக்கதிர்களை மேய்ந்து (மருதநிலத்திலே) பூங்கொத்துக்களையுடைய மருதமரத்தின் கொழுவிய நிழலிலே சென்று (தாங்) துயிலுமிடமாகக் கொண்டு துயிலுவன.—எ - று. பொன், வேங்கை, தினை, ஆகுபெயர்கள். (ருசு)

எற்று தெண்டிரை யெறிவளை யெயிற்றிய ரிழைத்த
சிற்றில் வாய்நுழைந் தழிப்பவச் சிறுமியர் வெகுண்டு
பற்றி லாரெனச் சிதறிய மணவுணி பரதர்
முற்றி லாமுலைச் சிறுமியர் முத்தொடுங் கோப்ப.

இ - ள். (நெய்தனிலத்திலே கரையோடு) மோதும் தெள்ளிய (கடலின்) திரைகள் வீசும் சங்குகளை (க்குறிஞ்சிநில)க் குறச்சிறுமியர் கோலிய சிற்றிலின் கண்ணே புகுந்து (அதன்வடிவை) அழிக்க, அப்பெண்கள் சினந்து பற்றற்றவர்போல (க்கழற்றி)வீசிய அக்குமணி யாபரணத்தை (நெய்தனில)ப் பரதர்குலத்து முதிராதனமுடைய சிறுமியர் முத்துகளோடு கோவை செய்வார்.—எ.- று. (ருஎ)

முல்லை வண்டுபோய் முல்லையாழ் முளரிவாய் மருதம்
வல்ல வண்டினைப் பயிற்றிப்பின் பயில்வன மருதங்
கொல்லை யான்மடி யெறிந்திளங் குழவியென் றிரங்கி
யொல்லை யூற்றுபால் வெள்ளத்து ளுகழ்வன வாளை.

இ - ள். முல்லைநிலத்து வண்டுகள் (மருதநிலத்திற்) சென்று (தம்) முல்லைப் பண்ணைத் தாமரைமலரில் இருக்கும் மருதப்பண் பாடவல்ல வண்டுகளுக்குக் கற்பித்துப் பின்பு மருதப்பண்ணைக் கற்றுக்கொள்வன. (மருதநிலத்து) வாளைமீன்கள் முல்லைநிலப் பசுமடியின் மோத (அதனை அப்பசுதன்) இளங்கன்று (முட்டிய) தென்று மனங்கனிந்து விரைந்து சொரியும் பால்வெள்ளத்திலே புரள்வன. — எ - று. யாழ் - ஆகுபெயர். வண்டினைஉருபுமயக்கம். எறிந்து செயவெனெச்சத்திரிபு. (௩௮)

கரும்பொற் கோட்டிளம் புன்னைவாய்க் கள்ளுண்டு காளைச்
சுரும்பு செவ்வழிப பாண்செயக் கொன்றைபொன் சொரிவ
வருந்த டங்கடல் வளையெடுத் தாழியான் கையி
லிருந்த சங்கென விறைகொளப பூவைமே லெறிவ.

இ - ள். ஆண்வண்டுகள் (நெய்தனிலத்து) இரும்புபோலுங் கருங்கொம்புகளையுடைய முதிராத புன்னைமலரின் தேனைப்பருகி (அந்நில)ச்செவ்வழிப் பண்ணைப் பாட அதற்காக(முல்லைநிலத்துக்) கொன்றை மரங்கள் (கொடையுடையோர் போல) மலராகிய பொன்னைப் பொழிவன. மிகப்பெரியகடல் (திரையாகிய கையினாலே தன்னிடத்துள்ள)சங்கினை எடுத்து விஷ்ணுவின்கையில் இருந்த பாஞ்சசந்நியம்போலத்தங்கும்படி (முல்லைநிலக்) காசாஞ்செடி மீது எறிவன.—எ - று. (௩௯)

கழிந்த தெங்கினொண் பழம்பரீஇ முட்பலாக் கனிகீண்
டழிந்த தேனுவர்க் கேணிபாய்ந் தகற்றுவ வுவரை
வழிந்த தேன்மடற் கேதகை மலர்நிழல் குருகென்
றொழிந்த தாமரைப் போதுபுக் கொளிப்பன கெண்டை.

இ - ள். (மருதநிலத்தே குலையினின்று) நீங்கிய ஒள்ளிய தேங்காய்கள் வீழ்தலாலே (குறிஞ்சி நிலத்தே) முள்ளுள்ள பலாப்பழங்கள் கிழிபட்டுச் சிந்தியதேன்கள் (நெய்தனிலத்து) உவர்க்கேணியிற் பாய்ந்து (அவ்) வுவரைப்போக்குவன (நெய்தனிலத்தே) தேன்சிந்திய இதழ்களுடைய தாழைமலரினிழலை (மருதநிலக்) கொக்கென்று (அஞ்சி அப்பறவை) நீங்கிய தாமரை மலரில் (அந்நிலக்) கெண்டைமீன்கள் புகுந்து மறைந்து கொள்வன.— எ - று. (௪௰)

ஆறு சூழ்கழிப் புலால்பொறா தசைந்துகூன் கைதை
சோறு கால்வன வாம்பல்வாய் திறப்பன துணிந்து
கூறு வாரெனக் குவளைகண் காட்டிடக் கூடித்
தூறு வாரெனச் சிரித்தலர் தூற்றுவ முல்லை.

இ - ள். (நெய்தனிலத்தே) கூனிய தாழைகள் ஆறுகள்சூழ்ந்த (உப்பங்) கழியின் புலால் நாற்றத்தைச் சகியாமல் (உடல்) நடுங்கி (மலரினின்று மகரந்தமாகிய) சோற்றைக்கக்க, (அதற்கு நேரில் மருதநிலத்து) ஆம்பல்மலர்கள் (அச்சோற்றை உண்ணும்

குறிப்பாக) வாயைத் திறப்பன. (அத்தீச்செய்கையை அந்நிலக்) குவளைகள் (கண்டு) மனந்துணிந்து (ஒருவன்குற்றத்தை) வெளியிடுவோர் போல (விரிந்தமலராகிய) கண்ணைக் காட்ட, (அதனைநோக்கி முல்லைநில) முல்லைச்செடிகள் (ஒருவன் குற்றத்தைக் கண்டு தம்முட்) கூடி (நகைத்து) த் தூற்றுவார்போல (மலர்தலாகிய) நகைத்தல் செய்து (பழம்பூக்களைத்) தூற்றுதல் செய்யும்.—எ - று. கால்வன - முற்றெச்சம். (சுக)

துள்ளு சேல்விழி நுளைச்சியர் சுறவொடு மருந்தக்
கள்ளு மாறவுங் கூனலங் காய்தினை யவரை
கொள்ளு மாறவுங் கிழங்குதேன் கொழுஞ்சுவைக் கன்ன
லெள்ளு மாறவு மளப்பன விடைக்கிடை முத்தம்.

இ - ள். தாவுகின்ற சேல்மீன் பிறழ்ச்சிபோலும் பிறழ்ச்சியுள்ள கண்களையுடைய நெய்தனிலப் பெண்கள் (அந்நிலச்) சுறாமீனோடும் உண்ண (மருதநிலக்) கள்ளு கொழுவிய மதுரமுள்ள கரும்பு இவைகட்கும் (குறிஞ்சி நிலப்) புளியங்காய் தினைய ரிசி தேன் கிழங்கு இவைகட்கும் (முல்லைநில) அவரை கொள்ளு எள்ளு இவைகட்கும் மாறுதலாக (அப்பொருள்களின்) அளவுக்களவு அளப்பன முத்துகளாம்.—எ - று. செய்யுளாகலின் இங்ஙன முறைபிறழ வைத்தமையும் திணைமயக்கத்தைக் காட்டுகின்றது. (சுஉ)

அவமி கும்புலப் பகைகடந் துயிர்க்கெலா மன்பா
நவமி குங்குடை நிழற்றிமெய்ச் செய்யகோ னடாத்திச்
சிவமி கும்பர ஞானமெய்த் திருவொடும் பொலிந்து
தவமி ருந்தர சாள்வது தண்டமிழ்ப் பொதியம்.

இ - ள். கேடுமிக்க விடயப் பகையை வென்று ஆன்மாக்கள் அனைத்திற்கும் அருளாகிய புதுமை மிக்க குடைநிழலைச் செய்து வாய்மையாகிய செங்கோலைச் செலுத்தி மங்கலமிக்க பரஞான மாகிய நித்திய ஐசுவரியத்தொடு விளங்கிச் சிவயோக மிருந்து அரசாட்சி செய்வதற்கு இடமாகியது (தண்ணிய செந்) தமிழ்ப் பொதிய மலையாம்.—எ - று. அன்பின் காரியத்தை அன்பென உபசரித்தார். (சுங)

வான யாறுதோய்ந் துயரிய மலயமே முக்கண
ஞான நாயக னமமலை போர்த்தகா நாலவா
யானை யீருரி யம்மழை யசும்பதன் புண்ணீர்
கூனல் வான்சிலை குருதிதோய் கோடுபோன் றன்றே.

இ - ள். ஆகாயகங்கையை அளாவி யுயர்ந்தபொதியமலை (கங்கைதாங்கி மேம்பட்ட) சிவபெருமான் (போலாம்) அம்மலையைச் சூழ்ந்த மேகம் நான்ற வாயினையுடைய யானை(யினின்றும்) உரி(த்துப்போர்)த்த தோல் (போலாம்) அம்(மேகத்தின்) மழைத்துளி அ(த்தோலினின்றுளிக்கும்) உதிரம்(போலாம்) (அதனிற்காணப்படும்) வளைந்த இந்திரதனுசு உதிரம்பொருந்திய (அவ்யானைக்) கொம்பினைப் போன்றதாம்.—எ - று. ஞானம்-திருமேனி, ஏகாரங்கள்-அசை. (சுச)

சுனைய கன்கரைச் சூழல்வாய்ச் சுரும்புசூழ் கிடப்ப
நனைய விழ்ந்தசெங் காந்தண்மே னாகிள வேங்கைச்
சினைய விழ்ந்தவீ கிடப்பபொன் றோய்கலத் தெண்ணீ
ரனைய பொன்சுடு நெருப்பொடு கரியிருந் தனைய.

இ - ள். (அம்மலையிலே) சுனையும் (அதன்) பரந்த கரையிடத்தே வண்டுகள் சூழ்ந்து கிடப்பனவும் அரும்பு விரிந்த செங்காந்தள்மலரும் அதன்மேல் மிக்கஇளமையாகிய வேங்கையின் அரும்புவிரிந்த மலர்கள் கிடப்பனவும் (முறையேகாய்ச்சும்)பொன்னைத் தோய்க்கின்ற தெள்ளிய நீருடைய பாத்திரமும் கரியும் சுடுகின்ற நெருப்பும் (அதன்மீது) உயர்ந்த பொன்னும் இருந்தால் ஒப்பனவாம்.—எ - று. செங்காந்தள் ஆகுபெயர். சுட்டு - உயர்வின் மேலது. (௬௫)

குண்டு நீர்ப்படு குவளைவாய்க் கொழுஞ்சினை மரவம்
வண்டு கூப்பிடச் செம்மறாய்ப் புதுமது வார்பவ
வண்டர் வாய்ப்பட மறைவழி பொரிசொரிந் தானெய்
மொண்டு வாக்கிமுத் தீவினை முடிப்பவ ரனைய.

இ - ள். (அம்மலையிலே) ஆழிய (சுனை)நீரினுள்ள செங்குவளை மலரிலே கொழுவிய கொம்புகளையுடைய குங்குமமரங்கள் வண்டுகள் ஒலிக்கப் பழம்பூக்களைத்தூவிப் புதியதேன்களை ஒழுக்குவன. (அவை) தேவர்கள் திருவாயிற்சேரும்படி வேதமுழக்கத்தின்வழியே நெற்பொரியைத்தூவிப் பசுநெய்யை(ச்சுருக்கு சுருவங்களால்) மொண்டுவார்த்து ஆகவநீயம் தக்ஷிணாக்கினி காருகபத்தியமாகியமூவகை அக்கினிகாரியத்தை முடிக்கும் முனிவர்களை ஒப்பனவாம்.—எ - று. (௬௬)

அகிலு மாரமுந் தழன்மடுத் தகழ்ந்தெறிந் தழல்கா
றுகிரு மாரமுந் தொட்டெறிந் தைவனந் தூவிப
புகரின் மாலகரி மருப்பினால் வேலிகள் போக்கி
யிகலில் வான்பயி ரோம்புவ வெயினர்தஞ் சீறூர்.

இ - ள். (அம்மலையிலே) குறவர்களது சிற்றூரினுள்ளார் அகில் சந்தனம் இவ்வைகளில் நெருப்பிட்டு (அவ்வேர்களை)க் கல்லியெறிந்து நெருப்புப்போலச் செவ்வொளி வீசும் பவளம் முத்து இவைகளைத் தோண்டியெறிந்து மலைநெல்லைவிதைத்துக் குற்றமற்ற பெரியயானைக் கொம்புகளால் வேலிகள கோலி (விலங்குமுதலிய) இடையூறின்றி ஓங்கியபயிர்களைப் பாதுகாப்பார்.—எ - று. சீறூர் - ஆகுபெயர். (௬௭)

அண்ட வாணருக் கின்னமிழ் தருத்துவோர் வேள்விக்
குண்ட வாரழற் கொழும்புகை கோலுமக் குன்றிற்
புண்ட வாதவே லிறவுளர் புனத்தெரி மடுப்ப
வுண்ட காரகிற் றூமமு மொக்கவே மயங்கும்

இ - ள். தேவர்களுக்கு இனிய அவிசை உண்பிக்குமுனிவர்(செய்கின்ற) யாககுண்டத்தில் மிக்க தீயினது கொழுவிய புகை சூழும் அம்மலையிலே புலால் நீங்காத வேற்படையுடைய குறவர்கள் தங்கொல்லைகளிலே நெருப்பை இட (அஃது) உண்ணும் கரிய அகிலின்புகையும் (அவ்வேள்வியபுகையோடு) கூடக்கலக்கும். (௬௮)

கருவி வான்சொரி மணிகளுங் கழைசொரி மணியு
மருவி கான்றபண் மணிகளு மகன்றலை நாகத்
திரவி கான்றசெம் மணிகளும் புனங்கவ ரினமான்
குருவி வீழ்ந்திடக் கொடிச்சியர் கோத்தெறி கவண்கல்.

இ - ள். கூட்டமாகிய மேகங்களும் மூங்கில்களும் சொரிகின்ற முத்துகளும் அருவிகளும் பாம்புகளின் விரிந்த படங்களும் உமிழ்கின்ற சூரியன்போலும் சிவந்த பல மாணிக்கங்களும் (அம்மலைப்) புனங்களிலே (கதிர்முதலியவைகளைக்) கவரவருகின்ற கூட்டமாகிய மான்களும் குருவிகளும் வீழும்படி குறப்பெண்கள் கவணிற்கோத்து வீசுங் கற்களாம்.—எ - று. (௯௯)

மாய வன்வடி வாயது வையமா லுந்திச்
சேய பங்கய மாயது தென்னா டலாமேற்
போய மென்பொகுட் டாயது பொதியமப் பொகுட்டின்
மேய நான்முக னகத்தியன் முத்தமிழ் வேதம்.

இ - ள். பூலோகம் விஷ்ணுவடிவம்போன்றது. பாண்டிநாடு (அவ்)விஷ்ணுவின் சிவந்தவுந்தியங்கமலம்போன்றது. பொதியமலை (அக்)கமலமலரின்மேற்பரந்தமெல்லிய பொகுட்டுப்போன்றது. அகத்தியமகாமுனிவர் அப்பொகுட்டில் இருக்கும் பிரமாபோன்றனர். (அம்முனிவர் வளர்க்கும்) இயல் இசை நாடகமாகிய முத்தமிழ்கள் (பிரமாவளர்க்கும்) நான்குவேதம்போன்றன.—எ - று. (௰)

ஏக மாகிய மேருவும் பொதியமே யிரும்பொ
ஞகு மேருவைச் சூழ்ந்தசாம பூநத யாறு
நாக ராடுதண் பொருநையே நாவலா றுடுத்த
போக பூமியும பொருநைசூழ பூமியே போலும்.

இ - ள். ஒப்பில்லாத மேருமலை-பொதியமலையையும், பெரிய பொன்மேருவை வளைந்த நாவற்கனிச்சாறாகிய நதி - தேவர்கள் மூழ்கப்பெற்ற தாமிரபர்ணியையும், நாவல்நதிசூழ்ந்த போகபூமி - தாமிரபர்ணிசூழ்ந்த பூமியையும் ஒப்பாகும்.—எ-று. (௰க)

சிறந்த தண்டமி ழாலவாய் சிவனுல காநற்
புறநத யங்கிய நகரொலாம புரந்தரன் பிரமன்
மறந்த யங்கிய நேமியோ னாதிய வானோ
ரறந்த யங்கிய வுலகுரு வானதே யாகும்.

இ - ள். சிவலோகம் (போன்றது) சிறந்த தண்ணிய (செந்)தமிழ்ச்சங்கம்வீற்றிருந்ததிருவாலவாயாம். (அங்ஙனம்)ஆயின் வீரம்விளங்கிய சக்கரப்படையுடைய விஷ்ணு பிரமா இந்திரன் ஆதி தேவர்களது விளங்கிய அறவடிவான பதவிகள் (போன்றன அவ்வாலவாயின்) புறஞ்சூழ்ந்து விளங்கிய நகரங்கள் அனைத்துமாம்.—எ - று. (௰உ)

விளைந்த நுண்ணிடை மடந்தையர் வனமுலை மெழுகிக்
களைந்த குங்குமக் கலவையுங் காசறைச் சாந்து
மளைந்த தெண்டிரைப் பொருநையோ வந்நதி ஞாங்கர்
விளைந்த செந்நெலுங் கன்னலும் வீசுமவ் வாசம்.

இ - ள். (நீராடும்) மடவார் அழகிய தனங்களிற் பூசிக் களைந்த குங்குமப்பூ அளைந்த கலவையும் கஸ்தூரிகலந்த சந்தனமும் சேர்தலால் தாமிரபர்ணி மாத்திரமா, அதன்புறத்தேவிளைந்த செந்நெற்களிலும் கரும்புகளிலும் அம்மணம் கமழும்.—எ - று.

பொதியி லேவிளை கின்றன சந்தனம் பொதியி
னதியி லேவிளை கின்றன முத்தமந் நதிசூழ்
பதியி லேவிளை கின்றன தருமமப் பதியோர்
மதியி லேவிளை கின்றன மறைமுதல் பத்தி.

இ - ள். சந்தனமரங்கள் பொதியமலையினும் முத்துகள் அம்மலையினின்று வரும் தாமிரபர்ணியினும் அறங்கள் அந்நதிசூழ்ந்த நகரங்களினும் சிவபத்திகள் அந்நகரவாசிகள் அறிவினும் உண்டாகின்றன.—எ - று. (ருச)

கடுக்க வின்பெறு கண்டனுந் தென்றிசை நோக்கி
யடுக்க வந்துவந் தாடுவா னாடவி னிளைப்பு
விடுக்க வாரமென் காறிரு முகத்திடை வீசி
மடுக்க வுந்தமிழ் திருச்செவி மாந்தவு மன்றே.

இ - ள். அழகிய நீலகண்டபரமசிவனும் தென்றிசைநோக்கி(த் திருக்கைலாசம் திருப்பேரூர் திருவாலங்காடு ஸ்ரீசிதம்பரம் இவைகளிலன்றிப் பாண்டிநாட்டை)ப் பொருந்தவந்து திருவுளமகிழ்ந்து (வெள்ளியம்பலத்திலே) திருநடஞ்செய்தல் (எதன் பொருட்டெனின் அத்)திருநடத்தாலாகும் தளர்ச்சியை ஒழிக்கும்படி (பொதியமலைச்) சந்தனச்சோலையிற் படிந்துவரு மந்தமாருதம் வீசித் தந்திருமுகத்திலே பொருந்தவும் (செந்)தமிழை (வடமொழிமுதலியவற்றினும் இனிதாய்)த் திருச்செவிசேர்த்தி யருளவும் அல்லவா—எ - று. கண்டனும் உம்மை உயர்வுசிறப்பு. திருக்கைலாசத்திலே விஷபானஞ் செய்தபோதும், திருப்பேரூரிலே காலவமுனிவர்முதலியோர்பொருட்டும், திருவாலங்காட்டிலே காளிபொருட்டும், ஸ்ரீசிதம்பரத்திலே பதஞ்சலி வியாக்கிரபாதர் பொருட்டும் திருநடஞ்செய்ததாம். (ருரு)

விடையு கைத்தவன் பாணினிக் கிலக்கண மேனாள்
வடமொ ழிக்குரைத் தாங்கியன் மலயமா முனிக்குத்
திடமு றுத்தியம் மொழிக்கெதி ராக்கிய தென்சொன்
மடமு கட்கரங் கென்பது வழுதிநா டன்றே.

இ - ள். சிவபிரான் பாணினி முனிவருக்கு வியாகரணசூத்திரத்தை முன்னாளிலே சம்ஸ்கிருத பாஷைக்கு அருளிச்செய்ததுபோலப் பொதியமலை அகஸ்தியமகாமுனிவருக்கு இலக்கணசூத்திரத்தை நன்குணர்த்தி அவ்வடமொழிக்கு எதிர்மொழியாகச் செய்த தென்மொழியாகிய பெண்ணுக்கு நாடகசாலையென்பது பாண்டிநாடல்லவா—எ - று. உகைத்தல் - செலுத்தல். (ருசு)

கண்ணு தற்பெருங் கடவுளுங் கழகமோ டமர்ந்து
பண்ணு றத்தெரிந் தாய்ந்தவிப் பசுந்தமி ழேனை
மண்ணி டைச்சில இலக்கண வரம்பிலா மொழிபோ
லெண்ணி டைப்படக் கிடந்ததா வெண்ணவும் படுமோ.

இ - ள். சிவபெருமானும் சங்கப்புலவர்களோடு (சபாநாயகமாக) எழுந்தருளி யிருந்து செவ்விதாகவுணர்ந்து ஆராய்ந்த இப்பசிய (செந்)தமிழை மற்றைப்பதினேழு நிலங்களில் இலக்கணவரம்பில்லாத சிலசில மொழிகள்போல(ச் சாமானியமாக) எண்ணிக்கையின்கண் அமைந்ததாக மதிக்கவும் கூடுமோ (கூடாது) —எ - று, பதினேழு நிலத்தையும் "சிங்களஞ்சோனகஞ்சாவகஞ்சீனந்துளுக்குடகங்-கொங்கணங்கன்னடங் கொல்லந்தெலுங்கங்கலிங்கம்வங்கங்-கங்கமகதங்கடாரங்கவுடங்கடுங்குசலந் - தங்கும் புகழ்த்தமிழ்சூழ்பதினேழ்புவிதாமிவையே" என்னுங்கவியாலறிக. (௫௭)

தொண்டர் நாதனைத் தூதிடை விடுத்தது முதலை
யுண்ட பாலனை யழைத்தது மெலும்புபெண் ணுருவாக்
கண்ட தும்மறைக் கதவினைத் திறந்ததுங் கன்னித்
தண்ட மிழ்ச்சொலோ மறுபுலச் சொற்களோ சாற்றீர்

இ - ள். திருத்தொண்டர்களிலே (சுந்தரமூர்த்திநாயனாரது திருவாயினின்றுந் தோன்றித் திருவாரூரிலே பரவையாரிடத்தே) தூதின்மேற் (செல்லச்) சிவபிரானை யேவியதும், (திருப்புக்கொளியூரிலே) முதலையுண்ட (பிராமணப்) பிள்ளையை (ச்சென்ற ஆயுளோடு இயமன் முகமாக) வருவித்ததும், (திருஞானசம்பந்தமூர்த்திநாயனாரது திருவாயினின்றுந்தோன்றித் திருமயிலையிலே சிவநேசச்செட்டியாருடைய புத்திரியாரது) எலும்பைப் (பழைய) பெண்வடிவாக ஆக்கியதும், (திருநாவுக்கரசுநாயனாரது திருவாயினின்றுந்தோன்றித் திருமறைக்காட்டிலே) வேதபுருடனாலே (பூசித்துத் திருக்காப்பிடப்பெற்ற) திருக்கதவைத் திறப்பித்ததும் கெடாத தண்ணிய (செந்) தமிழ் மொழிகளாலாகிய திருப்பாசுரங்களோ ஏனையநாட்டு மொழிகளாலாகிய பாசுரங்களோ (புலவர்களே) புகலக்கடவீர்.—எ - று. (௫அ)

வெம்மை யால்விளை வஃகினும் வேந்தர்கோல் கோடிச்
செம்மை மாறினும் வறுமைநோய் சிதைப்பினுஞ் சிவன்பாற்
பொய்ம்மை மாறிய பத்தியும் பொலிவுங்குன் றுவாத்
தம்மை மாறியும் புரிவது தருமமந் நாடு.

இ - ள். அப்பாண்டி நாட்டார் (மழையில்லாது) வெப்பத்தினால் விளைவுகுன்றினாலும் அரசர்கள் செங்கோல் கொடுங்கோலாகி நடுவுநிலைமை தவறினாலும் நல்குரவாகிய நோய் வருத்தினாலும் சிவபிரான்மாட்டு மெய்ப்பத்தியும் (சைவ) விளக்கமும் குறைவுபடாதனவாகத் தங்களைவிற்றாயினும் புண்ணியங்களைச் செய்பவராவார்.—எ-று. சைவவிளக்கம் - திருநீறும், கண்டிகையும், திருவைந்தெழுத்தும். (௫௯)

உலகம் யாவையு மீன்றவ ளும்பரு ளுயர்ந்த
திலக நாயகி பரஞ்சுடர் சேயெனு மூன்று
தலைவ ரான்முறை செய்தநா டிஃதன்றிச் சலதி
சூலவு பாரினுண் டாகுமோ துறக்கத்து மஃதே.

இ - ள். சர்வலோக மாதாவும் சரசுவதிமுதலிய சத்திமார்களுள் மேம்பட்ட திலகம்போன்ற தலைவியுமாகிய உமாதேவி சிவபரஞ்சுடர் (இவர்கள் புத்திரராகிய) உக்கிரபாண்டியர் என்னும் முதற்றலைவராலே செங்கோல் செலுத்தப்பெற்ற நாடு இப்பாண்டி நாடன்றிக் கடல்சூழ்ந்த நிலவுலகிலே பிறிதுநாடுளதோ (இல்லை) சுவர்க்கலோகத்தும் அப்படியேயாம்.—எ - று. உய்பர் ஆகுபெயர் (௬0)

திருநாட்டுப்படலமுற்றியது.

ஆகச்செய்யுள் - ௬௧.

# மதுரைத்திருநகரப்படலம்.

மங்க லம்புனை பாண்டிநா டாகிய மடக்குச
சங்க லம்புகை தோளிணை தடமுலை யாதி
யங்க மாமபுறந் தழுவிய நகரெலா மனைய
நங்கை மாமுக மாகிய நகரவளம் பகர்வாம்.

இ - ள். நன்மைபூண்ட பாண்டிநாடென்னும் பெண்ணுக்குப் புறத்துள்ள (திருவேடகமுதலிய) நகரம் அனைத்தும் வளையொலிக்குங்கைகள் தோள்கள் பெரிய தனங்கள்முதலிய அவயவங்களாம் அத்தன்மையுடைய பெண்ணின் றிருமுகமாகிய மதுரைப் பதியின்சிறப்பை (யாம்) கூறுவாம்.—எ - று.

கொங்கை யேபரங் குன்றமுங் கொடுங்குன்றுங், கொப்பூ
ழங்க மேதிருச் சுழிய,லவ் வயிறுகுற் றாலஞ்,
செங்கை யேடக, மேனியே பூவணந், திரடோள்
பொங்கர் வேய்வனங், திருமுக மதுரையாம் புரமே.

இ - ள். வெளிப்படை. அப்பெண்ணுக்கு என்பதுவருவிக்க. கொடுங்குன்றம்-பிரான்மலை. பொங்கர் - சோலை. வேயவனம் - திருநெல்வேலி. வேய் - மூங்கில், நெல், மலை, சுழி, ஆலிலை, தாமரை, மலர், மூங்கில் சந்திரன் இவற்றோடு முறையே தனம், உந்தி, வயிறு, கை, மேனி, தோள், முகம் இவைகளை உவமிக்கப்படுதலால் இவ்வாறு கூறினர். சந்திரன் அமிர்தசம்பந்தத்தால் மதுரையாகியது திருநகரங்கண்ட படலம் நாகமெய்தபடலங்களிற் காண்க. (௨)

வடுவின் மாநில மடந்தைமார் பிடைக்கிடந் திமைக்கப்
படுவி லாரமே பாண்டிநா டாரமேற் பக்கத்
திடுவின் மாமணி யதன்புற நகரெலா மிவற்று
ணடுவி ளுய்ச மாமணி மதுரைமா நகரம்.

இ - ள். குற்றமற்ற பெருமையாகிய பூதேவி மார்பிலே தங்கிவிளங்கும் ஒளியுள்ள பெரும்பதக்கம் பாண்டிநாடாம். (அப்)பதக்க நாற்புறத்தும் பதித்த ஒளியுடைய பெரிய இரத்தினங்கள் அந்நாட்டின் புறஞ்சூழ்ந்த நகரங்கள் அனைத்துமாம். அவ்விரத்தினங்களுள் ஒளிவிடும் நடுநாயகமாகிய பெரிய இரத்தினம் மதுரைப்பெரும் பதியாம்

திருமகட்கொரு தாமரைக் கூடமே திருமான்
மருமகட்குவெண் டாமரை மாடமே ஞானந்
தருமகட்கியோ கத்தனிப் பீடமே தரையாம்
பெருமகட்கணி திலகமே யானதிப் பேரூர்.

இ - ள். வெளிப்படை. இப்பெரிய மதுரை கூடம், மாடம், பீடம், திலகம் ஆனதெனத் தனித்தனிமுடிக்க. இது செல்வம், கல்வி, ஞானங்களாற் சிறந்ததென் பது கருத்து. (ச)

திக்கும் வானமும் புதையிரு டினறுவெண் சோதி
கக்கு மாளிகை நிவப்புறு காட்சியந் நகருண்
மிக்க வாலிதழ்த் தாமரை வெண்மக ளிருக்கை
யொக்கு மலலது புகழ்மக ளிருக்கையு மொக்கும்.

இ - ள். அஷ்டதிசை ஆகாயம் இவைகளைமூடிய இருளைப்போக்கி வெள்ளொளிவீசும் மாளிகைகள் உயர்ந்துள்ள தோற்றம், அம்மதுரைப்பதியிலே சரசுவதியின் மிக்க இதழ்களுடைய வெண்கமலவீடுபோலும். அன்றிப் புகழாகிய பெண்ணின் இல்லம்போலும்.—எ - று. (ரு)

## புடைநகர்.

நெற்க ரும்பெனக் கரும்பெலா நெடுங்கமு கென்ன
வர்க்க வான்கமு கொலிகலித் தெங்கென் வளர்ந்த
பொற்க வினகுலைத் தெஙகுகார்ப் பந்தரைப பொறுத்து
நிறக நாட்டிய காலென நிவந்ததண் பணையே.

இ - ள். குளிர்ந்த மருதநிலத்திலே நெற்பயிர்கள் கரும்புகளும்கரும்புகள் நெடியகமுகுகளும் வரிசை (வரிசையாக) மேம்பட்ட கமுகுகள் (ஓலைகள் அசைதலால்)ஒலிக்கும் ஒலியுடைய தென்னைகளும் என்று (கண்டோர் மயங்கும்படி) வளர்ந்திருக்கின்றன. பொன்போலும் அழகிய குலைகளுடைய தென்னைகள் மேகமாகிய பந்தரைத் தாங்கி நிற்கும்படி நாட்டிய ஸ்தம்பங்களென்று சொல்லும்வண்ணம் உயர்ந்துள்ளன.()

சிவந்த வாய்க்கருங் கயற்கணாள் வலாரியைச் சீறிக்
கவர்ந்த வான்றருக் குலங்களே கடிமணம் வீசி
யுவந்து வேறுபல் பலங்களும் வேண்டினார்க் குதவி
நிவந்த காட்சியே போன்றது நிழன்மலர்ச் சோலை.

இ - ள். நிழலைத்தரும் மலர்களுடைய மரங்கள் நெருங்கிய சோலை, சிவந்த வாயும் கரிய கயல்போன்ற கண்களுமுடைய தடாதகைப்பிராட்டியார் இந்திரனைக் கோபித்துக் கைக்கொண்ட மேம்பட்ட பஞ்சதருக்கூட்டங்களே நன்மணங் கமழ்ந்து மகிழ்ந்து பலவேறு கனிகளும் விரும்பினவர்க்குக் கொடுத்து உயர்ந்த தோற்றத்தை ஒத்தது.—எ - று. பஞ்சதரு-சந்தானம், அரிச்சந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பம்.()

ஒல்லொ லிக்கதிர்ச் சாலிகள் புறந்தழீஇ யோங்க
மெல்லி லைப்பசுங் கொடியினால் வீக்குறு பூக
மல்லெ னுங்களத் தண்ணற னணிவிழாத் தருப்பைப்
புல்லொ டும்பிணிப் புண்டபொற் கொடிமரம் போலும்.

இ - ள். ஒல்லெனும் ஒலியுள்ள கதிருடைய நெற்பயிர்கள் புறம்பேபொருந்தி உயர்ந்துதோன்ற மெல்லிய இலையுள்ள பசிய கொடியினால் (அப்பயிரோடு) கட்டுண்ட கமுகு, இருளாகிய (நீல)கண்ட பரமசிவனது அழகிய திருவிழாவிலே தருப்பைப்புல்லொடு (புறம்பே) கட்டுண்ட பொன்னாலாகிய துஜஸ்தம்பத்தை ஒக்கும்.—எ - று.(அ)

சீத வேரியுண் டளிமுரல் கமலமேற் செருந்தி
போத வேரியு மலர்களுஞ் சொரிவன புத்தேள்
வேத வேதியர் செங்கரம் விரித்துவாய் மநுக்க
ளோத வேமமு முதகமு முதவுவா ரனைய.

இ - ள். குளிர்ந்த தேனையுண்டு வண்டுகள் இசைபாடும் தாமரைமலர்மீது செருந்திகள்பொருந்த மதுவையும் மலர்களையும் சொரிவன, தெய்வத்தன்மையான வேதங்களையுணர்ந்த பிராமணர் சிவந்த கையைவிரித்து வாயினால் மந்திரங்களை உச்சரிக்க (அவர் கையிலே) திரவியத்தையும் (அதனைத் தத்தஞ்செய்ய) நீரையும் கொடுப்பவர் போன்றன.—எ - று. (௯)

விரைசெய் பங்கயச் சேக்கைமேற் பெடையொடு விரவி
யரச வன்னநன் மணஞ்செய வம்புயப் பொய்கை
திரைவ ளைக்கையா னுண்டுளி செறிந்தபா சடையா
மரக தக்கலத் தரளநீ ராசனம் வளைப்ப.

இ - ள். சிறந்த அன்னப்பறவை வாசனைவீசும் தாமரைப்படுக்கையிடத்தே பேட்டோடுபொருந்தி நல்ல விவாகஞ்செய்யாநிற்க, தாமரைத்தடாகங்க(ளாகிய மகளிர்)கள் அலைகளாகிய (சங்கு) வளையுள்ள கைகளால் நுண்ணிய நீர்த்துளியென்னு முத்துகள்நெருங்கிய பசிய இலையென்னு மரகதத்தட்டைக்கொண்டு ஆலத்தி சுற்றுகின்றன.—எ - று. ஏகதேசவுருவகம். (௧0)

இரும்பி னன்னதோள் வினைஞரார்த் தெறிந்துவாய் மடுக்குங்
கரும்பு தின்றிடி யேற்றொலி காட்டியின் சாறு
சுரும்பு சூழ்றிடத் தரற்றிடச் சொரிந்துவெஞ் சினத்தீ
யரும்பு கட்கனி றொத்தன வாலையெந் திரங்கள்.

இ - ள். கரும்பாலைகள், இரும்பினையொத்த (வலிய) புயங்களையுடைய மள்ளர்கள் முழங்கித் தறித்துத் தம்மிடத்திற் கொடுக்குங் கரும்புகளைத்தின்று மிக்க இடிபோல் ஒலித்து வண்டுகள் சூழ்ந்தொலிக்க இனிய சாற்றினைபொழிந்து வெவ்விய கோபாக்கினிதோன்றும் கண்களையுடைய யானைகளை ஒத்தன.—எ - று. யானையின் பாமாயின், வினைஞர்-பாகர். வாய்-வாயினிடத்து. (௧௧)

பள்ள நீர்க்குடைந் தஞ்சிறைப் பாசிபோர்த் தெழுந்த
வெள்ளை யுன்னத்தைக் கார னமெனப்பெடை வீழ்ந்த
வுள்ள மீட்டல மரச்சிற குதறியுள் ளன்பு
கொள்ள வாசையிற் றழீஇக்கொடு குடம்பைசென் றணையும்.

இ - ள். வெள்ளிய சேவலன்னம் குளநீரில் முழுகி அழகிய சிறையிற் பாசியாற் பொதியப்பட்டு எழுந்ததை (நோக்கிப் பிறிதொரு) கரிய அன்னமெனக் கருதிப் பேடானது விரும்பிய மனத்தைத்திருப்பி வருந்த (அதனையுணர்ந்த சேவல்) சிறகினை உதறி மனத்திலே காதல்கூரப்(பேட்டினை) ஆசையினாலே தழுவிக்கொண்டு கூட்டிற் போய்ச்சேரும்.—எ - று. (௧௨)

இரவி யாழியொன் றுடையதே ரீத்தெழு மிமையாப்
புரவி நாகிமிர்த் தயில்வன பொங்கர்வாய்த் தளிர்கள்
கரவி லார்மகத் தெழுபுகை கற்பக நாட்டிற்
பரவி வாட்டுவ பனியெனப் பங்கயப் பொய்கை.

இ - ள். சூரியனது ஒருருளைத்தேரை இழுத்துச்செல்லும் இமையா(நாட்ட)க் குதிரைகள் நாவை நீட்டிச் சோலைகளிடத்தே தளிர்களைக் கறிப்பன. சிரத்தையுள்ள பிராமணர்செய்யும் யாக(குண்ட)த் தெழும்புகை தேவருலகிற் பரம்பிப் பனிபோலத் தாமரைத்தடாகத்தை வாட்டுவன.—எ - று. (௧௩)

பிறங்கு மாலவா யகத்துளெம் பிரானரு ளால்வந்
தறங்கொ டூர்த்தமா யெழுகட லமர்ந்தவா நோக்கிக்
கறங்கு தெண்டிரைப் பெரும்புறக் கடலும்வந் திவ்வூர்ப்
புறங்கி டந்ததே போன்றது புரிசைசூழ் கிடங்கு.

இ - ள். அரணைச்சூழ்ந்த அகழி, விளங்குகின்ற மதுரைப்பதியிலே எம்பெருமானது கருணையினாலே சப்தசாகரமும்வந்து புண்ணிய தீர்த்தமாகப் பொருந்திய வண்ணத்தை எண்ணி ஒலிக்கும் தெள்ளிய அலையுள்ள (சக்கிரவாளகிரியைச்சூழ்ந்த) பெரும் புறக்கடலும்போந்து (தானும் புண்ணியதீர்த்தமாகுமபடி) இந்நகர்ப்புறத்தே அமர்ந்ததை ஒத்தது.—எ - று. (௧௪)

எறியும் வாளையு மடிக்கடி யெழுந்துடல பரப்பிப்
பறியு மாமையும் வாளொடு கேடகம் பற்றிச்
செறியு நாண்மல ரகழியுஞ் சேண்டொடு புரிசைப்
பொறியு மேயன்றி யுடன்றுபோர் புரிவது போலும்.

இ - ள். (அடிக்கடிமேலெழுந்து நீரை) வெட்டும் வாளைமீனும அங்ஙனம் எழுந்து உறுப்புகளைப் பரப்பி (உள்ளே) பதுங்கும் ஆமையும் (அகழியிலே திரிதல்) ஆகாயத்தையளாவிய அரணிலுள்ள யந்திரங்கள்மாத்திரமேயன்றிப் புதியமலர்கள் நெருங்கிய (அந்த) அகழியும் வாட்படையும் கேடகமுங் (கைக்)கொண்டு (பகைவரோடு) கோபித்துப்போர்செய்தலை ஒக்கும்.—எ - று. (௧௫)

கண்ணி லாதவெங் கூற்றெனக் கராங்கிடந் தலைப்ப
மண்ணி னூரெவ ரேனுமிம் மடுவிடை வீழ்ந்தோர்
தெண்ணி லாமதி மிலைந்தவர்க் கொப்பெனச் சிலரை
யெண்ணி னாரிரு ணரகரீத் தேறினு மேறார்.

இ - ள். இவ்வகழியினிடத்தே விழுந்தவர் நிலவுலகிலுள்ளவர் யாவராயினும் (அவர்) இரக்கமில்லாத கொடிய யமனைப்போல முதலைவருத்தும்படி கிடந்து தெள்ளிய நிலவைவீசும் சந்திரனைச்சூடிய சிவபிரானுக்குச் சமமாக (விஷ்ணுமுதலிய) சில தேவரை மதித்தவர் இருண்ட நிரயத்தினின்று கரையேறினாலும் கரையேறாது (வருந்துவர்).—எ - று. கராம் - மெலித்தல் விகாரம். ஏறார் - முற்றெச்சம். (கசு)

குமிழ லர்ந்தசெந் தாமரைக் கொடி முகிழ் கோங்கி
னுமிழ்த ரும்பர ஞானமுண் டுமிழ்ந்தவாய் வேதத்
தமிழ றிந்துவை திகமுடன் சைவமு நிறுத்து
மமிழ்த வெண்டிரை வைகையு மொருபுறத் தகழாம்.

இ - ள். (நாசியாகிய) குமிழம்பூமலர்ந்த (திருமேனியாகிய) செந்தாமரைக்கொடியிலே அரும்பிய (தனமாகிய) கோங்கரும்பினின்று (உமாதேவியார) பொழிந்த (பாலாகிய) பரஞானத்தைத் (திருஞானசம்பந்தப்பிள்ளையார) பருகி (மீட்டும் உலகத்தார்க்கு அப்பரஞானம் விளங்குதற்கு ஏதுவாக)த் திருவாயினால் வெளியிட்டருளிய (அபரஞானமாகிய) தமிழ்வேதச்சுவையை உணர்ந்து வேதநெறியையும் சைவநெறியையும் நிலைபெறச்செய்த அமிர்தம்போன்ற வெள்ளிய திரையுடைய வைகைநதியும் (அம்மதிலின்) ஓர்புறத்துள்ள அகழியாம்.—எ - று. சமணரை வெல்லும்பொருட்டுத் திருவாய்மலர்ந்தருளிய "வாழ்கவந்தணர்" என்னும் திருப்பாசுரம்வரைந்த திருவேட்டை எதிர்ந்துசெல்லுமபடி செலுத்தினமையால் வைகைநதி தமிழ்வேதச்சுவையுணர்ந்ததாயிற்று. (கஎ)

பிள்ளை யும்பெடை யன்னமுஞ் சேவலும் பிரியாக்
கள்ள மூணடக்ச் செவ்வியாற் கணடவா கண்ணு
முள்ள மூந்திரும பாவகை சிறைப்படுத தோங்கும்
புள்ள லம்புதண் கிடங்கிது புரிசையைப் புகல்வாம்.

இ - ள். குஞ்சும் அன்னப்பேடும் சேவலும் நீங்காத தேனையுடைய தாமரை மலர்களின் பொலிவால்நோக்கினவர் விழியும் உளமுந்திரும்பாவண்ணம் வசப்படுத்தி மேம்பட்ட பறவைகள் ஒலிக்கின்ற தண்ணிய அகழி இச்சிறப்புள்ளதாம். (இனி) மதிலின் சிறப்பைக் கூறுவாம்.—எ - று. (கஅ)

மாக மூந்திய கதிமதின் மதுரைநா யகர்கைந்
நாக மென்பதே தேற்றமங் நகர்மதில் விழுங்கி
மேக நின்றசை கின்றதவ் வெஞ்சினப் பணித
நாக மொன்றுதோ லுரிபட நெளிவதே யாகும்

இ - ள். விண்ணுலகை யூடுருவிய காவலாகிய மதில் மதுராபுரேசரது திருக்கையில் அணிந்த பாம்பென்பது நிச்சயமே. (ஆதலால்) அந்நகரின் அரணை மூடிநின்று மேகம் அசைதல் அக்கோகோங்கோபப்பாம்பு தன்னுடலிற் பொருந்திய தோல் உரியும்படி தெளிதலேயாம்.—எ - று. தமது சர்ப்பகங்கணத்தால் மதுரைப்பதி எல்லையைக் காட்டினமைபற்றி மதில் மதுரைநாயகர் கைந்நாகமென்றார். (கக)

புரங்க டந்தபொற் குன்றுகோ புரமெனச் சுருதிச்
சிரங்க டந்தவர் தென்னரா யிருந்தனர் திருநதா
ருரங்க டந்திட வேண்டினு முதவிசெய் தவரால்
வரங்க டந்திடப் பெறவெதிர் நிற்பது மானும்.

இ - ள். (அம்மதில்வாயிலிற்) கோபுரம் (இருத்தல்) வேதமுடிவுக்கெட்டாத பிரான் (மதுரைப்பதியிலே) பாண்டியராஜராய் வீற்றிருக்கின்றார் (ஒருபொழுது) பகைவர்வலியை அடக்க (வில்) வேண்டினும் உதவிசெய்து அவ்விறைவரால் வரங்களை அருளப்பெறும்படி (முன்பு முப்)புரங்களைவென்ற (வில்லாகிய)மேருமலையென்று சொல்ல எதிர்ந்து நிற்றலை ஒக்கும்.—எ - று. (உ0)

சண்ட பானுவுந் திங்களுந் தடைபடத் திசையு
மண்ட கோளமும் பரநதுநீண் டகன்றகோ புரங்கள்
விண்ட வாயிலால வழங்குவ விடவரா வங்காந்
துண்ட போலபவு முமிழ்வன போல்பவு முழலா.

இ - ள். விரைந்து செல்லுஞ் சூரிய சந்திரர் (செலவு) தடைபடும்படி எண்டிசைகளினும் அண்டகோளகைக்கு மேலும் (முறையே) அகன்று நீண்டுள்ள பெரிய கோபுரங்களின் துவாரவழியால் உழன்று (அவ்விருவர்) சஞ்சரிப்பனவாகிய செய்கை, நஞ்சுபொருந்திய இராகு கேதுக்களாகிய பாம்புகள் வாய்திறந்து (அச்சூரியசந்திரரை) உண்டு உமிழ்ந்தனபோலாம்.—எ - று (உக)

மகர வேலையென் றியானைபோன் மழையருந்தகழி
சிகர மாலைசூ ழமமதி றிரைககரந் துழாவி
யகழ வோங்குநீர வைகையா லல்லது வேற்றுப்
பகைவர் சேனையாற் பொரப்படும பாலதோ வன்றே.

இ - ள். மேகங்கள் சுறாமீனுள்ள கடலெனக்கருதி யானைபோல் (நீரை) உண்ணும் அகழிசூழ்ந்த சிகரவரிசைகளுடைய அம்மதில் அலையாகிய கையினாலே துழாவிக் கல்லும்படி மிக்க நீர்(பெருகும்) வைகைநதியாலன்றி மறுநிலப்பகைவர் சேனையாற் போர்புரியப்படுந் தன்மையுடையதோ அல்ல.—எ - று. (உஉ)

எல்லை தேர்வழித் தடைசெயு மிம்மதிற புறஞ்சூழந்
தொல்லை மேவலர் வளைந்துழி யுடன்றுபோ ராற்றி
வெல்ல மள்ளரும் வேண்டுமோ பொறிகளே வெலல
வல்ல வம்மதிற் பொறிசெயு மறஞ்சிறி துரைப்பாம்.

இ - ள். சூரியனது தேர்வழியாகிய வானைத்தடுக்கின்ற இம்மதிலின் புறத்தே விரைந்து வளைந்து பகைவர் நெருங்கியவிடத்துக் கோபித்துப் போர்செய்து வெல்ல வீரரும் வேண்டுமோ? (வேண்டுவதில்லை) அம்மதிலின் யந்திரங்களே (போர்புரிந்து) வெல்லும் வல்லமையுடையன. (ஆதலால் இனி அப்)பொறிகள் செய்யும் வீரத்தைச் சிறிது (யாம்)கூறுவாம்.—எ - று. ஐயைவழியொடுகூட்டுக. எல்லை தேர்வழித் தடை செயும் என்பதற்கு எல்லையை ஆராயும்வழி (அறிவை)த் தடைசெயும் என்று பொருள் கொள்ளலும் ஒன்று. (உ௩)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

மழுக்கள் வீசுவன நஞ்சு பூசுமுனை வாள்கள் வீசுவன முத்தலைக்
கழுக்கள் வீசுவன குந்த நேமியெரி கால வீசுவன காலனே
ரொழுக்கள் வீசுவன கப்ப ணங்கள்விட மென்ன வீசுவன வன்னெடுங்
கொழுக்கள் வீசுவன கற்க வண்கயிறு கோத்து வீசுவன வார்த்தரோ.

இ - ள். (மறுபுலப்பகைவர் மீது சிலபொறிகள்) முழங்கி மழுப்படைகளை வீசுவன. விடம்பூசிய நுனியுள்ள வாட்படைகளால் வெட்டுவன. முத்தலைச் சூலம் கைவேல் சக்கரம் இப்படைகளைத் தீயுமிழ எறிவன. இயமன்போல வளைதடிகளையும் எஃகாலாகிய நெருஞ்சின்முள்வடிவப்படைகளையும் விடமென்று சொல்ல எறிவன. வலிய நெடியகாறுகளை வீசுவன. கவண்களிற் கற்களைவைத்துக் கயிற்றால் வீசுவன — எ - று. அரோ அசை. (உ௪)

நஞ்சு பில்குதொளை வாளெ யிற்றரவு நாகி மிர்த்தெறியு மலையரா
வெஞ்சி னங்கொண்முழை வாய்தி றந்துபொரு வாரை விக்கிட விழுங்குமாற்
குஞ்ச ரங்கொடிய முசலம் வீசியெதி ருறுகு வார்தலைகள் சிதறுமா
லஞ்சு வெம்பொறி விசைப்பி னுங்கடுகி யடுபு லிப்பொறி யமுக்குமால்.

இ - ள். நஞ்சு சிந்தும் துவாரமுள்ள வாள்போற்கூரிய பற்களையுடைய பாம்பு (ப்பொறி)கள் நாவைநீட்டி (ப்பல்லாற் கடித்துப் பகைவரை)க் கொல்லும் மலைப்பாம்பு (ப்பொறி)கள் கோடுங்கோபமுற்று மலைக்குகைபோலும் வாயைத்திறந்து போர்செய் வோரை விக்கும்படி விழுங்கும். யானை (ப்பொறி)கள் கொடிய இருப்புலக்கைகளை வீசி (த்தம்) மெதிர் நெருங்குவோர் தலைகளைச் சிந்தும். கொடிய ஐம்பொறிவேகத்தினும் விரைந்து கொல்லுகின்ற புலிப்பொறிகள் (பகைவரை) அமுக்கும்.—எ - று. ஆல்கள் அசை. (உ௫)

எள்ளி யேறுநரை யிவுளி மார்பிற வெறிந்து குண்டகழி யிடைவிழத்
தள்ளி மீளுமுருள் கல்லி ருப்புமுளை தந்து வீசியுடல சிந்துமாற்
கொள்ளி வாயலகை வாய்தி றந்துகனல் கொப்ப ளிப்பவுடல் குட்புறத்
துள்ளி யாடுவன கைகள் கொட்டுவன தோள்பு டைப்பசில கூளியே.

இ - ள். குதிரை (ப்பொறி) கள் (எளிதென்ன) இகழ்ந்து ஏறுகின்ற பகைவரை மார்பெலும்பு முறியவுதைத்து ஆழியகழியில் விழும்படி தள்ளித்திரும்பும். (சிலபொறிகள்) உருள்கல் இருப்புமுளை அரிகயிறு இவைகளை எறிந்து (பகைவர்) உடலைச் சித

றும். கொள்ளிவாய்ப் பிசாசு(ப்பொறி)கள் வாயைத்திறந்து தீயைஉமிழ்வன. சிலபேய் (ப்பொறி) கள் உடலங் குப்புறத்தள்ளியாடுவன. கைகளைக் கொட்டுவன. புயங்களைத் தட்டுவன.—எ - று. மார்பெலும்பை மார்பென உபசரித்தார். (உசு)

துவக்கு சங்கிலி யெறிந்தி ழுக்குமரி தொடர்பி டித்தகை யறுக்கவிட்
டுலக்கு மொன்னலாக டலைக ளைத்திருகி யுடனெ ருக்குமர நிலைகளாற்
கவைக்கொ ழுந்தழல் கொளுத்தி வீசுமெதிர் கல்லு ருட்டியடுமொல்லெனக்
குவைக்க டுங்கன்மழை பெய்யு மட்டமணல் கொட்டு மேவலர்கள் கிட்டவே.

இ - ள். (சிலபொறிகள்) பகைவர் அணுகும்போது பந்திக்கின்ற சங்கிலிகளை வீசி இழுக்கும். பற்றிய கையை அறுக்கும்படி அரிசங்கிலிகளை வீசி மகிழும். மரநிலைகளினாலே பகைவரது தலைகளைத்திருகி உடல்களை நெருக்கும். பிரிவாகிய சிகையையுடைய தீயைக் கொளுத்திவீசும். எதிரே கல்லுகளை யுருட்டிக் கொல்லும். ஒல்லென்னும் ஒலியோடு கூட்டமாகக் கொடிய கல்மழையைப்பொழியும். வறுதத மணலை (வாரி)க் கொட்டும்.—எ - று. (உஎ)

உருக்கி யீயமழை பெய்யுமாலய வுருக்கு வட்டுருகு செம்பினீர்
பெருக்கி வீசுமவிடு படையெ லாமெதிர் பிடித்து விட்டவர் தமைத்தெறச்
செருக்கி வீசுநடை கற்ற மாடமொடு சென்று சென்றுதுடி முரசொடும்
பெருக்கி மீளுநடை வைய மேனடவி யெய்யும் வாளிமழை பெய்யுமால்.

இ - ள். (சிலபொறிகள் பகைவர்மீது) ஈயத்தை உருக்கி மழைபோலப் பொழியும். (நெருப்பில்) உருகிய இரும்பாலாகிய உருக்குவட்டுகளோடு செம்பினீரையும் பெருக்கி வீசும் விடுகின்ற படைகள் அனைத்தையும் எதிரே பற்றி விட்ட பகைவரைக் கொல்ல அகங்கரித்து வீசும். சஞ்சரிக்கின்ற மாடங்களோடு (பலவிடங்களிலே) போய்ப்போய் உடுக்கை பேரிகை இவைகளின் ஒலியைப் பெருக்கித் திரும்பும். நடைத் தேர்களை மேலே செலுத்தி எய்கின்ற அம்பு மழையைப் பொழியும்.—எ - று. ஆல்கள் அசை. (உஅ)

வெறிகொ ளைமபொறியை வெல்லி னும்பொருது வெல்லு தற்கரிய காலனை
முறிய வெல்லினும வெலற்கருங் கொடிய முரணவா யமர ரரணெலா
மறிவி ழனிறுவு கம்மி யன்செயவு மரியவா யவனர் புரியுமிப்
பொறிகள் செய்யும்வினை யின்ன பொன்னணி புரத்து வீதிக ளுரைத்துமால்

இ - ள். (விடயங்களிலே) மயக்கம்பூண்ட பஞ்சப்பொறிகளை வென்றாலும், போர்செய்து வெல்லக்கூடாத இயமனை முறிந்தோட வென்றாலும், வெல்லுதற்கரிய கொடிய வலிமையுடையனவாய்த் தேவர் நகராண்முதலியவற்றை உணர்வினால் நிய மிக்குந் தேவதச்சன் செய்தற்கும் அரியனவாய்ப் பூகம்மியராற் செய்யப்பெற்ற இவ் வியந்திரங்கள் செய்யும் தொழில்கள் இத்தன்மையவாம். (இனிப்) பொன்னால் அலங் கரித்த (மதுரை அக)நகர் வீதிகளை (யாம்) சொல்லுவாம்.—எ - று. (உகூ)

### அகநகர்.

கலிநிலைத்துறை.

கழையுந் தாமமுஞ் சுண்ணமு மணிநிழற் கலனுங்
குழையுந் தூபமுந் தீபமுங் கும்பமுந் தாங்கித்
தழையுங் காதலர் வரவுபார்த் தன்பகந் ததும்பி
விழையுங் கற்பினு ரொத்தன விழாவறு வீதி.

இ - ள். திருவிழாக்கள் எந்நாளும் நிகழும் திருவீதிகள், கரும்புகள் பூமாலைகள் வாசனைப்பொடிகள் விளக்கமுள்ள அழகிய (இரத்தினக்) கோவைகள் (மாந்)தளிர்கள் தூபங்கள் தீபங்கள் (பூரண) கும்பங்கள் இவைகளால் அலங்கரிக்கப்பெற்று (க் காமன் கருப்பு வில் எழுதிய தொய்யில் பூமாலை வாசனைப்பொடி அழகிய பிரகாசமுள்ள இரத்தினாபரணம் குண்டலம் இவைகளை அணிந்து தூபதீபகும்பங்களைக் கையிலேதாங்கிப் பிரிந்துபோன) ஆசைமிக்க கணவர் (நல்) வரவுநோக்கி உளத்தில அன்பு நிறைந்து விரும்பும் கற்புடைமடவார் போன்றன —எ - று. (௬0)

ஆல நின்றமா மணிமிடற் றண்ணலா னந்தக்
கோல நின்றசே வடிநிழல குறுகினர் குணம்போல்
வேலை நின்றெழு மதியெதிா வெண்ணிலாத் தெண்ணீர்
கால நின்றன சந்திர காந்தமா ளிகையே.

இ - ள். விடந்தங்கிய அழகிய நீலகண்டபரசிவனது நித்தியானந்த வடிவச்சிவந்த திருவடியாகிய நீழலை (ப்பிறவி வெப்பந்தாக்காமல்) அடைந்தவர் (உருகி ஆனந்தக் கண்ணீரை ஒழுக்குந்) தன்மைபோலக் கடலினின்று தோன்றுஞ் சந்திரன் சந்நிதியிலே சந்திரகாந்தக் கல்லாலாகிய வீடுகள் வெள்ளிய ஒளியுள்ள தெள்ளிய நீரை உமிழாநின்றன.—எ - று. (௬௧)

குன்ற நோப்ளிக் குபரிகை நிரைதொறுங குழுமி
நின்றபல்சரா சரமுமந் நீழலவாய் வெள்ளி
மன்ற கம்பொலிந் தாடிய மலரடி நிழல்புக்
கொன்றி யொன்றறக் கலந்த பல்லுயிா நிலையனைய.

இ - ள். மலைபோன்ற பளிங்காலாகிய உபரிகைகளின் வரிசைதோறும் (அருகே) கூடிநின்ற பல சர அசரங்கள் அவ்வீடுகளின் நிழலிலே (அவ்வீடுமொகாமல் வேறுமாகாமற் பிரதிபலித்திருக்குந் தன்மைகள்) வெள்ளியம்பலத்திலே விளக்கமாக ஆடியருளிய சிவபிரான் திருவடிக்கமலமலர் நிழலிற் புகுந்து பொருந்தியும் பொருந்தாமல் (அத்துவிதமாய்க்) கலந்த பலவுயிர்களின் றன்மைகளை ஒப்பன.—எ - று. (௬௨)

கறித் தருந்துபுற் குவைகழீஇக் காற்றொடா பரியத்
தெறித் தகன்றயல் மரகத சித்திரத் தெற்றி
யெறித்த பைங்கதிர்க் கொழுந்தையு மெட்டிநா வளைத்துப்
பறித்து மென்றுவா யசைப்பன பசலையான் கன்று.

இ - ள். பசுவின் மிக்க இளங்கன்றுகள் கறிந்துக்குதட்டும் (பசிய) புற்குவியலைக் கழித்துக காலிற்கட்டியகயிறு அறத் துள்ளிப்போம் அயலிடத்தே மாகதத்தாற் செய்த சித்திரங்களுடைய வேதிகைகள் வீசிய பசிய கிரணங்களின் கொழுந்துகளை (நலல புல்லென்று) நாவலைத்து எட்டிப்பறித்து மென்று வாயால அசைபோடுவன.— எ - று. உம் - அசை. (௩௩)

சிறுகு கணணவாயக் காற்றெறி செவியவாயப பாச
மிறுகு காலவாய்க் கோட்டுமா வினம்வழங் காறுங்
குறுகு நுணமருங் கிறுதரெழு கோட்டுமா வினமபோ
மறுகும வண்டுசூழ்ந் திறைகொள மான்மத நாறும்.

இ - ள். சிறிய கண் காற்றுவீசும் செவி சங்கிலி இறுகக்கட்டிய கால கொம்பு இவைகளையுடைய யானைகள்செலலும வீதிகளிலே மிகக மதநீரும், மிகநுணணிய இடைஒடியவெழுந்த மலைசிகரம போனறதனஙகளையுடைய மடவார் குழாங்களசெல்லும வீதிகளிலே கஸ்தூரியும் வணடுகள் மொயத்துப் படியும்படி மணககும்.—எ - று இறுத்து - செயவெனசசத்திரிபு. (௩௪)

மாட மாலையு மேடையு மாளிகை நிரையு
மாட ரங்கமு மன்றிவே ளன்னவர் முடியு
மேட விழ்நததா ரகலமு மிணைத்தடந் தோளுஞ்
சூடு மாதரார் சீறடிப பஞ்சுதோய் சுவடு.

இ - ள். (சஞ்சரித்தலால்) மாடவரிசை மேடைவரிசை மாளிகைவரிசை நாடகசாலைவரிசை இவைகளும் (இரவில் ஊடியபோது வணஙகுதலால்) காமனைப்போன்ற (அழகிய) ஆடவர்முடி இதழ்விரிநத மலர்மாலையுள்ள மார்பம் உயர்ந்தவுபயபுயங்கள் இவைகளும் மகளிர் சிற்றடிகளில் ஊட்டிய செம்பஞ்சிக்குழம்பின் குறிகளைச் சூடாநிற்கும்.—எ - று. பஞ்சு - ஆகுபெயர். (௩௫)

மருமச் செம்புன லாறிட மாறடு கோட்டுப்
பருமச் செங்கண்மால் யானையின் பனைக்கையு மறைநூ
லருமைச் செம்பொரு ளாய்ந்தவாக் கரும்பொரு ளீவோர்
தருமச் செங்கையு மொழுகுவ தானநீ ராறு.

இ - ள். மார்பிலே உதிரநீர் பெருகப் பகைவரைக்கொல்லும் கொம்பு கவசம் சிவந்தகண் மதமயக்கம் இவைகளையுடைய யானையின் பனைபோன்ற துதிக்கையிலே மதநீர்ப்பெருக்கும், வேதநூலின் அரிய வுண்மைப்பொருளை ஆராய்ந்த அந்தணர்க்குப் பெரும்பொருளீயும் கொடையாளரது அறச்செய்கையுள்ள சிவந்த கையிலே தானஞ் செய்யும் நீர்ப்பெருக்கும் ஒழுகுவனவாம்.—எ - று. மாறு-ஆகுபெயர். (௩௬)

பரிய மாமணி பத்தியிற் பதித்திருட் படலம்
பொரிய வில்லிடக் குயிற்றிய பொன்னரா மியமுந்
தெரிய மாமுரா சொலிகெழு செம்பொனு டரங்கு
மரிய மின்பயோ தரஞ்சுமந் தாடுவ கொடிகள்.

இ-ள். பருத்த அழகிய மாணிக்கங்களை வரிசையாக அழுத்தி இருளின்றிருள் கெடும்படி விளங்கச்செய்த பொன்னாலாகிய நிலாமுற்றததிலே துவஜங்கள் பசிய மின்னலுள்ள மேகங்களைச் சுமந்தாடுவன. விளக்கமாகப் பெரிய மதசளவொலிபொருந்திய செம்பொன்னாலாகிய நாடகசாலையிலே பூங்கொடிபோன்ற மடவார்குழாங்கள அரிய மின்னல்போன்ற இனிய தனம் இவைகளைச்சுமந்து நிருததஞ்செயவன.—எ-று. மின், கொடி, ஆகுபெயர். (௪எ)

வலம்பட டெம்புயத் தாடவா மார்பமேற் புலவிக்
கலமப டர்ந்த பூண் முலையினா காலெடுத் தோச்சச்
சிலமப லம்பிசை மழுங்கமுன் னெழுமவர் தேந்தார்ப்
புலமபு வணடுநொந் தரற்றிய பொங்குபே ரொலியே.

இ-ள். வெற்றிபெற்ற புயங்களையுடைய தததங் கணவர்மார்பிலே ஊடலாகிய அணியணிந்த பூண்முலையினர் தமது காலெடுதது உதைக்க (அவா) சிலமபுகள் ஒலிக்கினற ஒலிகுனறுமபடி அககணவர் (மார்பிற்பூண்ட) மணந்தஙகிய பூமாலையில் இசைபாடும வண்டுகள் வருந்தி ஒலிதத மிகக பேரொலி முற்பட்டுததோன்றும்.—எ-று.

தைய லார்மதி முகங்களுந் தடங்களுங் குழைய
மைய லாவிய விழிகளு மாடமுங் கொடிய
கையு நாணமலர்ப் பொதும்பருங் கறங்கிசை வண்ட
செய்ய வோதியும வீதியு நீளற னெறிய.

இ-ள். பெண்களின் சந்திரன்போலு முகங்கள் குண்டலங்களையும் தடாகங்கள் தளிர்களையும் மைபூசிய கண்கள் கொடுந்தொழிலையும் மேகமண்டலத்தைப்பொருந்திய மாடங்கள் துவஜங்களையும் கைகள் ஒலிககின்ற ஒலியுள்ள வளைகளையும் புதிய பூக்களுடைய சோலைகள் ஒலிக்கின்ற இசையுடைய வண்டுகளையும் நெய்ப்பசையுள்ள அளகங்கள் நீண்ட கருமணல்போலும் நெறிப்பினையும் வீதிகள் மிக்க தருமநெறிகளையும் உடையன.—எ-று. (௪௯)

மலருந் திங்கடோய் மாடமுஞ் செய்வன மணங்க
ளலருந் தண்டுறை யுங்குடைந் தாடுவ தும்பி
சுலவுஞ் சோலையு மாதருந் தூற்றுவ வலர்கள
குலவும் பொய்கையு மனைகளுங் குறைபடா வன்னம்.

இ-ள். மலர்கள் வாசனையை வீசுவன. சந்திரமண்டலத்தை அளாவிய மாடங்களில் விவாகங்கள் செய்யப்படுவன. பூக்களிலே வண்டுகள் கிண்டியாடுவன. தண்ணீர்த்துறைகளிலே யானைகள் முழுகிவிளையாடுவன. சூழ்ந்தசோலைகள் மலர்களைச் சொரிவன. பரத்தையர்முதலியகுழாங்கள் பழிமொழிகளைத்தூற்றுவன. விளங்கும் பொய்கைகளிலே அன்னப்பறவைகள் நிறைந்துள்ளன. இலலங்களிலே அமுதுகள் குறையாதுள்ளன.—எ-று. (௫௦)

ஊடி னாரெறி கலன்களு மம்மனை யுடன்பந்
தாடி னார்பரி யீரமு டியினாற் சிற்றில்
சாடி னாரொடு வெகுண்டுகண் புதும்புமுத் துறைப்ப
வாடி னார்பரி நித்தில மாலையுங் குப்பை.

இ - ள். (தத்தங்கணவருடன்) ஊடினமகளிர் (வெறுத்து) எறிந்த அணிகளும் அம்மானையொடு பந்தாடிய பெண்கள் (பாரம்சகியாது அறுதது) எறிந்த அணிகளும் கால்களாற் சிறுவீடுகளைக்குலைத்த சிறுவரொடு கோபித்துக் கண்கள்ததும்புகின்ற முத்துப்போலும் நீர்துளிக்கும்படி மெலியுஞ் சிறுமியர் (அறுதது) எறிந்த முததுமாலைகளும் (அநநகர்வீதியிற்) குப்பைகளாம்.—எ - று. (௪௧)

ஐய வென்னுரை வரம்பின வாகுமோ வடிய
ருய்ய மாமணி வரிவளை விறகுவிற் றுழன்றோன்
பொய்யில் வேதமுஞ் சுமநதிடப பொருததன் றாற்றுஞ்
செய்ய தாண்மலா சுமந்திடத் தவஞ்செய்த தெருக்கள்.

இ - ள் அடியவர் உய்யும்வண்ணம் அழகிய இரத்தினம் வரிபொருந்திய வளையல் விறகு இவைகளை விற்றுத்திரிந்த சிவபிரானது, மெய்யான வேதங்களும் (அணுகித்) தாங்கப்பெறுமல் நீஙகி முறையிடப்பெற்ற, சிவந்த திருவடிக்கமலங்களைத் தாங்கும்படி தவம்புரிந்த (அந்நகரத) திருவீதிகளின் பெருமைகள் (எளிய) என்மொழிகளுக்கு எல்லையுடையன வாகுமோ ஆகா (அங்ஙனமாகவும் யான் கூறப்புகுந்தமை) ஆச்சரிமாம்.—எ - று. தெருக்களின் பெருமையைத் தெருக்களென உபசரிததார். (௪௨)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தோரண நிரைமென் காஞ்சி சூழ்நிலை நெடுந்தே ரலகுற்
பூரண கும்பக் கொங்கைப் பொருவின்மங கலமா மங்கை
தாரணிந் தாரந் தூக்கிச் சந்தகி றப்பிப் பாலிச்
சீரணி முளைவெண மூரல் செய்துவீற் றிருக்கு மன்றே.

இ - ள். தோரணவரிசையாகிய மெத்தென்னுந் தொழில்படச்செய்த எண்கோவைமணிசூழ்ந்த நெடிய நிலைத்தேராகிய அல்குலையும் பூரணகும்பங்களாகிய தனங்களையுமுடைய ஒப்பில்லாத மங்கலமாகிய மங்கையானவள் (மலர்) மாலைகள் அணிந்து முத்துமாலைகள் தொங்கவிட்டுச் சந்தனக்குழம்பு அகிற்குழம்புகளைப்பூசிப் பாலிகைகளிலுள்ள பொலிவுமிக்க முளையாகிய வெள்ளிய புன்னகைகளைத் தோற்றி (அந்நகர்வீதிகளில்) வீற்றிருப்பாள —எ - று (௪௩)

திங்களைச் சுண்ணஞ் செய்து சேறுசெய் தூட்டி யன்ன
பொங்குவெண் மாட பந்தி புணணியம் பூசுந் தொண்டர்
தங்கண்மெய் வேடந் தன்னைத் தரிததன சாலக் கணகொண்
டங்கணன் விழவு காணபா னடைந்தென மிடைந்த வன்றே.

இ - ள். சந்திரனை நீறுக்கி (அதனைத் தேவாமிர்தம் விட்டு)க் குழைத்துப் பூசியதையொப்ப விளங்காநின்ற வெள்ளிய மாடவரிசைகள் திருநீறுதரிதத திருத்தொண்டர்களுடைய உண்மை வேடத்தைத் தாங்கியவைகளாய்ப் பெரிதுங் கண்களினால் அருளுேக்கமுடைய சிவபிரான் றிருவிழாவைத் தரிசிககும்பொருட்டு வந்தடைந்தன போல (வீதிகள்தோறும்) நெருங்கி யுள்ளன.—எ - று. தேவாமிர்தம் என்பது எஞ்சிநின்றது தரித்தன முற்றெச்சம். சாலககண்-வீட்டின்பாம் பலகணி. அன்றே அசை.()

தேரொலி கலினப் பாய்மான் சிரிப்பொலி புரவி பூண்ட
தாரொலி கருவி யைந்துந் தழங்கொலி முழங்கு கைம்மான்
பேரொலி யெல்லா மொன்றிப் பெருகொலி யன்றி யென்றுங்
காரொலி செவிம டாது கடிமணி மாடக் கூடல.

இ-ள். தேர், கடிவாளம்பூண்ட பாய்கின்ற குதிரைகளைத்தல், அக்குதிரை யணிந்த கிண்கிணி, தோல் தொளை நரம்பு கஞ்சம் மிடறு ஆகிய ஐங்கருவி முழங்கல், முழங்குகின்ற யானை இவைகளின் ஒலிகளெல்லாந் திரண்டு மிக்க ஒலி (கேட்டலே) யன்றி விளக்கமாகிய நவமணிகள் அழுத்திய மாடங்கள் (நெருங்கிய) கூடலம்பதியில் எந்நாளும் மேகமுழக்கம் செவியிற் கேட்டலில்லை.—எ-று. தோற்கருவி - பேரிகை முதலியன. தொளைக்கருவி - வேய்ங்குழல் முதலியன. நரப்புக்கருவி - யாழ்முதலியன. கஞ்சக்கருவி - தாளமுதலியன. மிடற்றுக்கருவி - கண்டத்தினாலே தொனியுண்டாகப் பாடுதல். (சுரு)

பரத்தையர்வீதி.

இழிப்வ ருயர்ந்தோர மூத்தோ ரிளையவர் கழியா நோயாற்
கழிபவர் யாவ ரேனுங் கண்வலைப் பட்டு நெஞ்ச
மழிபவர் பொருள்கொண் டெள்ளுக் கெண்ணெய்போ லளந்துகாட்டிப்
பழிபடு போகம் விற்பா ராவணப பண்பு சொல்வாம்.

இ-ள். இழிகுலத்தார் உயர்குலத்தார் வயோதிகர் இளையோர் நீங்காநோயினால் மெலிவோர் ஆகிய இவர்களுள் யாவராயினும் (தங்) கண்களாகிய வலைகளில் அகப்பட்டு மனவலி கெடுவோரது பொருளை அபகரித்து எள்ளுக்குத்தக்க எண்ணெய் (அளந்துகொடுப்பது) போலப் (பொருளுக்குத் தக்கதாக) அளந்துகாட்டி(ப் பெரியோர்) இகழும் போகத்தை விற்கின்ற வரைவின் மகளிரது வீதிகளின் றன்மையை (யாம்) கூறுவாம்.—எ-று. ஏகதேசவுருவகம், அகப்படுவோர் பகுத்தறிவில்லாத பறவைகளாதலின்.

மெய்படு மன்பி னார்போல் விரும்பினார்க் கருத்துந் தங்கள்
பொய்படு மின்பம யார்க்கும புலப்படத் தேற்று வாரபோல்
மைபடு கணணா காமன் மறைப்பொருள் விளங்கத் தீட்டிக்
கைபடச் சுவராய்த் தோன்றச் சித்திரங் காணச் செய்வார்.

இ-ள். மையெழுதிய கண்களையுடைய பரத்தையர் மெய்யன்புடையார்போல(த் தம்மை) விரும்பிய ஆடவர்க்கு ஊட்டும் தம்பொய்யின்பக் கலவிகளை (த் தம்மாட்டுவரும்) அனைவர்க்கும் (முதலிலே ஆராய்ச்சியின்றி) விளங்கத் தெளிவிப்பவர்போலக் காமநூற் பொருளாகிய லீலாபேதங்களை (மெய்போல) விளங்க எழுதிக் கைபரிசித்தாற் சுவரென்று தோன்றும்வண்ணம் சித்திரங்கள் புலப்படச் செய்வாராயினார்.—எ-று.()

திருவிற்கான் மணிப்பூ ணாகம் பலகையாத தெணமுத் தார
வருவிக்கால் வரைமென் கொங்கைச் சூதொட்டி யாடி வென்று
மருவிக்கா முகனாத் தங்கள் வடிக்கணவேன் மார்பந் தைப்பக்
கருவிச்சூ தாடி வென்றுங் கைப்பொருள் கவாதல் செய்வார்.

இ - ள் (அகத்தே) காமுகரைக்கலந்து அழகிய ஒளிவீசும் இரத்தினாபரணங் களையுடைய (அவர்) மார்பம் பலகையாக (அதிலே) தெள்ளிய முத்தாரமாகிய வருவியைப் புலப்படுத்துகின்ற மலைகளாகிய மெல்லிய தனங்களென்னும் வட்டுகளை ஒற்றியாடி வென்றும், (புறத்தே) தமது மாவடுவின் பிளவுபோன்ற கண்களாகிய வேற்படைகள் (அக்காமுகர்) மார்பிலே தைக்கும்படி கருவியாகிய சூதினையாடி வென்றும் (அவர்) கைப்பொருள்முற்றும் (பரத்தையர்) அபகரிப்பாராயினர்.—எ - று. (௩௮)

தண்பனி நீரிற ழேய்த்த மல்லிகைத் தாம நாற்றி
விண்படு மதியந் தீண்டும் வெண்ணிலா முற்றத் திட்ட
கண்படை யணைமேற் கொண்டு காமனுங் கண்முற் றெய்தப்
பண்பல பாடி யீட்ட மாவியைப் பரிசில் கொள்வார்.

இ - ள். குளிர்ந்த பனிநீரிற்றோய்த்த மல்லிகைமலர்மாலையைத் தொங்கவிட்டு ஆகாயத்திற் பொருந்திய சந்திரனை அளாவும் வெள்ளிய நிலாமுற்றத்தில் இடுவித்த தூங்கு மஞ்சத்திலே தங்கிக் காமனும் விரும்பிவரப் பலபண்களைப்பாடி ஆடவர் ஆவியைப் (பரத்தையர்) பரிசிலாகக்கொள்வாராயினர் —எ - று. (௩௯)

குரும்பைவெம் முலையிற் சிந்து சாந்தமுங் குழலிற் சிந்து
மரும்பவிழ் மாலைத் தாது மளிநுகர்ந் தெச்சி லாகிப
பொரும்பரிக் காலிற் றூளாய்ப் போயர மாதர் மெய்யு
மிருங்குழற் காடுஞ் சூழ்போ யியன்மணம் விழுங்கு மன்றே.

இ - ள். தென்னங் குரும்பைபோன்று விருப்பந்தரும் (பரத்தையர்) தனத்தினின்று சிந்துகின்ற சந்தனமும் அளகத்தினின்று சிந்துகின்ற அரும்புவிரிந்த பூமாலையின் மகரந்தங்களும் (சேருகி) வண்டுகளால் உண்ணப்பட்டு உச்சிட்டமாய் (வீதியிற் செல்கின்ற) போர்புரியுங் குதிரைகளின் கால்களாற் றூளாகி (மேலே) சென்று தேவமகளிர் சரீரத்தும் கூந்தலின் பெரியவனத்தும் சூழ்ந்துகொண்டு (அவற்றின்) இயற்கை வாசனையை மறைக்கும்.—எ - று. மன்றே - அசை. (௪௦)

ஆலவா யுடையா னென்று மங்கயற் கண்ணி யென்றுஞ்
சோலைவாழ் குயிலி னல்லார் சொல்லியாங் கொருங்கு சொல்லும்
பாலவாங் கிளிகள் பூவை பன்முறை குரவ னோது
நூலவாய்ச் சந்தை கூட்டி நுவல்மறைச் சிறாரை யொத்த.

இ - ள். ஆலவாயுடையார்முதலிய திருநாமங்களைச் சோலையில்வாழும் குயில் மொழிபோல் இனிய மொழியுடைய பரத்தையர் (பலமுறை) ஓதுவித்தபடி ஒருசேர ஓதுகின்ற பாலைவிரும்பிப் பருகுங் கிளிகளும் நாகணவாய்ப்புட்களும் பலமுறைஆசிரியன் ஓதுவிக்கும் வேதத்தை விரும்பிச் சந்தைகூட்டி ஓதும் பிராமணப்பிள்ளைகளைப் போன்றன —எ - று. பரத்தையரும் திருநாம மறவாரென்பது கருத்து. (௪௧)

ஔவிய மதர்வேற் கண்ணா ரந்தளிர் விரன டாத்துந்
திவ்வியநரம்புஞ் செவ்வாய்த் தித்திக்கு மெழாலுந் தம்மிற்
கௌவிய நீர வாகிக் காளையர் செவிக்கா லோடி
வெவ்விய காமப் பைங்கூழ் விளைந்ர யளிக்கு மன்றே.

இ-ள். பொருளையும் மதர்த்தவேற்படைபோலும் கண்களுமுடைய பரத்தையர் அழகிய தளிர்போன்று மெல்லிய விரலால் வாசிக்கும் திவ்விய யாழ்நரம்போசையும் சிவந்த வாயினின்று முண்டாகி இனிக்கின்ற மிடற்றோசையும் (ஆகிய நீர்கள்) தம்முள் ஒன்றுபட்ட தன்மையுடையனவாகி இளைஞர் செவியாகிய கால்வழியே ஓடி (அவ்வாடவர் உள்ளமாகிய விளைநிலத்தில் அங்குரித்த) கொடிய காமப்பயிர் விளையும்படி வளர்க்கும்.—எ-று. அன்றே-அசை. (ருஉ)

கட்புல னாதி யைந்து முவர்ப்பறக் கனிந்த காமம
விட்புலத் தவரே யன்றி வீடுபெற் றவரும வீழ்ந்து
பெட்பமுற் றமிழ்துங் கைப்பப் பெருங்குலக் கற்பி னாரபோ
னட்பிடைப படுத்தி விற்கு நலலவ ரிருக்கை யீதால்.

இ-ள் கண்முதலிய ஐம்பொறிகளும் வெறுப்பு நீங்க [பெரிதுமகிழ என்றபடி] முதிர்ந்த காமநுகர்ச்சியைத தேவரேயன்றித் துறவினரும்விரும்பி ஆசைகொண்டு (முறையே) அமிர்தத்தையும் முத்தியின்பத்தையும் உவர்க்கும்படி உயர்குலத்துதித்த கற்புடைமகளிர்போல(த் தமது) நண்பில அகப்படுத்தி (அவ்விருதிறத்தாக்கும்) விற்கின்ற பரத்தையர்வீதி இத்தன்மையதாம.—எ-று. காமநுகர்ச்சியை விற்குமென்க் காமம், அமிழ்து, உபசாரவழக்கு. அமிழ்து இரட்டுறமொழிதலால முத்தியுமாம். (ருங)

வேளாளர்வீதி

வழுக்கறு வாய்மை மாண்புய கங்கைதன மரபின் வந்த
விழுக்குடிப் பிறப்பு மூவ ரேவிய வினைகேட டாற்று
மொழுக்கமு மமைச்சாய் வேந்தர்க் குறுதிசூழ் வினையுங் குன்று
விழுக்கறு மேழிச் செலவா வளமறு கியமப லுற்றும்.

இ-ள். குற்றமற்ற மெய்மொழிதலின் மாட்சிமை, கங்காகுலத்தில் உதித்த மேம்பட்ட குடிப்பிறப்பு, பிரம க்ஷத்திரிய வைசியரென்னு மூன்று வருணத்தாரும் ஏவிய தொழில்களைக் கேட்டுமுடிக்கும் ஒழுக்கம், அரசர்கு மந்திரித்தொழில்பூண்டு நன்மைதருஞ் செயல்களை ஆராய்நது முடிக்குஞ்செய்கை இவைகளிற் குறைவுபடாமல் உயர்ந்த மேழிப்பெருஞ் செல்வமுடைய நான்காம்வருணத்தராகிய வேளாளர்வசிக்கும் வீதியின் மகிமையை (யாம்) கூறுகின்றும்.—எ-று. (ருச)

வருவிருந் தெதிர்கொண் டேற்று நயனுரை வழங்கு மோசை
யருகிருந தடிசி லூட்டி முகமனன் கறையு மோசை
யுரைபெறு தமிழ்பா ராட்டு மோசைகேட் டுவகை துளள
விருநிதி யளிக்கு மோசை யெழுகட லடக்கு மோசை.

இ-ள். (தம்மைநோக்கி) வருகின்ற விருந்தினரை (இன்முகத்தொடும்) எதிர்சென்று அழைத்துவந்து இனியமொழிகளைச் சொல்லுதல் (அவர்) அருகேயிருந்து உணவுகளை உண்பித்து உபசாரவசனங்களை நன்றாகவுரைத்தல் புகழமைந்த தமிழ்ச்செய்யுட்களைப் பிரசங்கிக்கும் ஓசைகேட்டு மகிழ்ச்சிமிகப் (புலவர் குழாங்கட்குப்) பெரும்பொருளை யீதல் ஆகிய ஓசைகள், (திரண்டு) சப்தசாகர ஓசையைக் கீழ்ப்படச்செய்யும் ஓசைகளாம்—எ-று. (ருரு)

அருந்தின ரருந்திச் செலல வருந்துகின ருரு மாங்கே
யிருந்தினி தருந்தா நிற்க விண்ணமு தட்டெ பின்னும்
விருந்தினா வரவு நோக்கி வித்தெலாம் வயலில் வீசி
வருந்திவிண் ணோக்கு மோரே ருழவாபோல் வாடி நிறபார.

இ - ள். வெளிப்படை ஆங்கே - முன உண்டவர்போல் இனிது - மகிழ்ச்சி யாக அட்டு - சமைதது பின்னும் விருந்தினர் வரவு நோக்கி - மேலும் (வரு) விருந்தினரோடு (தாம் இருநது அருந்த அவா) வருகைநோக்கி. விண் - மழை. (௩௬)

வானமுந் திசையும பொயகும புகழ்மையும வானம் பேணு
ஞானமும பொறையுங குணமு நனறியு மூக்கப பாடு
தானமுங் கொடையு மனபும வரிசையுந தகைசா னன்பு
மானமுந தவஞ்செய தீனற மகவுபோல் வளாக்க வல்லார்.

இ - ள். வெளிப்படை. வானம்பேணும - தேவரும் விரும்பும். தானம் - அந்தணர்க்கு உதகததோடு பொருளீதல். வரிசை - நிலையினினறு தவறுமை. தகைசால் - பெருமைமிக்க மானம்- தந்நிலையிற ருழாமையும ஊழிஞற்றவறுவந்தவழி உயிரைவிடுதலுமாம (௩௭)

வணிகர் வீதி.

புலவியோா பணடங கொள்வா வினவினப் பொருடம் பக்க
மிலலெனி னினமா யுள்ள பொருளுளைத தெதிர்ம றுதது
மலலதப பொருளுண டென்னின விலைசுட்டி யறுத்து நோர்துஞ்
சொல்லினு மிலாபங் கொளவாா தொன்மர பிருக்கை செலவாம்.

இ - ள். (தம்மிடதது) வந்து ஒருபொருள் கொள்வோர் (பச்சைப்பயறு உண்டோ வணிகா என்று)கேட்டால் அப்பொருள் தமமிடத்து இல்லையாயின் அதற்கு இனமாயுள்ள உழுந்து முதலியன வுண்டென்றுசொல்லி (அச்சொல்லால் முன்வினவியது) இல்லையெனறும் அன்றி அப்பயறே யுளதாயின் விலை யிவ்வளவென்று வரையறுத்துக் கொடுத்தும் (பொருளாலன்றிச்) சொல்லாலும் ஊதியம் தேடும் பழைய வைசியர் மரபுகளின் வீதியை (யாம்) கூறுகின்றும் —எ - று. (௩௮)

கலித்திலைத்துறை.

நீல வேதிமேற பளிங்கினு னிழறசுவா நிறீஇமின்
கால வாலிய வைரவாட் கானிரைத துமபாக்
கோல வானிலாச் சொரிமணி குயிற்றிவெண மாட
மாலை போலவகுத் தியற்றின பீடிகை மறுகு.

இ - ள். கடைவீதிகள், நீலமணியாலாகிய திண்ணைமீது ஒளியுள்ள பளிங்கினாற் சுவர்கள் நிறுத்திப் பிரகாசம்வீச வெள்ளிய வைரத்தால் ஆகிய ஒளியுடைய தூண்களை வரிசைப்படநாட்டி மேலே அழகிய வெண்ணிலவைப்பொழியும் சந்திரகாந்தங்களைப்பதித்து மலர்மாலைபோல வெண்ணிறமாடங்கள் (வரிசைப்பட) வகுத்துக்கட்டப்பட்டுள்ளன.—எ - று. (௩௯)

திரையெறிப் பவுந் திரைபடு தீம்புனல் வேலிக்
கரையெறிப் பவுங் கரையிலா நிரைபடு கானத்
தரையெறிப் பவுந் தரைகிழித் தூன்றிவிண் டாங்கும்
வரையெறிப் பவும் வாங்கிவாய் மடுப்பன மாடம்.

இ - ள். கடல், அலைபொருந்திய இனிய நீர்சூழப்பெற்ற மருதம், அளவில்லாத பசுக்கள்பொருந்திய முல்லை, பூமியைக் கிழித்தூன்றி ஆகாயத்தைத்தாங்கும் மலை இந் நால்வகை நிலங்களுந்தரும் பொருள்களை (வணிகரது) பண்டசாலைகள், வாங்கித் தம் மிடத்து நிறைப்பன.—எ - று. கடல்படுபொருள் - உப்பு, முத்து, பவளம், சங்கு, ஒக்கோலை. மருதநிலம்படுபொருள் - செந்நெல், சிறுபயறு, கரும்பு, வாழை, செவ் விளநீர். முல்லைநிலம்படுபொருள் - தேனடை, தேன், அரக்கு, மயிற்பீலி, நாவி. மலை படுபொருள் - மிளகு, கோட்டம், அகில், தக்கோலம், இலவங்கம். (௬௦)

கரிய கம்பலக் கிடுகின்மேற் கதிர்விடு பவளத்
தெரியல் பொன்னரி மாலிகை தெண்ணிலாச் சொரியும்
பரிய நித்தில மணிவட மரகதப் பசுந்தார்
விரிய விட்டன விந்திர வின்னிரை யனைய.

இ - ள். (மாடங்களிலே) கரியகம்பளத்தைப் பரப்பியசட்டத்தின்மீது ஒளிவீசும் பவள மாலை, பொன்னலரிந்து செய்த மாலை, தெள்ளியநிலவுபொழியும் பெரிய முத்து மாலை, பசியமரகத மாலை, இவைகளை (ஒளி) பரவவரிசையாகத் தொங்கவிட்டிருப்பவை, (மேகத்திலே தோன்றிய) இந்திரவில் வரிசைகளை ஒப்பனவாம் —எ - று. (௬௧)

நாள்களுங் குளிர் திங்களு ஞாயிறு மேனைக்
கோள்களுங் குளிர் விசும்பொரீஇக் குடிபுகுந் தாங்கு
வாள்கி டந்திராப் பகலொளி மழுக்கலால் வணிக
ராள்க லம்பகர் பீடிகை துறக்கநா டனைய.

இ - ள். நக்ஷத்திரங்கள் குளிர்ந்த சந்திரன் சூரியன் மற்றைய கோள்களாகிய செவ்வாய் புதன் வியாழம் வெள்ளி சனி இவை, குளிர்ந்த ஆகாயத்தைவிட்டு (இங்கே) குடி புகுந்தாற்போல (ஆபரணங்கள்) ஒளிவீசி இராப்பகல் (வேறுபாடின்றிச் சந்திரசூரி யா)ஒளிகளைக் கீழ்ப்படுத்(திப் பிரகாசமயமாகச்செய்)தலால் (அனைவரும்) பூணும் (அவ்) வாபரணங்களைவிற்கும் வணிகர் வீதிகள், (ஒளிமயமான) சுவர்க்கலோகத்தை ஒப்பன. —எ - று. சாயாகிரக இராகு கேதுக்கள் கொள்ளற் பாலனவல்ல. (௬௨)

பன்னி றத்தபல் பெருவிலைப் பட்டெலா மவண
வுன்ன பட்டின்மேம் படுவிலைப் பருத்தியு மவண
வெந்நி லத்தரும் பொருள்பதி னெழுபுல வணிக
மன்னி ருக்கையு மரும்பெறல் வளனெலா மவண.

இ - ள். பலநிறமுடைய மிக்க பெருவிலைப் பட்டாடைவகைகள், அவற்றின் மேம்பட்ட விலையுடைய பருத்திநூலாடைகள், எந்நாட்டும் கிடைத்தற்கரிய (ஐம்பொறிநுகர்ச்சிக்குரிய) பொருள்கள், (தமிழ்நாடொழிந்த) பதினெழு நிலவணிகர் நிலைபெற்ற

உறைவிடங்கள், (மற்றும்) பெறுதற்கரிய (இரத்தினாகாமுதலிய) செல்வங்கள் ஆகிய அனைத்தும் அக்கடைவீதியிடத்துள்ளன.—எ - று. பருத்தி-ஆகுபெயர். (௬௩)

மரக தத்தின லமமிகள் வைரவா ளுலக்கை
யுரல்கள் வெள்ளியா லடுப்பகில் விறகுலை பனிநீ
ரரிசி முத்தழல செமமணி யடுகலன் பிறவு
மெரிபொ னாலிழைத் தாடுப விவாசிறு மகளிர்.

இ - ள். இவ்வணிகருடைய சிறுபெண்கள், மரகதத்தால் அம்மி (குழவி) கள், ஒளியுள்ள வயிரத்தால் உலக்கை யுரல்கள், வெள்ளியால் அடுப்புகள், அகிற்கட்டைவிறகுகள, பனிநீர் உலைநீர், முத்து அரிசி, மாணிக்கம் நெருப்பு, விளங்கும் சுவர்ணத்தாற் செய்யப்பட்ட பாத்திரமுதலியவாக அமைத்து விளையாடுவார்கள்.— எ - று. (௬௪)

செயிறு நீங்கசெம பொன்னினாற திண்ணிலைக் கதவம
வயிரத் தாழுடைத் தவாகடை வாயிலு மென்று
யயிரிற நீங்கபே ரறிஞரு மனையர்தஞ செல்வத்
தியலிற் றுமென வரையறுத் திசைப்பதை யெவனோ.

இ - ள். அவ்வணிகர் வீடுகளின் கடைவாயில்களிலும குற்றத்தினின்றுநீங்கிய உயர்ந்த பொன்னாற் செயயப்பட்ட திண்ணிய நிலையோடுகூடிய கதவுகள் வயிரத்தாற் செய்யப்பட்ட தாழக்கோல்களை யுடையனவாமென்று கூறப்படுமாதல் ஐயத்தினின்று நீங்கிய பேரறிவினை யுடையவரும் அவ்வணிகரது செல்வத்தளவு இவ்வளவினதென்று வரையறுத்துச சொல்வது எப்படி [முடியாது என்றபடி].—எ - று. உம்மைகளில் முன்னது இறந்தது தழீஇயதனுசிறப்பும், பின்னது உயர்வுசிறப்புமாம். ஐ-சாரியை.

எரிக்கு றுமபொறி யனையசெம மணிசுட ரெறிபொன்
வரிச்சு ரும்பனோ மரகத முத்துவாள் வைரம்
தெரிபப ருந்துகிர் சிந்தின செலலுநா ளொனறுக்
கரிபபா கையகப படுவன வாயிரத் திரட்டி.

இ - ள (வணிகாவீதியிலே) சிந்திககிடககும் பொருள்கள், சிறிய தீப்பொறி போன்ற மாணிக்கங்களும ஒளிவீசும் பொறகட்டிகளும் வரியுள்ள வண்டுகள போன்ற மரகதங்களும் முத்துகளும ஒள்ளிய வைரஙகளும் (விலை)தெரிதற்கரிய பவளங்களுமாம். அரிப்பாளா (அரிகருவியால அரிக்கச்) செல்லுநாள்களுள் ஒவ்வொருநாளுக்கும் அவர் கையில அகப்படும் பொருள்கள் (ஒவ்வொருவகையிலும்) இரண்டாயிரங்களாம்.—எ-று. பொன் - ஆகுபெயர். சிந்தின, படுவன, வினையாலணையும் பெயர். (௬௬)

பாய தொன்மரப் பறவைபோற் பயன்கொள்வான் பதினெண்
டேய மாநதரும் கிளநதசொற் றிரட்சிதான் றாய
மாயை காரிய வொலியன்றி வான்முதற் கருவி
னாய காரிய வோசையே யாய்க்கிடந் தன்றே.

இ - ள். பரந்த ஆலமரத்தின் பழங்களைக் (கொள்ளுதற்குக் கூடிய) பறவைகள் போலக் (கடைவீதியிற்) பயனைக் கொள்ளக் (கூடிய) பதினெண்ணிலத்து மனிதரும் (தம்முட்) பேசுகின்ற சொல்லோசைக் கூட்டம், சுத்தமாயாகாரியரூபமான (பொருள்

பயக்கும் அக்கர) ஓசையன்றி ஆகாயமாகிய முதற்காரணத்தில் உண்டாகிய காரியரூபமான (பொருள்பயவாத) ஓசையேயாய்க் கிடந்தது.—எ - று தொன்மரம் - சொல் ஆகுபெயர். (சுஎ)

ஒழிவில வேறுபல் பொருளுமே மூலோகமும பிறவும
வழுவில வேறுபல் கலைகளு மரபுளி வகுத்துத்
தழுவி வேணடினா தாங்கொளத் தககவா பகரா
வழிவி லாமறை போன்றன வாவண வீதி.

இ - ள். (வணிகா) கடைவீதிகள், நீங்காத வேறுபட்ட பல பண்டங்கள், பொன் வெள்ளி முதலிய எழுவகை யுலோகங்கள், பிததளைமுதலியன, குற்றமில்லாதவேறுபட்ட பல ஆடைகள் இவைகளை வரிசையாற் பரப்பி விரும்பிவந்து கொள்ளுவோா கொள்ளத்தக்கபடி விலை கூறலால் (ஒழிதலில்லாத அறமுதலாக நால்வேறுவகை உறுதிப்பொருள்கள், எழுவகை உலகங்கள், மற்றும் அண்டஙகள், குற்ற மற்ற அறுபத்து நால்வகைக் கலைகள் இவற்றின் இயல்புகளை முறையால் வகுத்து விரும்பிவந்தடைந்தவா் கைக்கொள்ள (ப்பரிபக்குவங்களுக்கு) தககபடி கூறி) நித்தியமாகிய வேதங்களைப்போன்றன —எ - று. (சுஅ)

திககெ லாமபுகழ் மதுரையை சிவபுர மாக்கி
முகக ணுபக ணரசுசெய முறையினுக் கேற்பத்
தகக தோழனே டளகைமா நகருறை தயங்க
மொக்கு மஙகா வாணிக ருறைபுள்சூழ் நிகமம

இ - ள். சிவபிரான் தசதிசையினுள்ளாரும் புகழுகின்ற மதுரைப்பதியைச் சிவபுரமாக்கி (ச்சுந்தரபாண்டியராஜராகி) அரசாட்சிசெய்த முறைமைக்கேற்ப (அவருககு) த்தக்க தோழனாகிய குபேரனோடு (அத்திருககைலாசததின் அருகிலுள்ள) அளகைமாநகரம் (அம்மதுராபுரியின் அருகில்வநது) இருககுங காட்சியை அம்மதுரைநகர் வணிகருறைவிடத்தைச் சூழ்ந்த கடைவீதிகள் ஒததுததோனறும்.—எ - று. சூழ்நியம மென்றும் பாடம். (சுகு)

மன்னவா் வீதி

ஒற்றை யாழியா னுலகிரு ளொதுக்குமா போலச்
செற்ற நேமியாற் கலியிரு டினறுகோ லோசசி
மற்ற டமபுய வலியினன் மாறடு சீற்றக்
கொற்ற மன்னவர் விழுக்குடிக் கோமறு குரைபபாம.

இ - ள். ஒற்றைச்சகடரத சூரியன் உலகின் புறவிருளை ஒட்டுமாறுபோலக் (கொடியவரைக்) கோபித்தலுடைய ஆஞ்ஞாசக்கரமாகிய ஒளியினாலே பாவமாகிய இருளைப் போக்கிச் செங்கோல் செலுத்தி மற்போர் புரியும் பெரிய புயவலியினாற் பகைவரைக் கொல்லும் கோபமும் வெற்றியும்பெற்ற க்ஷத்திரியரின் மேம்பட்ட குடியினர் தங்குஞ் இராசவீதியின் பெருமையை (யாம்) கூறுகின்றாம்.—எ - று. (எ0)

தரங்க வேலைகட் டம்மையே தாளுறப் பிணித்துத்
துரங்க மாவெனத் தொகுத்தமந் துரைபல வருவி
யிரங்கு மோரறி வுயிரவரை யாவையும் பெயர்த்து
மரங்கொல் யானைபோற் பிணித்தகூ டம்பல மன்னோ.

இ-ள். அலையுடைய கடல்களையே கால்களிற் பொருந்தக் (கயிற்றாற்) கட்டித் துரங்கமாகிய குதிரைகளைப்போலத் (க்கூட்டமாகத்) தொகுத்த இலாயங்கள் பலவும், அருவி முழங்கும் ஓரறிவுயிர்களாகிய மலைகள் அனைத்தையுமே பெயர்த்துக் கட்டுதலறியைக் கொல்லும் யானைகள்போல (சங்கிலிகளால்) கட்டிய யானைக்கூடங்கள் பலவும் (உள்ளன).—எ-று. (எக)

மழுக்கள் வச்சிரங் கார்முகம் வாளிமுக் குடுமிக்
கழுக்கள் சக்கர முடம்பிடி கப்பண நாஞ்சி
லெழுக்க ணாந்தகம் பலகைகண் டிவைமுதற் படையினை
குழுக்க ளோடிகல் விளைதைவாழ் கூடமும் பலவால.

இ-ள். மழு வசசிரம் வில் பாணம் முத்தலைச்சூலம் சக்கரம் கைவேல் இருப்பு நெருஞ்சின்முள் கலப்பை வளைதடி வாள் கேடகம் தண்டு இவைமுதலிய படைகளின கூட்டத்தோடு போர்புரியும் துர்க்கை வாழும் ஆயுதசாலைகள் பலவும் (உள்ளன.)—எ-று

தொளைய கல்லைமா லெனக்கொண்டு சுழற்றியுஞ் செந்தா
ளளையும் யானைபோற் பாய்ந்துமல் லாற்றியு மாற்றல
விளைய வாளொடு கேடகம் வீசியும் வென்றி
யிளைய ராடமா பயில்வன வெண்ணிலாக கூடம்

இ-ள். தொளையுடைய கல்லை(க்கையில்) ஏந்தி விஷ்ணு (சக்கரஞ்சுழற்றினாற்) போலச் சுழற்றியும் செந்தாளில் அளைந்த யானைகள் போலச் (செந்நிலத்திற்) பாய்ந்து மற்போர் செய்தும் வலிமை மேற்பட வாள் கேடகங் களை (ஒருவர்மேல் ஒருவர்) வீசியும் வெற்றிபெற்ற இளைஞர் போர் பழகுதற்குரிய இடங்களாக அளவிலாக கூடங்கள் (உள்ளன).—எ-று. (எஉ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தேசவிர் நீல மாடஞ் செம்மணிச் சென்னி மாடங்
காசறு கனக மாடஞ் சந்திர காந்த மாட
மாசற விளங்கு மின்ன மாடநீண் மாலை கூடற்
பாசிழை மடந்தை பூண்ட பன்மணிக் கோவை யன்ன.

இ-ள் ஒளிவிளங்கும் நீலம் மாணிக்கம் குற்றமற்ற பொன் சந்திர காந்தம் இவைகளாலாகிய மாடங்கள் சிகரங்களோடு குற்றமின்றி விளங்கும். இம்மாடங்களின நீண்டவரிசைகள் மதுரை நகரமாகிய பசும்பொன்னணியுடைய பெண் பூண்ட பலவிரத்தினக்கோவை போல்வன.—எ-று. (எச)

விளையகல் கதுப்பி னல்லார் வீங்கிளங் கொங்கை போழ்ந்த
வளையகன் மார்ப மன்றி வடுப்படார் தமக்கன் பில்லா
ருளையகன் மான வாற்றா லொழுகுவார் பலகை யொள்வாட்
களையகல் விஞ்சை வீரர் கணமபயில் காட்சித் தெங்கும்.

இ-ள். அவ்வரசர்வீதி யெங்கும் வாசனைமிக்க அளக முடைய மடவாரது பருத்த இளந் தனங்கள் பிளந்த மலைபோற் பரந்த மார்பத்திலன்றி (மற்றையுறுப்புகளிலே படை) வடுப் படாதவரும் தம்முயிரிடத்தே அன்பில்லாதவரும் புகழ்மிக்க மானவழியால் ஒழுகுவோருமாகிய ஒள்ளியவாள் கேடகங்களை(ப் பற்றிவீசும்) வித்தையில் (வல்ல) அளவில்லாத வீரர் குழாங்கள் பழகும் காட்சியை யுடையது.—எ-று. (எரு)

மின்னைவா ளென்ன வீசி வீங்குகார் தம்மிற் போர்முனை
டென்னவான் மருப்பு நீட்டி யெதிரெதிர் புதையக் குத்தி
யன்னவா னென்ன வாய்விட் டதுவெனச் செந்நீர் சோரப
பொன்னவா மகன்ற மார்பர் பொருகளி றூட்டு வார்கள்.

இ-ள். சூல் முதிர்ந்த மேகங்கள் மின்னலை வாட்படைபோல வீசித் தம்முட் போர் செய்தாற் போலப் போர்புரியும் யானைகள் வெள்ளிய தந்தங்களை எதிரெதிரே நீட்டி (உடம்பிற்) புதைபடக்குத்தி அம்மேகங்கள் முழங்குவதுபோல முழங்கி அவைகள் பொழியுந் தாரைகள்போல உதிரதாரைகள் பொழியத் திருமகள் விரும்பும் பரந்த மார்புடைய வீரர்கள் (அவ்யானைகளைப்) போர் புரிவிப்பார்கள்.—எ-று. (எசு)

தூண்டுவா ருளமுந் தங்கள் பின்னிடத் துவக்குண டீர்த்துத்
தாண்டுமா னொற்றை யாழித் தேரினுந் தள்ளித் துள்ளப்
பாண்டிலவாய்ப் பசும்பொன் றேயப பார்மகன் முதுகு கீணடு
சேண்டிசைபோய்ம டங்கச் செலவத்தேர் நடாத்து வார்கள்.

இ-ள். செலுத்தும்பாகர் மனமும் தமக்குப் பிற்படக் கட்டுப்பட்டு இழுத்துத் தாவுகின்ற குதிரைகள் (சூரியனது) ஒருருளைத் தேரிற்பூட்டிய குதிரையினும் விரைந்து துள்ளவும் உருளிற் பொருந்திய பொற்கட்டுத் தேயவும் பூதேவி முதுகைக்கிழித்து ஆகாயத்தினும் திக்குகளினும் போய் மீளும்படி சிறப்புள்ள இரதங்களை (வீரர்கள்) செலுத்துவார்கள் —எ-று. ஆழிதநேர்-விடாத ஆகுபெயர். பொன்-ஆகுபெயர். (எஎ)

மைந்தர்தந் நெருக்கிற் சிந்து கலவையு மகளிர் கொங்கைச்
சந்தமுங் கூந்தல் சோர்ந்த தாமமுஞ் சிவிறி வீசு
சிந்துரப் பொடியு நாறத் தேனொடு மெழுந்த செந்து
ளந்தர வயிறு தூரப்ப வடுபரி நடாத்து வார்கள்.

இ-ள். ஆடவர் நெருக்கிற் சிந்திய கூட்டுவர்க்கம் பெண்கள் தனத்தினின்று (புலர்ந்து சிந்திய) சந்தனம் அளகத்தினின்று விழுந்த பூமாலை சுருத்தியால் வீசும் சிந்துரப்பொடி இவைகள் மணக்கத்தேனொடெழுந்த செந்தூள் ஆகாயத்தின் வயிற்றைத் தூர்க்கும்படி (பகைவரைக்) கொல்லுங் குதிரைகளை (இளைஞர்) செலுத்துவார்.—எ-று.

தமமுயிர்க் கிரங்கா ராகித் தருக்கொடு மான மீர்ப்பத்
தெமமுனை யெதிர்ந்தா ராற்றுஞ் செருவெனக் குருதிச் செங்கேழ்க்
கொய்ம்மலாக் குடுமிச் சேவல் கோழிளந் தகர்போர் மூட்டி,
வெமமுனை நோக்கி நிற்பார் வேறவற் றூறு நோக்கார்.

இ - ள். தமமுயிராகது இரஙகாதவராய் (வீர) ச்செருக்கும் மானமும் இழுக்கப் பகைவர்போரில் எதிர்ந்த வீரர் செயயும் போா போல (நடுவிற்) கொய்த உதிரம் போற் செந்நிறப் பூங்கொத்துப் போன்ற சூட்டையுடைய சேவல்களையும் கொழுமை இளமை களுடைய ஆட்டுக்கடாககளையும் (தம்மினங்களொடு) போர்பொருத்தி (அப்போரால்) அவற்றின் உறுப்பழிவு இறத்தல்களை நோககாது கொடிய போர்த்தொழிலையே (இளை ஞர்) நோக்கி நிற்பார்.—எ - று இரங்காமை தருககு மானம் இவைகளைச் சேவல்தகர் கட்குங் கூட்டுக. (எகூ)

பெண்முதத மனைய பேதைச் சிறுமியர் பெருநீர் வைகை
வெண்முதத மிழைத்த சிற்றில சிதைபட வெகுண்டு நோக்கிக்
கண்முததஞ் சிதறச் சிந்துங் கதிர்முதத மாலை தடபத்
தெண்முதத் னகைத்துச் செல்வச் சிறுரகடே ருருட்டு வார்கள்.

இ - ள். கன்னிகளில் முததுப்போலும் சிறந்த பேதைப்பருவ (அரச)ச்சிறுமியர் பெரியவைகைநதியிலே (தோன்றிய) வெள்ளியதரளங்களாற் கோலிய சிறுவீடுகளை அழித்தலால் (அவர்) கோபித்துப் பார்த்நுக் கண்கள் முத்துப்போல (நீர்த்துளி) சிந்த (அறுத்து) வீசும் ஒளியுள்ள முத்துமாலைகள் (வீழ்ந்து இடையே சிறுதேர்ச்செலவைத்) தடைசெய்ய (ப்பெருஞ்) செல்வ அரசச்சிறுவா (அதனைநோக்கித்) தெள்ளியதரளம் போல (ச் சிறு) நகை செய்து (அச்) சிறுதேரைச் செலுத்துவர்.—எ - று. (அ௦)

கொடிமுகி றுழாவு மிஞ்சிக் கோநகா வடகீழ் ஞாங்கர்
முடிமிசை வேம்பு நாற முருகவி ழாரும் போந்து
மடிமிசை நாறத் தெனனா வழிவழி யரசு செய்யு
மிடிமுர சுறங்கா வாயி லெழுநிலை மாடக் கோயில்.

இ - ள். மேகமண்டலத்தை அளாவும் கொடிகளுடைய மதில்சூழ்ந்த இராஜநகர மாகிய மதுரையின் ஈசானதிக்கிலே வேப்பம்பூமாலை மகுடத்தின்மேலும் (சேரசோழர் கள் முடியிலணிந்த) வாசனைவிரிந்த பனம்பூமாலை ஆததிபபூமாலைகள் அடிகளின்மேலும் கமழும்படி பாண்டியர்கள் பரம்பரையாக அரசாட்சிபுரிதற் கிடமாகிய இடியொலிபோல் முரசொலி நீங்காதவாயிலையுடைய எழுநிலைமாடக்கோயில் (உள்ளது) —எ - று. கோயில் இராஜகிருகம். (அக)

### மறையவர் வீதி.

ஆததிக ருண்டென் றோது மறமுதற் பொருள்க ளொன்கு
நாததிகம் பேசும் வஞ்சா நாவரி கருவி யாக
வாத்தனு லுரைத்த வேத வளவுநண் டுள்ளந் தேறித்
தீர்த்தராய் முத்தீ வேட்குஞ் செல்வர்தம் மிருக்கை சொல்வாம்.

இ - ள். ஆத்திகர் உண்டென்று கூறும் அறமுதலிய நான்கு பொருள்களும்இல்லையென்று சொல்லும் வஞ்சகரது நாக்களைச் சேதிக்கின்ற கருவிகளாகப்பரமாப்தராகிய சிவபிரானால் அருளிச் செய்யப்பட்ட வேதங்களின் எல்லையை உணர்ந்து மனந்தெளிந்து பரிசுத்தராய் ஆகவனீயமுதலிய மூவகை அக்கினிகாரியஞ் செய்யும் செல்வர்களாகிய அந்தணர்களின் கிருகமகிமையை (இனியாம்) கூறுவாம்.—எ - று. ஆத்திகர் - மறுபிறப்பும், இருவினைப்பயனும், கடவுளும் உண்டென்பவர். (அஉ)

முஞ்சிநாண் மருங்கின் மின்னப் பொன்செய்த முளரி வேய்ந்த
குஞ்சிநான் றசையத் தானைச் சொருக்குமுன் கொய்து தூங்கப
பஞ்சிநூண் கலைத்தோல் மார்பும் பலாசக் கோல கையுந தாங்கி
யெஞ்சினுன் மறைநூல் கற்போ கிடைகளே யில்ல மெலலாம்

இ - ள். முஞ்சிப்புல்லாலாகிய நாண் அரையில் விளங்கவும் பொன்னாற்செய்த கமலமலர் சூடிய சிகை தொங்கி அசையவும் வஸ்திரச் சொருக்குமுன்னே கொய்சகமாகத் தொங்கவும் கலைத்தோல் (கட்டிய) பஞ்சிநூலாகிய பூணூல் மார்பிலும் பலாசக்கோல் கையிலும் கொண்டு குறைவில்லாத நான்கு வேதநூல்களையும் ஓதும்பிரமசாரியர்பாடசாலைகளே (பிராமணர்) கிருகங்கள் அனைத்திலும் (உள்ளன).—எ - று. (அங)

தீவினை யந்த ணாளர் சிறார்பயி றெய்வ வேத
நாவுரு வேற்றக் கேட்டுக் கிளிகளோ நவிலும வேற்றுப
பூவையும் பயின்று புத்தே ளுலகுறை புதுமந் தாரக்
காவுறை கிளிகட் கெல்லாங் கசடறப் பயிறறு மனனோ.

இ - ள். அக்கினிகாரியஞ் செய்யும் பிராமணச் சிறுவர் ஓதுகின்ற திவ்விய வேதங்களை (த்தமது) நாவினால் உருவேற்றுதலைக் கேட்டுக் கிளிகளும் நாகணவாய்ப்புட்களும் கற்றுத் தேவலோகத்தில் உள்ள புதியமந்தாரமுதலிய பஞ்சதருசோலையில் வாழும் கிளிகள் அனைத்திற்கும் குற்றமற ஓதுவிக்கும்—எ - று. மநதாரம்-உபலக்கணம். மன்னோ - அசை. (அச)

வேதமு மங்க மாறு மிருதியும் புராண நூலின்
பேதமுந் தெரிந்தோ ராலும் பிறர்மதங் களைய வல்ல
வாதமு மதமேற் கொண்டு மறுத்தலு நிறுத்த வல்ல
போதமு முடையோ ராலும் பொலிந்தன கழக மெல்லாம்.

இ - ள். பாடசாலைகள் அனைத்தும் நான்குவேதங்கள் ஆறு அங்கங்கள் பதினெண்மிருதிகள் பதினெண்புராணநூற் பேதங்கள் இவைகளை உணர்ந்தோராலும் பிறர்கொள்கையைப் போக்கவல்ல வாதம் பிறர் கொள்கைக்கு உடன்பட்டுப் பின்பு மறுத்தல் (தங்கொள்கையைத்) தாபிக்கவல்ல உணர்வு இவைகளை உடையோராலும் விளக்கம் பெற்றுள்ளன.—எ - று. (அரு)

உறிபெர்தி கரகக் கைய ரொளிவிடு செங்கற் றோயத்த
வுறுவைய ருயிர்க்கூ டுஞ்சு ஊடையின ரவிச்சை மாள
வெறிசுடர் மழுவா ளெஞ்ஞக்கோவணம் யாத்த கோலர்
மறைமுடி வன்றித தேறு மாதவா மடங்க ளெங்கும்.

இ - ள். உறியிற் பொதிந்த கமண்டலந் தாங்கிய கையும் ஒளிவீசும் காஷாய வஸ்திரமும்(பூமியில்ஊரும் எறும்புமுதலிய)உயிர்களின்கொலைக்குஅஞ்சி(ஒதுங்கி)நடக்கும் நடையும் அஞ்ஞான (விருட்ச) ங் கெடும்படி சேதிக்கும் விளக்கமுடைய மழுப்படைபோலக் கோவணங் (கொய்து) கட்டிய தண்டமும் கொண்ட (ஞானகாண்டமாகிய) உபநிடதங்களையே(கேட்டுச்சிந்தித்துத்) தெளிந்த பெரியதவமுடைய சந்நியாசிகளதுமடாலயங்கள் (அந்தணர் வீதிகள்) எங்கும்(உள்ளன).—எ - று. பதிவாக்காகிய வுபநிடதங்களைப் பரமப் பிரமாணமாகக் கொள்ளுதல் உயிர்க்கொலைக்கஞ்சி ஒழுகுதல் அஞ்ஞானநீக்கம்நாடல் ஆகிய எதுக்களாற் பதிபசுபாச திரிபதார்த்த நிச்சய முடையாரென்பது கருத்து. (அசு)

அட்டில வாய்ப் புகையு மாடத் தகிலபடு புகையும் வேள்வி
விடடெழு புகையு மொனறி விரிசுடர் விழுங்கக் கங்குல்
பட்டது பலருந் தத்தம் பயிலவினை யிழக்க நங்கை
மட்டவிழ் கடுக்கை யானகண் புதைத்தநாளை மானு மன்றே.

இ - ள். மடைப்பள்ளியிலும் (மடவார அளகம்புலர)மாடத்து(இடுகின்ற)அகிற்தட்டையிலும் யாகசாலையிலும் தோன்றி எழுகின்ற புகைகள்திரண்டு விரிந்த வெய்யிலை மறைத்தலால் அனைவரும் பழகும் தத்தந் தொழில்களை ஒழிக்கும்படி இருள் உண்டாகிய தினம் (அனைத்தும்) மணங்கமழும் கொன்றைமலரணிந்த சிவபெருமான் திருக்கணகளை (திருககைலாசத்தில் உமாதேவியார் திருக்கைகளால்) மூடிய தினத்தை ஒக்கும்.—எ - று மன்றே - அசை. (அஎ)

## ஆதிசைவர் வீதி.

கலிநிலைத்துறை.

தெயவ நீறுமைந் தெழுத்துமே நிதைக்கல ளுக
வெவ்வ மாசிரு வினையுடம பெடுத்துழல் பிறவிப்
பௌவ மேழையுங் கடந்தரன் பதமலர்க் கரைசேர்
சைவ மாதவ ருறைமடத் தனிமறு குரைப்பாம்.

இ - ள். தெய்வத் திருநீறும் திருவைந்தெழுத்துமே பரமமாமுடைய மரக்கலமாகக்கொண்டு துன்பந்தரும் குற்றமாகிய நல்வினை தீவினைகளால் உடல்களை எடுத்துச் சுழல்கின்ற எழுவகைத்தோற்றமாகிய பிறவிக்கடலையும் கடந்து சிவபிரான்திருவடித்தாமரையாகிய கரையை அடையும் பெருமையாகிய சைவதபோதனர் அமரும் மடாலயங்களையுடைய ஒப்பற்ற (ஆதிசைவவேதியர்) வீதிகளின் மகிமையை (யாம் இனி) க்கூறுவாம்.—எ - று. அணிதலோடு ஜபித்தற்குங் கருவியாகிய உருத்திராக்ஷமுங்கொள்க நல்வினை தீவினைகள் முறையே பொன்விலங்கும் இருப்புவிலங்கும் போல்வனவாகலின் இரண்டும் துன்பந்தருவனவாம் எழுவகைத்தோற்றம் - தேவர், மக்கள், விலங்கு, புள், ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம். (அஅ)

எங்கு மீசனைப் பூசைசெய் திகபர மடைவா
ரெங்கு மன்புமைப் பூசைசெய் தெழுபிறப் பறுப்பா
ரெங்கு மாகமஞ் செவிமடுத் தெதிர்வினை தடுப்பா
ரெங்கு நாயகன் வடிவுணர்ந் திருண்மலங் களைவார்.

இ - ள். (சமயதீக்ஷைபெற்றுச்) சிவபத்தரை (ச் சிவமாகக்கருதி) அருச்சித்து எழுவகைத் தோற்றமாகிய பிறவியை அறுப்பவர் (விசேட தீக்ஷைபெற்றுப் புறத்திலே) சிவபூசைசெய்து இம்மைமறுமைப்பயன்களை அடைபவர் (அகத்திலே) சிவபெருமான் றிருவுருவைத் தியானித்து மலவிருளை அகற்றுவோர் (நிருவாணதீக்ஷைபெற்றுச்)சிவாகமங்களில் (ஞானபாதங்களைக் குருமுகமாகக) கேட்ட(ல் சிந்தித்தல்க)ளாகிய ஞானபூசைசெய்து ஏறுகின்ற ஆகாமியவினையைத் தடுப்பவர் ஆகிய இவர் (ஆதிசைவர் வீதிகள்) எங்கும் உள்ளார்.—எ - று இகபரம ஆகுபெயர். இனம்பற்றிச் சிந்தித்தல் வருவிக்கப்பட்டது. (அ௰)

அழிவி லானுரை யாகம மிலக்கமாய்ந் தவற்றுள்
விழுமி தாகிய விதியினும விலக்கினு மடியை
தழுவு தொண்டர்கண மைந்தர்கள் சாதகர் பாசங்
கழுவி வீடருள் போதகக் காட்சியர் பலரால

இ - ள். நித்தியராகிய சிவபிரான் அருளிச்செய்த (காமிகாதி) ஆகமங்களில் இலட்சஞ்சுலோகம் ஆராய்ந்து அவைகளுள் மேம்பட்ட விதிவிலக்குகளில (வழுவாமல்) தந்திருவடியை அடைகின்ற (சமயா திதீக்ஷைபெற்ற) சமயிகள் புத்திரர் சாதகர் மூவர்க்கும் பாசத்தைப்போக்கி முத்தியை அருளும (மெய) யுணர்வுடைய உத்தமாசாரியர் பலர் (அவ்வாதிசைவர் வீதியின் உள்ளார).—எ - று. வழுவாமல பாசத்தைப் போக்கி எனக. இலட்சங்கிரந்தம் ஆராய்ந்தவர் உத்தமரெனவும் ஐம்பதினாயிரங்கிரந்தம் ஆராய்ந்தவர் மத்திமரெனவும் இருபத்தையாயிரங்கிரந்தம் ஆராய்ந்தவா அதமரெனவுங்கொள்க. விதி - செய்யத்தக்கது விலக்கு - ஒழிக்கத்தக்கது காட்சி - அறிவு ()

மறைக ளாகமம் பொதுச்சிறப பெனச்சிவன் வகுத்த
முறையு மோதியவ் விதிவிலக் குரைகளு முடிவி
லறையும வீடுமொன் டிரணடெனும் பிணக்கற வமைந்த
குறைவி லாச்சிவ யோகியா குழாங்களும பலவால.

இ - ள். (சிவபிரான்) வேதங்களைப் பொதுவாகவும் ஆகமங்களைச் சிறப்பாகவும் வகுத்தருளிய முறையும் அவற்றுட் கூறியருளிய விதிவிலக்கு வாக்கியங்களும் ஓதியுணர்ந்து (அஃதன்றி அவைகளின்) முடிவிலேகூறும் முத்திநிலையிலும் (சிவமுந்தாமும்) ஒன்றென்பதும் இரண்டென்பதுமாகிய பிணக்கு நீங்க (வியாபக வியாப்பியமாக இரண்டற)க் கலந்த குறை பாடில்லாத ஞானநிட்டை யுடையார் குழாங்கள் பலவும் (அவ்வீதிகளில்) உள்ளன —எ - று. உலகத்தார் உய்தற்பொருட்டும் சத்திநிபாதமுடையார் உய்தற்பொருட்டும் திருவுளத்திற்கருதிப, பொருள் பலபடத்தோன்றுஞ் சூத்திரமும் அதனை அவ்வாறாகவொட்டாது தெளிவுபடக்கூறும் பாடியமும்போல முறையே வேதம் பொதுவாகவும் ஆகமஞ்சிறப்பாகவும் அருளிச்செய்யப்பட்டன. (௯௧)

திருக்கோயில்.

குழலூது தும்புரு நாரதர் பாடலுங் குனித்துச்
சுழலுங் கொம்பனா ராடலு மூவர்வாய்த் துதியும
விழவின் செல்வமுஞ் சுருதியுந் திசையெலாம் விழுங்கு
முழவுங் கணடயி லர்ந்து முன்னவன் கோயில்.

இ - ள். வேய்ங்குழல் தும்புருநாரதரின் இசைப்பாட்டு பெண்கள் வளைந்து சுழன்றாடும் நடனம் மூவர்சுவாமிகள் திருவாய்மலர்ந்தருளிய தேவாரம் திருவிழாச் சிறப்பு வேதங்கள் திக்குகளை விழுங்கும் ஓசையுடைய முழவு இவைகளின் ஒலி நீங்காமைக்கு இடமானது (ஆதிசைவர் வீதிகள்சூழப்பெற்ற) அநாதிசைவராகிய சுந்தரேசர் எழுந்தருளியிருக்கும் திருக்கோயிலாம்.—எ - று. (கூஉ)

மடங்க லின்றிவிண் பிளந்துமேல வளர்ந்துவெள் ளேற்று
விடங்கர் வெள்ளிமன் றிமைத்தெழு வெணசுடர் நீட்ட
முடங்கல வெண்பிறைக் கண்ணியான் கயிலைமூ வுலகு
மொடுங்கு கின்றநா ளோங்கிய வோக்கமே யொக்கும.

இ - ள் வெள்ளிய இடபத்தை நடாத்தும் சுந்தரேசர் (திருநிருத்தஞ்செய்யும்) வெள்ளியம்பலத்தில் விளங்கி மடஙகாமல் ஆகாயமுகட்டைப் பிளந்து மேலும் ஓங்கியெழுந்த வெண்கிரணநீட்சி, வளைந்த வெள்ளிய பிறை யருமபுசூடிய அச்சிவபிரானது திருக்கைலாசமலை சுவாக்க மத்திய பாதலமென்னு மூவுலகங்களும ஒடுங்குங்கால் ஓங்கிய உயாச்சியை ஒத்துத்தோன்றும் —எ - று. (கூங)

சுரந்து தேன்றுளித் தலாகளுஞ் சொரிந்துவண டாற்ற
விரந்து சுந்தரற் கொருசிறை நின்றபூங் கடமபு
பரந்து கட்புன லுகபபல மலர்கடூய்ப் பழிச்சி
யிரநது நின்றருச் சனைசெயு மிநதிர னிகரும.

இ - ள தேன் ஊற்றெடுதது துளித்தும் பூககள் சொரிந்தும் வண்டுகள் இசைபாடவும் தழைநது சுநதரேசருககு ஒருபால்நின்ற பொலிவாகிய கடப்பவிருட்சம், (முறையே) கண்களினின்று பரவி ஆனந்தபாஷ்பம் சிந்தப் பலமலர்களைத தூவித் துதித்துத் (தன்) குறைகூறி (ஒருபால்)நின்று பூசித்த தேவேநதிரனை ஒத்திருக்கும்.()

உழலசெய் தீவினை யுருபபற வுயிர்க்கெலா மடியி
னிழல்செய் வார்க்குநீ ணிழல்செயா நின்றபூங் கடம்பின்
குழல்செய் வண்டுகற் பகமதுக கொணர்நதுவந் தூட்டித்
தழலசெய் காமமென் பேடையி னூடறேய் தணிக்கும்.

இ - ள் (பிறப்பிறப்புகளிற்) சுழல்விககுங் கொடிய கன்மவெம்மைகெட உயிர்கள் அனைத்திற்கும் (தந்) திருவடி நிழலைச்செய்தருளும் சுந்தரேசருக்குப் பெருநிழலைச் செய்கின்ற பூக்களையுடைய கடப்பவிருட்சத்தினுள்ள வேய்ங்குழல்போல இசைபாடும் ஆண்வண்டுகள் (தேவலோக) கற்பதருவின் மலாததேனைக்கொண்டு உணபிதது மகிழ்ந்து (தம்மோடூடிய) வெப்பந்தருங் காமமும் மென்மையுமுடைய பெட்டைவண்டுகளின் ஊடலாகிய நோயை ஒழிக்கும்.—எ - று. (கூரு)

ஆரு நீர்க்கட லன்றது வெனநிறை யகழ்கா
ரூரு மாழியன் றதுவென வோங்கெயி லெட்டாய்ச்
சாரு நேமியன் றதுவெனச் சமைந்தகோ புரம்பொன்
மேரு வன்றது வெனச்சுடா விசும்பிழி விமானம்.

இ - ள் (மதுரைப்பதியில்) நீர்நிறைந்த கடல் அதுவல்ல (இதுவே) என்று சொல்லும்படி (நீர்) நிறைந்த அகழியும் மேகந்தவழும் சக்கரவாளகிரி அதுவல்ல (இது வே) என்று சொல்லும்படி உயர்ந்த மதிலும் எட்டென்னுந் தொகையுட்பட்ட குலபரு வதம் அதுவல்ல (இதுவே) என்றுசொல்லும்படி (அம்மதில்வாயிலின்)அமைந்த கோபு ரமும் சுவர்ணமயமாகிய மேருமலை அதுவல்ல (இதுவே) என்று சொல்லும்படி (அப் பதியின் மத்தியிலுள்ள திருக்கோயிலின் மத்தியிலே கடப்பமர நிழலிலே) விளங்கா நின்ற விண்ணுலகினின்றும் இறங்கிய (சுவர்ண) விமானமும் (உள்ளன).—எ - று ()

வேத வந்தமுந் துளக்கற மெய்ப்பொருள் விளங்கு
நாத வந்தமுங் கடந்ததோர் நடுநிலைப் பொருளின்
பாத வந்தனைப் பத்தியின் பாலராய்ப் பயில்வோர்
மாத வந்தரு பயனெனத் தழைத்தபல் வளனும்.

இ - ள். (அவ்விமானத்தின்) மத்தியிலே (எழுந்தருளியிருக்கின்ற சொற்பிர பஞ்சமெனனும்)வேதமுடிவையும் கலக்கமற மெய்ப்பொருள் விளங்குதற்கு ஏதுவாகிய (பொருட்பிரபஞ்சமெனனும்) நாததத்துவமுடிவையும் கடந்த ஒப்பற்ற சுயம்புமூர்த்தி யாகிய சுந்தரேசரது திருவடியை வழிபடுதலாகிய பத்தியின் பகுதியை யுடையவராய்ப் பயில்வோர்க்கு (அப்) பெரும்புண்ணியநற்பயன் என்று யாவருங்கூற (மதுரைப் பதியிலே) செல்வங்கள் பலவுந் தழைத்தோங்கின —எ - று மெய்ப்பொருள் விளங் குதற்குக் கருவியாகப் பிருதிவியாதி நாதமீறாகிய தத்துவங்கள் தத்துவாதீதரால் கூட் டப்பட்ட தாகலின் மெய்ப்பொருள் விளங்கும் நாதவந்தமென்றார். பெத்தா முத்தர்கள் பொருட்டு முறையே ஊனநடன ஞான நடனங்கள்செய்யும் நடுவுநிலைமைப் பொரு ளென்பதுந்தோன்ற, நடுநிலைப்பொருளெனச் சிலேடையாகக் கூறினார். (கூஎ)

பொறிக ளைந்தினுக் கூட்டுபல் போகமு மிதப்பச்
செறிகொ ணீரவா லுவாப்பவத் திருநகா மாகக்
ணெறிகொள் செஞ்சடைப் பிறைமுடி நிருமலக் கொழுந்தின்
வெறிகொ ளாண்மல ரடிதழீஇ வீடுபெற் றாரபோல.

இ - ள். நெறிந்த சிவந்த சடையிற் பிறையை அணிந்த உயர்ந்த நிருமல பர சிவனது மணங்கமழும் புதிய (கமல) மலாபோலுந் திருவடியைச்சிந்தித்து வீட்டின் பம் அடைந்த அன்பரைப்போல உயர்ந்த மதுரைப்பதியின் உள்ளார் வெறுக்கும்படி [பெருமகிழ்ச்சியடைய என்றபடி] ஐம்பொறிகளுககும் உண்பிக்கும் பலபோகங்களுக் குரிய பொருள் முற்றும்(அவ்விடத்தே)பெரிதும்நிறைந்த தன்மையுடையன —எ -, று. போகம் - ஆகுபெயா ஆல் - அசை. (கூஅ)

முன்ன வன்னர சிருக்கையா லந்நகர் முளரிப்
பொன்னை யீன்றதா லதுபல பொருணிறை செல்வந்
தன்னை யீன்றதா லதுபல தருமமென் றுரைக்கு
மின்னை யீன்றதந் தீன்றதால் விழுத்தகு புகழே.

இ - ள். சிவபிரான் (சுந்தரபாண்டியராக) அரசாட்சி செய்திருத்தலால் அம் மதுரைப்பதி இலக்குமியையும் அவ்விலக்குமி தேவதை செல்வத்தையும் அச்செல்வம் புண்ணியமாகிய பெண்ணையும் அப்புண்ணியம் சிறந்த கீர்த்தியையும் பெற்றதாம். ()

எழுக்க டங்கதோ ளுருத்திர வுலகமென் றியாரும
வழுத்த நின்றவிந் நகர்வயி னுமபரின் மாணடி
விழுத்த குமபல செல்வமும வியந்துபாரத் துள்ளத்
தழுக்க றுமையா லின்னமு மமராகண ணுறங்கார்.

இ-ள் தூணைவென்ற தோளையுடைய சிவபிரானது உலகமென்று அனைவரும் புகழ நிலைபெற்ற இம்மதுரைபபதியின் மிகச்சிறந்த பலசெல்வங்கள் (தமது) தேவலோக செல்வத்தினுஞ் (சிறந்திருத்தலை) அதிசயித்து நோக்கி மனத்துட்கொண்ட பொறாமையால் தேவர்கள் இன்னமும் நித்திரையின்றி விழித்திருக்கின்றார்கள்.—எ-று அமரர் கண்ணுறங்காமை இயல்பாகவும் பொறாமையாலெனக்கூறுதல் தற்குறிப்பேற்றவணி (௧௦௦)

விரைய விழ்ந்ததார் மீனவர் வாகைவேல விடுத்துத்
திரையை வென்றது முடிதகர்த் திந்திரன் செருக்குக
கரைய வென்றதுங் காரதளை யிட்டதுங் கனக
வரையை வென்றது மிந்நகர் வலியினா லன்றே.

இ-ள் வாசனைவிரிந்த மாலையணிந்த உக்கிரகுமாரபாண்டியர் வெற்றிமாலை பூண்ட வேற்படை விடுத்துக் கடலையும் (வளையெறிந்து) முகுடந்தகர்த்துத் தருக்குக் குலையுமபடி இந்திரனையும் விலங்குபூட்டி மேகங்களையும் (செண்டாலடித்து) மேருமலையையும வென்றது இம்மதுரைப்பதியின் (அமைந்த) வலிமையினாலல்லவா.-எ-று ()

எங்கு நாவுமா யெங்கணுங் கண்ணுமா யெங்குந
தங்கு பேரொளி யலலதித் தனிநகாச் செல்வஞ்
செங்க ணாயிர நாவினான் செபபவு மெதிர்கண
டங்க ணாயிர முடையவ னளக்கவும் படுமோ.

இ-ள். இம்மதுரைப்பதியின் ஒப்பிலாச்செல்வத்தை எங்கும் நாவும் கண்ணுமுடைத்தாய் வியாபித்துள்ள பெருஞ்சோதிப்பிரானலன்றி (ஏகதேசமாகச்) சிவந்த கண்களோடு ஆயிரநாக்களுடைய ஆதிசேடன் (வாயுறுதநுசசொல்லவும்) அழகிய ஆயிரங்கண்களுடையஇந்திரன் எதிர்நோககி அளக்கவும் கூடுமோ [கூடாதுஎன்றபடி].எ-று.

புண்ணி யம்புரி பூமியா ரதில்வரு போக
நண்ணி யின்புறு பூமிவா னென்ப நாளும்
புண்ணி யம்புரி பூமியு மதில்வரு போக
நண்ணி யின்புறு பூமியு மதுரைமா நகரம்.

இ-ள். தருமஞ்செய்யும் கருமபூமியில் உள்ளார் அத்தருமத்தால் வருகின்ற (பெண், ஆடை, அணிகலம், போசனம், தாம்பூலம், பரிமளம், பாட்டு, பூவமளி என்னும் எண்வகைப்) போகங்களை அடைந்து இன்பநுகரும் உலகம் விண்ணுலகென்று கூறுவர். எந்நாளும் தருமஞ்செய்யுங் கருமபூமியும் அதனாற் போகவின்பநுகரும் உலகமும் மதுரைப்பெரும்பதியாம்.—எ-று. (௧௦௩)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பண்கனிந் தனைய சொல்லார் நரப்பிசைப் பாணி தேவ
ருண்கனி யமிழ்துந் கைப்பச் செவிதொளைத் தூட்ட வுண்டும்
பெண்கனி னமிழ்த மன்னார் பெருமித நடன முணணக்
கண்களை விடுத்துங் காலங கழிப்பவ ரளவி லாதார்.

இ - ள். இசை பழுத்தாற்போலும் (இனிய) மொழியுடைய மடவார் (வாசிக்கும்) யாழின் இசையொலி, தேவர் உண்ணுஞ்(சுவை) கனிந்த அமிர்தமும் உவர்க்கும்படி செவியைத் தொளைத்து (இன்பத்தை) உண்பிக்க வுண்டும் அமிர்தம்போலச்சிறந்த பெண்கள் (நடிக்கும்) பெருமித நடனத்தை நுகரும்படி நேர்க்கங்களைச் செலுத்தியும் காலம்போக்கும் (விநோத) புருடர் (அம்மதுரை நகரில்) அநேகர்.—எ - று (௧0௪)

கலவிவித் தாக வூடிக் கட்புனல குளிக்கு நலலார
புலவிதீர் செவ்வி நோக்கிப் புணர்முலைப போகந் துயதது
நிலைநிலை யாமை நோக்கி நெறிப்படு தரும தானங்
கலைஞர்கைப் பெய்துங் காலங கழிபபவ ரெண்ணி லாதார்.

இ - ள் புணர்ச்சியின்பங் காரணமாகச் சிறுபிணக்குற்றுக் கண்ணீரின் மூழ்கும் (தம்) மனைவியரது ஊடல் ஒழியும் சமயம்பார்தது நெருங்கிய தனபோகவின்பம் அநுபவித்தும் நித்திய மாகிய முததி யியல்பையும் அநித்தியமாகிய வுலகவியல்பையும் ஆராய்ந்து முறைமையாகத தருமதான (திரவிய) ங்களை நூலுணர்ந்த பெரியோர்கையிற் கொடுத்தும் காலம் போக்கும் (புண்ணிய) புருடர் (அம்மதுரைநகரில்) அநேகர் — எ - று. (௧0௫)

சந்தித்து மீன நோக்கி தலைவனை மூன்று போதும
வந்தித்து மீசன் பூசை மரபுளி முடித்தும் வேத
மந்தித்து மறியான் செய்த திருவிளை யாடல் கேட்டுஞ்
சிந்தித்து மனபர் பூசை செயதுநாள் கழிப்பா பல்லோர.

இ - ள் மீனாக்ஷி தேவியார்க்குத் தலைவராகிய சுந்தரேசரைக் காலை உச்சி மாலை என்னு முப்பொழுதும் அடைந்து வழிபட்டும் (ஆன்மார்த்த) சிவபூசையை (ஆகம) விதிப்படி செய்தும், வேதங்கள் சமீபித்தும் உணராத (அச்) சோமசுந்தரக்கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களைச் சிரவண மனனஙகள்செய்தும் சிவபத்தர்களைப் பூசித்தும் காலம்போக்கும் அடியார்கள் (அம்மதுரைப்பதியில்) அநேகர்.—எ - று. உபலக்கணத்தால் மீனாக்ஷி தேவியாரை வழிபட்டும் எனக்கொள்க. (௧0௬)

கற்பனவ் கற்றுங் கேட்டுங் கேட்டவை கருத்து ளூறச்
சொற்பொரு ளினைந்துங் தேட்போர்க் குணாத்தியுட் டௌக்கந தீர்த்து
மெற்பக லிரவு நீங்கு மிடத்துமெய் யறிவா னந்த
வற்புத வெள்ளத தாழ்ந்துநாள் கழிப்பர் சில்லோர.

இ - ள். (தீக்ஷையின்கண் அத்துவசுத்தி செய்யப்பெற்றுக்) கற்கத்தக்க ஞான நூல்களை ஓதல் (ஓதுவித்தல் நற்பொருளைக் கேட்பித்தல் களி) னின்றும் (ஞானசாரி யரை அடைந்து நுண்பொருள்களைக்) கேட்டும் கேட்டசொற் பொருள்களைக் கருத்துள் அழுந்தச் சிந்தித்தும் (ஒருசாலை மாணாக்கராய்) வினவுவோர்க்கு உணர்த்தி (அவரது) மனமயக்கை ஒழித்து (த் தெளிந்து) ம் சகலகேவலங்கள் நீங்கிய (சுத்தாவத்தை) யிடத்தே உண்மையறிவானந்த அதிசயப்பெருக்கில் முழுகுமுறையின் முழுகியுங்காலம் போக்கும் ஞானிகள் (அம்மதுரைப்பதியிலே) சிலர்.—எ-று. கற்றும் என்பது உபலக்கணம். எல் - ஒளி. (௧0எ)

தன்னிக ருயர்ச்சி யில்லான் காப்பியத் தலைவ னாக
முன்னவா மொழிந்த தேனோர் தமக்கெலா மூகம னன்றே
வன்னது தனதே யாகு மண்ணலே பாண்டி வேந்தா
யிந்நகர்க் கரச னாவா னிக்கவிக் கிறைவ னாவான்.

இ - ள். தனக்கு ஒப்பும் உயர்வும் இலலாதவன் காப்பியத்திற்குத் தலைவனெனப் பண்டைப்புலவர் கூறியது ஏனையோர்க்கு உபசாரமேயாம். அவ்வொப்புயர் வில்லாமை தம்முடையதாகவே கொண்டருளிய சிவபிரானே பாண்டியராஜராய் இம்மதுராப்பதிக்குத் தலைவராவார் (ஆதலால் அவரே) இக்காப்பியத்திற்கும் தலைவராவார் (இது உண்மையாம்)—எ-று. (௧0அ)

என்னென வுரைப்பே னந்த விறைமகன் பண்பை யேனை
மன்னவா வானோர் போல மதித்துரை விரிக்கற் பாற்றே
வன்னவ னாணை யாற்று னடப்பதெவ் வுலகு மானுன்
முன்னவன் செய்த வாடல் வரவினை முறையிற் சொலவேன்.

இ - ள் எவ்வுலகமும் ஒப்புயாவில்லாத அச்சிவபெருமான் றிருவாணை வழியால் ஒழுகுமாதலால், அவ்விறைவரது இயல்பை எத்தன்மையதெனக் கூறுவேன் ஏனைய அரசர் தேவர்களாகிய பசுக்கள் இயல்புபோல அப்பதி இயல்பை அளவிட்டு விரித்துரைக்கற் பாலதோ (அன்று ஆதலால் அஃதொழிதது அம்) முதல்வராகிய சோமசுந்தரக் கடவுள் செய்தருளிய திருவிளையாடல்களை (வடநூலிற்கூறிய) முறைப்படி (யான்) கூறுகின்றேன்.—எ-று (௧0௯)

திருநகரப்படலமுற்றியது.

ஆகச்செய்யுள் உ00.

---

# திருக்கைலாசப்புகழ்ச்சிப்படலம்.

கலிநிலைத்துறை.

வரங்க டந்தரு ளெனமுது வானவா முனிவோர்
கரங்க டந்தலை முகிழ்த்திடக் கருணைசெய் தவிச்சை
யுரங்க டந்துணர் யுணர்வெலாங் கடந்தரு மறையின்
சிரங்க டந்தவ னிருப்பது திருக்கயி லாயம்.

இ - ள். வரங்களைக் கொடுத்தருளுமென்று பெரிய விஷ்ணுவாதிதேவரும் முனிவரும் கைகளைத் தந்தலைகள்மேற் குவித்து வேண்ட (அவ்வாறு) திருவருள்புரிந்து அஞ்ஞானவலி வாககு மனங்கள் அரிய வேதசிரசு இவ்வகைளைக்கடந்த சிவபிரான் எழுந்

தருளியிருப்பதற்கு இடமானது திருக்கைலாசமலையாம்.—எ-று. வடமொழி ஆலாசிய மான்மியத்தன்றி மதங்காகமத்தும் பூமியின் ஈசான திக்கிலே பூ கைலாசம் இருப்பதாகக் கூறி யிருக்கின்றது." (க)

புரந்த ராதிவா னவர்பதம் போதுறை புத்தேள்
பரந்த வான்பதஞ் சக்கரப் படையுடைப் பகவன்
வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநா
ளுரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல.

இ-ள். இந்திராதிதேவர் பிரமா விஷ்ணு இவரது பதவிகளி னிலைமை அழியும்படி வரும் பேரூழிக்காலத்தும் அத்திருக்கைலாசமலை (தன்) வலிமை கெடாது நின்று (அக்) காலந் தோறும் வளரும். எ-று.—வான் - பெரிய. வரம் - மேன்மை. (உ)

அரம்பை மாதரா ராடலி ன்ரவமும் பாட
னரம்பி னோசையு முழவதிர் சும்மையு நால்வாய்
வரம்பி லோதையு மருவிவீ ழொலியுமா றுது
நிரம்பி வானமுந் திசைகளு நிமிர்வன மாதோ.

இ-ள். (அத்திருமலையிலே) தேவமகளிர் ஆடல் பாடல் யாழ் அதிருந் தண்ணுமை அளவில்லாத யானைகள் விழுகின்ற அருவிகள் இவற்றின் ஒலி நீங்காது அட்டதிக்கு ஆகாயம் இவைகளில் நிறைந்து பரவும்.—எ று. நரம்பு—ஆகுபெயர். நால்வாய் - அன்மொழித்தொகை. (௩)

வெந்த நீற்றொளி வெண்மையும் விமலனை யகங்கொண்
டந்த மின்றியே யசைவற விருக்கையு மருவி
வந்த கண்களுங் கொண்டவ ணிருக்குமா தவர்க்குத்
தந்த தாலரன் கயிலையுந் தனதுசா ரூபம்.

இ-ள். சிவபிரான் (அன்றி அத்) திருக்கைலாசமலையும் (விதிப்படி) வெந்த விபூதியின் ஒளிபோன்ற வெண்ணிறமும் (அந்) நிருமலனை (த்தன்) இடங்கொண்டு அழியாது அசைவற்றிருத்தலும் அருவிகள் வரும் இடங்களும் பெற்றுத் திருமேனியில் அணிந்த விபூதிப்பிரகாச வெண்மையும் விமலனை மனத்தமுத்தி முடிவில்லாது சலனமறயோகத்துறைதலும் (ஆனந்தபாஷ்ப) அருவி வருங்கண்களும் அடைந்து) அங்கே தங்கும் பெருந்தவர்க்குத் தனது சமவடிவத்தைக் கொடுத்தது. எ-று.—ஆல் - அசை. கயிலையும் என்னும் உம்மை இறந்தது தழீஇயது. (௪)

ஆங்கு வெண்டுகில் விரித்தெனக் கல்லென வார்த்து
வீங்கு காலரு வித்திரள் வெள்ளமே யன்றி
யோங்கு நான்மறைக் குடுமியி னுள்ளொளி நோக்கித்
தூங்கு மாதவர் கண்களுஞ் சொரிவன வெள்ளம்.

இ-ள். அத்திருமலையில் வெள்ளிய ஆடை விரித்தாற்போலக் கல்லென்று ஒலித்துப் பருத்து (வீழும்) கால்களுடைய திரண்ட அருவிகள் வெள்ளங்கள் (சொரிவன) அன்றி உயர்ந்த நால்வகைவேத சிகைகளின் (விளங்கும்) பரசிவனை அகமுகமாக உணர்ந்து அழுந்திய பெரியதவமுடையார் கண்களும் வெள்ளங்கள் சொரிவனவாம்.—எ-று.

கோட்டு மாமலர், நிலமலர், குண்டுநீ ரொடுத்துக்
காட்டு மாமலர், கொடிமலர் கொண்டு, முட்கூரைந்த
பாட்டு மாமலர், கொண்டு, நம் பரஞ்சுட ரடியிற்
சூட்டு மாதவர் தொகுதியுஞ் சூழ்வன வொருபால்.

இ - ள். (அத்திருமலையின்) ஒருபுறத்தே கோட்டுப்பூமுதலிய நால்வகை மலர்க (ளைக்கொண்டு) ளாலும் மனங்கனைதற் கேதுவாகிய திருப்பாடல் என்னு மலர்க (ளைவாக்குக) ளாலும் நஞ் சிவபிரான்திருவடிகளிற் சூட்டும் பெருந்தவமுடையார் தொகுதியுஞ் சூழ்ந்துள்ளன. எ-று. (௬)

கைய நாகமுங் காய்சின வுழுவையுங் கடுவாய்ப்
பைய நாகமுந் தங்கிளை பரவிய முக்க
ணைய னைமெய் யருந்தவா தமையடைந் தன்பு
செய்ய நாகமும் வையமும் புகழ்வதச் சிலம்பு.

இ - ள். துதிக்கையுடைய யானையும் பெருங்கோபமுடைய புலியும் நஞ்சம் பொருந்தலுடைய படமுள்ளபாம்பும் தஞ் சுற்றங்கள் வழிபட்ட சிவபிரானை (மதித்து) அரியமெய்த்தவ முடையாரை அடைந்து வழிபாடு செய்தலால், தேவுலகத்தாராலும் பூவுலகத்தாராலும் அததிருமலை புகழப்படுவதாம்.—எ-று. யானை - திருவானைக்காவிலும், புலிபெரும்பற்றப் புலியூராகிய சிதம்பரத்திலும், பாம்பு - திருக்காளத்தியிலும் வழிபட்டமை அவ்வப்புராணங்களிற் காண்க. (௭)

திருக்கைலாசபபுகழ்ச்சிப்படல முற்றியது.

ஆகச்செய்யுள் உ௦௭.

---

# புராணவரலாற்றுப்படலம்.

கலிவிருத்தம்.

அளந்தி டற்கரி தாயவக் குன்றின்மேற்
களங்க றுத்துவின் காத்தவன் கோயின்முன்
விளம்ப ருஞ்சிவ தீர்த்தத்தின் மிக்கதாய்
வளம்பெ றுஞ்சிவ தீர்த்தத்தின் மாடது.

தண்ட ருங்கதிர்ச் சந்திர காந்தத்திற்
பண்ட யங்க நவமணி பத்திசெய்
தண்டர் தச்ச னநேக தவஞ்செய்து
கண்ட தாயிரக் கான்மண் டபமரோ.

ஆன பான்மையி னலந்த மண்டப
ஞான நாயக னுண்மலர்த் தாடொழ
வான மீனொடு வந்து பதங்குறித்
தூன மின்மதி வைகுவ தொத்ததே.

அன்ன மண்டபந் தன்னு ளருந்தவ
மென்ன வேங்லைக யதண்மே லிருந்தனன்
புன்னு கேள்விப் பதினெண புராணமுஞ்
சொன்ன மாதவச் சூத முனிவனே.

இ - ள்- அஃத்தற்கு அரிய (மகிமையான) அத்திருமலையின் (மத்தியிலுள்ள ஒளிப்பிழம்பாகிய சிகரத்தின்கண்ணதான செம்பொற்) றிருக்கோயிலின் (நடுவிலே சுயம்புவாய்ப் பராசத்தி வடிவாய்த் தோன்றிய ஸ்ரீகண்டபரமேசுவர லிங்கமூர்த்தியை அதிஷ்டித்து எழுந்தருளியிருக்கின்ற விடததை உண்டு) கண்டங் கறுத்துத் தேவரைக்காத்த சிவபெருமானது சந்நிதியிலே சொல்லுதற்கரிய சிவதீர்த்தங்களின் மேம்பட்டதூய்ச் சிறந்துள்ள சிவதீர்த்தக்கரையின் அருகிலே தேவதச்சன் பலமுறை தவஞ்செய்தமையால், குளிர்ச்சிபெற்ற. கிரணங்களுள்ள சந்திரகாந்தத்தில் நுணணியதொழில்விளங்க ஒன்பதுவகை மணிகளை வரிசையாகப் பதித்து நிருமித்ததாகிய ஆயிரக்கான்மண்டபம் (ஒன்றுண்டு) , அம்மண்டபம் (அங்ஙனம்) ஆகிய தன்மையால், அவ்விறைவரது புதியகமலமலர்போலுந் திருவடியை வழிபட நக்ஷத்திரங்களோடு குற்றமற்ற சந்திரன் வந்து சமயம் நோக்கித் தங்கியது போன்றது, சிறந்த அம்மண்டபத்திலே வியாக்கிராசினத்தின்மீது பெருந்தவம்திருவுருகொண் டிருந்ததுபோலச் சொல்லுகின்ற (வியாசமுனிவர் மாட்டுக்)கேட்டமையால பதினெண்வகைப்புராணங்களை(விரித) துரைத்த பெரியதவமுடைய சூதமுனிவர் வீற்றிருநதார்.—எ - று. சிவதீரத்தம் என்பது மங்களத்தைக் கொடுப்பதாலும் பரிசுத்தத் தன்மையாலும்வந்த காரணப்பெயர். மாடதுஎன்பதில் அது பகுதிப்பொருள்விகுதி. சந்திரகாந்தம் - சந்திரனுக்கும், நவமணிகள் - நக்ஷத்திரங்களுக்கும் உவமை. (மத்தியில—யிருக்கின்ற) வடநூலின் உள்ளன. (ச)

அநத வேலையி லச்சிவ தீர்த்தததின்
வந்து மூழ்கியம மணடபத் தேறியே
சந்தி யாதி தவமுடித் தீறிலா
விந்து சேகரன் முணினை நேத்தியே.

சம்பு புத்தன், சதானந்த, னுததம
னம்பு யத்த னனைய மகோதர.
னும்ப ரஞ்சிய வுககிர வீரிய,
னம்பு கேள்விப் பிரசணட நற்றவன்.

ஆதி மாதவர் யாவரு மன்புமை
பாதியாய்முற்று மாகும் பராபரச்
சோதி யால்வைத்த சூதனைத் தோத்திர
மோதி யஞ்சலித் தொன்று வினவினா.

இ - ள். அப்பொழுது அச்சிவதீர்த்தத்தில் வந்து ஸ்நானஞ்செய்து அவ்வாயிரக்கான்மண்டபத்தில் ஏறிச் சந்திமுதலிய நித்தியகன்மங்களை நிறைவேற்றிப் பிறைமுடிப்பெருமான் றிருவடிகளைச் சிந்தித்துத் துதித்துச் சம்புபத்தராதி முனிவர் அனைவரும், அர்த்தநாரிபாகராயும் அகண்டாகார நித்திய வியாபகரான சிவபிரான் மாட்டு அன்புவைத்த சூதமுனிவரை வணங்கித்துதித்து ஒன்று வினவத்தொடங்கினர்.—எ-று. (எ)

கலிநிலைத்துறை

வேத வாகம புராணமே மிருதியே முதலா
வோது நூல்களின றுணிபொரு ளுலகெலாம் பயந்த
பேதை பாகனே பரமெனத் தோந்துணா பெரிய
போத மாதவ வுனக்குயாம் புகல்வதொன் றுளதால்.

இ - ள். ஓதுகின்ற வேதசிவாகமாதி நூல்களின் நிச்சயப் பொருளாகிய பரம சிவனே பரம் பொருளென்று (சிந்திதது) தெளிந்து (அநுபூதியில்) உணர்ந்த பேருணர்வுடைய (சூத) மாதவரோ தேவரீர்க்கு அடியேங்கள் சொல்லத்தக்க விண்ணபபம் ஒன்றுண்டு (கேட்டருளும).—எ-று. வேதமே. ஆகமமே எனஎண்ணேகாரம் விரிக்க. (அ)

மேரு மந்தரங் கயிலைபாப் பதமுதல விடைமே
லூரு மநதர காடவ னுறைபதி யநந்த
மாரு மநதமில் போகமவீ டடைவதென் றவற்றின்
கார ணஙகளோ டுரைத்தனை கருத்தினுக் கிசைய.

ஐய மாதிமுக் குறறமு மகலநீ யருளிச்
செய்ய வுந்தெளிந் திலங்கள்யாஞ சிற்றறி வுடையே
மைய னெஞ்சினே மாகையான மயக்கற வின்ன
முய்யு மாறருள் செய்தியென் றுரைத்தனா மன்னோ

இ - ள். விடைமேல் (ஏறி) நடாத்துஞ சிவலோகநாதர் அமர்ந்த மேரு முதலிய திருப்பதிகள் அநந்தமும் கெடாத புததி முததிகளை அனைவரும் அடைதற்குரியன வென்று அவைகளின் ஏதுக்களோடு கருததுககு இணஙக நீர் உரைத்தீர், யாஙகள் சிற்றறிவும் மனமயக்கமும உடையேம் ஆதலால், தெளிந்திலேம் மயக்கம் அற இன்னும் பிழைக்கும்படி (எஙகட்கு) அருளுவீரெனறு சொன்னார்.—எ-று. ஐய - செய்யவும் என்பது அநுவாதம. முக்குற்றம் - ஐயம், திரிவு, அறியாமை. (கo)

தலங்க டம்மின்மிக் குள்ளதாத் தருதிசா தீர்த்தக்
குலங்க டம்மின்மிக் குள்ளதாக் குறையிரந தோாக்கு
நலங்க டந்தருண் மூர்த்தியா நாதமே தாநதப்
புலங்க டந்தபே ரொளியுறை தலனொன்று புகலாய்.

என்ற போதெதிர் முகமலாந திருண்மல வலியை
வென்ற சூதனுந் தலங்களின விசேடமாய்ந் தமபொற்
குன்ற வாாசிலை யானிடங் கொண்டுறை பதியு
ளொன்று கேட்கவி டளிபபதா யுளதுமற் றதனை.

இ - ள். (அங்ஙனம் பொதுவகையால் அன்றித்) தலங்களில் மேம்பட்ட (தலம்) ஆகவும் தீர்த்தங்களில் மேம்பட்ட (தீர்த்தம்) ஆகவும் (மூர்த்திகளில் மேம்பட்ட) மூர்த்தியாகவும் (அம்மூர்த்தியை அதிஷ்டித்து) நாத தத்துவ முடிவாகிய பாசஞானத்தையும் வேதமுடிவாகிய கலைஞானத்தையுங் கடந்த சிவபிரான் அமர்ந்த தலம் ஒன்று உரைத்தருளும் என்று (அம்முனிவர் சிறப்புவகையாற்) கேட்டபொழுது (அதற்குச்)சூத முனிவர் (ஸ்ரீதக்ஷிண மூர்த்தியைத் தியானஞ்செய்து) தலங்களில் விசேட (தல)த்தை ஆராய்ந்து மேருமலையை நீண்டவில்லாக வுடையார் கோயிலாகக் கொண்டு அமர்ந்த

தலங்களில் ஒன்று கேட்டவளவில் முத்தியைத் தருவதாயுள்ளது.—எ-று. மற்று-அசை. அதனை என்பது வருஞ்செய்யுளிற் கூட்டிப் பொருள் உரைக்கப்படும். (௪உ)

(அதனை.)

முற்ற வோதிய புராணமூ வாறனுட் காந்தம்
பெற்ற தாறுசங் கிதையவை யாறுந்தம் பெயராற்
சொற்ற பேர்சநற் குமரமா முனிவரன் சூதன்
கற்றை வார்சடைச் சங்கரன் மாலயன் கதிரோன்.

இன்ன வாறனுட் சங்கர சங்கிதை யென்று
சொன்ன நூலினை யுணர்த்தினன் சங்கரன் றுணைவிக்
கன்ன போதவண் மடியினி லிருந்துகேட் டதனை
மின்னு வேல்பணி கொண்டவேள் வெளிப்பட வுணர்ந்தான்.

குன்றெ றிந்தவேள் வழிபடு குறுமுனிக் குரைத்தா
னன்று தொட்டஃ தகத்திய சங்கிதை யாகி
நின்ற தன்னது கேட்பவாக் கரனடி நீழ
லொன்று மின்பவீ டளிப்பதா வொருதல னுரைக்கும்.

இ - ள். அதனை, (உபநிடதங்களில் இரகசியமா யுள்ளனவற்றை) முடிவுபெறக் கூறிய பதினெண் புராணங்க (ளிலும் கூறப்பட்டிருப்பினும் அப்புராணங்க) ளுள்ளே கந்தபுராணம் ஆறுசங்கிதைகளை யுடையது அவை ஆறும் தம்பெயர்களாற் கூறியவர் சநற்குமார முனிவர் முதலியோராம். அவ்வாறு சங்கிதைகளிற் சங்கர சங்கிதையைச் சிவபிரான் உமாதேவியாருக்கு அருளிச்செய்தார். அப்பொழுது அத்தேவியார் மடியில் இருந்து அச்சங்கிதையைக்கேட்டு விளங்கும் வேற்படையை ஏவல் கொண்ட முருகக் கடவுள் செவ்விதாக உணர்ந்தார் (பின்பு) கிரவுஞ்ச மலையைப் பிளந்த அக்கடவுள் அகத்திய மகாமுனிவருக்கு உரைத்தருளினர்., அது அந்நாள் முதல் அகத்திய சங்கிதையாய் நிலைபெற்றது அச்சங்கிதை கேட்பவர்க்குச் சிவபிரான் திருவடிநிழலை அடைதலாகிய இன்ப வீட்டைக் கொடுப்பதாகவும் ஒப்பற்ற தலமாகவும் (விரிவாகக) கூறும்.—எ-று. அதனைக் கூறும் வினக. (௪ரு)

அதிக வப்பதி யாதெனி னாலவாய் கேட்கக்
கதிய ளிப்பதென் றோதிய சூதனைக் கதியின்
மதியை வைத்தவ ரனனதைப் பகரென வந்த
விதியி னிறபுகல் கின்றனன் வியாதன்மா ணாக்கன்.

இ - ள். உயர் வுள்ள அந்த ஸ்தலம் யாதெனின், கேட்டவளவில் முத்தியைக் கொடுப்பதாகிய திருவாலவாய்ப் பதியாமென்று கூறிய சூதமுனிவனை முத்தியின் கண்ணே புத்தியை வைத்த மற்ற முனிவர் அதன்மகிமையைச் சொல்லும்படி வினவ, சூத முனிவர் (புராணத்தில் வழங்கி) வந்த முறையினாற் சொல்லுகின்றார்.—எ-று. (௪சு)

புதிய தாமரை மேவிய பழமறைப் புத்தேள்
விதியி னாற்கடு நடைப்பரி மகஞ்செய்வான் வேண்டிக்
கதியை மாய்ந்தவாக குதவுதண் டுறைகெழு காசிப்
பதியின் மைந்தரோ டெய்தினன் பண்டொரு வைகல்.

இ - ள். புதிய கமலமலரில் இருக்கும் பழைய வேதவுணர்ச்சியுடைய பிரமா (வேத) விதிப்படி வேகநடையுள்ள அசுவமேதவேள்வி செய்யும் பொருட்டு விரும்பி

இறந்தவர்க்கு முத்தியைக்கொடுக்கும் தன்ணியதுறைகள் பொருந்திய ஸ்ரீகாசிக்ஷேத்திரத்தில் முனனொருநாளிற புத்திரரோடு அடைந்தார்.—எ-று. (கஎ)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அகத்தியன் வியாத ஞாதன சநக ஞதிநான் முனிவர்கோ தமனூற
சிகைத்தெளி வுணர்ந்த பராசரன் வாம தேவனவான் மிகிழிய வசிட்டன்
சகத்தியல கடந்த சுகனமுதன முனிவர தம்மொடும் பத்துவெம பரிமா
மகத்தொழின் முடித்து மறறவாக குள்ள மகிழ்வுற வழங்குந வழங்கா.

சத்திய வுலகிற் சரோருகக் கிழவன சாரந்தபின் புலபபகை சாயத்த
வத்திரு முனிவ ரனைவருங காசி யடிகளை யடைந்தனர் பணிந்து
முத்திமணடபத்தினற்முதனுன்கு மொழிந்தருண் மூர்த்திசந் நிதியிற்
பத்தியா யிருந்து நாரத முனியைப பார்த்தொரு வினவுரை பகர்வார.

இ - ள். அகத்தியமகாமுனிவர் முதலிய முனிவரோடு பத்துப்பரிமேத வேள்வி முடித்து அம்முனிவர்ககுக கொடுக்கின்ற தக்ஷிணைகளை மனமகிழக கொடுத்துச் சத்தியலோகத்தைப் பிரமா அடைந்தபின் விடயமாகிய பகையை வென்ற அம்முனிவர் அனைவரும் ஸ்ரீகாசி விசுவேசரை அடைந்து வணங்கி முத்திமணடபத்திலே அறமுதலிய நான்கையும் (சநகாதி முனிவர்ககு) உபதேசித்தருளிய தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே பத்தியோடு வரிசையாக விருந்து நாரதமுனிவரைநோக்கி ஒரு வினாசெய்வாராயினர். எ-று. நூற்சிகைத்தெளிவு - அதாவசிகையின்கணணதாகிய சிவம். அடைந்தனர்-முற்றெச்சம. பத்தி - இரட்டுறமொழிதல (கக)

தலமுதன் மூன்றுஞ் சிறந்ததோர் சைவ தலமுரை யென்னநா ரதன்முன்
கலைமுழு துணர்ந்த சநற்குமா ரனபாற கற்றவன வியாதனு மவனபா
னலமுறக கேண்மி னெனவவன் கதிர்வே ணமபிரான மறைமுத லனைத்து
மலைவற வுணர்ந்தோன் குறுமுனி யாகு மவனிடைக் கேணமென விடுத்தான்.

இ - ள் தலம் தீர்த்தம் மூர்த்தி இம்மூன்றினாலுஞ் சிறந்ததாகிய ஒரு சிவக்ஷேத்திரஞ் சொலலுமென்று கேட்க, அதற்கு நாரதமுனிவர் நூல்களமுற்றும் உணர்ந்த சநற்குமாரமுனிவர்மாட்டுக கற்றுணர்ந்தவர் வியாசமுனிவராவார் அவரிடத்தே நன்மை பெறக்கேளுங்களென்று சொலல, அவ்வியாசமுனிவர் கிரணத்தையுடைய வேற்படையை ஏந்திய முருகக்கடவுள்மாட்டு வேதமுதலிய எல்லா நூலகளையும் எளிதாக வுணர்ந்தவர் அகத்தியமகாமுனிவராவார் அவரிடத்தே கேளுங்களென்று ஏவினார்.—எ-று.()

மலயமா தவனை யடைந்துகை தொழுது வாழ்த்தினர் தாவிவில் வலனைக்
கொலைபுரி தரும மூர்த்தியே விந்தக் குன்றடக் கியதவக் குன்றே
யலைகடல் குடித்த வருடபெருங் கடலே யருந்தமிழ்க் கொணடலே தென்பார்
துலைபெற விருத்த களைகணே யென்று சுருதியா யிரமெனத் துதித்தார்.

இ - ள் (அம்முனிவர்கள்) அகத்தியமகாமுனிவரை அடைந்து கைகளாலே அஞ்சலித்து வாழ்த்தி, தருமமூர்த்தியே தவக்குன்றே பேரருட்கடலே தமிழ்க்கொணடலே பற்றுக்கோடேயென்று அளவில்லாத வேதங்கள்போலத் துதிசெய்தார்கள். எ-று.

அசமுகி [redacted]ரை வலிந்து கலந்து பெற்ற வில்வலன் வாதாவி என்னும் அசுரர் இருவர் பிரமா கொடுத்த வரத்தினால் வனத்திலே தவசிகள்போல வசித்து, வருமுனி

வரை உபசரித்துத் தம்பியாகிய வாதாவியை ஆடாக்கிச் சமைத்து உண்பித்தபின் தம்பியை அழைக்குங்கால் அவன் அம்முனிவர்வயிற்றைக் கிழித்துக்கொண்டுவர இருவரும முனிவரைக்கொன்று தின்று காலங்கழிக்கும்வழி, அகத்தியமகாமுனிவர் வர அவருக்கும் விருந்துசெய்து தம்பியை அழைத்தவழி வாதாவி வடிவங்கொண்டு வயிற்றில் முழங்குங்கால அதனை யோகக்காட்சியால் உணர்ந்து வயிற்றை முனிவர் தடவியபோது அவன் ஜீரணமாய் மரணமாயினன, அதனையுணர்ந்த விலவலன்எதிர்ந்தபோது அவனையுங் கொன்று உலகத்துக்கு நன்மை செய்தமையால, வாதாவி வில்வலனைக் கொலைபுரி தருமமூர்த்தியே எனவும,

மேருமலையோடு மாறுபட்டு அண்டங்களை அடைத்துநின்ற விந்தகிரியின் சாரலை அடைந்து விந்தமே சிறிதுவழிவிடுவாய் என்று கேட்டபோது, சூரிய சந்திரர்க்கும் வழிவிடாது நிற்கின்றனம குறுமுனியாகிய உனக்கு அஞ்சி வழிவிடோம் என்றவழித் தவமகிமையாற் குறியகையை நெடிதாக நீட்டி அவவிந்தமலையின உச்சியில அழுத்த அம்மலை செருக்கழிந்து பாதலத்திற் புகுந்தமையால, விந்தக்குன்றடக்கிய தவக்குன்றே எனவும,

இந்திரன் வேண்டக் கடல்நீரை ஆசமித்தமையால, அலைகடல்குடித்தவருட் பெருங்கடலே எனவும்,

சிவபிரான்மாட்டு மூலசூத்திரத்தைக் கேட்டுத் தமிழ்நாட்டாருடைய இலக்கியத்துக்கு நாதத்தின உறபத்தியையும எழுத்து சொல் பொருள யாப்பு அலங்காரமென்னும் ஐந்திலக்கணங்களையும் உலகோபகாரமாகச் செய்தமையால், அருந்தமிழ்க் கொண்டலே எனவும்,

திருக்கைலாசமலையில் அரிபிரமேந்திராதிதேவர்கள் அட்டதிக்குப்பாலர் முதலியோர் அனைவரும் நெருங்கினமைபற்றி வடதிசை தாழ்ந்து தென்றிசை உயர்ந்தபோது தென்பூமியிலுள்ள பொதியமலையில அகத்தியமகாமுனிவரை இருத்தியபொழுது துலாக்கோல்போலப் பூமி சமநிலையானபடியால், தென்பார் துலைபெற நிறுத்த களைகணே எனவும் கூறினர். மூல சூத்திரங்கேட்டதும், திருக்கைலாசத்தில் அனைவரும நெருங்கினதும் வடநூல் ஆலாசியமான்மிய முதலத்தியாயத்திற்கண்டன. (உக)

மூவகைச் சிறப்பு முள்ளதோர் தான மொழிகென முகமலர்ந் தருள்கூர்
தியானவையுமுணர்ந்தோனமுத்திமண்டபத்தினிருதொகையின்வந் திறக்குஞ்
சேவலகட்மைப்பு மைங்கரன றனையுஞ் சேவலங் கொடியுடை வடிவேற்
காவலன றனையும வடநிழ லமர்ந்த கண்ணுதற் பரனையும் பணியா.

அங்கயற கண்ணி தனனையு மெந்தை யாலவா யானையு மிதய
பங்கயத் திருத்திச் சமாதியி லிருந்து பரவச மடைந்துபாரப் பதிக்குச்
சங்கர னருளிச் செய்த்ரங் கிதையைத் தாரக னுடலிரண் டாகச்
செங்கைவேல விடுத்த சேவக னெனக்குத தெருட்டினனனையசங்கிதையில்.

இ-ள். மும்மைச் சிறப்புள்ளதாகிய ஒருசைவஸ்தலம சொல்லவேண்டுமென்று வினவ முகமலர்ந்து (அகத்தில) அருள்மிகுந்து மூன்றும் உணர்ந்த அகஸ்தியமகாமுனிவர்முத்திமண்டபத்தில் வந்திருந்த நான்கு கோழிகளையும்விநாயககடவுளையும் முருகக்கடவுளையும் தக்ஷிணாமூர்த்தியையும் வணங்கி, அங்கயற்கண்ணியம்மையாரையும் சுந்தரேசரையும் இருதயகமலத்திலே தியானித்து நிட்டைகூடிப் பராதீனமாகி, உமாதேவி

யார்க்குச் சங்காமூர்த்தி அருளிய சங்கரசங்கிதையை முருகக்கடவுள் எனக்குத் தெளிவித்தார்.—எ-று. அனையசங்கிதையில் என்பது வருஞ் செய்யுளிற்சேர்க்க. சேவல்கள்-மாகனந்தனுகிய மறையவனும் அவன் மனைவியும் மக்களிருவரும் மூன்றும்யுகத்திற் பாவத்தாற் கோழிகளாய்ப்பிறந்து முத்திமண்டபத்தில் வந்து முத்தியடைந்ததாகக் காசிகண்டத்திற் கூறிய அக்கோழிகளாம். (உங)

(அனையசங்கிதையில்.)

பெறற்கருந் தவஞ்செய் தகந்தெளிந் தரிதிற் பெறுங்கதி கேட்பவர்க்கெளிதா
யுறப்படுந் தலநீர் விளையமுச் சிறப்பு முள்ளதெத் தலத்தினுங் கழிந்த
சிறப்பினுங் கெண்ணெண் டிருவிளை யாடல் செய்தருள் வடிவெடுத் தென்று
மறைப்பொருள் விளங்கு மாலவா யதனை மண்ணின்மேற் சிவனுல கென்னும்.

இ-ள். உயர்ந்த சங்கரசங்கிதையிலே, நீர்விளவிய மும்மைச் சிறப்பும் உள்ளது, பெறுதற்கரிய தவஞ்செய்து மனதெளிந்து வருததத்தினுற் பெறுமுத்தியைக் கேட்பவர்க்கு எளிதாக அடைதற்குரிய தலமாகிய எந்தச்சைவதலங்களினும் மிக்கசிறப்புடைய வேதப்பொருளாகிய சுந்தரேசா அருள்வடிவெடுத்துத் திருவிளையாடல் செய்து என்றும் விளங்கப்பெற்ற திருவாலவாய்ப்பதியாகும். அதனைப் பூலோகத்திற் சிவலோகமென்று சொல்லப்படும்.—எ-று. ஆங்கு - அசை. (உச)

அத்தலத் தனைய மூவகைச் சிறப்பு மளவிலா வுயிர்க்கெலாங் கருணை
வைத்தவன் செய்த திருவிளை யாட்டும் வரையுரங் கிழியவே லெடுத்த
வித்தக னெனக்கு விளம்பிய வாறே விளம்பு வனுமக்கென வந்த
வுத்தம முனிவர் யாவருங் கேட்க வுணர்த்துவான் கடலெலா முண்டான்.

இ-ள். அப்பதியில் அப்படிப்பட்ட மும்மைச் சிறப்புகளையும் உயிர்களிடத்தே கருணையுடைய சிவபிரான்செய்த திருவிளையாடல்களையும் கிரவுஞ்சமலையின் மார்பங்கிழிய வேற்படைதொடுத்த முருகக்கடவுள் எனக்குச் சொல்லியருளியபடியே உமக்குச் சொல்லுவன் என்று அம்முனிவர் அனைவருங் கேட்கக் கடல்நீர் முழுவதும் ஆசமித்த அகத்தியமகாமுனிவர் அறிவிப்பாராயினர்.—எ-று. (உரு)

புராணவரலாற்றுப்படல முற்றியது.

ஆகசெய்யுள் - உரு

## தலவிசேடப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நாட்டமொரு மூன்றுடைய நாயகனுக் கன்புடையீர் நயந்து நீவிர்
கேட்டதல மீண்டுரைத்த திருவால வாயதனுட் கிளைத்துப் பொன்னந்
தோட்டலாதா மரைமுளைத்த தொருதடமுஞ் சுந்தரச்செஞ் சோதி ஞான
வீட்டமென முளைத்தசிவ லிங்கமுமொன் றுளவின்னு மிசைப்பக் கேண்மின்.

இ-ள். முக்கண்ணுடைய சிவபிரான்பொருட்டு அன்புடையமுனிவர்களே நீவிர் விரும்பிகேட்டபதி இவ்விடத்தே சொல்லிய திருவாலவாய்ப்பதியாம். அதிலேநிறை

ந்து சுவர்ணமயமாகிய இதழ்களுடைய விரிந்தபூக்களையுடைய தாமரை முளைக்கப்பெற்ற ஒருதடாகமும் அழகிய சிவந்த சோதிமயமாகிய ஞானத்திரளென்றுசொல்லும்படிதோ ன்றியருளிய ஒருசிவலிங்கமும் உள்ளன இன்னமுஞ்சொல்லக்கேளுங்கள்—உ.எ-று. (க)

திருவால வாய்க்கிணையா மொருதலமுந் தெய்வமணஞ் செய்யப் பூத்த
மருவார்பொற் கமலநிகர் தீர்த்தமுமத் தீர்த்தத்தின் மருங்கின் ஞான
வுருவாகி யுறைசோம சுந்தரன்போ லிகபரந்தந் துலவா வீடு
தருவானு முப்புவனத் தினுமில்லை யுண்மையிது சாற்றின் மன்னோ.

இ-ள். சொல்லும்வழி திருவாலவாய்ப்பதிக்குச் சமமான ஒருபதியும் திவ்விய மணங்கமழும்படி பூத்தவாசனைபொருந்திய பொற்றாமரைத தீர்த்தததுக்குச் சமமான (ஒரு) தீர்த்தமும் அததீர்த்தத்தின் பக்கததில் ஞானவடிவாய் அமர்கின்ற சொக்கலிங்கப் பெருமான்போல் இகபரபோகங்களும் நித்தியமுததியும் அருளும் (ஒரு) சிவலிஙகப்பெ ருமானும் மூவுலகத்தும் இல்லை இதுசததியமே.—எ-று. (உ)

அவ்வகைய மூன்றின்முதற் றலப்பெருமை தனைச்சுருக்கி யறையக் கேண்மி
னெவ்வகைய் வுலகத்துந் தருமதல மதிகமவற் றீறி லாத
சைவதல மதிகமவற் றறுபத்தெட் டதிகமவை தமிலீ ரெட்டுத்
தெய்வதல மதிகமவற் றதிகதல நான்கவற்றைச் செப்பக் கேண்மின.

இ-ள் அம்மூன்றுள் முதலிலே தலமகிமையைச் சுருக்கிச்சொல்லக்கேளுங்கள். எவ்வுலகங்களிலும் புண்ணியஸ்தலங்களும், அவற்றுள்அழியாதசிவஸ்தலங்களும், அவ ற்றுள் அறுபத்தெட்டு ஸ்தலங்களும், அவற்றுள் பதினாறு ஸ்தலங்களும் அவற்றுள் நான் கு ஸ்தலங்களும் மேம்பட்டன. அவற்றைக் கூறககேளுங்கள்.—எ-று. (௩)

அன்னமலி வயற்புலியூர் காசிநகர் காளத்தி யால வாயா
மின்னவளம் பதிநான்கிற் றிருவால வாயதிக மெவ்வா றென்னின்
மின்னவிரம் பலங்காணக் காசிநகா வதிந்திறக்க வியன்கா ளத்திப்
பொன்னகரம் பத்திநிலை வழிபாடு செயவளிக்கும் போகம் வீடு.

இ-ள். அன்னப்பறவை நிறைந்த கழனிசூழப்பெற்ற தில்லைநகர் காசிநகர் காளத் திநகர் ஆலவாய்நகர்களாம் இப்படிப்பட்டவளமபதிகள் நான்கில், திருவாலவாய்நகர் எவ்வாறு மேம்பட்டதெனில், ஒளிவிளங்கும் சிதம்பரம் தரிசிக்கவும், காசிவசிதது மரி க்கவும், மேம்பட்டகாளத்தி வழிபடவும் புத்திமுத்திகளைக் கொடுக்கும்.—எ-று. (௪)

அறந்தழையுந் திருவால வாய்கேட்ட வுடன்போக மளிக்கு மீண்டு
பிறந்திறவாப் பேரின்பக் கதியளிக்கு மிதுவன்றிப் பிறழா தெங்கு
நிறைந்தபர னெத்தலமும் படைப்பானித் தலத்தைமுத னிருமித் திங்கு
னுறைந்தருளி னானின்ன மினனமுள திதன்பெருமை யுரைப்பக் கேண்மின்.

இ-ள். தருமம் ஓங்கும் திருவாலவாய் (தன்பெயர்) கேட்டவளவிற்போகமும் பேரானந்தமுததியும் கொடுக்கும் அன்றிச்சிவபிரான் எத்தலங்களும்படைக்கக்கருதி இவ் வாலவாயை (விளையாடற்பொருட்டு) முதலிற்படைதது இதில் அமர்ந்தார். இன்னமும் இதன்மகிமைகூறக்கேளுங்கள்.—எ-று. (௫)

திருவால வாயென்று கேட்டவரோ யறம்பெறுவர் செல்வ மோங்குந்
திருவால வாயெனறு நினைத்தவரோ பொருளடைவர் தேவ தேவன்
றிருவால வாயதனைக் கண்டவரோ யின்பநலஞ் சேரவ் வொன்றுந்
திருவால வாயிடத்து வதிந்தவரோ பரவீடு சேர்வா ரன்றே.

இ-ள். திருவாலவாய் என்றுகேட்டவர் அறமும், நினைத்தவர்பொருளும்அடைவர். மகாதேவரது திருவாலவாயைத் தரிசித்தவர் இன்பமும், அதில்வசித்தவாபரமுத்தியும் அடைவர்.—எ-று. ஏகாரம் - பிரிநிலை. உபலக்கணத்தால் அதிலேதங்கும் ஏனைய உயிர்களும் கதியடையும் எனக்கொள்க. இது வடநூலிற்கண்டது. (௬)

சுரநதிசூழ் காசிமுதற் பதிமறுமைக் கதியளிக்குந் தூநீர் வைகை
வரநதிசூழ் திருவால வாய்சீவன முத்திதரும் வதிவோர்க் கீது
திரனதிகம் பரகதியும் பின்கொடுக்கு மாதலினிச் சீவன் முத்தி
புரனதிக மென்பதெவ னதற்கதுவே யொப்பாமெப் புவனத் துள்ளும்.

இ-ள். கங்கைசூழ்ந்தகாசி முதலிய பதிகள் மறுமையில் முத்திகொடுக்கும். திருவாலவாயானது (தன்னிடத்தே)வசிப்போர்க்கு ஜீவன்முத்தியைககொடுக்கும். இதுமிக நிச்சயம் - பின்பு பரமுத்தியையுங் கொடுக்கும் - ஆதலின் எவ்வுலகத்துப் பதிகளிலும் இப்பதி மேமபட்டதென்பதாகக் கூறவேண்டுவதென்னை அதற்கு அதுவே ஒப்பாகும்.—எ-று. (௭)

ஆதலினிப் பதிவிட்டுப் பிறபதியிற் போய்நோற்போ ரங்கை கொண்ட
சீதளவா னமிழ்தேய்ப்பத் தித்திக்கத் தேமபெய்து செய்த தீமபா
லோதனத்தைக் கைவிட்டு முழங்கையை நக்குவா ரொப்பா ரிநத
மாதலத்தின் பெருமைதனை யாவரோ யளவிட்டு வழுத்தற் பாலார்.

இ-ள். ஆதலால் இம்மதுரைப்பதியிலே தவஞ்செய்தல் ஒழிந்து வேறுபதிகளிற் போய்த் தவஞ்செய்பவர், உள்ளங்கையிற் பெற்ற சீதளதேவாமிர்தம்போல இனிக்கும்படி தேன்கலந்து செய்த இனியபால் அன்னததை ஒழுகவிட்டு முழங்கையை நக்குபவர் ஒப்பார். இம்மகா ஸ்தலமகிமையை எவர் அளந்து புகழ்தற் பகுதி யுடையார்.—எ-று. (அ)

ஷை வேறு.

ற்றைய தலங்க டம்மிற் பரிமகம வாச பேய
மற்றமில் சோட சாக மக்கினிட் டோமம் யார்க்கு
முற்றரு மிராச சூய முதன்மக முடித்த பேறுஞ்
செற்றமி றரிசபூர்ண முதலிட்டி செய்த பேறும.

இ-ள். வெளி. முடித்த-முடித்ததனல்வரும். செய்த-செய்ததனல் வரும். பரிமகம் - அசுவமேதம். அற்றம் - குற்றம். முற்றரும் - முடித்தற்கரிய. முதல்மகம் என்றதனல் அத்தியக்கினிட்டோமம், பிரகஸ்பதிசவம், அதிராத்திரம், சோமம், துவாதசாகம், விசுவசித்து, சருவசித்து என்னும் யாகங்களும் வடநூற்படி கொள்க. செற்றம் இங்கேவருத்தம். தரிச இஷ்டி - பூர்ணமாக இஷ்டி என்க வடநூற்படி. (௯)

எள்ளிழு தன்னங் கன்னி யிவுளிதே ரியானை யில்லம்
வெள்ளியான் பொன்பூ ணுடை விளைவொடு பழன முன்னாத்
தள்ளரு மடிமை யாதி தானங்கள் செய்தபேறும்
வள்ளறன் காசி யாதிப் பதிகளில் வதிந்த பேறும்.

இ-ள். எள்ளு - அடிமைமுதலியவற்றைத் தானஞ் செய்தலாலும் சிவபிரானது காசிமுதலிய பதிகளில்வசித்தலாலும் வரும்பயனும்.—எ-று. இழுது - நெய். அன்னம் என்றதால் ஜலமுங்கொள்க. இவுளி - குதிரை. ஆன் - கபிலைமுதலியபசுக்கள். பழனம் - வயல். முன்னாத்தள்ளரும்-நினைத்து நீக்கக்கூடாத. அடிமை-தாசி தாசாகள். ஆதி என்ற தால், இரத்தினம் - தானியம் முதலியவுங் கொள்க. (கo)

கங்கைகா ளிந்தி வாணி காவிரி கண்ண வேணி
துங்கபத் திரிநீம் பாலி தூயதண் பொருநை முன்னாச்
சங்கையி னதிகண் முறறு மாடிய தவத்தின் பேறு
மங்கல மதுரை தன்னில் வைகலும் வதிவோர்க் கெய்தும்.

இ-ள். வெளி. வாணி - சரசுவதிநதி. கண்ணவேணி - கிருஷ்ண நதி. பொருநை - தாமிரபர்ணிநதி. சங்கையில் -அளவிலலாத வைகலும் - நாள்தோறும். முன்னாவென்றதால்-யமுனை, நிருமதை, கோதாவரி, கோமதி, சரயு, தமசை, வேகவதி, வேத்திரவதி நதி முதலியவுங்கொள்க வடநூற்படி. (கக)

அன்னிய தலங்க டம்மி லாற்றிய பிரம கத்தி
பொன்னினைக் களவு செய்தல கள்ளுண்டல் புனித வாசான்
பன்னியைப் புணர்த லின்ன பாதக மனைத்து மென்றுந
தன்னிக ரால வாயில் வதிபவர் தமைவிட் டேகும்.

இ-ள். வெளி. பன்னி - மனைவி. இன்னவென்றதால் - தாயைக் கொல்லல், தகப்பனைக் கொல்லல், குருவைக் கொலலல், கருவையழித்தல், பெண்ணைக் கொல்லல், சகோதரனைக் கொல்லல், இதரரைக் கொல்லல் முதலிய பாவங்களுங் கொள்க வடநூற்படி. (கஉ)

மற்றைய தலத்திற் சாந்தி ராயண மதியந் தோறு
முற்றபே றிங்குக் கங்கு லுண்டியா லடைபே றுகு
மற்றைய தலத்தின் மாதப் படடினிப் பலத்தினபேறிங்
குற்றொரு வைக லுண்டி யொழிந்தவர் பெறும்பே றுகும.

இ-ள். பிறதலங்களில் மாசந்தோறும் சாந்திராயண விரதம் அநுட்டித்தலால் வரும் பயன் மதுரைப்பதியில் இரவில் உண்ணுதலாலும, பிறதலங்களில் மாச உபவாசத்தால் வரும்பயன் மதுரைப்பதியில ஒருதின உபவாசத்தாலும் அடையும்பயனும்—எ-று. சாந்திராயணம் - சந்திரன் கலை உயரும்போது ஒவ்வொருகவளம் உயாதலும் குறையும்போது ஒவ்வொரு கவளம் குறைதலுமாகக் கொள்ளும் விரதம். (கங)

அயனக ரடைந்து நான்கு திங்களுண் பாற்றும் பேறிவ்
வியனக ரடைந்து நோற்கு மட்டமி விரத நலகு
மயனக ரெய்தி யாறு திங்களுண் பாற்றும் பேறிவ்
வியனகர்ச் சோம வார விரதமேயளிக்கு மன்றே.

இ-ள். பிறபதிகளிற் சாதுர் மாச உபவாசவிரதந்தரும் பயனை மதுரைப்பதியில் அட்டமி உபவாசவிரதமும், பிறபதிகளில் ஆறுமாச உபவாசவிரதந்தரும் பயனை மதுரைப்பதியிற் சோமவார உபவாசவிரதமுந்தரும்.—எ-று. வியன் • பெருமை. (௧௪)

வினைய தலத்தி லோராண் டுணவொழிந் தியற்று நோன்பா
லானபே றிங்கு நோற்குஞ் சிவனிரா வளிக்கு மிங்கே
யூனவைம் பொறியும் வென்றோன் முப்பொழு தூண்டு வைகித்
தானமர்ந் தாலுங் காலுண் டியற்றுமா தவத்தோ னாகும்.

இ-ள். பிறபதிகளில் ஒருவருஷ உபவாச விரதத்தால் வரும்பயனை மதுரைப்பதியிற் சிவராத்திரி யுபவாசவிரதங் கொடுக்கும். குற்றமுடைய ஐம்பொறியும்வென்றவன் மதுரைப்பதியில் மூன்றுகாலமும் புசித்திருப்பினும் வாயுபக்ஷணஞ் செய்து தவம் புரியும் பெரிய தவத்தினனாவான்.—எ-று. (௧௫)

இந்தநான் மாட மோங்கு மாலவா யிடத்தியா ரேனு
மந்தணர் தமக்கோர் முட்டி யருந்தவர் தமக்கோர் பிச்சை
தந்தவர் புறம்பு செய்த சோடச தானந் தம்மால்
வந்தபே றடைவர் பல்வே றுரைப்பதென் மதியான் மிக்கீர்.

இ-ள். மதுரைப்பதியில் யாவராயினும் அந்தணர்க்கு ஒருபிடி யரிசியாவது பெருந் தவத்தினர்க்கு ஒருபிடி அமுதாவது கொடுத்தவர், பிறபதிகளிற் செய்த சோடசதானங்களால் வரும்பயனை அடைவர். அறிவான்மிக்கமுனிவரே பலவிதமாகக் கூற வேண்டுவ தென்னை.—எ-று. (௧௬)

பல்வகைத் தலங்க ளெல்லாம் வைகிய பயனு மென்றும்
பல்வகைத் தீர்த்த மெல்லா மாடிய பயனு மென்றும்
பல்வகைத் தான மெல்லா நல்கிய பயனு மென்றும்
பல்வகைத் தான பூசை பண்ணிய தவத்தின் பேறும்.

இ-ள். என்றும் பலபதிகளிலே தங்கியதனாலும், தீர்த்தங்களிலே மூழ்கியதனாலும், தானப்பொருள்களைக் கொடுத்ததனாலும், பூசைபண்ணிய தவத்தினாலும் வரும்பயன்களையும்.—எ-று. (௧௭)

பல்வகைத் தவங்க ளெல்லா முற்றிய பயனுந் தூய
பல்வகை மந்திரத்தி லெய்திய பயனு நூலின்
பல்வகைக் கேள்வி யெல்லா மாய்ந்துணர் பயனும் யோகம்
பல்வகை ஞான மெல்லாம் பயின்றுணர்ந் தடங்கும் பேறும்.

இ-ள். பலதவங்களை முடித்ததனாலும், மந்திரங்களைஜபித்ததனாலும், நூல்களின் கேள்விகளை ஆராய்ந்தறிந்ததனாலும், யோகஞானங்களைப்பழகி யுணர்ந்து (தற்போதம்) அடங்குதலாலும் பெறும்பயன்களையும்.—எ-று. (௧௮)

அனையதொல் பதியி லென்றும் வைகுவோ ரடைவ ரென்று
வினையதொல் பதிக்கு நேர்வே றில்லைவிப் பதியின் மேன்மை
தனையறி பவரா ரீச னன்றியே யாத லாலே
வினையவெல் பவரங் கெய்தி வதிவதே வேண்டு மாதோ.

இ - ள். அப்படிப்பட்ட பழையமதுரைப்பதியில் எந்நாளுந் தங்குவோர் அடைவராயின் இதற்குச்சமம் பிறிதில்லை. இதன்மேம்பாட்டைச் சிவபிரானன்றி உணர்புவர் எவர். ஆதலின் வினையைக் களைவோர் அப்பதியை அடைந்து வசிக்கவே வேண்டும்.—எ-று. (கக)

ஷை வேறு.

கைத்தலநான் கிரண்டுடைய மலர்க்கடவுண் மேலொருநாட் கயிலையீர்தி
யெத்தலமு மொருதுலையிட் டித்தலமு மொருதுலையிட் டிரண்டுந் தூக்க
வுத்தமமாந் திருவால வாயமிகவுங் கனத்ததுகண் டுலகின் மேலா
வைத்ததல மிதுவென்று விதன்பெருமை யாவரே வழுத்தற் பாலர்.

இ-ள். பிரமா, முன்னொருதினம் தராசின் ஒருதட்டில் எல்லாத்தலங்களையும் மற்றொரு தட்டில் மதுரைத்தலத்தையும் வைத்து நிறுத்தவழி (ச்சருவசித்தி களையுங் கொடுக்கும்) உத்தமமாகிய மதுரைப்பதி கனத்தது நோக்கி உலகத்தில் மேம்பட்டதாகவைத்தது இதுவானால் இதன் மகிமையை எவர்துதித்தற் பகுதியுடையார்.—எ-று. துலை - ஆகுபெயர். இதனை வடமொழி எட்டா மத்தியாயத்திற் காண்க. (உ௦)

அத்திருமா நகரின்பேர் சிவநகரோத் தமங்கடம்ப வடவி சீவன்
முத்திபுரங் கந்திபுரந் திருவால வாய்மதுரை முடியா ஞானம்
புத்திதரும் பூவுலகிற் சிவலோகஞ் சமட்டிவிச்சா புரந்தென் கூடல்
பத்திதரு துவாதசாந் தத்தலமென் றேதுவினாற் பகர்வர் நல்லோர்.

இ - ள். வெளி. புத்தி - போகம். சிவக்ஷேத்திரங்களுள் உத்தமமாயிருத்தலின் - சிவநகரோத்தம மென்றும், கடப்பமரங்கள் நெருங்கியிருத்தலின் - கடம்படவி யென்றும், வசிப்போர்க்குத் தேகத்தோடு கூடியிருக்கும்போது முத்தியைக் கொடுத்தலின் - சீவன்முத்திபுரமென்றும், தடாதகைப்பிராட்டி கன்னிகையாயிருந்து அரசாட்சி செய்தமையின்-கந்நிபுரமென்றும், விடத்தை வாயிலுடையபாம்பினால் எல்லை குறிக்கப்பட்டமையின் - ஆலவாயென்றும், சிவபிரான் சடைகளுள்ள சந்திரனது மதுரமாகிய அமிர்தவொழுக்கால் நனைக்கப்பட்டமையின் - மதுரையென்றும், பூலோகத்தி (ன்கண்ணதாகிய மதுரையி) லே சிவலோகத்தை வருவித்தமையின் - பூலோக சிவலோகமென்றும், எல்லா வித்தைகளுஞ் சேர்ந்திருத்தலின்-சமட்டி விச்சாபுரமென்றும், சிவபிரான் சடையிலுள்ள நான்கு மேகங்களும் மாடமபோற்கூடி மழையைத்தடுத்தலின் - நான்மாடக்கூட லென்றும், விராட்புருடனது சிரசுக்கு மேலுள்ள துவாதசாந்தஸ்தானமாகக் கொள்ளபபடுதலின் - துவாதசாந்தமென்றுங் காரணக்குறி கண்டுகொள்க. கடம்பவடவி- தமிழ்முடிவு. கூடல் - நலைக் குறை. (உக)

என்றுதலச் சிறப்புரைத்த குறுமுனிவ னெதிரறவோ ரிறும்பூ தெய்தி
நன்றுதலப் பெருமையருள் செய்தனைகேட் டடுத்த நயப்பா டெல்லா
மின்றடைந்தே மினிச்சுவண புண்டரிகச் சிறப்பதனை யிசைத்தி யென்னக்
குன்றமடக் கியகருணைக் குன்றனையான் வரன்முறையாற் கூறு கின்றான்.

இ - ள். என்று தலவிசேடங் கூறிய அகஸ்திய மகாமுநிவர்முன்பு முநிவர்கள் ஆச்சரியம் அடைந்து தலமகிமையை நன்றாக அருளினீர் (அதனைக்) கேட்டுச்சீரம்

பெற்றதனுலாகிய நன்மைகளெல்லாம் இன்றடைந்தோம் இனிப்பொற்ருமரைத் தீர்த்த விசேடத்தை அருளுமென்று கேட்க, (அதற்கு) அகஸ்தியமகாமுநிவர் முறையால் அருளுகின்ருர்.—எ-று. (உஉ)

ஷ வேறு.

விரதமா தவத்தீர் காணின் வெவ்வினை யெல்லாம் வீட்டிச்
சரதமாப் போக நல்குந் தபகிய முளரி வந்த
வரவுமக் கனக கஞ்சப் பெருமையும் வளனு நன்கா
வுரைசெய்துங் கேண்மி னென்னு முனிவர னுரைக்கு மன்னே.

இ-ள். விரதங்களைப் பெரியதவமாகக்கொண்ட முநிவர்களே, தரிசித்தாற் கொடிய வினைகளைப்போக்கி உண்மையாகப் போகத்தைக் கொடுக்கும் பொற்ருமரைத் தீர்த்த வரலாறும் அதனமகிமையும் வளப்பமும் நன்ருகக்கூறுதுங் கேளுங்களென்று அகத்தியமகாமுநிவர் அருளுவார் ஆயினர்.—எ-று. (உங)

தலவிசேடபபடலமுற்றியது.

ஆகச்செய்யுள உடுடு.

# தீர்த்தவிசேடப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கண்ணகன் குடுமி மாடக் கடிபொழி லால வாயி
னண்ணலம பெருமை யாரே யளப்பவ ரவிர்ந்த முத்த
வெண்ணகை யுமையா ளன்பு விளைமுகச் செவ்வி போலத்
தண்ணறுங் கமலம பூத்த தடப்பெருந தகைமை சொல்வாம்.

இ-ள். இடம்அகன்ற சிகரங்களையுடைய மாடங்களாலும் வாசனையுள்ள சோலைகளாலுஞ் (சூழப்பெற்ற) மதுரைப்பதியினது மிக்கமகிமையை எவர் அளவிடுபவர். விளங்கிய முததுப்போலும் வெள்ளியநகையுடைய உமாதேவியாரது அருள் சுரக்கப் பெற்ற திருமுகததின் அழகுபோலத் தண்ணிய பொற்ருமரைமலாந்த தீாத்தபெருமையை (யாம்) கூறுவாம்—எ-று. அன்பின்காரியத்தை அனபென்ரா. (க)

யாற்றினுக் கரசாங் கங்கை காவிரி யாதி யாறும்
வேற்றுரு வாய முநீர் வேலையும் பிறவுங் காருந
தோற்றுமுன் றன்னை யாட்டச் சுந்தர மூர்த்தி செங்க
ணேற்றினன் கண்ட தீர்த்த மாகுமீ தெவ்வா றென்னின்.

இ-ள். நதிகளுக்கரசாகிய கங்கை காவிரிமுதலியநதிகளும் வேற்றுருவமாகிய முத்தொழிற்குணமுடையகடலும் ஏனையவும் மேகமும் உண்டாதற்குமுன் தம்மூலவிஙகத்துக்கு அபிடேகஞ்செய்யச் சிவபிரான் இத்தீர்த்தம் உண்டாச்கியதாம். (அஃது) எவ்வாறெனின்—எ-று. (உ)

அகளமா யுலக மெல்லா மொடுக்கியந் நெறியே யார்க்கு
நிகளமாய் விருத்தி தோன்ற நினைவற நினைந்து நிற்குந்
துகளிலா வறிவா னந்த சுந்தரச் சோதி மேனாட்
சகளமா முருவங் கொண்டு தாமொரு விளையாட் டாலே.

முக்கண னரவப் பூண நூலினன் முகிழ்வெண் டிங்கட்
செக்கரஞ் சடையான் சூல கபாலத்தன செங்க ணேற்றன்
மைக்கருங் கயலுண் கணணி வாமத்தன் முன்னும் பின்னும்
பக்கமு நந்தி யாதி கணாதிபர் பரவிச் சூழ.

இ-ள். நிட்களமாய் உலகம் அனைத்தையும் ஒடுக்கி அம்முறையே அனைவர்க்கும் விருத்தியானது பந்தமாய்த்தோன்றும்படி கருதுமுறையிற் கருதிநிற்கும் ஞானானந்தரூப சிவபிரான் முற்காலத்தே சகளவடிவங்கொண்டு தாமொரு திருவிளையாட்டினால் நாற்புறத்தும் திருநந்திதேவர் முதலிய சிவகணத்தலைவர்கள் துதித்துச் சூழ்ந்துவரும்படி.—எ-று. சோதிக்குப்பின் முக்கணர்முதலிய நாமங்களைக் கூட்டுக. (ச)

சென்றுதன் மேனித் தேசாற் றிசையெலாம் விளங்கச் செங்கண்
வென்றிகொ ளுரக வேந்த னகரமும் விபுதர் வேந்தன்
பொன்றிகழ் நகரும் வேதன் புரமுமால புரமு மேலைத்
தன்றிரு நகருஞ் சென்று சஞ்சரித் தாடி மீள்வான்.

இ-ள். எழுந்தருளித் தந்திருமேனி ஒளியினாலே திக்குகள்விளங்கச் சிவந்த கண்களும் வெற்றியும்பெற்ற ஆதிசேடன் உலகத்தும் விளங்குகின்ற தேவேந்திரனது பொன்னுலகத்தும் சத்தியலோகத்தும் வைகுண்டலோகத்தும் மேலாகிய சிவலோகத்துஞ்சென்று உலாவி விளையாடித் திரும்புவார்.—எ-று. (ரு)

அன்னபோ தயனுந் தேவர்க் கரசனு மாழி வேந்து
முன்னர்வந் திறைஞ்சி யேத்த முனிவரும பேறு நல்கித்
தன்னக ரடைந்து நீங்காத் தனிபபெருங் கணத்தி னோரை
யின்னருள் சுரந்து நோக்கி யிலிங்கத்திற் புகுது மெல்லை.

இ-ள். அப்பொழுது விஷ்ணுவாதி தேவர்வந்து சந்நிதியில்வணங்கித் துதிக்க அவருக்கு மகிழும்படி வரங்களைக்கொடுத்து மதுரைப்பதியை அடைந்து திருவருள்சுரந்து சிவகணாதிபர்களைநோக்கி மூலலிங்கத்துப் புகும்போது.—எ-று. (சூ)

வேத்திரப் படையோ னாதி கணாதிபர் வீழ்ந்து பால
நேத்திர வன்பர்க் கன்ப நிரஞ்சன நிருத்தா னந்த
சாத்திர முடிவுந் தேறாத் தனிமுத லொருவ வென்னத்
தோத்திர வகையா லேத்தித் தொழுதொன்று வினவல் செய்வார்

இ-ள். திருநந்தி தேவராதி கணாதிபர் நமஸ்கரித்து நெற்றிக்கண்ணரே-நூல்களின் முடிவுந்தெளியப்பெறாத ஒப்பில்லாத ஒரு முதல்வரே என்றுசொல்லித் துதிவகைகளாலே புகழ்ந்து வணங்கி ஒருசெய்தி வினவுவார் ஆயினர்.—எ-று. (எ)

ஐயவிவ் விலிங்க மூர்த்திக் காட்டவு மடியே மூழ்கி
யுய்யவுங் கங்கை யாதி நதிகளு முலகத் துள்ளோர்
மையறு தடாக நீரு மற்றிலே யிருமைப் பேறுஞ்
செய்யவோர் தீர்த்த மிங்குண் டாக்கெனச் செப்ப லோடும்.

இ - ள். ஐயனே இம்மூலலிங்கமூர்த்திக்கு அபிஷேகிக்கவும் அடியேங்கள் ஸ்நானஞ்செய்து கடத்தேறவும் உலகத்திலே கங்கைமுதலிய நதிநீரும் குற்றமற்ற ஓர் தடாக நீரும் இல்லை (ஆதலால்) இம்மை மறுமைப்பயன்களைத்தரும்படி ஒருதீர்த்தம் உண்டாக்குமெனச்சொல்ல.—எ-று. (அ)

அத்தகை யிலிங்க மூர்த்திக் கடுத்ததென் கீழ்சா ராக
முத்தலை வேலை வாங்கி நாட்டினன் முதுபார கீண்டு
பைத்தலைப் பாந்தள் வேந்தன் பாதலங் கீண்டு போயெண்
கைத்தலப் பிரம னண்ட கடாகமுங் கீண்ட தவ்வேல்.

இ - ள். (அதற்குச்சிவபிரான்) அச்சொக்கலிங்க மூர்த்திக்கு அக்கினிதிக்கிலே சூலப்படையை எடுத்துக்குத்தினர் அது பூமி ஆதிசேடனது பாதலம் இவைகளைக்கிழித்துப்போய்ப் பிரமன் அண்டகடாகத்தின் (கீழிட) த்தையுங் கிழித்தது.—எ-று. (கூ)

அவ்வழிப் புறம்பு சூழ்ந்து கிடந்தபே ராழி யூழிப்
பௌவநீ ரென்ன வோங்கப் பாணியா லமைத்து வேணித்
தெய்வநன் னீரைத் தூவிக கலந்துமா தீர்த்த மாக்கிக்
கைவளை கபாலி நந்தி கணந்தினை நோக்கிக் கூறும்.

இ - ள். அவ்வழியால் (அவ்வண்டகடாகத்தின்) புறத்தேசூழ்ந்து கிடந்த பெரும்புறக்கடல் ஊழிக்கடல்போல மேலெழ (அதனைத்) திருக்கரத்தினால் அடக்கிச் சடையிலுள்ள கங்காஜலத்தைப் புரோக்ஷித்துக்கலந்து மகாதீர்த்தமாக்கிக கபாலத்தைத் திருக்கையிற்கொண்ட சிவபிரான் திருநந்தி தேவராதி கணதிபரை நோக்கிச் சொல்லுகின்றார்.—எ-று. (க0)

இன்னமா தீர்த்தந் தன்னை யெனைப்பல தீர்த்தங் கட்கு
முன்னமயா மிங்குக் கண்ட முதன்மையா லாதி தீர்த்த
மென்னலா மினியுண் டாக்குந் தீர்த்தங்க ளெவைக்கு மேலாய்
மன்னலாற் பரம தீர்த்த மெனப்பெயர் வழங்க லாகும்.

இ - ள். இம்மகாதீர்த்தத்தை மற்றப்பல தீர்த்தங்கட்கு முன்யாம் இங்கே உண்டாக்கிய தலைமையால் ஆதிதீர்த்த மென்றும் இனியுண்டாக்குந் தீர்த்தங்கட்கு மேலாக இருத்தலாற் பரமதீர்த்தமென்றும் (இதற்குப்) பெயர் சொல்லலாம்.—எ-று. (கக)

மருட்கெட மூழ்கி னோர்நன் மங்கலம் பெறலா னும
மருட்சிவ தீர்த்த மாகும் புன்னெறி யகற்றி யுள்ளத்
திருட்கெடப் பரம முத்திக் கேதுவா ஞானந் தன்னைத்
தெருட்படத் தரலான் ஞான தீர்த்தமென் றிதற்கு நாமம்.

இ - ள். (இதில்)மூழ்கினோர்மங்கலம் பெறலாற் சிவதீர்த்தமென்றும்(மூழ்கினோர்க்கு) ஞானத்தைத்தரலால் ஞானதீர்த்தமென்றும் இத்தீர்த்தத்துக்குப் பெயராம்.—எ-று.

மருள் இருள் தெருள் எதுகைநோக்கித்திரிந்தன. தீர்த்தங்களிற்பெரிதாதலால் மகாதீர்த்தம்எனவும், தரிசித்தவளவிற் பாவங்களைப்போக்கலால் பாவநாசனம் எனவும், பரிசித்தவளவிற் பரிமேதபலனைத்தரலால் மகாபுண்ணியப்பிரதம் எனவும், நீண்டஆயுளைத்தரலால் தீர்க்காயுஷ்கரம் எனவும், நம்மாலேதோண்டப்பட்டதால் தேவகாதம் எனவும், சூலத்திலே தோண்டப்பட்டதால் சூலகாதம் எனவும், சுத்தமாயைக்கடலிலுண்டான அமிர்தத்தன்மையால் மகா மாயார்ணவாமிர்தம் எனவும், புகழையுண்டாக்குதலால் யஜஸ்கரம் எனவும், செழிப்பை யுண்டாக்கலால் புஷ்டிகரம் எனவும், காந்தியை யுண்டாக்கலால் ஸ்ரீகரம் என்வும், சிவத்துவத்தைத் தரலால் சிவத்துவதம் எனவும், பயத்தைப்போக்கலால் பயாபகம் எனவும், தீர்த்தங்களுக்கு அரசாயிருத்தலால் தீர்த்தராஜம் எனவும், சர்வதீர்த்தபலத்தையுந் தரலால் சர்வதீர்த்தபலப்பிரதம் எனவும், எல்லாப்பகைவரையும் அழித்தலால் சர்வசத்துருகரம் எனவும், எல்லா ஆபத்துக்களையும் ஒழித்தலால் சர்வாபத்தரம் எனவும், எல்லாநோய்களையும் ஒழித்தலால் சர்வரோககரம் எனவும், பிறவிநோயை ஒழித்தலால் பவரோககரம் எனவும், எல்லாக்குற்றங்களையும் போக்குதலால் சர்வதோஷகரம் எனவும், மலட்டுத்தன்மையைப் போக்குதலால் வந்தியத்துவகரம் எனவும், எல்லாத்துன்பங்களையும் போக்குதலால் சர்வதுக்ககரம் எனவும், எல்லா வின்பங்களுக்கும் ஏதுவாதலால் சமஸ்தச்சுகாரணம் எனவும் வடநூலிற் கூறியபெயர்களுங் கொள்க. (கஉ)

குடைந்துதர்ப் பணமுஞ் செய்து தானமுங் கொடுத்தம் மாடே
யடைநதெழுத் தைந்து மெண்ணி யுச்சரித் தன்பா லெம்மைத்
தொடர்ந்துவந் திறைஞ்சிச் சூழ்ந்து துதித்தெமை யுவப்பச் செய்தோ
ருடம்பெடுத் ததனு லெந்த வுறுதியுண் டதனைச் சேர்வார்.

இ - ள். மூழ்கித் தர்ப்பண தானங்கள்செய்து அத்தீர்த்தத்தின் கரையைச்சேர்ந்து திருவைந்தெழுத்தை ஜபித்து அன்பினுல் நம்மைப்பற்றிவந்து சூழ்ந்து வணங்கித் துதித்து மகிழச்செய்தோர் உடலெடுத்ததனுல் எவ்வுறுதியுண்டோ அதனையடைவர்.—எ-று. (கங)

இந்தநீ ரொம்மை யாட்டி னேழிர ண்டுலகின் மிக்க
வந்தமி தீர்த்த மெல்லா மாட்டிய பயன்வந் தெய்தும்
வந்திதின் மூழ்கி யிங்கு வைகுநங் குறியை யுங்கள்
சிந்தையி லாரவம் பொங்கப் பூசனை செய்மி னென்னு.

இ - ள். இத்தீர்த்தத்தினுல் நம்மூலலிங்கத்தை அபிடேகித்தால் சிறந்ததீர்த்தங்கள் எல்லாவற்றையும் அபிடேகஞ்செய்ததனுல் வரும்பயன் சித்திக்கும் (ஆதலால்) வந்து இதில் மூழ்கி இங்குள்ள நம் அருட்குறியை உளத்தில் அன்புமிகப் பூசைபுரியுங்கள் என்று கூறி.—எ-று. (கச)

விண்ணவர் தம்மின் மேலாம் வேதிய னுகி நின்ற
பண்ணவன் றானந் நீரிற் படிந்துதன் னநுச்சையாலே
யண்ணலங் கணத்தி னேரை மூழ்குவித் தநாதி யாய
புண்ணிய லிங்கந் தன்னுட் புகுந்தினி திருந்தான் மன்னோ.

இ - ள். தேவர்களுள் மேம்பட்ட பிராமணராய் நின்ற மகாதேவர் அத்தீர்த்தத்தின்மூழ்கித் தம் அநுமதியாலே சிறந்தகணநாதிபனையு மூழ்குவித்துச் சுத்தசுயம்புவாகிய தம் மூலலிங்கத்தில்மறைந்து இனிதாக அமர்ந்தருளினர்.—எ-று. (கரு)

அந்தமா நீரா னந்தி யாதியோர் விதியாற் சோம
சுந்தரன் முடிமே லாட்டித் தூகளறப் பூசை யாற்றிச்
சிந்தையில் விழைந்த வெல்லா மடைந்தனர் செம்பொற் கஞ்சம்
வந்தவா றிதுவத் தீர்த்த மகிமையு முரைப்பக் கேண்மின்.

இ - ள். திருநந்திதேவர் முதலாயினோர் அம்மகாதீர்த்தஜலத்தினாலே விதிப்படி சொக்கலிங்கப்பெருமான் றிருமுடிமீது அபிடேகித்து நன்றாகப்பூசித்து மனத்தில் விரும்பிய வனைத்தும்பெற்றனர். பொற்றாமரைத்தீர்த்தவரலாறு இதுவாம் (இனி) அதன்பெருமை சொல்லக்கேளுங்கள்.—எ-று. (௧௬)

வளையெறி தரங்க ஞான வாவியை நோக்கிற் பாவத்
தளையறு மூழ்கின் வேண்டுங் காமிய மெல்லாஞ் சாரு
முளமுற மூழ்கு மெல்லை முழுக்கொன்றற் குலகத் துள்ள
வளவறு தீர்த்த மெல்லா மாடிய பயன்வந் தெய்தும்.

இ - ள். சங்கினைவீசும் அலையுடைய அந்தஞானவாவியைத் தரிசித்தால் பாவபந்தம் ஒழியும் மூழ்கினால் விருப்பப்பொருள்கள்சேரும். மனம்பொருந்தமூழ்கும்வழி ஒருமுழுக்குக்கு எல்லாத்தீர்த்தத்திலுமூழ்கிய பயன் அடையும்.—எ-று. (௧௭)

மெய்யைமண் ணாதி கொண்டு விதிவழி சுத்தி செய்து
மையறு வருண சூத்த மந்திர நவின்று மூழ்கிற்
றுய்யமா தீர்த்த மெல்லாந் தோய்ந்துநான் மறையு மாய்ந்தோர்
கையிலெப் பொருளு மீந்த காசறு பேறு நல்கும்.

இ - ள். உடலை ஒன்பதுவகை மண்ணும் எழுவகைத்தளிரும் பஞ்சகவ்வியமுங்கொண்டு விதிப்படி சுத்திபண்ணிக் குற்றமற்ற வருணசூக்தமந்திரம் உச்சரித்து மூழ்கினால் (அது) சுத்தமகாதீர்த்தங்கள் ஆடி வேதியர்கையில் எவ்வகைப்பொருளுந் தானஞ்செய்த பயனைக்கொடுக்கும்.—எ-று. சூக்தம் நன்றாகச்சொல்லப்பட்டது. ஒன்பதுவகை மண் வில்லம், துளசி, அரசு, புளி, ஆல், நாவல் இவற்றடியினும், பசு, யானை, குதிரை இவைநிற்குமிடத்தினும் உள்ளமண். எழுவகைத்தளிர் வில்லம், துளசி, அரசு, ஆல், புளி, நாவல், அறுகு இவற்றின்தளிர். (௧௮)

தெய்வவித் தீர்த்தந் தன்னை நினைவின்றித் தீண்டி னாலு
மவ்விய வினையி னீந்தி யரும்பெறல் வீடு சேர்வ
ரிவ்வுரை மெய்யே யாகு மென்னெனின் மனத்தா றன்றி
வெவ்வழ றீண்டி னாலுஞ் சுடுமென்றி விடுமோ வம்மா.

இ - ள். இத்திவ்வியதீர்த்தத்தை நினையாது தொடினும் பொறாமைமுதலிய ற்றாலாகிய பாவக்கடலினின்று நீந்திப்பெறுதற்கரிய பதமுத்திக்கரையை அடைவார். இதுசத்தியமே. எப்படியெனின் நினைப்பின்றி நெருப்பைத்தொட்டாற் சுடுதல்போல—எ-று. உம், அம்மா, அசை. (௧௯)

ஆருமங் நீரி லென்று மாடினார் சிவன் முத்தி
சேருவ ரந்நீ ராடுஞ் சிறப்புறு பயனுங் கொவ்வா
வாருண மாக்கி நேய மந்திர மிவைமுன் றான
பேருணர் வளிக்கு நானஞ் செய்தவர் பெறும்பே றெல்லாம்.

இ - ள். நிறைந்த அத்தீர்த்தத்தில் எப்பொழுதும்மூழ்கினவர் சீவன்முத்தி பெறுவர். வாருணஸ்நாநமுதலிய செய்தவர்பெறும்பயன்கள் அத்தீர்த்தம் ஆடும்பய னுக்கு ஒப்பாகா,—எ-று. முன்னுனவென்றதனால் மாகேந்திரம், மாருதம், மாநசமுதலிய வுங்கொள்க. வாருணம் - ஜலசம்பந்தஸ்நாநம். ஆக்கிநேயம் - அக்கிநிசம்பந்தமானபஸ்ம ஸ்நாநம். மந்திரம் - சத்தியோஜாதாதிமந்திரங்களை யுச்சரித்துச்செய்யும்ஸ்நாநம். மாகேந் திரம் - இந்திரனென்னும் பர்ஜந்நிய சூரியன்கிரணத்துடன் தோற்றியமழையிற்செய்யும் ஸ்நாநம். மாருதம் - காற்றிற்கலந்தபசுவின் பாததூளியிற்செய்யும் ஸ்நாநம். மாநசம் - பிரணவோச்சாரதியாநத்தாற்செய்யும் ஸ்நாநம். இவை காமிகாகம ஸ்நாநவிதிப்படல வியாக்கியாநத்திற்கண்டன. (உ0)

அன்னநீர் தனிலு மாடி யாலவா யுடைய நாதன்
றன்னையும் பணிவோன் மேலைப் பரகதி தன்னைச் சாரு
மென்னநன் னூலிற் சொன்ன பவித்திர மெவைக்கு மேலாய்ப்
பன்னரும் புனித தீர்த்தம் பவித்திர மாகி நிற்கும்.

இ - ள். அத்தீர்த்தத்திலுமூழ்கித் திருவாலவாயீசனையும்பணிவோன் முத்தியை அடைவான். எப்படிப்பட்ட நல்லநூல்களினுங் கூறப்பட்ட சுத்தமான எல்லாத்தீர்த்தங் களுக்குமேலாய்ச், சொல்லுதற்கரிய சுத்தமான (அப்) பொற்றாமரைததீரததம் பரிசுத்த மாய் நிலைபெறும்.—எ-று. (உக)

ஆதர விலனு யங்கீ ராடினோன் சுவர்க்கஞ் சேரு
மாதர வுள்ளாய் மூழ்கி வானவ ராதி யானோர்க்
காதர வரிசி யெள்ளாந் தருப்பண மமையச் செய்தோ
னுதர் வேள்வி முற்று மாற்றிய பயனைச் சேரும்.

இ - ள். சிரத்தையின்றி அத்தீர்த்தத்தில்மூழ்கினவன் சுவர்க்கத்தை அடைவான் சிரத்தையோடுமூழ்கித் தேவர் முநிவர் பிதிரர்களுக்குத (தருப்பை) அட்சதை எள்ளுகளா லே தருப்பணத்தை விதிப்படிசெய்தவன் (பிறபதியில) யாகங்களெல்லாஞ்செய்தலால் வரும்பயன்களை அடைவான்.—எ-று. (உஉ)

ஏனமா தலங்க டம்மி லிருந்துசெய் விரதம பூசை
தானமா தரும மோமந் தவஞ்செபந தியானந் தம்மா
லானமா பயனிற் கோடி யதிகமா மடைந்து மூழ்கி
ஞானமா தீர்த்த ஞாங்க ரிருந்தவை நயந்து செய்யின்.

இ - ள். ஏனையதலங்களிலிருந்துசெய்யும் விரதாதிகளால் ஆகும் பெரும்பயனி லும் அந்தஞானதீர்த்தத்தை அடைந்து மூழ்கிக் கரையிலிருந்து அவ்விரதாதிகளை விரும்பிச்செய்தால் (வரும்பயன்) கோடிமடங்கு அதிகமாம்.—எ-று. (உ௩)

பிறந்தநா ளங்கீா மூழ்கின் மேலைவெம் பிறவிப் பாவ
மறந்திடு மறிதேள் கும்ப மதிகளின் மூழ்கித் தென்பா
லுறைந்தவர் பொருட்டுப் பிண்ட முதவினு லவர்தா மாழ்ந்து
நிறைந்திடு பிறவிப் பௌவ நின்றுமே லெழுவ ரன்றே.

இ-ள். ஜன்மநக்ஷத்திரத்திலே அத்தீர்த்தத்தின் மூழ்கினால் முன்னைக்கொடிய பிறவிப்பாவக்கடல் வற்றும். சித்திரை கார்த்திகை மாசிமாதங்களில்மூழ்கிப் பிதிரர் பொருட்டுப் பிண்டங்கொடுத்தால் (அவர்) பிறவிக்கடலினின்று மேலெழுவார்.—எ-று.

அத்தட மருங்கின் யாவர் தென்புல மடைந்தோர் தங்கள்
சித்தமா சகற்ற வேண்டிச் செய்கடன் முடிக்க வன்னோர்க்
கெத்தனை யெண்ணோர் தாலு மெள்ளுக்கா யிரமாண் டாக
வத்தனை யாண்டு மட்டு மவரைவிண் ணுள வைப்பார்.

இ-ள். அத்தடாகக்கரையில் பிதிராகுற்றத்தை நிச்சயமாக்கெடுக்க விரும்பிச் சிராத்தாதிகளைமுடிக்க அவர்பொருட்டு எத்தனைஎள்ளு எவர் ஈந்தாலும் ஒரு எள்ளுக்கு ஆயிரம்வருடங்களாக அவ்வளவுவருடங்கள்வரை அப்பிதிரரைவிண்ணுலகாளும்படி (தேவர்) வைப்பார்.—எ-று. (உரு)

மூவகை யுலகி லுள்ள தீர்த்தமு முறையா லென்றுஞ்
சேவகஞ் செய்யு மிநதத் தீர்த்தமொ ராளு மூழ்கி
யேவரந் நீரா லென்று மீசனைப் பூசை செய்வோ
ராவரிப் பிறவி தன்னி லவாகதிக் கரச ராவார்.

இ-ள். மூவுலகதீர்த்தங்களும் முறையே என்றும் வழிபடப்பெற்ற இத்தீர்த்தத்தில் என்றுமூழ்கி எவர் சிவபிரானை அர்ச்சிப்பவராவரோ அவர் இப்பிறவியின் முத்திக்கு த்தலைவராவார் —எ-று. (உசு)

விடுத்திட லரிய நித்த வேள்விமா விரதம் வேதந்
தடுத்திட லரிய தானந் தவமிவை தருமபே றெலலா
மடுத்ததன் கரையில் வைகி யீசனை யருச்சிப் போர்க்குக்
கொடுத்திடு புண்ணி யத்திற் கோடியி லொன்றுக் கொவ்வா.

இ-ள். விடக்கூடாத அக்கினிட்டோமம் வேதமோதல் விரதம் தானம் தவம் இவைதரும் பயனெல்லாம் அத்தீர்த்தக்கரையிலேதங்கிச் சிவபூஜைசெய்வோர்க்குக் கொடுக்கப்படும் புண்ணியத்தில் கோடியில் ஒருபாகத்துககு ஒப்பாகா.—எ-று. (உஎ)

உம்மையிற் பிறவி தோறு நியமநல் லொழுக்கம் பூண்டு
பொய்ம்மையில விரதந் தானந தவஞ்செய்து புனித ராகிச்
செம்மைநன் னெறியி னின்ற சித்தருக் கலதித் தீர்த்த
மிம்மையி லடைந்து நித்த மாடுதற் கெய்தா தன்றே.

இ-ள். முன்னைப்பிறவிகளில் நியமமாக நல்லொழுக்கம்பூண்டு விரதாதி செய்து சுத்தராய் உயர்ந்த நல்வழியில்நின்ற மனமுடையார்க்கன்றி இப்பிறப்பிலே இத்தீர்த்தத்தை அணுகி நாடோறு மூழ்கக்கிடையாது.—எ-று. (உஅ)

௸ வேறு.

மதிகதிரோ னிடத்தொடுங்கு தினந்திங்கட் பிறப்பரவம் வாயங் காந்து
கதிர்கடமை விழுங்குதினம் விதிபாத மிந்நாளிற் கருதி மூழ்கித்
துதிகடருப் பணந்தானம் புரிதன்மநு வோர்துதலத் தொகையொன் றற்கொன்
றதிகபல னம்முறைநூ றுயிரநூ றுயிரமோ ரநந்த மாகும்.

இ-ள். அமாவாசியை முதலியவற்றில் இத்தீர்த்தத்தின் மூழ்கித் துதி தருப்பண தானங்கள்செய்தல் மந்திரம்ஜபித்தல் (நடத்துவோர்க்கு) இத்தொகை ஒன்றனுக்கொன்று அதிகபலனுகும் (அப்படியேனில்) நித்தியம் நடத்துவதிலும் அம்முறையே அமாவாசியைக்கு நூறுமடங்கும் மாசப்பிறப்புக்கு ஆயிரமடங்கும் கிரகணத்துக்கு நூறாயிரமடங்கும் விதிபாதயோகத்துக்கு அநந்தமுமாகும்.—எ-று. (உகூ)

பொருவரிய தகர்த்திங்க டுலாத்திங்க ளிவையுதிக்கும் போது மூழ்கி
னொருபதினு யிரமடங்காஞ் சுறவுகவைத் தாளலவ னுதிப்பின் மூழ்கி
னிருபதினு யிரமடங்கா மிந்திரவி யிடத்தொடுங்கு மிந்து வாரம்
வருவதறிந் தாடிமறு வேர்தன்முதல் செயினநந்த மடங்குண் டாகும்.

இ-ள். ஒப்பில்லாத சித்திரை ஐப்பசி மாசப்பிறப்புகளின் மூழ்கினுற் பதினுயிரமடங்கும் தை ஆடி மாசப்பிறப்புகளின் மூழ்கினுல் இருபதினுயிரமடங்கும் அமாவாசியை சம்பந்த சோமவாரத்தின்மூழ்கி மந்திரஜபமுதலியசெய்தால் அநந்தமடங்கும் (பலன்) ஆம்.—எ-று. (௩0)

பிரயாகை தனின்மகர மதிநாண்முப் பதுங்குடைந்து பெறும்பே றிந்தத்
திரையார்பைந் தடத்தொருநாண் மூழ்குவோன் பெறும்விரத சீலம் பூண்டு
வரையாம லொருவருடம் படிந்துமையை யமரர்சிகா மணியாம் வேத
வுரையானை வழிபடுவோன் மலடிக்கு நன்மகப்பே றுண்டா மன்றே.

இ-ள். பிரயாகையில் தைமாசமுற்றுமூழ்கிப் பெறும்பயனை இத்தீர்த்தத்தில் ஒருதினமூழ்குமவன் அடைவான். விரத ஒழுக்கங்கொண்டு இடைவிடாது ஒருவருட மூழ்கி மீநாக்ஷிதேவியானையும் சுந்தரேசனையும் வழிபட்டால் மலடிக்கும் சற்புத்திர பாக்கியம் உண்டாம்.—எ-று. (௩க)

எண்டிசைய நதிவாவி வடிவான மாதீர்த்த மெல்லா மிப்பொற்
புண்டரிக தடத்திலொரு கோடியிலோர் கூறுநிகர் போதா வீது
கண்டதனு லறந்தீண்டப் பெற்றதனு னற்பொருளங் கையா லள்ளிக்
கொண்டதனு லின்பநலங் குடைந்ததனுற் பேரின்பங் கொடுக்கு மன்றே.

இ-ள். நதி (நத) வாவிதீர்த்தங்களால்வரும்பயன் அனைத்தும் இப்பொற்றாமரைத் தடத்தினுல்வரும் பயன்களிற் கோடியில் ஒருபாகத்துக்கு ஒப்பாகா (ஆதலால்) இத்தீர்த்தம் தரிசித்தலால் அறமும் பரிசித்தலாற்பொருளும் உட்கொண்டதனுல் இன்பமும் மூழ்கியதால் முத்தியுங்கொடுக்கும்.—எ-று. (௩உ)

வேறு.

முன்னவ னருளிச் செய்த காரண முறையா லன்றி
யின்னமிப் புநித வாவிக் கேதுவா லெய்து நாம
மின்னவிர் சடையான் சென்னி மேவிய கங்கை நீரிற்
பின்னது கலந்த நீராற் பெறுஞ்சிவ கங்கை யென்றும்.

இ-ள். சிவபிரான் அருளியகாரணமுறையினுலன்றி இன்னமும் இத்தடாகத்துக்குக் காரணத்தால்வரும்பெயர் பரமசிவன்றிருமுடியின் கங்காஜலத்தோடு கலந்த தன்மையாற் சிவகங்கை எனவும்பெறும்.—எ-று. (௩௩)

அலகிலாத் தீர்த்தந் தம்மு ளதிகவுத் தமமாய்த் தோன்றி
யிலகலா லிதனைத் தீர்த்த வுத்தம மென்ப ராயந்தோர்
பலவிதழ் விரித்துச் செம்பொற் பங்கய மலர்ந்த நீரா
லுலகவர் யாரும் பொற்று மரையென வுரைப்ப ரன்றே.

இ-ள். தீர்த்தங்கள் அனைத்தினும் உத்தமமாயிருத்தலால் இதனைத் தீர்த்தோத்தமம் எனவும் பொற்றாமரைமலர்ந்த தன்மையாற் பொற்றாமரைவாவி எனவும் கூறுவர்.—எ-று. (௬௪)

தருமமுன் னுகு நான்குந் தருதலாற் றரும தீர்த்த
மருமைசா லருத்த தீர்த்த மரும்பெறற் காம தீர்த்த
மிருமைசேர் முத்தி தீர்த்த மென்பதா மினைய தீர்த்தம்
வெருவரு பாவ மென்னும் விறகினுக் கெரியா மன்றே.

இ-ள். வெளி. இருமை-பெருமை. வெருவரு-அச்சந்தரும. (௬௫)

இவ்வருந் தலத்தி னன்ற பெருமையு மெரிகால் செம்பொற்
றெய்வத பதும தீர்த்தப் பெருமையுஞ் செப்பக் கேட்டோ
ரெவ்வழில் போகம் வீடு பெறுவரென் றிசைத்தான முந்நீர்ப்
பௌவமுண் டமரர் வேந்தன் பரிபவ விழுமந் தீர்த்தோன்.

இ-ள். இவ்வரிய (மதுரைப்) பதியின் மிக்கமகிமையும் ஒளிவீசும் தெய்வப் பொற்றாமரைத்தீர்த்த மகிமையும் கேட்டவர் குற்றமற்ற புததிமுத்திகளை அடைவரென்று அகத்தியமகாமுநிவர் கூறினார்.—எ-று. பரிபவவிழுமம் - அவமானத்தாலாகுந் துன்பம். (௬௬)

தீர்த்தவிசேடப்படலமுற்றியது.

ஆகச்செய்யுள் - உ௬௬.

---

# மூர்த்திவிசேடப்படலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

ஆலவா யலர்ந்த செம்பொ னம்புயப் பெருநதீர்த் தத்தின்
மேலவாம் பெருமை தன்னை விளம்புவா ரெவரோ யுங்க
ணீலமா மிடற்று முக்க ணிராமய னறிவா னந்த
மூலமா விலிங்க மேன்மை முறையினு லறைய லுற்றாம்.

இ-ள். திருவாலவாய்ப்பதியிலுள்ள செம்பொற்றாமரைமலர்ந்த மகாதீர்த்தத்தின் விசேடமகிமையை யாவர் புகழ்ந்துரைப்பவர். (இனி) அவ்விடத்தே எழுந்தருளியிருக்கின்ற நீலகண்டமு முக்கண்ணுமுடைய சிவபிரானது ஞானனந்தரூப மூல மகாலிங்கமூர்த்தி விசேடத்தை (யாம்) முறையாகச் சொல்லுவாம்.—எ-று. நிராமயம் - நோயில்லாமை. (௧)

பொன்னெடு மேரு வெள்ளிப் பொருப்புமந் தரங்கே தாரம்
வன்னெடும் புரிசை சூழ்ந்த வாரண வாசி யாதிப்
பன்னருந் தலங்க டம்மிற் பராபர லிலிங்கந் தோன்று
முன்னரிக் கடம்பின் மாடே முளைத்ததிச் சைவ லிங்கம்.

இ - ள். மேருமலை கைலாசமலை மந்தரமலை கேதாரம் காசி முதலிய க்ஷேத்திரங்களிலே சிவலிங்கப்பெருமான்கள் முளைத்தருளுதற்கு முன்னமே இக்கடம்பவனத்திலே இச்சிவலிங்கப்பெருமான் முளைத்தருளினார்.—எ-று. இக்கருத்துநோக்கியன்றே "முளைத்தானையெல்லார்க்கு முன்னேதோன்றி" எனத் திருநாவுக்கரசுநாயனார் திருவாய் மலர்ந்தருளினார். (உ)

அப்பதி யிலிங்க மெல்லா மருட்கூறி யிதனிற் பின்பு
கப்புவிட் டெழுந்த விந்தக் காரண மிரண்டி னாலு
மொப்பரி தான ஞான வொளிதிரண் டன்ன விந்தத்
திப்பிய விலிங்க மூல விலிங்கமாய்ச் சிறக்கு மன்றே.

இ - ள். மேருமலை முதலிய பதிகளிலுள்ள சிவலிங்கங்கள் இம்மதுரைப்பதியில் முளைத்தருளிய மூலலிங்கத்தினின்று பிற்காலத்தே கப்புவிட்டுத் தோன்றினவாம். இவ்விரண்டு காரணததாலும் ஒப்பில்லாத ஞானவொளி திரண்டாற்போன்ற இத்திவ்விய லிங்கம் மூலலிங்கமென்னுந் திருநாமம்பெற்றுச் சிறந்து விளங்கும்.—எ-று. (௩)

இந்தமா விலிங்கத் தெண்ணான் கிலக்கண விச்சை மேனி
யந்தமி லழகன் பாகத் துமையொடு மழகு செய்து
சந்ததம் விளக்கஞ் செய்யுந் தகைமையை நோக்கிச் சோம
சுந்தர னென்று நாமஞ் சாத்தினார் துறக்க வாணர்.

இ - ள். இம்மகாலிங்க மூர்த்தியிடத்து முப்பத்திரண்டு இலக்கணமுள்ள ஞானமே திருமேனியாக்கொண்ட பேரழகினையுடைய சிவபெருமான் தம் இடப்பாகத்தில் உமாதேவியாரோடு அழகுசெய்து எந்நாளும் பிரகாசிக்குந் தன்மையை நோக்கித் தேவர்கள் (அச்சிவபிரானுக்குச்) சோமசுந்தரனென்று திருநாமம் இட்டார்கள்.—எ-று. (௪)

திறப்படு மூலக மெங்கும் வியாபியாய்ச் சிறந்து நிற்கு
மறப்பெருங் கடவுள் சோம சுந்தர னதனா லன்றோ
கறைக்கதிர் வடிவேற் றென்னன் கையிற்பொற் பிரம்பு பட்ட
புறந்தடித் தழும்பு மூன்று புவனமும் பட்ட தன்றே.

இ - ள். கூறப்பட்ட எவ்வுலகத்தும் வியாபியாய்ச் சிறந்து விளங்கும் பேரறவடிவ (முதற்) கடவுள் சோமசுந்தரேசராம். அதனாலல்லவா உதிரமுடைத்தாய் விளங்கும் அழகிய வேற்படையுடைய அரிமர்த்தன பாண்டியராஜன் கையிலுள்ள பொற்பிரம்பினாலே (தாக்கப்) பட்ட (அச்சுந்தரேசரது) முதுகடித்தழும்பு எப்புவனத்துள்ள எவ்வுயிர்களும் பட்டது.—எ-று. மூன்றுபுவனம்-உபலக்கணம். அன்றே-அசை. (௫)

சொற்றவிச் சமட்டி யான சோமசுந் தரனைக் காணப்
பெற்றவர் வியட்டி யான பிறபதி யிலிங்கங் காண
லுற்றவ ராவ ரென்னென் றுரைக்கின்வே ரூட்டு நீர்போய்
மற்றைய சினைக ளெல்லாந் தழைவிக்கு மரத்தின் மாதோ.

இ - ள். சொல்லிய இந்தச் சமட்டிரூபமாகிய சொக்கலிங்கமூர்த்தியைத் தரிசிக்கப்பெற்றவர் பிறபதிகளிலுள்ள வியட்டிரூபமான சிவலிங்கமூர்த்திகளைத் தரிசிக்கப் பெற்றவராவர். (அஃது) எப்படியென்று வினவினால் மரத்தின் வேரில்விடும் நீர் போய் ஏனைய கிளைகளைத் தழைவிக்கும (அதுபோல் எனவுணர்க.)—எ-று. (சு)

எத்தலத் தியாவ னெண்ணெண் டிருவிளை யாடல் செய்தா
னத்தலத் தவனுக் கொப்பு மதிகமாஞ் சிறப்பும் பெற்ற
வுத்தம னென்று மெந்த வுலகினு மில்லை யாதல்
வித்தக னதிகத் தன்மை யெனைத்தெனின் விளம்பக் கேண்மின்.

இ - ள். எந்த மதுரைப்பதியில் எந்தச் சுந்தரேசர் அறுபத்துநான்கு திருவிளையாடல் செய்தாரோ அந்தமதுரைப்பதியில் வதிந்தருளும் சுந்தரேசருக்குச்சமமும் அதிகமுமாகிய சிறப்புப்பெற்ற உத்தமமூர்த்தி எந்நாளும் எவ்வுலகினும் இல்லை (ஆதலால்) அம்மூர்த்திவிசேடத்தன்மை எவ்வியல்பிற்றெனின் கூறக்கேளுங்கள்.—எ-று. ()

பொருப்பினுட் டலைமை யெய்தும் பொன்னெடுங் குடுமி மேரு
தருக்களிற் றலைமை சாருந் தண்ணறுந் தெய்வ தாரு
விருப்புறு வேள்வி தம்முண் மேம்படும் புரவி மேத
மருட்படு தானந் தம்முள் விழுமிதா மன்ன தானம.

இ - ள். மலைகளில் மேருமலையும் தருக்களில கற்பதருவும் வேள்விகளில் அசுவமேத வேள்வியும் அருளையுண்டாக்குந் தானங்களுள் அந்நதானமும் மேம்பட்டனவாம்.—எ-று. (அ)

மனிதரி லுயர்ந்தோ ராதி மறையவர் தேவா தம்மிற்
பனிதரு திங்கள் வேணிப் பகவனே யுயர்ந்தோன் வேட்டோர்க்
கினிதருள் விரதந் தம்மு ளதிகமா மிந்து வாரம்
புனிதமந் திரங்க டம்முட் போதவைந் தெழுத்து மேலாம்.

இ - ள். மானுடரில முதலவருணத்து வேதியரும் (அரிபிரமேந்திராதி) தேவர்களில் அறுகுணநிறைந்த சிவபிரானும் உயர்ந்தோராவர். விரும்பியவர்க்கு நன்மைதரும விரதங்களுள் சோமவாரவிரதமும் பரிசுத்தமந்திரங்களுள் ஞானத்திற்கு ஏதுவாகிய திருவைந்தெழுத்தும் உயர்ந்தனவாம்.—எ-று. அறுகுணம் - ஐசுவரியம், வீரியம், புகழ், திரு, ஞானம், வைராக்கியம். (கூ)

மின்மைசான் மணியிற் சிந்தா மணிவரம் விழுப்ப நல்குந்
தன்மைசா லறங்க டம்மின் மிகுஞ்சிவ தருமம் மென்ப
வின்மைசா னெறியின் றேருக் தேற்குநற் கலன்க டம்மி
னன்மைசான் றவரோ முக்க ணாதனுக் கன்பு பூண்டோர்.

இ - ள். விளக்கமிக்க மணிகளில் சிந்தாமணி சிறந்ததாம். சிறந்தபயனைத் தருந் தன்மைமிக்க தருமங்களில் சிவதருமஞ் சிறந்ததென்பர். நல்ல இல்லறநெறியின் நின்றவர் (கதியடைதற்) பொருட்டு ஏற்குஞ் சற்பாத்திரங்களில் சிவபிரான்பொருட்டு அன்புடையவரே நன்மைமிக்கவராவார்.—எ-று. (க0)

தீயவாஞ் சுவைப்பா லாவிற் றேவரா வதிகம் பல்வே
றூயமா தீர்த்தந் தம்மு ளதிகமாஞ் சுவண கஞ்ச
மாயமா சறுக்க வெல்லாத் தலத்திலும் வதிந்து மன்னுந்
தூயவா னவரிற் சோம சுந்தரன் சிறந்தோ னாகும்.

இ - ள். விரும்பும் இனியசுவையுடைய பாற்பசுக்களில் காமதேனுவும் தீர்த்தங்களுள் பொற்றாமரைத் தீர்த்தமுஞ் சிறந்தன. (அப்படியே) பந்தகாரணமாகிய குற்றத்தைக்கெடுக்க எல்லாத்தலத்தினும் வதிந்தருளுஞ் (சுயம்புவாகிய) சிவலிங்கப்பெருமான்களுள் சோமசுந்தரலிங்கப்பெருமான் சிறந்தவராவார்.—எ-று. (கக)

அந்தமு முதலு மில்லா வகண்டபூ ரணமா யார்க்கும்
பந்தமும் வீடு நல்கும் பராபரச் சோதி தானே
வந்தனை புரிவோர்க் கிம்மை மறுமைவீ டளிப்பா னிந்தச்
சுந்தர விலிங்கத் தென்றும் விளங்குவான் சுருதி யேத்த.

இ - ள். முடிவு முதலு மில்லாமல் அகண்டாகாரநித்த வியாபகமாகி யாவர்க்கும் பெத்தமுத்திகளைக் கொடுக்குஞ் சிவபெருமான் வழிபடுவோர்க்கு இகபரபோகங்களும் முத்தியின்பமும் அருளும்பொருட்டு இந்தச் சொக்கலிங்கமூர்த்தியிடத்து வேதங்கள்புகழும்படி எந்நாளும் பிரகாசிப்பார்.—எ-று. (கஉ)

இத்தகு சயம்பு தன்னை யேனைய சயம்பு வெல்லா
நித்தமுந் தரிசித் தேகு நிருமல வொளியா மிந்த
வுத்தம விலிங்கங் கண்டோ ருரையுணர் வொடுங்க வுள்ளே
சித்தமா சொழியத் தோன்றுஞ் சிவபரஞ் சுடரைக் கண்டோர்.

இ - ள் இந்தச் சுயம்புமூர்த்தியை மற்றச் சுயம்புமூர்த்திகள் நாடோறுந் தரிசித்துச்செல்லும். இந்த நிருமல ஒளிப்பிழம்பாகிய உத்தம மூலலிங்கமூர்த்தியைத் தரிசித்தவர், நாதமுடிவான பாசஞானமும் பசுஞானமும் ஒடுங்கவும் நிச்சயமாக (மல) க்குற்றம் ஒழியவும் அகத்தே தோன்றுஞ் சிவபிரானைத் தரிசித்தோராவர்.—எ-று. (கரு)

இத்தனிச் சுடரை நேர்கண் டிறைஞ்சினோர் பாவ மெல்லாங்
கொத்தழற் பொறிவாய்ப் பட்ட பஞ்சுபோற் கோப மூள
மெய்த்தவஞ் சிதையு மாபோன் மருந்தினால் வீயு நோய்போ
லுத்தம குணங்க ளெல்லா முலோபத்தா லழியு மாபோல்.

கலிகட லிரவி தோன்றக் கருகிரு ளுடையு மாபோ
லொலிகெழு பெருங்கா றள்ள வுடைபடு மேகம் போல
வலிகெழு மடங்கல சீற மாயுமால் யானை போலக்
குலிசவல் லேறு தாக்கப் பொடிபடு குன்றம் போல.

மருட்சிசெய் காம நோயான் மதிகெடு மாறு போல
வருட்சிவ ஞான நோக்கால் வலிகெடு மவிச்சை போலத்
தருக்குறு மூவணஞ் சிறத் தழலரா. விளியு மாபோற்
செருக்குற வழியுங் கற்ற கல்விபோற் சிதையு மன்றே.

இ - ள். இந்த ஒப்பில்லாத சோதிவடிவாகிய சொக்கலிங்கமூர்த்தியை வழிபட்டவர் பாவங்கள், அக்கினிப்பொறியிற்பட்ட பஞ்சுபோலவும் கோபமிகத்தவம்போலவும் மருந்தினுல் நோய்போலவும் உலோபத்தால் உத்தமகுணங்கள்போலவும் சூரியன் உதிக்க இருள்போலவும் பெருங்காற்றுத்தள்ள மேகம்போலவும் சிங்கங்கோபிக்க யானைபோலவும் வச்சிரப்படையாகிய இடியேறுதாக்க மலைகள்போலவும் காமநோயினுல் அறிவுபோலவும் சிவஞானப்பார்வையால் அஞ்ஞானம்போலவும் கருடன்கோபிக்கப் பாம்புபோலவும் கருவங்கொள்ளக் கல்விபோலவும் கெடும்.—எ-று. வழிபட்டவர் பாவங் கெடும் என்க. (௧௬)

புலரியிற் சிவன் முத்தி புரேசனைக் காணப் பெற்று
லலைகட னுன்குட் பட்ட வவனிமா தானஞ் செய்த
பலனுறுங் கதிர்கா லுச்சி வைகலிற் பணியப் பெற்றுற்
கலைஞர்பா னூற்றுப் பத்துக் கபிலைமா தானப் பேறும்.

இ - ள். அந்தச் சொக்கலிங்கமூர்த்தியை உதயகாலையிலே தரிசித்தாற் கடல்சூழ்ந்த பூமியைத்தானஞ்செய்த பயனும் உச்சிக்காலையிலே வணங்கினுல் ஆயிரங்கபிலைப் பசுதானஞ்செய்தபலனும்.—எ-று. (௧௭)

விண்ணிடைப் பரிதிப் புத்தேண் மேலைநீர் குளிக்கு மெல்லை
யண்ணலை வணங்கிற் கோடி யானினத் தானப் பேறும்
பண்ணவர் பரவும் பாதி யிருள்வயிற் பணியப் பெற்றுல்
வண்ணவெம் புரவி மேத மகம்புரி பெரும்பே றெய்தும்.

இ - ள். அம்மகாலிங்கத்தைச் சாயங்காலையிலே வழிபட்டாற் கோடிபசுதானஞ்செய்தபயனும் அர்த்தயாமத்திலே வணங்கினுல் அசுவமேதயாகஞ்செய்த பெரும்பயனும்.—எ-று. (௧௮)

இன்னன வதிக மாம்பே றறிந்துபோ யெத்தே வர்க்கு
முன்னவன் சமட்டி விச்சா புரமுறை முதல்வன் றன்னைச்
சொன்னவிக் காலந் தோறு மிறைஞ்சியுந் தொழுதுஞ் சூழ்ந்தும்
பொன்னடிக் கன்ப ராகி வழிபடும் புனித சிலர்.

உம்மையில் வினைக ளென்னும் பிணிப்பவிழ்ந் தொருவித் தூய
செம்மைய ராகி யூனுத் திருவொடு செல்வ மோங்க
வெம்மையில் போக மூழ்கி மலவிருள் வீக்க நீந்தி
மைம்மலி கண்டத் தெங்கோன் மலரடி நீழல் வாழ்வார்.

இ - ள். இவைபோன்ற உயர்ந்த பயன்களையுணர்ந்து சென்று சமட்டி வித்தியாபுரேசனை அவர் திருவடிக்கன்பராகிக்காலங்கள்தோறும் நமஸ்கரித்து அஞ்சலிசெய்து

வலம்வந்து வழிபடும் நல்லொழுக்கமுடையார் பூருவகன்மபாசக் கட்டவிழ்ந்து மிகப்பரிசுத்தராகி நீங்காப்பொருட்செல்வமுங் கல்விச்செல்வமும் ஓங்கும்படி நல்லபோகம் நுகர்ந்து மலவிருட்பெருக்கி னீங்கிச் சிவபிரான்றிருவடி நீழலில் வாழ்வார். (௨௰)

ஷ்டி வேறு.

அறவுருவ னாலவா யானாமஞ் செவிமடுத்தா லடைந்த பத்துப்
பிறவிவினை யறுநினைந்தா னூறுபெரும் பவபாவப் பிணிபோங் கூட [னூறு
லிறைவனையின் றிறைஞ்சுதுமென் றெழுந்துமனைப் புறம்போநதா லீரைஞ்
மறமுறுவெம் பவத்திழைத்த பாதகவல் வினையனைத்து மாயு மன்றே.

இ-ள். திருவாலவாயுடையார் திருநாமத்தைக்கேட்டாற் பத்துப்பிறப்பில் அடைந்தவினைகெடும். நினைத்தால் நூறுபிறப்பின் பாவநோய்கெடும். அவ்விறைவனை வணங்குவோமென்று (கருதி) எழுந்து மனைப்புறஞ்சென்றால் மிகக்கொடிய ஆயிரம்பிறப்பிற்செய்தவினை கெடும்.—எ-று. (௨௧)

புழைக்கைவரை தொலைத்தானைத் தரிசித்தோ ராயிரவாம் புரவி வேள்வி, தழைத்தபெரும் பயன்பெறுவ ருத்திரசூத்தந்துதிக டம்மி னொன்றூற், றொழுதற்குரியான் றனைத்துதித்தோ ரென்றுமா யிரராசசூயயாக, மிழைத்தபெரும் பயன்பெறுவர் சமட்டிவடி வாகியவவ் விலிங்கந் தன்னை.

இ - ள். அப்பெருமானைத்தரிசித்தோர் ஆயிரம் அசுவமேதஞ்செய்த பயன்பெறுவர். உருத்திர சூக்தத்தினாலாவது துதிகளினாலாவது புகழ்ந்தோர் என்றும் ஆயிரம் இராஜசூயயாகஞ்செய்த பயன்பெறுவர். (பின்னும்) சமட்டிரூப அச்சிவலிங்கமூர்த்தியை.—எ-று. (௨௨)

அங்கையள வாகியநன் னீராட்டிப் பூசித்தோ ரளவி லேனைத்
துங்கதலத் துறையிலிங்க மூர்த்திகளைச் சிவாகமநூல் சொன்ன வாற்றான்
மங்கலமா கியமூகம னீரெட்டும் வழுவாது வாசந் தோய்ந்த
செங்கனக மணிகலசப் புனலாட்டி மாபூசை செய்தோ ராவார்.

இ - ள். உள்ளங்கையளவுதீர்த்தம் அபிடேகித்துப்பூசித்தவர் ஏனைச் சிவலிங்கமூர்த்திகளை விதிப்படி சோடச வுபசாரத்துடன் இரத்தின கலசதீர்த்தம் அபிடேகித்து மகாபூஜை செய்தவராவார்.—எ-று., சோடசவுபசராம் - ஆசனம், சுவாகதம், அர்க்கியம், பாத்தியம், ஆசனம், மதுபர்க்கம், ஆசமனம், ஸ்நாநம், வஸ்திரம், ஆபரணம், கந்தம், புஷ்பம், தூபம், தீபம், நைவேத்தியம், மாலை, சந்தனலேபநம், நமஸ்காரம், விசர்ச்சநம். இவற்றுள் ஆசனம், மாலை, சந்தனலேபநம் இரட்டித்து வருதலால் அம்மூன்று நீக்கிக் கொள்க. இவை பதார்த்த தரிசம் - ஞானமாலைகளிற் கண்டன. (௨௩)

அவ்வண்ணஞ் சுந்தரனை யைந்தமுத மானுசவு மைந்து தீந்தேன்
செவ்வண்ணக் கனிசாந்தச் சேறுமுதன் மட்டித்துத் தேவர் தேறு
மெய்வண்ணங் குளிர்விரைப் புனலாட்டி மாபூசை விதியாற் செய்தோ
மைவண்ண வினைநீந்தி யறமுதனாற் பொருளடைந்து மன்னி வாழ்வார்.

இ - ள். அங்ஙனம் சொக்கலிங்கப்பெருமானைப் பஞ்சகவ்வியம், பஞ்சாமிர்தம், தேன், கனிச்சாறுமுதலிய அபிடேகித்தும் சந்தனக்குழம்புமுதலிய சாத்தியும் வாசனையுள்ளதீர்த்தம் அபிடேகித்தும் விதிப்படி பூசைசெய்தவர் வினையைக்கடந்து, அறமுத

லிய நாற்பயனை அடைவர்.—எ-று. பஞ்சகவ்வியம் - பால் - தயிர் - நெய் - கோசலம் - கோமயம். பஞ்சாமிர்தம் - பால் - தயிர் - நெய் - தேன் - சர்க்கரை. (உ௪)

நல்லவகை முகமணீ ரெட்டுள்ளும் வடித்தவிரை நன்னீ ராட்ட
வல்லவர்நூ றாயிரமா மேதமகப் பயன்பெறுவர் வாச நான
மெல்லவிர்குங் குமஞ்சாந்த மிவைபலவு மட்டித்தோ ரெழிலார் தெய்வ
முல்லைநகை யாரோடும் விரைக்கலவை குளித்தின்ப மூழ்கி வாழ்வார்.

இ-ள். சோடசவுபசாரத்தில் வாசனையுடையதீர்த்தத்தை (அம்மூர்த்திக்கு) அபிடேகிக்கவல்லவர் நூறாயிரம் அசுவமேதஞ்செய்த பயன்பெறுவர் - கஸ்தூரி (புழுகு பச்சைக்கர்ப்பூரம் கோரோசனை) குங்குமப்பூ சந்தனம் இவை பலவுஞ்சாத்துவோர் சுவர்க்கத்திலே தேவமகளிரோடு கலவைசசாந்தினை மூழ்கி வாழ்வார்.—எ-று. (உ௫)

நன்மலரொன் றாலவா யான்முடிமேற் சாத்தினு னயந்து நூறு
பொன்மலர்கொண் டயற்பதியிற் பூசித்த பயனெய்தும புனித போகத்
தன்மைதரு சுந்தரற்குத் தூபமொரு காற்கொடுப்போர் தமக்குத் தாங்கள்
சொன்மனமெய் யுறச்செய்த குற்றமா யிரம்பொறுப்பன் சுருதி நாதன்.

இ-ள். நறுமலர் ஒன்று மூலலிங்கமுடிமீது சாத்தினுல் ஏனைய சிவலிங்கத்துக்கு நூறு சுவர்ணபுஷ்பத்தால் அர்ச்சித்தபயன்பெறுவா. அம்மூர்த்திக்குத் தூபம் ஒரு கால் கொடுத்தால் மனவாக்குக் காயங்களாற் செய்யப்பட்ட ஆயிரங்குற்றத்தைப் பொறுத்தருளுவர் அப்பெருமான் (கருணாமூர்த்தியாதலால்).—எ-று. (உ௬)

திருவமுது நிவேதிப்போ ரவிழொன்றற் குகமொன்றாச் சிவலோகத்தின்
மருவிநிறை போகமுடன் வைகுவர் தாம் பூலமுக வாச மீந்தோர்
பொருவரிய கடவுளராண் டொருநூறு கோடிசிவ புரத்து வாழ்வா
ரொருபளித விளக்கிடுவோர் வெண்ணிறமுங் கண்ணுதலு முடைய ராவார்.

இ-ள். (அம்மகாலிங்கத்துக்குத்) திருவமுது நிவேதிப்பவர் ஒருபருக்கைக்கு யுகமொன்றாகச் சிவலோகத்திற் போகம் அநுபவிப்பார். தாம்பூல முகவாசங்கள் கொடுத்தவர் நூறுகோடி தேவவருடம் சிவலோகத்திலவாழ்வார். ஒரு காப்பூர்தீபம இடுவோர் சிவசாரூப்பியம் பெறுவர்.—எ-று. முகவாசம் - தக்கோலம்- ஏலம் - இலவங்கம் - பச்சைக்கர்ப்பூரம் - சாதிக்காய். (உ௭)

நறுந்திருமஞ் சனமெடுக்கக் குடமாட்ட மணிகலச நல்ல வாசம்
பெறுந்தகைய தூபக்கா றீபக்கான் மணியின்ன பிறவுங் கங்குற்
றெறுங்கதிர்கான் மணிநாட மதுரைநா யகற்கீந்தோர் செய்த பாவம்
வெறுந்துகள்செய் தைம்பொறிக்கும் விருந்தூட்டும் பெருங்காம வெள்ளத்தாழ்வார்.

இ-ள். திருமஞ்சனம் எடுக்கக்குடமும் அபிடேகிக்க இரத்தினகலசமும் தூபக்காலும் தீபக்காலும் மணியும் பிறவும் அம்மூர்த்திக்குக் கொடுத்தவர் பாவங்களை நீக்கிப் பெரும்போகம் அநுபவிப்பார்.—எ-று. தெறும் - கெடுக்கும். கால் - உமிழ்கின்ற. (உ௮)

கயலிசையங் கண்ணுமைகோன் றிருமுன்னர்ப் பல்லியமுங் கல்லென் றார்ப்ப, வியலிசைய பாடலினோ டாடலிவை செய்விப்போ ரிறுமாப் பெய்திப், புயலிசைய வியங்கலிப்ப மூவுலகுந் தொழவரசாய்ப் பொலங்கொம் பாடுஞ், செயலிசைய வணங்கனையா ராடரங்கு கண்டின்பச் செல்வத் தாழ்வார்.

இ - ள். சொக்கலிங்கப்பெருமான் சந்நிதியிலே பலவாத்தியங்கள் ஒலிக்க இலக்கணமுடைய பாடலோடு (மகளிர்) ஆடல்செய்விப்பவர், இறுமாந்து அரசராகி மூவுலகுந் தொழவும் வாத்தியம் ஒலிக்கவும் தேவமகளிர் போன்றவர் ஆடுகின்றசபையைநோக்கி ஆனந்தமுடைய செல்வத்தே மூழ்குவார்.—எ-று. இசையவென்னு மற்றமூன்றும் உவமவுருபு. (௨௯)

ஒருகாலட் டாங்கமுடன் பஞ்சாங்க முடனுதலொண் செங் கால்வெண்
குருகானு மலர்த்தடஞ்சூழ் கூடலுறை யகற்பணிவோர் கோலொன் றோச்சிப்
பொருகாலின் வருபரித்தேர் மன்னவரா யாவருந்தம் புடைவந் தெய்தி
யிருகாலுந் தலைவருட வெக்காலுந் தமைவணங்க விருப்ப ரன்றே.

இ - ள். ஒருமுறை அட்டாங்க முதலியவற்றாலே சுந்தரேசனை வணங்குவோர் செங்கோல்செலுத்தும் பெருமன்னராகித் தம்மடியை அனைவரும் முடிவருடி வணங்கும்படி வீற்றிருப்பர்.—எ-று. அட்டாங்கம் - தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு. பஞ்சாங்கம் - தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு. குருகு ஆலும்-பறவை ஒலிக்கின்ற. பொருகாலின் - மோதுகின்ற காற்றுப்போல. (௩௰)

இத்தகைய திருவால வாயுடையான் றிருமுன்ன ரியற்று மோம
மெய்த்தவமந் திரந்தான மின்னவணு வளவெனினு மேரு வாகு
முத்தமமா மிவ்விலிங்கப் பெருமையெலாம் யாவரளந் துரைப்பர் வேத
வித்தகரோ சிறிதறிந்த வாறுரைத்தே மினிப்பலகால் விளம்பு மாறென்.

இ - ள். இத்திருவாலவாயீசர் சந்நிதியிலே செய்யும் ஓமமுதலியவை அணுவளவாயினும் மேருமலைபோலாம். இம்மூலலிங்கமூர்த்திமகிமை அனைத்தும் எவர் அளந்து சொல்ல வல்லவர் முனிவர்களே சிறிதறிந்தபடி கூறினோம். இனிப்பலமுறை சொல்லுமாறென்னை.—எ-று. (௩௧)

இத்தலத்துக் கொப்பாக வொருதலமும் பொற்கமல மென்னு மிந்த
வுத்தமமா தீர்த்தத்துக் கொப்பதொரு தீர்த்தமுமெய் யுணர்வா னந்த
வித்தனைய விலிங்கமிதற் கொப்பாவோ ரிலிங்கமும்பார் விண்மே லென்னு
மூத்தலத்து மிலையிந்த மூர்த்திதிரு நாமங்கண் மொழியக் கேண்மின்.

இ - ள். இம்மதுரைஸ்தலத்துக்கொப்பாகி ஒருஸ்தலமும், பொற்றாமரைத் தீர்த்தத்துக்கொப்பாக ஒருதீர்த்தமும், (அன்பர்க்கு) உண்மையறிவாநந்த (ங்களை விளைக்கும்) உயர்ந்தவித்தாகிய மூலலிங்கமூர்த்திக்கொப்பாக ஒருமூர்த்தியும் மூவுலகத்துமில்லை. அம்மூர்த்தி திருநாமங்களைக் கூறக்கேளுங்கள்.—எ-று. (௩௨)

கருங்குழற் கற்றை தொட்டுச் செம்மலர்க் காலி னெல்லை
மருங்குனல் கூர்ந்த கன்னி வடிவெலா மாக்கின் செல்வ
னொருங்குநா லுணர்வாற் றெள்ளி யிம்பரின் னும்பர்த் தேத்து
மிரங்குமிக் குயிலன் னாண்மெய் யிலக்கண மரிய தென்றான்.

இ-ள். கேசாதி பாதாந்தம (மேற்கூறியவாறே அமைந்த) இடை சிறுத்த காந்திமதி தேவியார் அவயவங்களைத் தேவகுரு சாமுத்திரிகைநூலுணர்ச்சியால் முற்றும ஆராய்ந்து, கூவுங் குயிலமொழிபோலும் மொழியுடைய இத்தேவியார் அவயவ விலக்கணம் பூவுலகத்தும் தேவுலகத்தும் இல்லையென்றார்.—எ-று. (௬௩)

அங்கது கேட்டோர் யாரு மகங்களி தூங்ப விப்பாற்
கொங்கலா நறுந்தார்க் குஞ்சி யுக்கிர வழுதி போந்து
மங்கல வரிசை மாண மத்தமா னசும ந்து வைகைச்
சங்கெறி துறைநீ ராடித் தருங்கடி னையா ந கொள்வான்.

இ-ள். சுந்தரபாண்டியர் சந்நிதியிலே அந்தேவகுரு மொழியைக் கேட்டவர் அனைவரும் மனமகிழ்ச்சி மிகுந்திருக்க, பின்பு உக்கிரபாண்டியர் (அவ்விடத்தினின்றும்) எழுந்து அஷ்டமங்கல வரிசைசிறக்க யானை சுமந்துவந்த வைகைநதியின் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சிறந்த திருமணக்கோலங்கொள்ளத் தொடங்கினார்.—எ-று. (௬௪)

கட்டவிழ் கண்ணி வேய்ந்து மான்மதக் கலவைச் சாந்த
மட்டனஞ் செய்து முத்தான் மாண்கலன் முழுதுந் தாங்கி
விட்டவிர் கலைவான திங்கள் வெண்கதிர்ச் செலவன் போல்வந்
திட்டபூந் தவிசின் மேற்கொண் டிருந்தனன் சங்க மேங்க.

இ-ள். (தொடங்கி) முறுக்கவிழ்ந்த மலர்மாலை சூடிக் கஸ்தூரிகலந்த சந்தனக் குழம்பை அப்பி முத்துகளாலாகிய மாட்சிமைப்பட்ட அணிகளைத் திருமேனிமுற்றும் பூண்டுவிட்டு (விட்டு) விளங்கும் கிரணங்களையுடைய ஆகாசவாசியாகிய பூரணசந்திரனைப்போல (அலங்கார மண்டபத்தினின்று) வந்து சங்கமுதலிய வாத்தியங்கள் முழங்கும்படி (திருக்கலியாண மண்டபத்தில) இட்ட அழகிய ஆசனத்தின்மேல் வீற்றிருந்தார்.—எ-று. சங்கம் - உபலக்கணம (௬௫)

அங்கிலை மணநீ ராட்டி யருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கொணர்ந்து நம்பி வலவயிற் கவின வைத்தார்
பன்னியோ டெழுந்து சோம சேகரன் பிரானும் பங்கின
மன்னிய வுமையு மாக மதித்துநீர்ச் சிரகந் தாங்கி.

இ-ள். அப்பொழுது வாசனைதீர்த்தத்தில் மூழ்குவித்துச் சிறந்த ஆபரணங்களாகிய போர்வையைப் போர்க்கப்பெற்ற காந்திமதிதேவியாரைக் கொண்டுவந்து உக்கிரபாண்டியரது வலப்பாகத்திலே அழகுபெற வைத்தனர், (பின்பு அவ்விருவரையும்) சோமசேகரராஜன் தன்பத்தினியோடு எழுந்து பரமசிவனும் அவரது பாகத்தில் நிலைபெற்ற பார்ப்பதிதேவியாருமாகப் பாவித்து நீர்நிறைந்த கரகத்தைக் கையிலே தாங்கி.—எ-று. (௬௬)

இடைமயிர் நரம்பற் றிருபதோ டொருநான் கெழில்விர லளவொடு வட்ட
வடிவதாய்ச் சிறுக்கி மெலிவது நிதம்ப மத்தகம் யாமையின் புறம்போற
படிவநே ரொத்த னன்றிரு குறங்கும் படுமயி ரென்பகன் றியானைத்
தடவுடைக் கையுங் கரபமுங் கதலித் தண்டுமொத் திருக்கினன் றென்ப.

இ-ள். மருங்குல், மயிர் நரம்புகளின்றி இருபத்துநான்கங்குல வளவொடு வட்டமாய்ச் சிறுத்துத் தளாவ (தாயின நன்மை) யாம். நிதம்பங்கள், யானையின் மத்தகமும் யாமையின் முதுகும்போல வடிவங்கள் நேரே சமமாயிருத்தல் நன்றும். இரண்டு தொடையும், உரோமம் எலும்புகள் ஒழிந்து யானைத்துதிக்கையும் கையடியும் வாழைத்தண்டும் போன்றிருந்தால் நன்மையென்று கூறுவர்.—எ-று. நிதம்பம - பின்புறச்சகனம். ()

அங்கமுண் மறைந்து வட்டமாயத் தசைவ தணிமுழந் தாண்மயிர் நரம்பு
தங்கிடா தடைவே யுருட்சியாய்ச் சிறுத்துச் சமவடி வாயழ கடைந்த [கு
சங்கையாஞ் சிரையென் பறத்தசைந் தியாமை முதுகெனத் திரண்டுயாந் தழ
மங்கலம பொலிந்த புறவடி மடந்தை மன்னவன் பன்னியா மன்னே.

இ - ள். அழகிய முழங்கால், எலும்பு தோன்றாமல் வட்டமாய்த் தசைந்திருந்தால் (நன்றும்.) கணைக்கால்கள், மயிர் நரம்புகளின்றித் திரண்டு முறையே சிறுத்துச் சமவடிவாய் அழகியன(வாயிருந்தால் நன்மை)யாம். நரம்பும் எலும்பும் ஒழியத் தசைந்து யாமைமுதுகுபோலத் திரண்டு உயர்ந்து அழகு பொலிவுகளால விளங்கிய புறவடியுள்ள பெண் அரசன் மனைவியாவள்.—எ-று. பரடுகள் மறைந்து நரம்பின்றியிருந்தாற் சுபம் என்று வடமொழியிற் கூறியிருத்தலை இந்நூலார் புறவடியில் அடக்கிக் கூறினர்.

அல்லியங் கமலக் கால்விர லுயர்ந்து தூயவா யழகவாய்க் கழுநீர்
மெல்லிதழ் நிரைத்தாங் கொழுங்குறத் திரண்டு வாலுகிர் வெண்மதிப பிளவு
புல்லிய போன்று மெல்லிய வாகிப் புகரறத் தசைந்தன வகத்தாள
சொல்லிய தசைவு மென்மையுஞ் சமமுந் துகளிலா வழகுமே யன்றி.

இ - ள். கால்விரலகள், உயாந்து தூய்மையினவாய் அழகினவாய்ச் செங்கழுநீர் மலரின் மெல்லிய விதழ்களை வரிசையாக வைத்தாற்போல ஒழுங்குபெறத் திரண்டு, வெள்ளிய நகங்கள், வெள்ளிய பாதிமதிகள (அவ்விரல்களைப்) பற்றியனபோன்று மென்மையுடையனவாய்க் குற்றமறத் தசையுடையன(வாயின் நன்மையாம்.) உள்ளங்கால், நூலிற்கூறிய தசைதல் மிருது பள்ளமின்மை அழகு இவைகளலலாமல.—எ-று. (சஅ)

உண்ணமுஞ் சிவப்பு முள்ளதாய் வேர்வை யொழிந்ததேற் செலவமா மாகம்
வண்ணமார் பொன்போ லொன்னிறம வாயதல வண்மணம் பாடலங் குவளை
தண்ணறு முளரி மல்லிகை நறுந்தண் சமபகம்போலவது நன்றும
பண்ணவாங் கிளவி குயிலகிளி யாழிற் படினவரும் பாக்கிய மென்று.

இ-ள். உஷ்ணம் செம்மைகள் உள்ளதாய் வியர்வை யில்லதாயின் ஐசுவரியமுண்டாம். சரீரம், நிறம்பொருந்திய பொன்போல நல்லநிறமு அடைதலும் பாதிரிமுதலிய மலர்கள்போல நறுமணங் கமழ்தலும் நன்மையாம். இசையும் விரும்புகின்ற மொழி, குயில் கிளிகளின் குரலும் யாழின் இசையும் போல்வதாயிற் செல்வமுண்டாமென்று சொல்லி.—எ-று. பணனுமென்னுஞ் சிறப்பும்மை தொகை. (சஉ)

வட்டங்கொள் சடையுடைய சித்தர்வினை யாடியதோர் வனப்புங் கையிற்
கட்டங்கந் தரித்தபிரான் கல்லானை கரும்பருந்தக் காட்டு மாறு
முட்டங்கு வஞ்சனையா லமணர்விடு வாரணத்தை யொழித்த வாறு
மிட்டங்கொள் கௌரிமுனம் விருத்தனிளை யோன்குழவி யான வாறும்.

கட்வாங்கம் - கட்டங்கமென நின்றது; அதுயோகதண்டம். பிரான் - அச்சித்தர்.

செய்யதாண் மாறிநட மாடியதும் பழியஞ்சு திறனுந் தாயை
மையலாற் புணர்ந்தமகன் பாதகத்தை மாற்றியது மதியா தாசான்
றையலா டனைவிரும்பு மாணவனை வாளமரிற் றடிந்த வாறும்
பையுரா வெய்ததுவுழு படிற்றமணர் விடுத்தபசுப் படுத்த வாறும்.

மாணவனைவாள் - சீடனாகிய சித்தனைவாளினால். தடிதல் - வெட்டல். படிறு - வஞ்சம். படுத்தல் - கொல்லல். (சு)

அறவேற்றுப் பரியுகைத்து மெய்க்காட்டுக் கொடுத்தவினை யாட்டுங் காட்டுச்
சுறவேற்றுக் கொடியரசன் றனக்குலவாக் கிழிகொடுத்த தொடர்பு நாய்கர்
நறவேற்ற மலர்க்குழலார் மனங்கவாந் வளைபகர்ந்த நலனு மாறு
மறவேற்கண் மாதரார்க் கட்டமா சித்திபெற வகுத்த வாறும்.

அறஏற்றுப்பரி - தருமவிடையாகிய குதிரை. ஏற்றுச்சுறவுகாட்டு கொடி அரசன் - ஆண்சுறாமீனைக்காட்டுகின்ற கொடியை யுடைய குலபூடணபாண்டியன். நாய்கர் - வைசியர். மறவேல் - கொலைவேல். ஆறு மாதரார்க்கு என்க. (எ)

சென்னிபொருட் டெயில்வாயி றிறந்தடைத்து விடைபொறித்த செயலுஞ் சென்னி, மன்னிகலிட் டமர்விளைப்ப மீனவற்கு நீர்ப்பந்தர் வைத்த வாறும், பொன்னனையாள் பொருட்டிரத வாதவினை முடித்ததுவும் புகார்க்கு வேந்தன், றன்னையகன் குழிவீட்டித் தென்னவற்கு மறவாகை தந்த வாறும்.

சென்னி - சோழன். எயில் - கோட்டை. விடை - இடபமுத்திரை; ஆகுபெயர். மன் இகல் - பொருந்திய பகை. மீனவன் - இராஜபுரந்தர பாண்டியன். புகார் - காவிரிப் பூம்பட்டினம். வேந்தன் - சோழன். அகன்குழி - விரிந்தமடு. வீட்டி - வீழ்த்தி. மறவாகை - வலியவெற்றிமாலை. (அ)

மனக்கவலை கெடவுலவாக் கோட்டையடி யாற்களித்த வகையு மாம
னெனக்கருணை வடிவாகி வழக்குரைத்துப் பொருள்வணிகற் கீந்த வாறுஞ்
சினக்கதிர்வேல் வரகுணற்குச் சிவலோகங் காட்டியதுந் திவவுக் கோலான்
றனக்கடிமை யெனவிறகு திருமுடிமேற் சுமந்துபகை தணித்த வாறும்.

திவவுக்கோலான் - (நரம்புக்) கட்டுள்ள யாழ்ப்பாணர். பகை - ஏமநாதன். (கூ)

அப்பாணற் கிருநிதியஞ் சேரனிடைத் திருமுகமீந் தளித்த வாறு
மப்பாணன் பாடமழை யனையிரவிற் பொற்பலகை யளித்த வாறு
மப்பாணன் மனைவியிசைப் பகைவெல்ல வண்ணலவை யடைந்த வாறு
மப்பாண னுளென்றோன் முலையருத்திப் பன்றியுயி ரளித்த வாறும்.

பகை - ஈழநாட்டுப் பாடினி. (௧0)

வயவேனக் குருளைகளை மந்திரிக ளாக்கியதும் வலியுண் டாகக்
கயவாய்க்குக் குருமொழிவைத் தருளியது நாரைக்குக் கருணை நாட்டந்
தயவால்வைத் தருண்முத்தி நல்கியதுங் கூடனகர் தன்னைச் சித்தர்
புயநாகம் போய்வளைந்து திருவால வாயாக்கிப் போந்த வாறும்.

வய எனக் குருளை - வலியபன்றிக்குட்டி - கயவாய் - கரிக்குருவி குருமொழி வைத்தருளியது - குருமூர்த்தியாகி உபதேசஞ் செய்தருளியது. தயை - தயவு என மரீஇயிற்று. (௧௧)

சுந்தரனென் றெழுதியகூ ர்ம்பெய்து செம்பியன்போர் தொலைத்த வாறுஞ்
செந்தமிழோர்க் கியற்பலகை யருளியதுந் தருமிக்குச் செம்பொன் பாடித்
தந்ததுவு மாறுபடு கீரற்குக் கரையேற்ற தந்த வாறும்
விந்தமடக் கியமுனியாற் கீரனியற றமிழ்தெளிய விடுத்த வாறும்.

செம்பியன் - சோழன். செந்தமிழோர் - பொய்யடிமை யில்லாச் சங்கப்புலவர். இயற்பலகை - சங்கப்பலகை. பாடி - ("கோங்குதேர் வாழ்க்கை" என்னுந் திருப்பாசுரம்) பாடி. பொன் தந்ததுவுமென்க. கீரற்கு - நக்கீரதேவரை. உருபுமயக்கம். முனி - அகஸ்திய மகாமுனிவர். (௧௨)

ஊமனாற் புலவரிக லகற்றியது மிடைக்காட னுடன்போய்க் கொன்றைத்
தாமனார் வடவால வாயமர்ந்த பரிசும்வலை சலதி வீசிப்
பூமனாய் குழலியைவேட் டருளியதும் வாதவூர்ப் புனிதர்க் கேறத்
தேமனாண் மலரடிகண் முடிசூட்டி யுபதேசஞ் செய்த வாறும்.

ஊமன் - முருகக்கடவுளது அவ்தாரமாய் வைசியர்மரபில் உதித்த மூங்கைப்பிள்ளையாராகிய உருத்திரசன்மர். புலவர் - சங்கப் புலவா. பூமன் ஆய்குழலி - மலாகள் பொருந்திய ஆய்ந்துவகிர்ந்த அளகமுடைய உமாதேவியார். வேட்டல் - திருமணஞ் செய்தல். தேமன் - தேன்பொருந்திய. நாள்மலர் - புதியமலர்போலும். (௧௩)

நரிகள்பரி யாக்கியதும் பரிகணரி யாக்கியது நாகம் பூண்டோ
னரியதிரு மேனியின்மே லடிசுமந்து மணசுமந்த வருளுந் தென்ன
னெரியடுவெஞ் சுரந்தணித்த வாறுமம ணரைக்கழுவி லிட்ட வாறுங்
கரியதென வன்னிகிணர் றிலிங்கங்கூய் வணிகமகட் காத்த வாறும்.

தென்னன் - கூன்பாண்டியன். எரி அடு - அக்கினிபோல வருத்தும். கரி - சாட்சி. அது - பகுதிப்பொருள் விகுதி. (௧௪)

எனத்தொகையா லறுபத்து நான்கிவற்றை நிறுத்தமுறை யீறி லாத [முன்
வினைத்தொகையா றகன்றோக் காலமெவர் பொருட்டெனநீர் வினவ வாற்
மனத்தளவி லன்புமிக்கட் யுடைந்தொழுகத் திருவாலவாயான் றாளை
நினைத்தளவி லாண்டம் பெருகவிரித் துரைப்பலெனு நெறியாற் கூறும்.

நிறுத்தமுறை - வைத்தமுறையே. தொகை ஆறு - தொகுதியாகியவழி. முனைத்து நினைத்து என்க. உரைப்பல் - உரைப்பன். கிரேதாயுகத்திலே பதினொறு திருவிளை

யாடல்களும், திரேதாயுகத்திலே பதினாறு திருவிளையாடல்களும், துவாபரயுகத்திலே பதினாறு திருவிளையாடல்களும், கலியுகத்திலே பதினாறு திருவிளையாடல்களும் நிகழ்ந்தனவாக வடநூலிற் கூறியிருக்கின்றன. (௪௫)

பதிகப்படலமுற்றியது.

ஆகச்செய்யுள் ௬௪௯.

---

முதலாவது

# இந்திரன்பழிதீர்த்தபடலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்பயில் குலிசப் புத்தேள் விருத்திரா சுரனைக் கொன்ற
வன்பழி விடாது பற்றக் கடம்பமா வனத்தி லெய்தி
யென்பர வாரம பூண்ட விறைவனை யருச்சித் தேத்திப்
பின்பது கழிந்து பெற்ற பேற்றினை யெடுத்துச் சொல்வாம்.

இ-ள். ஒளிதங்கிய வச்சிரப்படையுடைய இந்திரன் விருத்திராசுரனைக் கொன்றதனாலாகிய வலியபாவம் நீங்காது பற்ற அது நீங்கும்படி பெரிய கடம்பவனத்தில் வந்து எலும்பு பாம்புகளைப் பதக்கமாகப் பூண்ட சொக்கலிங்கப் பெருமானைப் பூசித்துப புகழ்ந்து பினபு அப்பாவம் ஒழிந்து பெற்ற நன்மையாகிய திருவிளையாடலை (யாம்) எடுத்துக் கூறுவாம்.—எ-று. (௧)

முன்னதா முகத்தில் வண்டு மூசுமந் தார நீழற்
பொன்னவிர் சுணங்குண் கொங்கைப் புலோமசை மணாளன் பொற்பூண்
மின்னவிர்ந் திமைப்பச் சிங்கஞ் சுமந்தமெல் லணைமேன் மேவி
யன்னமென் னடையா ராடு மாடன்மே லாக்கம் வைத்தான்.

இ-ள். கிரேதாயுகத்திலே வண்டுகள் மொய்க்கு மந்தார நிழலிலே சிங்கங்கள் சுமந்த மெல்லிய ஆசனத்திலே பொற்பிதிர்போல விளங்குந் தேமல் படர்ந்த தனங்களையுடைய இந்திராணி தலைவன் பொன்னணி ஒளிவீசிவிளங்க இருந்து அன்னம்போலு நடையுடைய மடவார் ஆடும் ஆடலின் விருப்பங்கொண்டு (நோக்கி)னான்.—எ-று. (௨)

மூவகை மலரும் பூத்து வண்டுளே முழங்கத் தெய்வப்
பூவலர் கொடிபோர்ந் தன்ன பொன்னனார் கூத்து மன்னோர்
நாவல ரமிழ்த மன்ன பாடலு நாக நாடு
காவலன் கண்டு கேட்டுக் களிமதுக் கடலி லாழ்ந்தான்.

இ-ள். நீர் நிலம் கோடு இவற்றிலுண்டான மூவகை மலரும் விரிந்து அவற்றில் வண்டுகள்இசைபாட மலர்விரிந்த சிறந்தகொடி ஆடினாற்போல, இலக்குமிபோன்ற (கமல முகமும் குவளைக்கண்ணும் குமுதவாயும் தாமரைத்தாளும் குமிழமூக்கும் கோங்கந்தனமும் காந்தட்கையும் முல்லைப் பல்லுமுடைய) அரம்பையர் ஆடலையும் அவர் நாவிற் றோன்றிய அமிர்தம்போலும் இனிய பாடலையும் இந்திரன் கண்டும் கேட்டும் களிப்பாகிய மதுக்கடலில் மூழ்கினான்.—எ-று. (௩)

பையுரா வணிந்த வேணிப் பகவனே யனைய தங்க
ளையனும் வியாழப் புத்தே ளாயிடை யடைந்தா னாகச்
செய்யதாள் வழிபா டின்றித் தேவர்கோ னிருந்தா னந்தோ
தையலார் மயலிற் பட்டோர் தமக்கொரு மதியுண் டாமோ.

இ-ள். அதிதேவசபையிலே சிவபிரானேடொத்த பிருகஸ்பதியாகிய தேவகுரவர்வர (அப்பொழுது அவரை மதித்து) வழிபாடுசெய்யாமல் இந்திரன்(உபேட்சையாக) இருந்தான். ஐயோ தையலார் மையலிலே தாழ்ந்து வீழ்ந்தவர்க்கு நல்லறிவு இல்லையல்லவா.—எ-று. (ச)

ஒல்லெனக் குரவ னேக வுமபாகோன் றிருவி னாக்கம்
புல்லெனச் சிறிது குன்றப் புரந்தர னறிந்திக் கேடு
நல்லதொல் குரவற பேணு நவையினல விளைந்த தென்னு
வல்லலுற் றறிவன் றன்னைத் தேடுவா னாயி னானே.

இ-ள். (அதனையுணர்ந்த) ஆசாரியா (உடனே அச்சபையினீங்கி) விரைந்துசெல்ல இந்திரனது (காந்தி வலிமை வித்தையாகிய) பெருஞ்செல்வம் (நாடோறும) பொலிவழிந்து சிறிது (சிறிது) குறைபடுதலால (அதனை) அவ்விந்திரன் அறிந்து இக்கேடு நம்மாசிரியரை அவமதித்த அபராதத்தினல் ஆவதென்று வருந்தி அவரைத்தேடத் தொடங்கினன்.—எ-று. (ரு)

அங்கவ னிருக்கை புக்கான் கண்டில னவித்த பாசப்
புங்கவ ருலகு மேனோர் பதவியும் புவன மூன்றி
லெங்கணுந் துருவிக் காணு னெங்குற்றான் குரவ னென்னுஞ்
சங்கைகொண் மனத்த னாகிச் சதுர்முக னிருக்கை சார்ந்தான்.

இ-ள். (இந்திரன்) அககுரவர் இருப்பிடம் பாசமோசநஞ் செய்த முனிவர்முதலாயினோர் பதவிகள் மற்றவுலகங்கள் ஆகிய எவ்விடத்தும் ஆராய்ந்து காணமல் நம்மாசிரியர் எங்குற்றாரொன்னும் ஐயங்கொணட மனததனாகிப் பிரமலோகத்தை அடைந்தான்.—எ-று. (சு)

துருவினா னங்குங் காணான் றிசைமுகற் றொழுது தாழ்ந்து
பரவிமுன் பட்ட வெல்லாம் பகரந்தனன் பகரக் கேட்டுக
குரவனை யிகழ்ந்த பாவங் கொழுநதுபட் டருந்துஞ் செவவி
வருவது நோக்கிச் சூழ்ந்து மலாமக னிதனைச் சொல்வான்.

இ-ள். அங்குந் தேடிக்காணமல் (இந்திரன்) பிரமாவை வழிபட்டு முன்னே நிகழ்ந்தவைகளைச் சொல்லக், கேட்டுக் குரவனை அவமதித்ததனலாகியபாவம் ஓங்கி நுகர்தற்குரியபருவம்வருதலைநோக்கி ஆராய்ந்துபிரமா இதனைச் சொல்வாராயினர்.—எ-று.

அனையதொல் குரவற் காணு மளவுநீ துவட்டா வீன்ற
தனையன்முச் சென்னி யுள்ளான் றானவா குலத்தில் வந்தும்
வினையினு லறிவான் மேலான் விசுவ வுருவ னென்னு
மினையனைக் குருவாக் கோடி யென்றனு மதற்கு நேர்ந்தான்.

இ-ள். அக்குரவனைக் காணும்வரை (இந்திரனே) நீ துவட்டாபெற்ற புத்திரனாகிய மூன்று சிரமுள்ள விச்சுவரூபன் (ஒருவன்) உளன். (அவன்) அசுரனாயினும் செய்கையாலும் அறிவாலும மேம்பட்டவனாதலால் அவனை ஆசிரியனாகக் கொள்ளுவாய் என்றலும் அதற்கு (இந்திரன்) உடன்பட்டவனாகி.—எ-று. (அ)

அழலவிர்ந் தனைய செங்கே ழுடுக்கிதழ் முளரி வாழ்க்கைத்
தொழுதகு செம்ம றன்னைத் தொழுதுமீண் டகன்று நீங்கா
விழைதகு காதல் கூர விச்சுவ வுருவன் றன்னை
வழிபடு குருவாக் கொண்டான் மலர்மகன் சூழ்ச்சி தேறான்.

இ-ள். பிரமாவைத் திரும்பவும் வணங்கி நீங்கி அவர் ஆலோசனையை ஆராயாது விருப்பமிக விச்சுவரூபனைக் குரவனாகக் கொண்டு சிவகவச வுபதேசம் பெற்று, காந்தி வலிமைவித்தைகளை முன்போலடைந்)தான்.—எ-று. உபதேசமுதலியன வடநூலிற்கண்டன. (௯)

கைதவக் குரவன் மாயங் கருதிலன் வேள்வி யொன்று
செய்திட லடிக ளென்னத் தேவாகட் காக்கங் கூறி
வெய்தழல் வளர்ப்பா னுள்ளம வேறுபட் டவுணர்க் கெல்லா
முய்திற னினைந்து வேட்டான் றனக்குமே லுறுவ தோரான்.

இ-ள். வஞ்சகக்குரவனது தீயகருத்தை எண்ணாமல் (அவனைநோக்கிச்) சுவாமீ ஒரு யாகஞ்செய்க வென்று (இந்திரன்) வேண்ட (அதற்கு விச்சுவரூபன்) தேவர் பொருட்டுச் செல்வம் உண்டாகவென (வாக்கினால்) வாழ்த்தி வேள்விசெய்பவனாகித் தனக்குமேல் விளைவதை ஆராயாமல் அகம வேறுபட்டு அசுரர்க்கு ஆக்கங்கருதி வேள்வி செய்தான்.—எ-று. (௧0)

வாக்கினன் மனத்தால் வேறாய மகஞ்செய்வான் செயலை யாக்கை
நோக்கினு னேதி தன்னா னோக்கினன் குலிச வேலாற்
றாக்கினன் றலைகண் மூன்றுந தணித்தணி பறவை யாகப்
போக்கினு னலகை வாயிற் புகட்டினன் புலவுச் சோரி

இ-ள். வாக்குமனங்கள் ஒற்றுமையின்றி வேள்விசெய்யும் விச்சுவரூபன் செயலை உடலிற் கண்ணுடைய இந்திரன் ஞானககண்ணாற் பாாதது சீச்சிரப்படையால் அவனைக் கொன்று (தவமுள்ள அவ்வசுரனது சோமபானஞ்செயயு முகமுடைய) தலைமைக் காடையாகவும் (சுராபானஞ்செய்யு முகமுடைய) தலையை ஊர்க்குருவியாகவும் (அன்னபானஞ்செய்யு முகமுடைய) தலையைச் சிச்சிலியாகவும் போக்கி ஊனின் உதிரத்தைப் பேயினது வாயிற் புகவிட்டான.—எ-று, பறவைவகை வடநூலிற்கண்டது. (௧௧)

தெற்றெனப் பிரம பாவஞ் சீறிவந தமரர் வேந்தைப்
பற்றலு மதனைத் தீர்ப்பான பண்ணவர் மரமேன் மண்மேற்
பொற்றொடி யார்மே னீர்மேல் வேண்டினர் புகுத்த லோடு
மற்றவ் ரிஃதியாந் தீர்க்கும் வண்ணம்யா தென்ன விண்ணோர்.

இ-ள். விரைவாக அப்பிரமக் கொலைப்பாவம் கோபித்துவந்து இந்திரனைப்பற்றி ஒருவருடம் அலைக்) க(ப்பின்பு) அப்பாவத்தைப் போக்கும்பொருட்டுத் தேவர்





(ஆலோசித்து) மரம் மண் பெண் நீர் இவரிற் (பிரித்துப்) புகுவித்தவளவில் அவர் இப் பாவத்தை யாம்போக்குமுறை எங்ஙனமென்று கேட்க (அதற்குத்) தேவர்.—எ - று. இணை விரவினுஞ் சிறப்புப்பற்றி உயர்திணையாகக் கூறினர். (கஉ)

அப்பிடை நுரையாய் மண்ணி லருவருப் புவரா யம்பொற்
செப்பிளங் கொங்கை யார்பாற் றீண்டுதற் கரிய பூப்பாய்க்
கப்பிணர் மரத்திற் காலும் பயினதாய்க் கழிக வென்றா
ரிப்பழி சுமந்த வெங்கட் கென்னல மென்றார் பின்னும்.

இ - ள். மரத்தில் ஒழுகும் பிசினும் மண்ணில் உவரும் பெண்ணிற் பூப்பும் நீரில் நுரையுமாய் (அப்பாவம்) கழிகவென்றார். (அங்ஙனமாயின்) இப்பாவஞ் சுமந்த எங்களுக்கு என்பயனென்று (அவர்) பின்னும் வினவினர்.—எ-று. இணர்-பூங்கொத்து. ()

ஷை வேறு.

கருவின் மாதர் கருவுயிர்க்கு மளவு முறையாற் கணவர்தோண்
மருவி வாழ்க மண்ணகழ்ந்த குழியு மதனால் வடுவொழிக
பொருவி னீரு மிறைத்தோறு மூறிப் பொலிக மரங்குறைபட்
டொருவி னாலுந் தழைகவென வொழியா நலனு முதவினார்.

இ - ள். மரம்வெட்டினாலுந் தழைகவென்றும் மண்தோண்டினாலும் அக்குழி (ஒருவருடத்தில்) மேவுகவென்றும் கருப்பமகளிர் பிரசவிக்கும்வரை கணவரைக் கூடி வாழ்க வென்றும் நீர் இறைக்குந்தோறும் ஊறுகவென்றும் நீங்காப்பயனை அவருக்கு(த் தேவர்) கொடுத்தார்.—எ-று. (கச)

மாசிற் கழிந்த மணியேபோல் வந்த பழிதீர்ந் திந்திரனுந்
தேசிற் றிகழத் துவட்டாத்தன் செல்வன் றன்னைத் றேவர் பிரான்
வீசிக் குலிசத் துயிருண்ட விழுமங் கேட்டு வெகுண்டுயிர்த்துக்
கூசிப் பழிகோள் கருதியொரு கொடிய வேள்வி கடிதமைத்தான்.

இ - ள். குற்றத்தினீங்கிய இரத்தினம்போலப் பற்றிய பாவநீங்கி இந்திரன் ஒளியினால் விளங்க, துவட்டா தன்மகனை இந்திரனால் இறந்த துன்பத்தைக் கேட்டுக் கோபித்துப் பெருமூச்செறிந்து நாணிப் பழிக்குப் பழிவாங்கக் கருதி விரைவிற் கொடிய வேள்வி செய்தான்.—எ-று. (கரு)

அந்தக் குண்டத் தெரிசிகைபோ லழலுங் குஞ்சி யண்டமுக
டுந்தக்கொடியத் தூமம்போ லுயிர்த்துச் செங்கண் கனற்செந்தீச்
சிந்தப் பிறைவா ளெயிறதுக்கித் திசைவான் செவிடு படநகைத்து
வந்தக் கொடிய விடம்போல வெழுந்தா னொருவாண் மறவீரன்.

இ - ள் அந்தயாககுண்டத்திலே தீச்சிகைபோல (சிவந்து) விளங்குஞ் சிகை அண்டமுகட்டிற் றாக்கக் கொடிய புகைபோலப் பெருமூச்செறிந்து கண்கள் கோபாக்கினியைச் சிதறப் பிறைபோன்ற வக்கிரதந்தத்தை அதுக்கித் திசைகளினும் ஆகாயத்தினுமுள்ளார் செவிடுபடப் பேருநகைசெய்து (கடலிற்) றோன்றிய ஆலாகல விடம் போல வாளேந்திய ஒரு பெருவீரன் உதித்தான்.—எ - று. வந்தவென்னும் அகரவீறு தொகை. (கசு)

கலிவிருத்தம்.

ஈங்குவன் விருத்திர னென்ப வாரழற்
றாங்குவன் கணைவிடு தூர நீண்டுநீண்
டோங்குவ னோங்குதற் கொப்ப வைகலும்
வீங்குவ னறனிலார் வினையி னென்பவே.

இ-ள். இவ்விடத்தே உதித்தவனை விருத்திராசுரன் என்பர். நிறைந்த கோபாக்கினி தங்கிய வலிய அம்புவிடுந் தூரம்வரை நாடோறும் நீண்டு நீண்டு உயருவன். நீளுதற்கு ஒப்பப் பாவிகள் தீச்செய்கைபோலப் பருப்பன் என்பர்.—எ-று. (௧௭)

வீங்குடல் விருத்திரன் றன்னை விண்ணவ
ரோங்குற வருதுவட் டாவெ னும்பெயாத்
தீங்குறு மனத்தினோன் றேவா கோனுயிர்
வாங்குதி பொருதென வரவிட் டானரோ.

இ-ள். தீயமனமுடைய துவட்டாவெனும் பெயரோன். தேவர்வருந்தும்படி வந்த விருத்திராசுரனை (நோக்கி) ப்போர்செய்து இந்திரன் உயிரை வாங்குவாய் என்று ஏவினான்.—எ-று. (௧௮)

மதித்துணி யெயிற்றினோன் வடவை போற் சினை இக்
கொதித்தெதிர் குறுகினன் கொண்ட லூர்தியு
மெதிர்த்தனன் களிற்றின்மே லிமயத் துச்சிமே
லுதித்ததோர் கருங்கதி ரொக்கு மென்னவே.

இ-ள். பிறைமதிபோன்ற தந்தமுள்ள விருத்திரன் வடவா முகாக்கினிபோலக் கோபித்துப் பொங்கி (ப்போர்செய்ய) எதிர்த்தான். இந்திரனும் பனிமலையுச்சியில் உதித்த கருஞாயிறுபோல வெள்ளையானை மேற்கொண்டு எதிர்த்தான்.—எ-று. (௧௯)

அறத்தொடு பாவநேர்ந் தென்ன வார்த்திரு
திறத்தரு மூண்டமர் செய்யக் கற்சிறை
குறைத்தவன் றகுவன்மேற் குலிச வேலெடுத்
துறைத்திட வீசினு னுடன்று ளவனும்.

இ-ள். பாவமும் புண்ணியமும் எதிர்த்தாற்போல அசுரனுந் தேவனும் ஒலித்துக் (கோபங்) கொண்டு போர்செய்ய (அவருள்) மலையிறகரிந்ததேவன் அசுரன்மேல் வச்சிரப்படையை ஓங்கி உறைக்கும்படி வீசினான். அசுரனுங் கோபித்து.—எ-று. (௨௦)

இடித்தனன் கையிலோ ரிருப்பு லக்கையைப்
பிடித்தனன் வரையெனப் பெயர்ந்து தீயெனத்
துடித்தனன் சசிமுலைச் சுவடு தோய்புயத்
தடித்தன னிந்திர னவச மாயினான்.

இ-ள். ஆரவாரித்துக்கையில் ஓர் இருப்புலக்கைகொண்டு மலைபோல நடந்து தீபோலத்துள்ளி இந்திராணி தனத்தழும்புள்ள புயத்திலே அடித்தான் (உடனே) இந்திரன் மூர்ச்சித்தான்.—எ-று. (௨௧)

அண்டரே றனையவ னவச மாறிப்பின்
கண்டகன் கைதவ நினைந்திக் கள்வனேர்
மண்டம ராற்றுவான் வலியி லோமெனப்
புண்டரீ கத்தவ னுலகிற் போயினன்.

இ - ள். தேவர்களில் மிகச்சிறந்தவன் மூர்ச்சைநீங்கிப் பின்பு அசுரனது மாயத்தையெண்ணி இவனுக்கு நேர்நின்று நெருங்கிப் போர்புரிய (யாம்) வலிமையில்லோமென்று கருதிப் பிரமலோகத்தை அடைந்தான்.—எ-று. (உஉ)

தாழ்ந்துதான் படுதுயர் விளம்பத் தாமரை
வாழ்ந்தவன் வலாரியோ டணைந்து மாமகள்
வீழ்ந்தமார் பினனடி வீழ்ந்து செப்பமால்
சூழ்ந்துவா னுடனை நோக்கிச் சொல்லுவான்.

இ - ள். (அடைந்து பிரமாவை) வணங்கித் தான்படுந் துன்பத்தைச்சொல்லப் பிரமா இந்திரனோடு (வைகுண்டஞ்) சார்ந்து இலக்குமிவிரும்பிய மார்புடையார் பாதத்தில் வணங்கி விஞ்ஞாபிக்க அவ்விஷ்ணு ஆலோசித்து இந்திரனைநோக்கிக் கூறுவாராயினர்.—எ-று. (உங)

ஆற்றவும் பழையதுன் னங்கை வச்சிர
மாற்றவ ருயிருண வலியின் றாதலால்
வேற்றொரு புதியது வேண்டு மாலினிச்
சாற்றுது மதுபெறுந் தகைமை கேட்டியால்.

இ - ள். (வலாசுரன் எலும்பாலாகிய) உனது கைவச்சிரப்படை மிகப்பழைமைதாகையால் பகைவனைக்கொல்ல வலிமையில்லை (அதனால்) இனிப்புதியதொரு படைக்கலம் வேண்டும் அது பெறுந்தன்மையைக் கூறுவோம் கேட்பாய்.—எ-று. வேறொரு என்பது ஒற்றுவிரிந்தது. (உச)

தொடையகன் மார்பநாந் தூய பாற்கடல்
தடையுநா ளசுரருஞ் சுரருங் கையில்வெம்
படையொடு மடையன்மின் பழுதென் றப்படை
யடையவுந் ததீசிபா லடைவித் தாமரோ.

இ - ள். மாலையணிந்த விரிந்தமார்பனே வெள்ளியபாற்கடல் கடையத்தொடங்கும்போது தேவரும் அசுரருமாகிய நீங்கள் ஆயுதங்களோடு அடையாதே யுங்கள் (அங்ஙனம் அடைதல்) குற்றமென்று அப்படைகளையெல்லாம் ததீசிமுநிவரிடத்தே யாம்வைக்கச் செய்தோம்.—எ-று. (உரு)

சேட்படு நாணனி செல்லத் தேவரா
வாட்படை யவுணரா வந்து கேட்டிலர்
ஞாட்படை படையெலா ஞான நோக்கினல்
வேட்படை வென்றவன் விழுங்கி னனரோ.

இ - ள். (பின்பு) மிகநெடுங்காலஞ் செல்லத் தேவராதல் அசுரராதல் வந்து கேட்டிலர் (அதனால்) காமபாணத்தைவென்ற அம்முநிவர் ஞானநோக்கினல் வலிமைபெற்ற அப்படைகளை விழுங்கினர்.—எ-று. தல்லீறுதொகை. (உசு)

விழுங்கிய படையெலாம் வேற றத்திரண்
டொழுங்கிய தான்முது கந்தண் டொன்றியே
யெழுகதிர்க் குலிசமா மதனை யெய்துமுன்
வழங்குவன் கருணையோர் வடிவ மாயினான்.

இ-ள். விழுங்கியபடை முழுவதும் ஒன்றுபடத் திரண்டு அவரது முதுகந்தண்டெலும்போடு பொருந்தி ஒழுங்குபட்டுள்ளது (அது) ஒளிவீசும் வச்சிரப்படையாம். அதனை (நீ) சென்று (கேட்டற்கு) முன்னே கொடுப்பார்; கருணையே ஒரு வடிவாகவுடையவ ராதலால்.—எ-று. ஆல் - அசை. (உஎ)

ஷை வேறு.

என்று மாதவ னியமப வும்பர்கோ
னென்றும் வானவர் தமமொ டோல்லெனச்
சென்று மாயையின் செயலை நோன்பினால்
வென்ற மாதவ னிருக்கை மேவினன.

இ-ள். என்று இலக்குமி நாயகர் சொல்ல இந்திரன் (தன்னைச்) சூழ்ந்த தேவர்களோடு விரைந்துபோய் மாயையின் செயல்களை ஐம்பொறியடக்கலாகிய நோன்பினால் வென்ற அம் மகாமுனிவரது ஆச்சிரமத்தை அடைந்தான்.—எ-று. (உஅ)

ஷை வேறு

அகமலாந் தருந்தவ னமராக் கன்புகூா
முகமலாந் தின்னுரை முகமன் கூறிநீா
மிகமெலிந் தெய்தினீர் விளைந்த தியாதது
தகமொழிந் திடலென வலாரி சாற்றுவான.

இ-ள் (அப்பொழுது) அப்பெருந்தவர் அகமகிழ்ந்து அருள்மிகுந்து முகமலர்ந்து தேவர்கள்பொருட்டு இனிய உபசாரவசனங்கள்சொல்லி நீங்கள் மிகமெலிந்து (இங்கே) வந்தீர்கள்போலும் நிகழ்ந்தது யாது அதனை மெய்யாகச் சொல்லக் கடவீர்களென்று கேட்க, இந்திரன் கூறுவானாயினான் —எ-று அன்பின் காரியத்தை அன்பெ'ன வுபசரித்தார். (உகூ)

அடிகணீா மருதமொன் றதனை வேண்டியிம்
முடிகொள்வா னவரொடு முநதி னேனது
செடிகொள்கா ரிருளுட லவுணர்த் தேய்த்தெமா
குடியெலாம் புரப்பதோா கொள்கைத் தாயது.

இ-ள். சுவாமீ நீர் தடைசொல்லாமல் அருளும்பொருளொன்று (உம்மிடத்தே உளது) அதனைவிரும்பி இத்தேவரோடு (அடியேன இங்கே) வந்தேன். அது அசுரர்களைக்கெடுத்து எங்குடிகளைக் காப்பதாகிய ஓர் கொள்கையை யுடைத்தாயது.—எ-று. செடி-குற்றம். (கூo)

யாதெனி னினையதுன் யாக்கை யுள்ளதென
றோதலும் யாவையு முணர்ந்த மாதவ
னாதவற் கண்டதா மனாயி னனனப்
போதலர்ந் தின்னன புகல்வ தாயினன்.

டு - ள். இத்தன்மையுடையது யாதெனின் உமது திருமேனியிலுள்ளதன்று கூறலும் முற்றுமுணர்ந்த அம்மகாமுனிவர் ஆதித்தனைக்கண்ட அரவிந்தம்போல முககமல மலர்ந்து இப்படிப்பட்டவைகளைக் கூறத்தொடங்கினர்.--எ-று. (௬௧)

நாய்நம தெனநரி நமதெ னப்பிதா
தாய்நம தெனநமன் றனதெ னப்பிணி
பேய்நம தெனமன மதிக்கும் பெற்றிபோ
லாய்நம தெனப்படும் யாக்கை யாரதே.

இ - ள். நாயும் நரியும் பிதாவும் மாதாவும் நமதெனவும் இயமன் தனதெனவும் நோயும் பேயும் நமதெனவும் மனத்தால் மதிக்கப்படுந் தன்மைபோன்று நாமும் நமதெனப்படும் உடல் யாருடையது (ஒருவருக்கும் உரியதல்ல).—எ-று. (௬௨)

விடம்பயி லெயிற்றர வுரியும் வீநுழை
குடம்பையுந் தானெனுங் கொள்கைத் தேகொலா
நடம்பயில கூத்தரி னடிக்கு மைவாவா
முடம்பையும் யானென வுரைக்கற் பாலதோ.

இ - ள். பாம்பு தன்றோலையும் பறவை நுழைகின்ற தன் கூட்டையும் தானென்று கொள்ளாமைபோல; நாடகர் போன்று நடிக்கும் பஞ்சப்பொறிகளவாழும் உடம்பை நானெனக் கொள்ளற்பால தன்று.—எ-று. பயில் - தங்கிய, செய்கின்ற. (௬௩)

நடுத்தயா விலார்தமை நலியத் துன்பநோ
யடுத்தயா வருநதிரு வடைய யாக்கையைக்
கொடுத்தயா வறம்புகழ் கொள்வ னேயெனி
னெடுத்தயாக் கையின்பய னிதனின் யாவதே.

இ - ள். இந்திரனே ! நடுவு நிலைமையும் தயையும் இல்லாதவசுரர், தங்களை வருத்த (அதனாலே) துன்பநோயடைந்த அனைவரும் (இனபச்) செல்வம் அடையும்படி உடலைக்கொடுத்துப் புண்ணியமும் புகழும் பெறுவனேயானல் இதனினும் எடுத்த வுடம்பினாலாகிய பயன் யாதுளது.—எ-று. அய்யா - இடைக்குறையாயிற்று. (௬௪)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

என்றனன் கரண மொன்றி யெழுகருத் தறிவை யீர்பப
நின்றனன் பிரம நாடி நெறிகொடு கபாலங் கீண்டு
சென்றனன் விமான மேறிச் சேர்ந்தன னுலகை நோன்பால்
வென்றவன் றறக்கம் புக்கு வீற்றினி திருந்தா னம்மா.

இ - ள். என்றுகூறி உலகைத் தவத்தால்வென்ற ததீசிமுனிவர் அந்தக்காரணங்கள் ஒன்றுபட்டெழுகின்ற சிவபோதத்தைச் சிவபோதம் தன்வசப்படுத்த (அந்தமயமாய்) நிட்டைகூடிச் சுழுமுனைநாடி வழிக்கொண்டு கபாலங் கிழித்துச்சென்று (சிவசரூப்பியம் பெற்று) விமானமேற்கொண்டுபோய்ச் சிவலோகத்தில் வீற்றிருந்தார்.—எ-று. (௬௫)

அம்முனி வள்ள லீந்த வடுபடை முதுகந் தணைடைத்
தெம்முனை யடுபோர் சாய்க்குந் திறலகெழு குலிசஞ் செய்து
கம்மியப் புலவ னுக்கங் கனர்ந்துகைக் கொடுப்ப வாங்கி
மைம்முகி லூர்தி யேந்தி மின்விடு மழைபோ னின்றான்.

இ-ள். (பெருங்) கொடையினராகிய அம்முனிவர் கொடுத்த கொல்லும்படைகள் (திரண்ட) முதுகந்தண்டெலும்பைப் பகைவர் முனைகின்ற போரினைச் சாய்க்கும் வலிமைபெற்ற வச்சிரப்படையாக்கித் தேவதச்சன் வெற்றிதரக் கடவதென்றுவாழ்த்திக் கொடுக்க வாங்கி இந்திரன் கையிலேந்தி மின்னலைவீசு மேகம்போல நின்றான்.—எ-று. ()

மறுத்தவர் வஞ்சப் போரால் வஞ்சித்து வென்று போன
கறுத்தவா ளவுணற் கொலவான் கடும்பரி நெடுந்தோ நீழல்
வெறுத்தமால் யானை மள்ளர் வேலைபுக கெழுந்து குன்ற
மறுத்தவ னவர்கோ னந்த வவுணர்கோ மகனைச் சூழ்ந்தான்.

இ-ள். குற்றமுடைய கபடப்போரால வென்று சென்ற விருத்திரனைக் கொல்ல மலையிறகரிந்த தேவர்தலைவன் இரதகஜ துரகபதாதி சேனைக்கடல் நடுவேதோன்றி அசுரர் தலைவனைச் சூழ்ந்தான்.—எ-று. கறுத்த - கோபித்த. நீழல்வெறுத்த - நிழலைக் கோபித்த. (கூஎ)

வானவர் சேனை மூண்டு வளைத்தலும் வடவைச் செந்தீ
யானது வரையி னோங்கி யழன்றுருத் தெழுந்தா லென்னத்
தானவர் கோனு மானந் தலைக்கொள வெழுந்து பொங்கிச்
சேனையுந் தானு மூண்டு சீறிகின் றடுபோர் செய்வான்.

இ-ள். தேவர்சேனை கோபங்கொண்டு வளைக்க, வடவைத்தீ மலைபோலோங்கிக் கொதித்துக் கோபங்கொண் டெழுந்தாற்போல மானமேலிட அசுரன் எழுந்து சேனையுந் தானும் பெருங்கோபமூண்டு போர்செய்தான்.—எ-று. (கூஅ)

அடுத்தன ரிடியே றென்ன வார்த்தன ராக்கங் கூறி
யெடுத்தனர் கையிற் சாப மெறிந்தனர் சிறுநா ணோசை
தொடுத்தனர் மீளி வாளி தூர்த்தனர் குந்த நேமி
விடுத்தனர் வானோர் சேனை வீரர்மே லவுணவீரர்.

இ-ள். (அப்பொழுது) அசுரவீரர் தேவவீரர்மேல் நெருங்கி ஆர்த்துவென்றி கூறிக் கையில் வில்லேந்திச் சிறிய நாணொலிசெய்து வலிய அம்புகளைத் தொடுத்து விடுத்தனர் (அவருட்) சிலர் வேல சக்கரமுதலிய படைகளை எறிந்தனர்.—எ-று. (கூகூ)

கிட்டினர் கடகக் கையாற் கிளர்வரை யனைய திண்டோள்
கொட்டினர் சாரி மாறிக் குதித்தனர் பலகை நீட்டி
முட்டின ரண்டம் விள்ள முழங்கினர் வடிவா ளோச்சி
வெட்டின ரவுணச் சேனை வீரரை வான வீரர்.

இ-ள். தேவவீரர் அசுரவீரரை நெருங்கிக் கைகளாற் றோள்களைக் கொட்டினர். (அவருட்) சிலர் வலசாரி இடசாரியாகத் துள்ளினர். (அசுரர் கேடகங்களோடு) கேட

கங்களை மோதினர். அண்டம் வெடிபட முழங்கினர். வாட்படைகளை ஓங்கி வெட்டினர்.—எ-று. (௪0)

வீழ்ந்தனர் தோளுந் தாளும விண்டனர் சோரி வெள்ளத்
தாழ்ந்தனர் போருந் தாரு மஃன்றன ரகன்ற மார்பம்
போழ்ந்தனர் சிரங்க ளெங்கும புரணடனா கூற்றார் புக்கு
வாழ்ந்தன ரடுபோ ராற்றி வஞ்சகன சேனை மள்ளர்.

இ-ள். விருத்திரனது சேனைவீரர் போர்செய்து தோள்களுந் தாள்களும் அற்று வீழ்ந்தவரும் உதிரப்பெருக்கின் மூழ்கினவரும் தும்பைமாலையும் யுத்தஞ்செயதலு நீங்கினவரும் பரந்தமார்பு பிளக்கப்பட்டவரும தலைகள் புரளப்பட்டவரும் இயமனுலகிற் சென்று வாழப்பட்டவரு மாயினர்.—எ-று. (௪௧)

தாளொடு கழலு மற்றார் தலையொடு முடியு மற்றார்
தோளொடு வீர மற்றா தும்பையோ டமரு மற்றார்
வாளொடு கரமு மற்றார் மார்பொடு கவச மற்றா
கோளொடு மாண்மை யற்றார் குறைபடக் குறையா மெய்யா.

இ-ள். (இந்திரனதுசேனைவீர) அமரா வீரகண்டையொடு தாள்களும்மகுடத்தொடு முடிகளும் வீரத்தொடு தோள்களும் போரொடு தும்பைமாலைகளும் வாளொடு கைகளும் கவசத்தொடு மார்புகளும் (உடல்) வலியொடு மனவலிகளும் அற்றனர்.—எ-று. (௪௨)

தொக்கன கழுகு சேனஞ் சொரிகுடா பிடுங்கி யீர்ப்ப
வுக்கன குருதி மாந்தி யொட்டல்வாய நெட்டைப் பேய்க
ணக்கன பாடல் செய்ய ஞாட்பினுட் கவந்த மாடப்
புக்கன பிணத்தின் குன்றம் புதைத்தபாா சிதைதத தண்டம்.

இ-ள். போர்க்களத்திலே கழுகளும் பருந்துகளுங் கூடிக் குடரையிழுக்கவும் பேய்கள் ஒழுகும் உதிரததையுண்டு நகைததுப்பாடவும் தலையற்றவுடல்கள் ஆடத்தொடங்கின. பூமியைமூடிய பிணமலை ஆகாயததைச் சிதைததது.—எ-று. (௪௩)

இவ்வகை மயங்கிப் போர்செய் திறந்தவ ரொழியப் பின்னுங்
கைவ்வகை யடுபோ ராற்றிக் கரையிறந தார்கண் மாண்டா
ரவ்வகை யறிந்து வானத் தரசனு மவுணர் வேநதுந்
தெய்வதப் படைகள் வீசிச் சிறிதின் றடுபோர் செய்வாா.

இ-ள். இப்படிக்கலந்து போர்புரிந்து மரித்தவரொழியப் பின்பும் ஒழுங்காகிய படைவகுப்பிலே போர்செய்து அளவில்லாதவர் இறந்தனர் அதனையுணர்ந்து தேவர்தலைவனும் அசுரர்தலைவனுந் திவ்வியாஸ்திரங்களாலே போர்செய்யத்தொடங்கினர்—எ-று.

அனற்படை விடுத்தான் விண்ணோ ராண்டகை யதனைக் கள்வன்
புனற்படை விடுத்துச் சிற்றந் தணித்தனன் புனிதன் காற்றின்
முனைப்படை விடுத்தான் வெய்யோன் முழங்குகால் விழுங்கு நாகச்
சினைப்படை தொடுத்து வீசி விலக்கினன் றேவ ரஞ்ச.

இ - ள். இந்திரன் ஆக்கினேயாஸ்திரம்விட அசுரன் வாருணாஸ்திரம் விட்டு அதனோபத்தைத் தணித்தான். இந்திரன் கூறிய வாயவியாஸ்திரம் விட (அதனை)த் தேவரஞ்ச அசுரன் நாகாஸ்திரம் விட்டு விலக்கினான்.—எ-று. ஆண்டகை - ஆண்மையன். கால - காற்று. (சரு)

நாகமாப் படைவிட டார்ததா னுகாகோ னுவணச் செலவன்
வேகமாப் படையை வீசி விலக்கினான் றருவர் வேந்தன்
மோகமாப் படையைத் தொட்டு முடுக்கினான் முனைவ னன்ன
தேகமாப் படிறன ஞானப் படைவிட்டுத் திருள்போ னின்றான்.

இ - ள். இந்திரன் நாகாஸ்திரம் விட (அதனை) அசுரன காருடாஸ்திரம் விட்டு விலக்கினான் இந்திரன மோகாஸ்திரந் தொடுக்க அது ஒழிம்படி பெரிய வஞ்சகனாகிய அசுரன் ஞானாஸ்திரந் தொடுத்து (விலக்கி) நின்றான்.—எ-று. (சசு)

மட்டிடு தாரான் விட்ட வானவப படைககு மாறு
விட்டுடன் விலக்கி வேறும விடுத்திடக் கனன்று வஞ்சன்
முட்டிட மான வெங்கான் மூடடிடக் கோபசெந்தீச
சுட்டிடப் பொருது பொங்கிச் சுராதிப னிதனைச் செயவான.

இ - ள். இந்திரன் விட்ட படைகட்கு உடனே வேறுபடைகள் விட்டு விலக்கி மற்றும் படைகள் விட்டு அசுரன் நெருங்க (அதுகணடு) கோபித்து இந்திரன் இதனைச் செய்வான் ஆயினான்.—எ-று. (சஎ)

வீங்கிரு ளொதுங்க மேக மின்விதிர்த் தென்னக் கையி
லோங்கிருங் குலிச வேலை யொலலென விதிர்த்த லோடுந
தீங்குளம் போன்றி ருண்ட திணியுடற் கள்வ னஞ்சி
வாங்கிருங கடலில் வீழ்ந்தான் மறைந்தமை நாக மொத்தான்.

இ - ள். பேரிருள் விலகும்படி மேக மின்னல் வீசல்போலக் கையிலேந்திய பெரிய வச்சிரப்படையை இந்திரன் அசைக்க அசுரன் (அதற்கு)ப் பயநது வளைந்த கடலில விழுந்து மைநாகமலைபோல மறைந்தான்.—எ-று. (சஅ)

ஒக்கவிந் திரனும் வீழ்ந்தா னுடல்சின வுருமே றன்னான்
புக்கிடந் தேடிக் காணான் புண்ணிய முளரி யண்ணல்
பக்கம்வந் தனைய செய்தி பகர்ந்தனன் பதகன் மாளத்
தக்கதோர் சூழ்ச்சி முன்னிச் சராசர மீன்ற தாதை.

இ - ள். அவ்விருத்திரனோடு இந்திரனும் வீழ்ந்து மிகுந்த கோபமுள்ள இடி போன்ற அவன் புகுந்த இடத்தைத் தேடியுங் காணாது பிரமாவிடத்தே வந்து அதனைக் கூற உயிர்களைப் பெற்ற பிரமா அப்பாதகன் இறக்கத்தக்க ஆலோசனையைக் கருதி.— எ-று. புக்கவிடம் - புக்கிடமென அகரந்தொகை. (சகூ)

விந்தவெற் படக்கி னுற்கீ துரையென விடுப்ப மீண்டு
சந்தவெற் படைந்தான் வானோர் தலைவனை முகமன் கூறிப்
பந்தவெற் பறுத்தான் வந்த தெவனெனப் பறைக ளெல்லாஞ்
சிந்தவெற் பறுத்தான் வந்த செயலெலா முறையாற் செப்பி.

இ-ள். விந்தமலையை அடக்கிய அகத்தியமகாமுநிவற்கு இதனைச் சொல்லுவா யென்று அனுப்பத் திரும்பிப் பொதியமலையை அடைந்தான். பந்தமலையைக்கெடுத்த அம்முநிவர் இந்திரனை யுபசரித்து வந்தகாரியம் யாதென்றுவினவ அவன் வந்தசெய்தி களைச் சொல்லி —எ-று. (௫0)

யாவையு முணர்ந்த வெநதைக் கியானெடுத் துணர்த்து கின்ற
தாவதென் னமருக் காற்று தாழிபுக் கொளித்தா னுவி
வீவது மவனால் வந்த விழுமமோ யெல்லா மின்று
போவதுங் கருதி நும்பாற புகுநதன மடிக ளென்றான்.

இ-ள். முற்றுமுணர்ந்த தேவரீர்க்கு யான் அறிவிக்கின்றதென்னை போருக்குப் பயந்து கடலின் மறைந்த விருத்திரனது உயிர் (உடலினின்று) நீங்குவதும் அவனால் வந்ததுன்பம் இப்போதே ஒழிவதுங்கருதிச் சுவாமீ! உம்மிடத்து யாங்கள் வந்தோமெ ன்றான்.—எ-று. (௫க)

என்றவ னிடுக்கண் டீர்ப்பா னிகல்புரி புலன்க ளைந்தும்
வென்றவ னெடியோன் றன்னை விடையவன் வடிவ மாக்கி
நின்றவ னறிவா னந்த மெய்மையாய் நிறைந்த வெள்ளி
மன்றவ னூழிச் செந்தீ வடிவினை மனத்துட் கொண்டான்.

இ-ள். என்று கூறிய இந்திரனது துன்பந்தீர்க்கும் பொருட்டுப் பகைக்கின்ற ஐம்பொறிகளை வென்றவரும் (திருக்குற்றாலத்திலே) விஷ்ணு வடிவைச் சிவலிங்கவடி வாக்கியவருமாகிய அம்மகா முநிவர் உண்மையறிவானந்த மயமாய் (எங்கு) நிறைந்த வெள்ளியம்பல வாணரது சிவந்த ஊழிக்காலத்தீபோன்ற திருவுருவை இருதயத்திலே தியானித்து.—எ-று. (௫உ)

கைதவன் கரந்து வைகுங் கடலைவெற் படக்குங் கையிற்
பெய்துழுந் தெல்லைத் தாக்கிப் பருகினுன் பிறைசேர் சென்னி
யையன தருளைப் பெற்றாக் கதிசய மிதென்கொன் மூன்று
வையமுத் தொழிலுஞ் செய்ய வல்லவ ரவரோ யன்றோ.

இ-ள். அவ்வஞ்சகன் மறைந்துறையுங் கடல்நீரை விந்தமலையடக்கிய (நீண் ட) திருக்கரத்திற் கொண்டு உழுந்தமிழுமளவினதாக்கி ஆசமனஞ்செய்தார். சிவபிரான் திருவருளைப் பெற்றவர்க்கு ஈதோரதிசயத் தொழிலென்னை அவரோ எல்லாவுலகங்களை யும் முத்தொழில் செய்ய வல்லவரல்லவா.—எ-று. மூன்றுவையம்-உபலக்கணம். (௫௩)

அறந்துறந் தீட்டு வார்த மரும்பெறற் செல்வம் போல
வறந்தன படுநீர்ப் பௌவம் வடவைகட் புலப்பட் டாங்கு
நிறைந்தசெம் மணியு முத்தீ நீண்டெரி சிகைபோ னீண்டு
சிறந்தெழு பவளக்காடுந் திணியிருள் விழுங்கிற் றம்மா.

இ - ள். பாவவழியிலே தேவொரது செல்வம்போலக் கடலினுள்ள நீர்கள் இறந்தன. வடவைத்தீ வெளிப்பட்டாற்போல மாணிக்கங்களும் அத்தீச்சிகைபோலப் பவளக்கொடிக்காடும் இருளைப் போக்கியது.—எ-று. பெறலரும் என்ப. (௫௪)

பணிகளின் மகுட கோடிப் பரப்பென விளங்கிப பல்கா
சணிகலப பேழை பேழ்வாய் திறந்தனைத் தாகி யொன்பான
மணிகிடந் திமைக்கு நீரான் மகபதி வேள்விக் காவாய்த்
திணியுட லவுணன் பட்ட செங்கள மனைய தன்றே.

இ - ள். (அக்கடல்) பாமபுகளின மகுடவரிசைகள் போலவும் பலவிரத்தினுபரணப் பெட்டியினது பிளந்த வாயைததிறநது வைததாற்போலவும் விளங்கியதாகி நவமணிகளுந்தங்கிப் பிரகாசிக்குந தனமையால் இந்திரனது வேள்விக்குப் பசுவாய் வந்த வலாசுரன் இறந்த போர்க்களம் போன்றது.—எ-று. (௫௫)

வறந்தநீர் தன்னின் மின்னு வாள்விதிர்த் தென்னப் பன்மீ
னெறிந்தன நெளிந்த நாக மிமைத்தன வளையு முத்துஞ்
செறிந்தன கரந்த யாமை சோர்ந்தபல் பண்டஞ் சிந்தி
முறிந்தன வங்கங் கங்க முக்கின சிறுமீ னெல்லாம்.

இ - ள். வறந்த (அககடல்) நீரில், விளங்கும் வாட்படையை அசைத்தாற்போல மீன்கள் துள்ளின. பாம்புகள் நெளிந்தன. சஙகுகளும்முத்துகளும் விளங்கின. நெருங்கினவாய ஆமைகள் மறைந்தன. பொருநதிய பலபணடங்கள் சிந்தி மரக்கலங்கள் முறிந்தன. பருந்துகள் சிறுமீன்களை விழுஙகின.—எ-று. (௫௬)

செருவினி லுடைந்து போன செங்கண்வா ளவுண னங்கோ
ரருவரை முதுகிற் காரபோ லடைந்துவா னுடோ செய்த
வுருகெழு பாவந்தானே யுருவெடுத் திருந்து நோற்கும்
பரிசென நோற்று னின்ளைம பரிபவ விளைவு பாரான்.

இ - ள். போரிலே தோல்வியுற்றுசசென்ற விருத்திரன் மேல்வருந்துன்பத்தை ஆராயாது அக்கடல்நடுவிலே ஒரு பெரியமலைச சிகரததிலே மேகமபோலடைந்து தேவர்கள்செய்த அஞ்சததக்கபாவம் ஒருருக்கொண்டு நோற்குந்தனமைபோல (பபத்மாசனததிலிருந்து கலலைப்போல அசைவினறி இநதிரியஙகளை மனசிலும் மனசைப் பரப்பிரமத்திலும் சேரத்து) யோகத்தியானத்திற் கருத்துடையனுகி யிருந்தான்.—எ-று. (௫௭)

கைதவ நோன்பு நோற்குங் கள்வனைக் கண்டு வானோ
செய்தவ மனையான் யாணர் வச்சிரஞ் சீரிப பான்போற்
பொய்தவன் றலையைக் கொய்தான் புணரிவாய் நிறையச் சோரி
பெய்தது வலாரி தன்னைப் பிடித்தது பிரமச் சாயை.

இ - ள். இந்திரன் (தேவர்களிடத்தே அருளின்றிக்) கபடமாகத் தவஞ்செய்யும் அவ்விருத்திரனைக் கண்டு புதிய வச்சிரப்படையைப் பரீக்ஷிப்பவன்போல அவன் முடியைத்தடிந்தான் (உடனே அவ்வுடலினின்றும் வறந்த) கடலிடம் நிறைய வுதிரம்ஒழுகியது. (போரிலுடைந்து தவம்புரிந்த) அப்பிரமக்கொலைப் பாவம் இந்திரனைப் பற்றியது.—எ-று. (௫௮)

உம்மெனு மார்பைத் தட்டு முருத்தெழு மதிர்க்கும் போர்க்கு
வம்மெனும் வாய்மடிக்கும் வாளெயி றதுக்கும் வீழுங்
கொம்மென வோடு மீளுங் கொதித்தழுஞ் சிரிக்குஞ் சீறு
மிம்மெனு மளவு நீங்கா தென்செய்வா னஞ்சி னானே.

இ-ள். (அப்பிரமகத்தி மை மலைபோன்றதும் இயமன்போல் வடிவெடுத்ததும் பயஞ்செய்வதும் உலக்கையைக் கைக்கொண்டதுமாகி) உம்மென்னும்மார்பைத்தட்டும் கோபித்தெழும் ஆரவாரிக்கும் போர்க்குவா வென்னும் வாயைமடிக்கும் ஒள்ளிய பற்களைக்கடிக்கும் விழும் விரைந்தோடும் திரும்பும் கொதிப்போடழும் நகைக்கும் சீறும் கணமும் விலகாது (இங்ஙனமிருத்தலால் இதற்கு) யாது செய்வது (என்று) இந்திரன் அஞ்சினன்.—எ-று. (ருகூ)

விரைந்தான் றிசையோர் வாவி வீழ்ந்தொரு கமல நூலுட்
கரந்தனன் மகவா னிப்பாற் கற்பக நாடு புலலென்
றிருந்ததா லிருக்கு மெல்லை யிம்பரி னகுட னென்போ
னரும்பரி மேத வேள்வி யாற்றினா னாற்று மெல்லை.

இ-ள். (தீரிற்பேய் சேராததலால்) விரைந்துபோய் ஈசானதிசையில் (உருத்திரலோகத்தில் உள்ள) ஓர்வாவியில் இந்திரன் வீழ்ந்து ஒரு தாமரை நாளநூலில் மறைந்தான். பின்பு சுவர்க்கலோகம் பொலிவழிந்திருந்தது. (அங்ஙனம்) இருக்கும்போது இவ்வுலகில் நகுஷனென்னும் அரசன் அரியபரிமேத வேள்விசெய்தான். (அப்படிச்) செய்யும்பொழுது.—எ-று. (சு0)

அரசிலா வறுமை நோக்கி யவனைவா னுடா யாரும்
விரைசெய்தார் மகுடஞ் சூட்டி வேந்தனாக் கொண்டார் வேந்தாய்
வருபவன் சசியை யீண்டுத் தருகென மருங்கு ளாரபோய்த்
திரைசெய்நீ ரமுத னாட்குச் செப்பவக் கறபின் மிக்காள்.

இ-ள். தேவர்கள், (தங்களுக்கு) அரசனில்லாவறுமை கருதி அந்நகுடனை முடிசூட்டி அரசனாகக் கொண்டார்கள் அவன் இந்திராணியை இங்கே அழைக்கக் கடவீரென்று கூற அருகிலுள்ளார் போய்க் கடலமிழ்ததோடொத்த இந்திராணிக்குச்சொல்ல அக்கற்பினமேம்பட்டவள்.—எ-று. (சுக)

பொன்னனுயிர்த் தனைய காட்சிப புண்ணிய குரவன் முன்போய்
மின்னுயிர்த் தனையா னின்று விளமபுவா ளிதென்கொல் கெட்டே
னென்னுயிர்த் துணைவ னுங்கே யிருக்கமற் றொருவ னென்னைத்
தன்னுயிர்த் துணையாக் கொள்கை தருமமோ வடிக ளென்றாள்.

இ-ள். தேவகுருவின் திருமுன்சென்று மின் வடிவங்கொண்டது போன்றவளாய் நின்று விண்ணப்பஞ்செய்யத் தொடங்கி, சுவாமீ ஈதென்ன ஆச்சரியம், என்னுடைய பிராணநாயகர் அங்கேயிருக்கவும் பிறிதொருவன் என்னைத் தன் மனைவியாகக் கொள்ளுதல் நீதியாமோ வென்றாள்.—எ-று. காட்சி - தோற்றம். (சுஉ)

மாதவ ரெழுவர் தாங்க மாமணிச் சிவிகை மீது
போதரி னவனே வானோர் புரந்தர னவனே யுன்றன்
காதல் னாரு மென்றான் கைதொழு ததற்கு நேர்ந்தம்
மேதகு சிறப்பா லிங்கு வருகென விடுத்தா டூது.

இ - ள். சப்தமுனிவருந் தாங்கிவரச் சிவிகைமேற்கொண்டு (ஒருவன்) வந்தால் அவனே தேவராஜனும் உன்னுடைய நாயகனுமாவனென்று குரவர் கூறினர். அதற்கு டம்பட்டுத் தொழுதுசென்று அழகிய மிக்கசிறப்போடு (நகுடன்) இங்கேவருகவென்று இந்திராணி தூதனுப்பினள்.—எ-று. சப்தமுனிவர் - அகத்தியர், ஆங்கிரசர், கோதமர், காசியபர், புலத்தியர், மார்க்கண்டர், வசிட்டர். (௬௧)

மனிதரின் மகவா னாகி வருபவன் சிவிகை தாங்கும்
புனிதமா தவரை யெண்ணான் புன்கணோய் விளைவும் பாரான்
கனிதரு காமந் துய்க்குங் காதலால விரையச் செல்வா
னினிதயி ராணி பாற்கொண் டேகுமின் சாப்ப வென்றான்.

இ - ள். (தூதுவந்தவுடன்)மானுடரில் இந்திரனாகிவரு நகுடன் சிவிகைதாங்கும் பெருந்தவத்தினராகிய பரிசுத்தமுனிவரது மகிமையைச் (சிறிதும)கருதாமலும்(இனித்) துன்பநோய்உண்டாதலை ஆராயாமலும் கனிந்தகாமத்தை நுகரும் பேராசையாலே கணத்தில் அடையநினைந்து செவ்விதாக இந்திராணியிடத்தே ஓட்டமாய்க் கொண்டுசெல்லுங்களென்று கூறினான்.—எ-று. எண்ணான்பாரான் முற்றெச்சங்கள். (௬௨)

சர்ப்பமா கெனமுற் கொம்பு தாங்கிமுன் னடக்குந் தென்றல்
வெறபனு முனிவன் சாபம் விளைத்தனன் விளைத்த லோடும்
பொற்பமா சுணமே யாகிப் போயினா னறிவி லாத
வற்பரா னவர்க்குச் செல்வ மல்லது பகைவே றுண்டோ

இ - ள். (சிவிகையின்) முற்கொம்புதாங்கி முன்சென்ற பொதியமலை முனிவனாகிய யான்(நகுடனே) நீ சர்ப்பமாகக்கடவாயென்று சாபங்கொடுத்தேன் உடனே (அவன்) பொலிவுபெறப் பெரும்பாம்பாகிப்போனான். சிற்றறிவினர்க்குச் செல்வமன்றிப் பிறிதொருபகையில்லை (அல்லவா) — எ-று. வடமொழியிலும் யான் சபித்தேனென அகத்தியமகாமுனிவர் கூறியிருக்கின்றனர். (௬௩)

பின்னர்த்தங் குரவ னான பிரானடி பணிந்து வானோர்
பொன்னகர் வேந்த னின்றிப் புலம்படை கின்ற தைய
வென்னலுங் குரவன் போயவ் விலஞ்சியு ளொளித்தாற் கூவித்
தன்னுரை யறிந்து போந்த சதமகற் கொண்டு மீண்டான்.

இ - ள். பின்பு தேவர்கள் தம்மாசாரியனை வணங்கி ஐயரே தேவலோகம் அரசனின்றி வருந்தம் அடைகின்றதென்று விண்ணப்பஞ்செய்தவளவில் ஆசாரியர்சென்று ஈசானதிசையின் உருத்திரலோகத்துள்ள தடாகத்தில் ஒளித்த இந்திரனை அழைக்க, அவரதருண்மொழியை யுணர்ந்து வெளியில்வந்தஇந்திரனைக்கொண்டு திரும்பினார்.—எ-று.

கொடும்பழி கோட்பட் டான்றன் குரவனை வணங்கி யென்னைச்
சுடும்பழி கழிவ தெங்ஙன் சொல்லெனத் தொலைவ தோர்ந்தா
னடும்பழி மண்மே லன்றி யறாதுநீ வேட்டைக் கென்னப்
படும்பழி யிதனைத் தீர்ப்பான் பார்மிசை வருதி யென்றான்.

இ - ள். கொடும்பாவத்தாற் பீடிக்கப்பட்ட இந்திரன் தன்னுடைய ஆசாரியனை வணங்கி அடியேனைவருத்தும் பாவங்கழிவதெப்படி கூறியருளுமென வினவ (அதற்கு ஆசாரியர் பாவம்) ஒழியும் வழியை ஆராய்ந்து (இந்திரனே) கொலைப்பாவம் பூமியிலன்றி ஒழியாது (ஆதலால்) நீ வேட்டமாடும் வியாசத்தால் இப்பாவத்தை ஒழிக்கப் பூமியில் வரக்கடவாயென்று கூறினர்.—எ-று. ஓர்ந்தான் முற்றெச்சம். (௬எ)

ஈசனுக் கிழைத்த குற்றந் தேசிக னெண்ணித் தீர்க்குந்
தேசிகற் கிழைத்த குற்றங் குரவனே தீர்ப்ப தன்றிப்
பேசுவ தெவனோ தன்பாற் பிழைத்தகா ரணத்தால் வந்த
வாசவன் பழியைத் தீர்ப்பான் குரவனே வழியுங் கூற.

இ - ள். சிவபிரானுக்குச் செய்த அபராதத்தை ஆசாரியர் ஆராய்ந்து தீர்ப்பர். ஆசாரியருக்குச்செய்த அபராதத்தை அவரோ தீர்ப்பதன்றி வேறுகூறுதல்யாது (ஆதலின்) தம்மாட்டுத்தவறிய காரணத்தால் வந்த இந்திரனதுபாவத்தைப்போக்க ஆசாரியரே (சிவலிங்கபூஜையாகிய) வழியும் அருள.—எ-று. (௬அ)

வாம்பரி யுகைத்துத் தன்னால் வழிபடு குரவன் வானோ
தாம்பரி வோடுஞ் சூழத் தராதலத் திழிந்து செம்பொற்
காம்பரி தோளி பங்கன் கயிலைமால் வரையைத் தாழ்ந்து
தேம்பரி யலங்கன் மார்பன் றென்றிசை நோக்கிச் செல்வான்.

இ - ள். இந்திரன் (உடனே அமராவதிநகரஞ்சார்ந்து) வாவும் குதிரைமேற்கொண்டு ஆசாரியரும் தேவரும் அன்பொடுசூழ்ந்துவரப் பூமியில் இறங்கிச் சிவபிரானது திருக்கைலாசமலையை வணங்கித் தென்றிசைநோக்கிச் செல்வானாயினன்.—எ-று. காம்பு அரி - மூங்கிற்றுண்டம்போலும். தேம்பரி - தேனைத்தாங்கிய. (௬௯)

ஷை வேறு.

கங்கைமுத லளவிறந்த தீர்த்தமெல்லாம் போய்ப்படிந்து காசி காஞ்சி
யங்கநக கேதார முதற்பதிகள் பலபணிந்து மவுணற் கொன்ற
பொங்குபழி விடாதழுங்கி யராவுண்ண மாசுண்டு பொலிவு மாழ்குந்
திங்களனை யான்கடம்ப வனத்தெல்லை யணித்தாகச் செல்லு மெல்வை.

இ - ள். (பின்பு) கங்கைமுதலாகிய தீர்த்தங்களில் மூழ்கிக் காசி காஞ்சி நிருமலமான கேதாரமுதலிய திருப்பதிகள் பலவற்றை வணங்கியும் அசுரனைக்கொன்ற மிக்க பாவம் விலகாமையால் வருந்திப் பாம்பு விழுங்குதலாற் குற்றம்பொருந்தி ஒளியிழந்த சந்திரன்போன்ற இந்திரன் கடம்பாடவி எல்லைக்குச் சமீபமாகச்செல்லும் பொழுது.—எ - று. அங்கு - அசை. (௭0)

தொடுத்தபழி வேறுகி விடுத்தகன்ற இந்திரன்றன் சுமந்த பாரம்
விடுத்தவனைத் தளவிறந்த மகிழ்வெய்தித் தேசிகன்பால் விளம்பப் பாசங்
கெடுத்தவன்மா தலம்புனித தீர்த்தமுள விவணமக்குக் கிடைத்தல் வேண்டு
மடுத்தறிக வெனச்சிலரை விடுத்தவ்வே றுகிலேகின் றப்பாற் செல்வான்.

இ - ள். தொடர்ந்தபாவம் வேறுபட்டு விலக இந்திரன் சுமந்தபாரத்தை இறக்கினவன் போலப் பெரிதுமகிழ்ந்து ஆசாரியரிடத்து விஞ்ஞாபிக்க (அதற்கு) அவர் மகாஸ்தலமும் பரிசுத்ததீர்த்தமும் இவ்விடத்தே யுள்ளனவாம் (அவை) நமக்குக் கிடைத்தல் வேண்டும் அடுத்தறியக்கடவாயென்று கூற (இந்திரன் ஆராயும்படி) சிலரை அனுப்பிஅப்பழிவேறுபட்ட இடத்தினின்று அப்புறஞ்செல்வானாயினன்.—எ-று. (எக)

அருவிபடிந் தருவியெறி மணியெடுத்துப் பாறையிலிட் டருவி நீர்தூய்க்
கருவிரல்கொய் தலர்சூட்டிக் கனியூட்டி வழிபடுவ கல்லா மந்தி
யொருதுறையில் யாளிகரி புழைக்கைமுகந் தொன்றற்கொன் றூட்டி யூட்டிப்
பருகுவன புலிமுலைப்பால் புலவாய்க்கன றருநதியிடும பசிநோய் தீர.

இ - ள். அறிவில்லாத குரங்குகள் மலைஅருவிகளின் மூழ்கி அவ்வருவிகள் வீசு மாணிக்கங்களை எடுத்துப் பாறையில்வைத்து (ச்சிவலிங்கமாகப்பாவித்து) அருவி நீரை அபிஷேகித்துக் கரியவிரல்களால் மலர்களைகொய்து சூட்டிக் கனிகளை நிவேதித்து வழிபடுவன. ஒருதுறையிலே யாளிகளும் யானைகளும் துதிக்கைகளால் (நீரை) மொண்டு ஒன்றினுக்கொன்று உண்பித்து உண்பன. புலிகளின் முலைப்பாலை மான்கன்றுகள் பசிநோய்தீரும்படி உண்ணும்.—எ-று. (எஉ)

தெளியராக் குருளைவெயில் வெள்ளிடையிற் கிடந்தயங்கி நெளியப்புள்ளே
ளுளியுறச் சிறைவிரித்து நிழல்பரபப பறவைநோ யுற்ற தேகொ.
லளியவா யச்சோவென் றேதியயன் மடமந்தி யருவி யூற்றுந்
துளியநீர் வளைத்தசும்பின் முகந்தெடுத்துக் கருங்கையினுற் சொரிவ மாதோ.

இ - ள். பாம்புக்குட்டிகள் வெய்யில்விரிந்த வெளியிடத்திற்றங்கி மயங்கிநெளிய, (அதனைநோக்கி) க்கருடன்கள் சிறகுகளைவிரித்து நிழலைச்செய்ய, அப்பறவைகள் நோயடைந்தனபோலுமென்று கருதி அருகிலுள்ள மந்திகள் இரக்கமுடையனவாய் ஐயோவெனச்சொல்லி அருவிநீரைச் சங்கென்னுங் குடங்களின்மொண்டு கைகளால் (அவைமேற்) சொரிவன.—எ-று. (எரு)

படவரவ மணியீன்று நொச்சிப்பா சிலையன்ன பைந்தாண் மஞ்ஞை
பெடைதழுவி மணஞ்செய்ய மணவறையில் விளக்கிடுவ பெருந்தண் கானத்
தடர்சிறைமென் குயிலோமென் றார்ப்பமடக்கிள்ளையெழுத்தைந்துமோசைத்
தொடர்புபெற வுச்சரிப்பக் குருமொழிகேட் டாங்குவப்ப தொடிக்கட் பூவை

இ - ள். தண்ணியபெரியவனத்திலே மயில்கள் பேடைகளைத்தழுவி விவாகஞ்செய்ய, (அதுகண்டு)சர்ப்பங்கள் மாணிக்கங்களை உமிழ்ந்து அம்மணவறையிலே தீபமாகவைப்பன, குயில்கள் ஓமென்று ஒலிக்க, கிளிகள் ஸ்ரீபஞ்சாக்ஷரத்தை விதிப்படி யுச்சரிக்க (அவைகளைக்) குருபதேசமாகக் கேட்டு நாகணவாய்ப்புட்கள் மகிழ்வனவாம்.—எ-று. தொடி - கைவளை. (எச)

இன்னவிலங் கொடுபுள்ளின் செயற்கரிய செயனோக்கி யிறும்பூ தெய்திப், பொன்னகரான் புளகமுடல் புதைப்பகிறை மகிழ்ச்சியுளம் புதைப்பப் போவரீ னன்னபொழு தொற்றுவர்மீண் டடிவணங்கி யின்சுவைப்பா லருந்து வான்முன், பின்னறிய தேன்சொரிந்தாங் குவகைமேற் பேருவகை பெருகச் சொல்வார்.

இ-ள். விலங்கு பறவை இவைகளின் இப்படிப்பட்டசெயற்கரிய செயல்களை இந்திரன்கண்டு ஆச்சரியமடைந்து புளகாங்கிதனும் மகிழ்ந்து செல்வானாயினன். அப்பொழுது (முன்போன) தூதர் திரும்பி (வந்து) வணங்கிப் பால்பருகுவான்முன் பின் தேன் வார்த்தாற்போல் மகிழ்ச்சிமேல் மகிழ்ச்சிமிகச் சொல்லத் தொடங்கினர்.—எ-று.

எப்புவனத் திலுமென்றுங் கண்டறியா வதிசயமு மெண்ணுக் கெய்தாத், திப்பியமு மிக்கடம்ப வனத்தின்று கண்டுவகை திளைத்தே மங்கண், ணவ்வப் பனைய வொருபுனித வாவிமருங் கொருகடம்ப வனத்தி னீழ, லொப்பிலொளி யாய்முளைத்த சிவலிங்க மொன்றுளதென் றுரைப்பக் கேட்டான்.

இ-ள். எவ்வுலகத்தும் எப்பொழுதுங் கண்டறியாத அற்புதமும் அளவைக்கெட்டாத சிறப்பும் இக்கடம்பாடவியிலே இன்று கண்டு மகிழ்ச்சியின் மூழ்கினோம் (என்னையெனில்) அங்கே சேமநிதிபோன்ற ஒரு நிருமலதடாகக்கரையின் அருகே ஒருகடப்பமர நிழலின்கண் ஒப்பில்லாத ஒளிப்பிழம்பாய் முளைத்தருளிய சிவலிங்கம் ஒன்று எழுந்தருளியிருக்கின்றதென்று சொல்லக்கேட்டான்.—எ-று. (௬௬)

செவித்தொளையி லமிழ்தொழுக்கு முழையரோடும் வழிக்கொண்டு சென்னிமேற்கை, குவித்துளமெய் மொழிகரணங் குணமூன்று மொன்றித்தன் கொடியபாவ, மவித்துளயர் வொழிக்கமுளைத் தருள்குறிமே லன்பீர்ப்ப வடைவான் கானங், கவித்துளபூந் தடம்படிந்து கடம்பவனத் துழைநுழைந் தான் கவலைதீர்வான்.

இ-ள். (அங்ஙனம்) செவித்தொளையில் அமிழ்தம்வார்க்கும் ஒற்றரோடு வழிக்கொண்டு சிரமேற் கரங்கூப்பி முக்கரணங்களு முக்குணங்களும் ஒற்றுமைபட்டுத் தனது கொடும்பாவத்தைக்கெடுத்து மனத்துன்பம் ஒழிக்கமுளைத்தருளிய சிவலிங்கமீது அன்பானது இழுக்கச் செல்கின்ற இந்திரன் காடுமூடிய அத்தடாகநீரிலே ஸ்நாநனஞ்செய்து அக்கடம்பாடவியில் நுழைந்து கவலைதீர்பவன் ஆயினன்.—எ-று. (௬௭)

அருவாகி யுருவாகி யருவுருவங் கடந்துண்மை யறிவா னந்த
வுருவாகி யளவிறந்த வுயிராகி யவ்வுயிர்க்கோ ருணர்வாய்ப் பூவின்
மருவாகிச் சராசரங்க ளகிலமுந்தன் னிடையுதித்து மடங்க நின்ற
கருவாகி முளைத்தசிவக் கொழுந்தையா யிரங்கண்ணுங் களிப்பக் கண்டான்.

இ-ள். சிவஞ்சத்தி நாதம்விந்து என்னும் அருவமும் மகேசுரன் உருத்திரன் விஷ்ணு பிரமா என்னும் உருவமும் சதாசிவனென்னும் அருவுருவமும் இவைகளைக்கடந்துள்ள சச்சிதாநந்த ரூபமும் எல்லாவுயிரும் அவ்வுயிர்க்கோரறிவும் பூவில்மணம் அடங்கிவெளிப்படுதல்போலச் சராசரவுயிர்கள் முற்றும் அடங்கி யுதித்தற்கு மூலமுமாகி முளைத்தருளிய முதன்மைபெற்ற சிவலிங்கப்பெருமானைக் கண்களிப்ப இந்திரன் தரிசித்தான்.—எ-று. (௬அ)

கண்டுவிழுந் தெழுந்துவிழி துளிப்பவெழு களிப்பென்னுங் கடலி லாழ்ந்து, விண்டுமொழி தழுதழுப்ப வுடல்பனிப்ப வன்புருவாய் விண்ணோர் வேந்த, னண்டர்பிரா னருச்சனைக்கு வேண்டுமுப கரணமெலா மகல்வா னெய்திக், கொண்டுவரச் சிலரைவிடுத் தவரேகப் பின்னுமொரு குறைவு தீர்ப்பான்.

இ - ள். (அங்ஙனம்) தரிசித்து அன்புருவாகி (க்கீழேவிழுந்து) வணங்கி யெழுந்து கண்கள் ஆனந்தபாஷ்பந்துளிக்கக் கரைகடந்தெழு மகிழ்ச்சிக் கடலிற்படிந்து சரீரங்கம்பிக்க மொழிதமொற (ப்புகழ்ந்து வேறுபட்டுநின்றபாவமும்) ஒழிந்து சிவார்ச்சனைக்குவேண்டும் பொருள்களைத் தேவலோகஞ்சேர்ந்து கொண்டுவரும்படி சிலரைஅனுப்பி அவர் செல்ல இந்திரன்பின்னும் ஒருகுறைதீர்ப்பவனாயினான்.—எ-று. காலாக்கினியினாற் புஞ்சுமலைபோலத் தரிசித்தவளவில வேறுபட்ட விருத்திரகத்தியும் ஒழிந்ததாக வடமொழியிற் கூறியிருக்கின்றது. (எகூ)

தங்குடிமைத் தச்சனையோர் விமானமமைத் திடவிடுத்தத் தடத்தின் பாற்போ, யங்கணனைக் கடிதருச்சித் திடநறிய மலர்கிடையா தயர்வா னந்தச், சங்கெறிதண் டிரைத்தடத்தி லரனருளாற் பலபரிதி சலதி யொன்றிற், பொங்குகதிர் பரப்பிமுளைத் தாலென்னப் பொற்கமலம் பூப்பக் கண்டான்.

இ - ள். (பின்பு) தேவதச்சனை (வருவித்து) ஒருவிமானம் அமைத்துவர அனுப்பி அத்தடாக தீரத்தேசென்று அருட்கண்ணனையருச்சிக்க நல்லபுஷ்பங்கிடையாது மயங்கும் இந்திரன் அந்தவாவியிலே அச்சிவபிரான் அருளினாற் பலசூரியர் ஒருகடலின் உதித்தாற்போலப் பொற்றாமரை மலரக்கண்டான.—எ-று. (அ0)

அன்புதலை சிறப்பமகிழ்ந் தாடினான் காரணத்தா லதற்கு நாம
மென்பதுபொற் றாமரையென் றேழுலகும் பொலிகவென விசைத்துப் பின்னு
மின்பதுமத் தடங்குடைந்து பொற்கமலங் கொய்தெடுத்து மீண்டு நீங்காத்
தன்பிணிநோய் தணியமுளைத் தெழுந்தமுழு முதன்மருந்தின் றன்பால் வந்து.

இ - ள். (உடனே) அன்புமேலிடுதலால் மகிழ்ந்து கூத்தாடி (ப்பொற்றாமரைபூத்த) ஏதுவினால் அதற்குப்பெயர், பொற்றாமரை வாவியென்று எவ்வுலகினும் விளங்கவென்பதாகக் கூறி மீளவும் அவ்வாவியின் மூழ்கி அம்மலர்களைக்கொய்தெடுத்துத் திரும்பவும் நீங்காமற் பந்தித்த தன்னோய்கெட முளைத்தமருந்தாகிய முழுமுதற் பெருமானிடத்து வந்து.—எ-று. என்பது - அசை. (அக)

மொய்த்தபுனக் காடெறிந்து நிலந்திருத்தி வருமளவின் முளைத்த ஞான
வித்தனைய சிவக்கொழுந்தின் றிருமுடிமேற் பரிதிகர மெல்லத் தீண்டச்
சித்தநெகிழ்ந் திந்திரன்றன் வெண்கவிகைத் திங்கணிழல் செய்வா னுள்ளம்
வைத்தனனப் போதிரவி மண்டலம்போ லிழிந்ததொரு மணிவி மானம்.

இ - ள். நெருங்கியகாடுகளை வெட்டிப் பூமியைத்திருத்தி வரும்போது உயர்ந்த ஞானவித்தாக முளைத்த முதன்மைபெற்ற சிவலிங்கப்பெருமான் திருமுடிமீது சூரியகிரண மெல்லப் பரிசித்தலால் மனமுருகி இந்திரன் தன்வெண்கொற்றக் குடையாகிய சந்திரனது நிழலைச்செய்யக் கருதினான் அப்போது ஆதித்தமண்டலம்போல ஆகாயத்தினின்றும் ஒரு இரத்தினவிமானம் இறங்கியது.—எ-று. (அஉ)

கிரியெட்டு மெனமழையைக் கிழித்தெட்டும் புழைக்கைமதிக் கீற்றுக்
கோட்டுக், கரியெட்டுஞ் சினமடங்க ஞலெட்டு மெட்டெட்டுக் கணமுந் தாங்க, வரியெட்டுத் திசைபரப்ப மயனிருமித் துதவியவவ் விமானஞ் சாத்தி,
யரியெட்டுத் திருவுருவப் பரஞ்சுடரை யருச்சிப்பா னாயி னானே.

இ - ள். எட்டியானைகளும் முப்பத்திரண்டுசிங்கங்களும் அறுபத்துநாலுசிவகணங்களும் தாங்கும்படி தேவதச்சன் நிருமித்துக்கொடுத்த அவ்விமானத்தைச்சாத்தி,(பஞ்சப்பிரகாரங்களும், பலமண்டபங்களும், பலகோபுரங்களும், ஸ்ரீ மீநாக்ஷி தேவியாருக்கு விமானமும், ஆலயமும், பரிவாரதேவதைகளுக்கு விக்கிரகங்களும், தீர்த்தப்படிக்கட்டு முதலியவும் அத்தேவதச்சனால் அமைப்பித்து) இந்திரன அம்மூலலிங்க மூர்த்தியை அருச்சிக்கத்தொடங்கினன்.—எ-று. எட்டுத்திருவுரு, பஞ்சபூதம், சூரியசந்திரர், ஆன்மா. பஞ்சப்பிரகார முதலிய வடநூலிற்கண்டன. (அரு)

முந்தவம ருலகடைந்து பூசனைக்கு வேண்டுவன முழுதுந் தேர்வார்
வந்துதரு வைந்தீன்ற பொன்னுடை மின்னுமிழு மணிப்பூண் வாசச்
சந்தனமந் தாகினிமஞ் சனந்தூபந் திருப்பள்ளித் தாமந் தீப
மந்தமிலா னைந்துநறுங் கனிநீநதேன் றிருவமுத மனைத்துந் தந்தார்.

இ - ள். முன்னே தேவலோகத்திற் சென்று பூஜைக்குவேண்டுவன முற்றும் ஆராய்ந்தவர்வந்து பஞ்சதருக்கள் கொடுத்த பீதாம்பரமுதலியவெல்லாம் கொடுத்தனர்.—எ-று. மந்தாகினி - கங்கை. திருப்பள்ளித்தாமம் - பத்திரபுஷ்பமாலை. (அசு)

தெய்வத்தா மரைமுளைத்த தடம்படிந்து பவளதொலைக்குந் திருநீ றூடிச்
சைவத்தாழ் வடந்தாங்கி யன்புருவா யருளுருவந் தானாய்த் தோன்றும்.
பைவைத்தா டரவார்த்த பசுபதியை யவனுரைத்த பனுவ லாற்றின்
மெய்வைத்தா தரம்பெருக வருச்சனைசெய் தானந்த வெள்ளத் தாழ்ந்தான்.

இ - ள். (உடனே) இந்திரன் பொற்றாமரை வாவியில் மூழ்கி விபூதியணிந்து உருத்திராக்ஷமாலை பூண்டு அன்புவடிவாகி அருளுருவாய் முளைத்தருளிய சிவலிங்கப் பெருமானை அவர்அருளிய ஆகமவிதிப்படி மெய் யன்பு பெரிதும்வைத்துப் பூசித்து ஆனந்த வெள்ளத்தில் அமிழ்ந்தினன்.—எ-று. (அஎ)

பாரார வட்டாங்க பஞ்சாங்க விதிமுறையாற் பணிந்துள் வாய்மெய்
நேராகச் சூழ்ந்துடலங் கம்பித்துக் கும்பிட்டு நிருத்தஞ் செய்து
தாராரு தொடைமிதப்ப வானந்தக் கண்ணருவி ததும்ப நின்றன்
பாராமை மீக்கொள்ள வஞ்சலித்துத் துதிக்கின்று னமரர் கோமான்.

இ - ள். (பின்பு) இந்திரன் பூமியிற் பொருந்தப்பணிந்து திரிகரணஒருமையோடு வலஞ்செய்து உடல்நடுங்கிக் கைகூப்பிக்கூத்தாடி (மார்பின்) மாலைமிதக்க ஆனந்தக்கண்ணருவி பெருகநின்று நிறையாமையால் அன்புமேலிட அஞ்சலித்துப் புகழ்கின்றவனாயினன்.—எ-று. (அஅ)

வேறு.

அங்கணா போற்றி வாய்மை யாரணா போற்றி நங்க
கங்கணா போற்றி மூல காரணா போற்றி நெற்றிச்
செங்கணா போற்றி யாதி சிவபரஞ் சுடரே போற்றி
யெங்கணா யகனே போற்றி யீறிலா முதலே போற்றி.

இ - ள். அருட்கண்ணரோ, சத்தியவேதரூபரோ, சர்ப்பகங்கணரோ, சர்வமூலகாரணரோ, பாலநேத்திரரோ, ஆதியாகிய சிவபரஞ்சோதியே, எங்கள் தலைவரோ, நித்தியநாதரோ காக்க.—எ-று. (அஎ)

யாவையும் படைப்பாய் போற்றி யாவையுந் துடைப்பாய் போற்றி
யாவையு மானாய் போற்றி யாவையு மல்லாய் போற்றி
யாவையு மறிந்தாய் போற்றி யாவையு மறநதாய் போற்றி
யாவையும் புணர்ந்தாய் போற்றி யாவையும் பிரிந்தாய் போற்றி.

இ - ள். எல்லாம்படைப்பவரோ, எல்லாம் அழிப்பவரோ, எல்லாமானவரோ, அவையல்லாதவரோ, எல்லாமுணர்ந்தவரோ, அவற்றை நினையாதவரோ, அவற்றுடனானவரோ, அவற்றைப்பிரிந்தவரோ, காக்க.—எ-று. (அஅ)

இடருறப் பிணித்த விந்தப் பழியினின் றென்னை யீர்த்துன்
னடியிணைக் கன்ப னாக்கு மருட்கடல் போற்றி சேற்கண
மடவரன் மணாள போற்றி கடம்பமா வனத்தாய் போற்றி
சுடர்விடு விமான மேய சுந்தர விடங்க போற்றி

இ - ள். துன்பமுறும்படி பந்தித்த இப்பாவத்தினின்று நீக்கி என்னை உமதுபாதங்களுக்கு அன்பனாக்கிய கருணையங்கடலே, மீனாட்சி தேவியார்க்கு நாயகரோ, பெரியகடம்பவனத்தரோ, ஒளிசெய்யும் விமானத்தில்வீற்றிருக்கும் அழகிய சுயம்பு மூர்த்தியே, காக்க—எ-று. விடங்கம் - உளிப்படாமை. (அகூ)

பூசையும் பூசைக் கேற்ற பொருள்களும பூசை செய்யு
நேசனும பூசை கொணடு நியதியின் பேறு நல்கு
மீசனு மாகிப் பூசை யான்செய்தே னெனுமென போத
வாசனை யதுவு மான மறைமுத லடிகள் போற்றி.

இ - ள். பூஜைத்தொழிலும் பூசோபகரணங்களும், பூசைபுரியும் அன்பனும் பூசையை ஏற்று அதன் பயன்றரும் இறைவரும் பூசையை யான்செய்தே னென்னும் எனதுபோதவாசனையும் வேதமுதல்வருமாகிய சுவாமீ காக்க.—எ-று. (கூ0)

என்னநின் றேத்தி னானை யின்னகை சிறிது தோன்ற
முன்னவ னடியா ரெண்ண முடிப்பவ னருட்க ணோக்கா
லுன்னது வேட்கை யாதிங் குரையென வினையத் தாழ்ந்து
சென்னிமேற் செஙகை கூப்பித் தேவர்கோ னிதனை வேண்டும்.

இ - ள். என்று நின்று துதித்த இந்திரனை இனியபுன்னகை அரும்பச் சிவபிரான் திருவருட்பார்வையால் (நோக்கி) உனதுவிருப்பம் யாது சொல்லென்று வினவஅவ்விந்திரன் வணங்கி இதனைப்பிரார்த்திப்பான்.—எ-று. (கூக)

ஐயநின் னிருக்கை யெல்லைக் கணியனு மளவி னீங்கா
வெய்யவென் பழியி னோடு மேலைநா ளடியேன் செய்த
மையல்வல் வினையு மாய்ந்துன் மலரடி வழுத்திப் பூசை
செய்யவு முரிய னானேன் சிறந்தபே றிதன்மேல் யாதோ.

இ - ள். ஐயரே! தேவரீர் எல்லைக்குச் சமீபத்தில் அடியேன் வருமளவிலே விலகாத கொடிய என்பழியும் முன்னைவினையும் ஒழிந்து புகழ்ந்து உமதுபாதபூசை செய்யவும் உரியவனுனேன் இதற்குமேற் சிறந்தபயன்யாது.—எ-று. (க௨)

இன்னநின் பாதப் போதே யிவ்வாறே யென்றும் பூசித்
துன்னடி யாருள் யானு மோரடித தொண்ட னுவே
னன்னதே யடியேன் வேண்டத் தக்கதென் றடியில் வீழ்ந்த
மன்னவன் றனக்கு முக்கண் வரதனுங் கருணை பூத்து.

இ - ள். இவ்வண்ணம் இந்த உமதுபாததாமரையில் என்றும் பூசித்து உம்முடைய தொண்டருள் அடியேனும் ஒருவனுவேன் அதுவேயான் வேண்டத்தக்கதென்று வணங்கிய தேவராசனுக்குச் சிவபிரானுந் திருவருள்சுரந்து.—எ-று. (கங)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

இருதுவிற் சிறந்த வேனிலு மதியாறிரண்டினிற் சிறந்தவான் றகரும்
பொருவிலு ரகையிற் சிறந்தசித் திரையுந் திதியினிற் சிறந்தபூ ரணையு
மருவுசித் திரையிற் சித்திரை தோறும் வந்துவந் தருச்சியோர் வருடந்
தெரியுநாண் முந்நூற் றறுபது மைந்துஞ் செய்தவர்ச் சனைப்பய னெய்தும்.

இ - ள் சிறந்தவேனிற்பருவமும் சித்திரைமதியும் சித்திரைநக்ஷத்திரமும் பூரணையுங்கூடிய தினத்தில் வருடந்தோறும் நீவந்து நம்மைப்பூசித்தால் அவ்வருடமுந்நூற்றறுபத்தைந்து தினமும் பூசித்தபயன் உனக்குவரும்.—எ-று. (கச)

துறக்கநா டணைந்து சுத்தபல் போகந் துய்த்ததுமேன் மலபரி பாகம்
பிறக்கநான் முகன்மான் முதற்பெருந் தேவர் பெரும்பதத் தாசையும் பிறவு
மறக்கநாம் வீடு வழங்குது மென்ன வாய்மலர்ந் தருளிவான் கருணை
சிறக்கநால் வேத சிகையெழு மாதி சிவபரஞ் சுடாவிடை கொடுத்தான்.

இ - ள். துறக்கவுலகஞ்சார்ந்து போகங்களை நுகர்ந்து பின் மலபரிபாகந்தோன்றிப் பிரமபத முதலியவற்றின் ஆசையும் ஒழிந்தால் நாம் உனக்கு வீடுபேற்றைக்கொடுப்போம் என்று சிவபிரான் திருவாய்மலர்ந்தருளி இந்திரனுக்கு விடைகொடுத்தருளினர்.—எ-று. (கரு)

மூடினன் புளகப் போர்வையால் யாக்கை முடிமிசை யஞ்சலி கமலஞ்
சூடினன் வீழ்ந்தா னெழுந்துகண் ணருவி துளும்பினன் பன்முறை துதிசெய்
தாடினு னைய னடிப்பிரி வாற்று தஞ்சின னவனரு ளாணை
நாடினன் பிரியா விடைகொடு துறக்க நண்ணினன் விண்ணவர் நாதன்.

இ - ள், இந்திரன் உடல்முழுவதும் மயிர்சிலிர்த்தலுடையனுகி முடிமீது கைகூப்பி (ப்பூமியில்) விழுந்துவணங்கி எழுந்து கண்ணீர்துளும்பிப் புகழ்ந்து கூத்தாடிச் சிவபிரான் திருவடியைப் பிரிதலாற்றாது அவரது ஆணையைநாடி அஞ்சி(அகம்) பிரியாது (புற) விடைபெற்றுச் சுவர்க்கத்தை அடைந்தான்.—எ-று. மூடினன் முதலியனமுற்றெச்சங்கள். (கசு)

எண்சீரடி ஆசிரியவிருத்தம்.

வந்தூரமங் கையர்கவரி மருங்குவீச மந்தார கற்பகப்பூ மாரி தூற்ற, வந்தரநாட் டவர்முடிக ளடிகள் சூட வயிராணி முலைத்தடநதோய்ந் தகலந் திண்டோள், விந்தமெனச் செம்மாந்து விமமு காம வெள்ளத்து ளுடலழுந்த வுள்ளஞ் சென்று, சுந்தரநா யகன்கருணை வெள்ளத் தாழ்ந்து தொன்முறையின் முறைசெய்தான் றறக்க நாடன.

இ - ள். (அடைந்தவுடன்) தேவமகளிர் அருகேவந்து கவரிவீசவும் புஷ்பவருஷம் பொழியவும் தேவர்கள் முடிகளை அடிகளிற் சூடவும் இந்திராணியின் போகவெள்ளத்தில் உடம்புபடியவும் மனஞ்சென்று சுந்தரேசரது கருணைப்பெருக்கின்முழுகி இந்திரன் முன்போல அரசாட்சி செய்தான்.—எ-று., அகலம், மார்பு. (கூஎ)

இந்திரன்சாபந்தீர்த்தபடலமுற்றியது.

ஆகச்செய்யுள் - சசo.

---

இரண்டாவது

## வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடலம்.

---

கொச்சகக்கலிப்பா.

மட்டவிழுங் கொன்றைச சடையான் மகவானைத்
தொட்ட பழியின் றொடக்கறுத்த வாறீது
பட்டமத வேழம் பரனைப் பராய்முனிவ
னிட்டகொடுஞ் சாபநீத தேகியவா றோதுவாம்.

இ - ள். சுந்தரேசர், இந்திரனைப்பற்றிய விருத்திரக் கொலைப் பாவபந்தத்தைப் போக்கிய திருவிளையாடல் இதுவாம். (இனி) அவ்விந்திரனது ஐராவதமென்னும்பட்டத்துயானை அச்சுந்தரேசரை வழிபட்டுத் துருவாசமுனிவர் இட்டசாபத்தை ஒழித்துத் தேவலோகத்திற்குச் சென்றதிருவிளையாடலை (யாம) கூறுவாம்.—எ-று. (க)

கருவா சனைகழிக்குங் காசிநகர் தன்னிற்
றுருவாச வேதமுனி தொல்லாக மத்திற்
கரைவாய்மை யாற்றூற் காமேச நாம
மொருவா விலிங்க வொளியுருவங் கண்டான்.

இ - ள். பிறவித்துன்பத்தைப்போக்கும் காசிக்ஷேத்திரத்தில் வேதங்களையுணர்ந்த துர்வாசமுனிவர் பழைய ஆப்தவாக்கியமாகிய ஆகமத்தில் விதித்தபடி காமேசுரரென்னும் பெயர் நீங்காமல் (இட்டு) ஒளிவடிவமான சிவலிங்கப்பிரதிட்டைசெய்து.—எ-று. கண்டான் முற்றெச்சம். (உ)

இன்புற் றருச்சனைசெய் தேத்துவா னவ்வேலை
யன்புக் கெளிய னருளாற் றிருமுடிமேன்
மின்பொற் கடிக்கமலப் போதொன்று வீழ்த்திடவுந்
தன்பொற் கரகமலப் போதலர்த்தித் தாங்கினான்.

இ-ள். மகிழ்ந்து பூசித்துத் துதித்தார் அப்போது அன்புக்கெளிய பிரானார் தம்மருளாலே திருமுடிமீதுள்ள கமலமலர் ஒன்றைவிழச்செய்ய உடனே முனிவர் தம திருகரகமலமும் விரித்துத் தாங்கினார்.—எ-று. உம்மை, உடனேயென்னும பொருள் குறித்து நின்றது. (௩)

தாங்கிக்கண் சென்னி தடமார பணைத்துடலம்
வீங்கித் தலைசிறந்த மெய்யுவகை மேற்கொள்ள
நீங்கிக் கழிந்த கருணை நிதியனையான்
பூங்கற் பகநாட்டிற் போகின்ற வவ்வேலை.

இ-ள். (அங்ஙனந்) தாங்கி நேத்திரஞ் சிரம் மார்புகளில் ஒற்றிச் சரீரம் பூரித்து மிகச்சிறந்த மெய்மகிழ்ச்சி மேற்பட அவணின்று நீங்கி நிதிபோலும் பெருங்கருணையுள்ள அம்முனிவர் தேவலோகத்துக்குச் செல்பவரானார் அப்போது.—எ-று. (௪)

சங்கலறச் செங்களத்துத் தானவரைத் தேய்த்துவிறற்
கொங்கலர்தார வேய்ந்தமரர் கோமான்றன் கோநகரிற்
செங்க ணமரர்பெருஞ் சேனைக் கடல்கலிப்ப
மங்கலப்பல் லாண்டு மறைமுழங்க வருதணைவான்.

இ-ள். சங்கமுழங்கப் போர்க்களத்துச் (சம்பாசுரன் முதலிய) தானவர்களைக் கொன்று வெற்றிமாலைசூடித் தேவர்சேனைக் கடலும் பல்லாண்டும் வேதமுங் கோஷிக்க இராஜநகரத்தில் வருகின்ற இந்திரன்.—எ-று. (௫)

எத்திக்குங் கல்லென் றியங்கலிப்ப வேந்திழையார்
தித்தித் தமுதொழுக்குங் கீதஞ் செவிமடுப்பப
பத்திக கவரிநிரை தானைப் படுகடலிற்
றத்திப் புரளுந் திரைபோற் றலைபனிப்ப.

இ-ள். திசைகளெங்கும் வாத்தியம் ஒலிக்கவும் தேவமகளிர் அமிர்தம்போலத் தித்தித்தொழுகப் பாடுங் கீதஞ் செவியை நிறைக்கவும் வரிசையாகச் சாமரைத்திரள் சேனைக் கடலிலே தவழ்ந்து புரளுந் திரைபோல் அசையவும்.—எ-று. (௬)

துங்கத் தடலி னெடுங்கூம் பகநிமிர்ந்த
வங்கத் தலையுய்க்கு மீகான் றனைமானத்
திங்கட் குடைநிழற்றத் தீந்தே மதங்கவிழ்க்கும்
வெங்கட் களிற்றின் மிசைப்பவனி போந்தணைதான்.

இ-ள். அழகிய இடமுடைய கடலின்கண்ணே நெடிய பாய்மரம் உயர்ந்த மரக்கலத் தலையினூற்றுச் செலுத்து மாலுமிபோலச் சந்திரன்போன்ற வெண்கொற்றக் குடைநிழல் செய்ய மிகவினிய மதநீரைப் பொழிகின்ற அஞ்சாத வெள்ளை யானைமேல் உலாவந்தான்.—எ-று. (எ)

அத்தலைவிண் ணாட ரருகணைந்து வெவ்வேறு
தத்த மனக்கிசைந்த கையுறைக டாங்கொடுத்துக்
கைத்தலங்கள் கூப்பினார் கண்டார் கடவுளரி
னுத்தமனை யர்ச்சித்துப போந்தமுனி யுத்தமனும்.

இ-ள். அவ்விடத்தே தேவர் அடுத்து அவரவர் மனத்துக் கிசைந்த வேறு வேறு கையுறைகளை நீட்டி அஞ்சலித்துக் கண்டனா (அதனையுணர்ந்து) மகாதேவனைப் பூசித்து வந்த துர்வாசமுநிவரரும்.—எ-று. கூப்பினார் - முற்றெச்சம். (அ)

நீங்கரிய வாசிமொழி செபபித்தன் செங்கரத்தி
னீங்கரிய தாமரையை நீட்டினான் மற்றதனைத்
தாங்கரிய செல்வத் தருக்காலோர் கையோச்சி
வாங்கிமத யானையின்மேல் வைத்தான் மதியில்லான்.

இ-ள். நன்றாக ஆசீர்வதித்துத் தங்கையிலுள்ள தாமரைமலரை நீட்டினார். பெருஞ்செல்வச் செருக்கால் அறிவிழந்த இந்திரன் அப்பிரசாதத்தை (மதியாமல்) ஒரு கைநீட்டி வாங்கி மதயானைமீது வைத்தான்.—எ-று. (கூ)

கீறிக் கிடந்த மதியனைய கிம்புரிக்கோட்
டேறிக் கடங்கவிழ்க்கு மால்யானை யுச்சியின்மே
லூறிக் கிடந்த நறுமலரை வீழ்த்தியுரற்
சீறிக் கிடந்தநெடுந் தாளாற் சிதைத்தன்றே.

இ-ள். (உடனே) மயக்கமுடைய அந்த யானை தன் முடிமேலிருந்த தாமரை மலரைக் கீழேதள்ளிக் காலினாலே தேய்த்தது.—எ-று.—கிம்புரி - கொம்பணி. (க०)

கண்டான் முனிகாமற் காய்ந்தா னுதற்கண்போல்
விண்டா ரழல்சிதற நோக்கினான் வெங்கோபங்
கொண்டா னமர ரொதுங்கக் கொதித்தால
முண்டா னெனநின் றுருத்தா னுரைக்கின்றான்.

இ-ள். (அதனைத்) துர்வாசமுநிவர்கண்டு காமதகனர்து நெற்றிக்கண்போல அரிய நெருப்புப் பரந்து சிதறும்படி கண்ணால் இந்திரனை நோக்கிக் கொடுங்கோபங் கொண்டு தேவர்கள் அஞ்சி ஒதுங்கும்படி பொங்கி உருத்திரமூர்த்திபோல நின்று (மேலும்) கோபித்துக் கூறுகின்றார்.—எ-று. கண்டான் நோக்கினான் கொண்டான் உருத்தான் முற்றெச்சங்கள். (கக)

புள்ளியதோ லாடை புனைந்தரவப் பூணணிந்த
வெள்ளிய செங்கண் விடையா னடிக்கமல
முள்ளிய மெய்யன் புடையா ரருவருத்துத்
தள்ளிய செல்வத் தருக்கினை யென்செய்தாய்.

இ-ள். சிவபெருமானது திருவடிக்கமலத்தைச் சிந்தித்(து நித்தியமாகியமுத்திச் செல்வம்பெற்)ற மெய்யன்பர் உவர்த்தொழித்த (அநித்தியமாகிய) செல்வத்தருக்கினையுடையாய் நீ என்னகாரியஞ் செய்தனை.—எ-று. (கஉ)

கதிர்த்தார் முடியமரர் கையுறையே நன்கு
மதித்தாயெம் மீசன் மதிமுடிமேற் சாத்தும்
பொதித்தா தவிழ்மலரைப் போற்றாது வாங்கி
மிதித்தானை சிந்தவதன் மேல்வைத்தாய் பேதாய்.

இ-ள். அறிவில்லாதவனே மகுடந்தரித்த தேவர்கள் கையுறைகளையே நன்கு மதித்து (கீகைக்கொண்டு) எங்கள் மகாதேவர் திருமுடியிற் சாத்திய (மகாப்பிரசாதமாகிய) புஷ்பத்தை வாங்கிப் பேணாது யானைமிதிததுச் சிதறும்படி அதன்மேல் வைத்தாய்.—எ-று. (கங)

வண்டுளருந் தண்டுழாய் மாயோ னிறுமாப்பும்
புண்டரிகப் போதுறையும் புத்தே ளிறுமாப்பு
மண்டர்தொழ வாழுன் னிறுமாப்பு மாலால
முண்டவனைப் பூசித்த பேறென் றுணர்ந்திலையால்.

இ-ள். அரிபிரமர்கள் (அதிகாரச்) செருக்கும், தேவர்கள் தொழவாழும் உன் செருக்கும் ஆலாகல விடத்தை யுண்டருளிய சிவபிரானை அருச்சித்ததனாலாகிய பயனென்று நீ உணர்ந்திலை.—எ-று. (கச)

சேட்டானை வானவநின் சென்னி செழியரிலோர்
வாட்டானை வீரன் வளையாற் சிதறுகநின்
கோட்டான நாற்கோட்ட வெண்ணிறத்த குஞ்சரமுங்
காட்டானை யாகவென விட்டான் கடுஞ்சாபம்.

இ-ள். பெரிய வெள்ளையானையையுடைய இந்திரனே உன்றலை பாண்டியர்களில் வாட்படையேந்திய சேனையையுடைய ஒரு வீரனது வளையினாலே சிதறக்கடவது. உனது வலிமையும் மதமும் நாற்கோடும் உடைய வெள்ளையானையும் (இருகோடுள்ள கரிய) காட்டானையாகக் கடவது என்று கொடிய சாபம் இட்டார்.—எ-று. (கரு)

சவித்தமுனி பாதந் தலைக்கொண்டு செங்கை
குவித்தமரர் தங்கோன் குறையிரப்பா னாய
வவித்தபொறி யாயெம் மரசுங்கா றள்ளுஞ்
செவித்தறுகண் வேழமுக தீங்குடைய ரன்றோ.

இ-ள். (உடனே) தேவர்கள், (அங்ஙனஞ்) சபித்த தூர்வாச முநிவரடிகளை முடிமேற்சூடி அஞ்சலித்துத் தங்கள் அரசனது குறைகூறி யிரப்பவர்களாகி இந்திரிய நிக்கிரகஞ்செய்த மகாமுநிவரே எங்கள் அரசனும் ஐராவதயானையும் தீமையுடையரல்லவா.—எ-று. இரப்பவர் முற்றெச்சம். (கசு)

அத்தகைய நீராற் சபித்தீ ரடிகேண்மற்
றித்தகைய சாப மினிவிடுமி னென்றிரந்து
கைத்தலங்கள் கூப்பிக் கரைந்தார்க் கிரங்கியருள்
வைத்த முனிபிறிது சாபம வகுக்கின்றான.

இ-ள். அத்தன்மையாலே சுவாமீ நீர்சபித்தீர் (ஆயினும்) இப்பொழுதே இப்படிப்பட்டசாபத்தை ஒழித்தருளுமென்று வேண்டி அஞ்சலித்து முறையிட்ட தேவர்கள் பொருட்டு மனங்கசிந்து கருணைகொண்ட அத்தூர்வாசமுநிவர் வேறுசாபம் வகுக்கின்றார்.—எ-று (க௭)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சிந்தனை வாக்கிற் கெட்டாச் சிவனரு ளளித்த சேட
நிந்தனை பரிகா ரத்தா னீங்காது தலைமட் டாக
வந்தது முடிமட் டாக மத்தமா வனமா வாகி
யைந்திரு பஃதாண் டெல்லை யகன்றபின் பண்டைத் தாக.

இ-ள். மனவாக்குகளைக் கடந்த சிவபிரான் கருணையாற் கொடுத்த பிரசாத நிந்தனை வேறு பரிகாரத்தால் விலகாது (ஆகையாலே) தலையளவாக வந்தது மகுடத்தினளவாக ஆகக்கடவது வெள்ளையானை காட்டானையாகத் திரிந்து நூறுவருடஞ் சென்றபின் பழைய தேவயானையாக ஆகக்கடவது.—எ-று. (க௮)

என்றனன் பிறிது சாப மிந்திரன் மகுட பங்க
மொன்றிய செய்கை பின்ன ருரைத்துமற் றஃது நிற்க
நின்றவெள் ளானை வான நீத்தறி விழந்து நீலக்
குன்றென வனத்து வேழக் குழாத்தொடு குழீஇய தன்றே.

இ-ள். என்று பிறிது சாபமிட்(டு யானை காலாற்றேய்த்த மகோற்பல மலரைக் கைகளால் அள்ளி முடிமேற்சூடிச் சென)றார். இந்திரன் மகுடந்தகர்ந்த திருவிளையாடலைப் பின்பு கூறுவாம். அது நிற்க. (அங்ஙனஞ் சாபமபெற்று) நின்ற வெள்ளையானை தேவலோகம் விட்டுத் தெய்வ அறிவொழிந்து நீலமலைபோலக காட்டானைக் கூட்டத்தோடு கூடியது.—எ-று (க௯)

மாவொடு மயங்கிச் செங்கண் மறம்பயில் காடு முல்லைப்
பூவொடு வழங்கு நீத்தப் புறவமுங் குறவர் தங்க
டேவொடு பயிலுங் கல்லுந் திரிந்துநூ றாண்டுஞ் செல்லக்
காவொடு பயிலுந் தெய்வக் கடம்பமா வனம்புக் கன்றே.

இ-ள். (அங்ஙனம்) காட்டானைகளொடு கலந்து செங்கண்மறவர் தங்கும் பாலைநிலத்தும், முல்லைமலரோடு செல்லுங் காட்டாறுகளையுடைய முல்லைநிலத்தும், குறவர்கள் தங்கள் முருகக்கடவுளொடு தங்குங் குறிஞ்சிநிலத்துஞ் சரித்து நூறுவருடமுங் கழியச் சோலைகளாற் சூழப்பெற்ற சிறந்தகடம்பாடவியை அடைந்தது.—எ-று. மறம்- ஆகுபெயர் (உ௦)

புக்குரல் வட்டத் திண்காற் பொருவிறே வியலிற் றீர்ந்த
மைக்கருங் களிறு முக்கண் வானவ னருள்வந் தெய்தத்
தக்கதோ ர்மையஞ் சார மரகதந் தழைத்து மின்னு
நக்கபொன் முளரி பூத்த நளிர்கயந் தலைக்கண் டன்றே.

இ-ள். அடைந்து தெய்வத்தன்மையி னீங்கிய அக்கரியயானை சிவபிரான் றிருவருள் பெறுதற்குரிய சமயஞ் சார்தலால் மரகதம்போலும் இலைகள் தழைத்து மின் போலும் விளங்கிய பொற்றாமரை வாவியைக் கண்டது.—எ-று. (உக)

கண்டபோ தறிவு தோன்றக் கயந்தலை குடைந்த போது
பண்டைய வடிவந் தோன்றப் பரஞ்சுட ரருட்கண் டோன்றக்
கொண்டதோர் பரமா னந்தக் குறியெதிர் தோன்றக் கும்பிட்
டண்டர்நா யகனை பூசை செய்வதற் கன்பு தோன்ற.

இ-ள். (அங்ஙனங்) கண்டவளவிலே தெய்வ அறிவும் அவ்வாவியில் மூழ்கியவ ளவிலே பழைய வெள்ளைவடிவமும் (நாற்கோடும்) விளங்கப் பின்பு சொக்கலிங்கப் பெருமான் அருட்பார்வை செய்தலால் ஒப்பற்ற பரமானந்தமே திருவுருவாக் கொண்ட அம்மூர்த்தி தனக்கெதிரே தரிசனமாக அவனை வணங்கி அருச்சித்தற்கு அன்புண் டாக.—எ-று. (உஉ)

தூம்புடைக் கையான் மொண்டு மஞ்சனத் தூநீ ராட்டித்
தேம்புடை யொழுகப் பள்ளித் தாமமுந் தெரிந்து சாத்திப்
பாம்புடைத் தாயவேணிப் பரனையர்ச் சிக்க வுள்ளத்
தாம்புடை யறிந்த வெந்தை யானையை நோக்கிக் கூறும்.

இ-ள். (உடனே) துதிக்கையாலே முகந்து தூய திருமஞ்சன தீர்த்தம் அபி டேகித்துத் தேனொழுகத் திருப்பள்ளித்தாமஞ்சாத்தி அப்பெருமானைப் பூசித்திருக்க, (அவ்வைராவதத்தின்) உளத்திலுண்டாகிய அன்பினை யுணர்ந்த அம்மூர்த்தி அவ்யானை யை நோக்கித் திருவாய் மலர்ந்தருளுவார்.—எ-று. தூம்பு - துவாரம். (உ௩)

வந்தனை யெவ்னீ வேண்டும் வரமெவ னுரைத்தி யென்னச்
சிந்தையி லன்பு கூர்ந்த தெய்வத வேழந் தாழ்ந்து
முந்தையில் விளைவும் வந்த முறைமையு முறையாற் கூறி
யெந்தையை யடையப் பெற்றேற் கினியொரு குறையுண் டாமோ.

இ-ள். நீ வந்த காரணம் யாது விரும்பியவரம் யாது கூறுவாயென வினவியருள அன்புமிக்க அவ் யானை வணங்கி முன்பு சாபம் நேரிட்டதும் அது தீரவந்ததும் முறை யால் விண்ணப்பஞ் செய்து தேவரீரை அடையப்பெற்ற அடியேனுக்கு இனி ஒரு குறையுமில்லை.—எ-று. வந்தனை ஐ-சாரியை. (உ௪)

என்பதா மாரம்பூண்ட வெந்தையிக் கரிக ளெட்டோ
டொன்பதா யடிய னேனு முன்னடி பிரியா துன்றன்
முன்பதா யிவ்வி மான முதுகுறச் சுமப்ப லென்றூ
ரன்பதா யொன்றென் னுள்ளத் தடுத்தலா லஃதே வேண்டும்.

இ-ள். எலும்பணி பூண்ட எந்தையே இவ் யானைகள் எட்டுடன் ஒன்பதாய் அடியேனுந் தேவரீர் திருவடியைப் பிரியாமல் உமது சந்நிதியில் இவ்விமானத்தை முதுகிற் சுமப்பனென்று ஒப்பற்ற அன்புடையதா யோரெண்ணம் என்மனத்துத் தோன்றலால் அச்சமத்தலேயே அருளவேண்டும்.—எ-று. என்பது முன்பதுகளில் அது-பகுதிப்பொருள் விகுதி. (உ௫)

இடையறு வன்பின் வேழ மியம்பனங் கூற விண்ணு
டைடயவ னம்பான் மெய்யன் புடையவ னவனைத் தாங்கி
யடைவதே நமக்கு வேண்டு மகமகிழ் வென்றுப் பினனும்
விடையவன் வரங்க ணல்கி விடைகொடுத் தருளி னானே.

இ-ள். நீங்கா வன்புள்ள யானை இப்படி விண்ணப்பஞ் செய்ய, இந்திரன் நம் மாட்டு மெய்யன்பினன் (ஆதலால்) அவனை நீ தாங்கியிருப்பதே நமக்குவேண்டிய மன மகிழ்ச்சியென்று சுந்தரேசர் பின்னும வரமருளி விடைகொடுத்தருளினார்.—எ-று. (உ௬)

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

விடைகொடு வணங்கி யேகுமவெள் ளானை மேற்றிசை யடைந்துதன் பேராற்
றடமுமற் றதன்பா லரனையுங் கணேசன் றன்னையுங் கண்டருச் சனைசெய்
திடையறு வன்புந் தானுமங் கிருக்கு மெல்லையிச் செய்திகேட் டருள்கூர்[ன்
கடவுளர்பெருமானுழையரைவிளித்தெங்களிற்றினைக்கொணர்கெனவிடுத்தா

இ-ள். (அங்ஙனம்) விடைபெற்றுப் பணிந்து செல்லும் யானை மேலைத்திசை சேர்ந்து தன்பெயராலே தடாகமும் அதன் கரையிலே சிவலிங்கமும் விநாயகக்கடவுளும் பிரதிட்டைசெய்து பூசித்து அன்புடனிருக்கும்வழி இச்செய்திகளையுணர்ந்த இந்திரன் ஏவலாளரை யழைத்து நமது யானையைக் கொணர்வீர்களென்று அனுப்பினன்.—எ-று. (உ௭)

வல்லைவந் தழைத்தார் தம்மைமுன் போக்கி வருவலென் றெழுந்துகீழ்த் திசையோ, ரொல்லைவந் தோரூர் தனதுபே ராற்கண் டிந்திரேச்சுரனென வி றைவன், றொலலைவண் பெயரா லொன்றுகண் டரனைத் தூயபூ சனைசெய்தங் கிருப்பக், கல்லைவன் சிறகு தடிந்தவ னின்னுங் களிறுவந் திலதென்ன பின்னும்.

இ-ள். விரைந்துவந் தழைத்த ஏவலாளரை நான் வருவேன் நீங்கள் முன்னே விண்ணுலகத்துக்குப் போங்களென்று அனுப்பி யானை எழுந்து கீழைத்திசை சேர்ந்து தன்பெயராலே ஒரூர் உண்டாக்கி இந்திரேசுவரமொன்று தன்றலைவன் பெயரால் ஒரு சிவலிங்கப் பிரதிட்டைசெய்து சிவபிரானை (ஆவாகித்துப்) பூசித்துக்கொண்டிருப்ப, (அப்பொழுது) இந்திரன் இன்னமும் யானை வரவில்லையென்று கருதிப் பின்னும்.—எ-று. கல்லை - உருபு மயக்கம். (உ௮)

மனத்தினுங் கடிய தூதரை விடுப்ப வானடைந் திறைவனை வணங்கிப்
புனத்தினுங் கடிய கல்லினும் பன்னுட் புன்கணே யுறவரு சாபங்
கனத்தினுங் கரிய கண்டனைக் கண்டு களைந்ததுங் கிளந்துதிக் கயத்தி
னினத்தினுங் கழிந்த தெய்வத வேழ மினிதுவிற் றிருந்தது மாதோ.

இ-ள். தூதனை அனுப்ப (உடனே) திக்குயானைகளில் உயர்ந்த யானை தேவலோகஞ் சேர்ந்து இந்திரனை வணங்கிக் காடுமுதலியவற்றிலே பலகாலம் வருந்தும்படி நேர்ந்த சரிதம் சுந்தரேசனைப் பூசித்துப் போக்கியதைக்கூறி அங்கே இருந்தது.—எ-று.

குடவயி னைரா வதப்பெருந் தீர்த்தங் குடைந்தயி ராவத கணேசக், கடவுளைத் தொழுதை ராவதே சுவரக் கடவுளைப் பணிந்தவர் சாபத், தொடர்பினும் பாவத் தொடர்பினுங் கழிவா சுராதிபன் களிறுசென் னெறிபோ, யிடர்கெட வைகை படிந்துதென் கரையி லிந்திரேச் சுரனடி பணிவோர்.

இ-ள். (கடம்பாடவிக்கு) மேலைத்திசையிலே (யானைகாலாலேதோண்டிய) ஐராவத தீர்த்தத்தின் மூழ்கி ஐராவத விநாயகரையும் ஐராவதேசுவரரையும் வழிபட்டவர் சாப பாப பந்தங்களினின்று நீங்குவர். அவ்வைராவதஞ் சென்ற வீதிவழியேபோய்த் துன்பங்கெட வைகையாற்றில் முழுகி அத்தென்கரையில் (ஐராவத புரத்தில்) வதிந்தருளும் இந்திரேசுவரர் திருவடிகளை வழிபடுவோர்.—எ-று. (கூ௦)

அறுசீரடி ஆசிரியவிருத்தம்.

இம்மையி லறமுன் மூன்று லெய்திய பயனை யெய்தி
யம்மையின் மகவா னீரே ழரும்பத மளவும் வானில்
வெம்மையில் போக மூழ்கி வெறுப்புவந் தடைய வுள்ளச்
செம்மையில் விளைபே ரின்பச் சிவகதிச் செல்வ ராவார்.

இ-ள். இம்மையிலே அறம் பொருள் இன்பப் பேறுகளைப்பெற்று மறுமையிலே பதினான்கு இந்திரப்பட்டம்வரை சுவர்க்கத்திற் குளிர்ந்தபோகம் நுகர்ந்து வெறுப்புவரமனத்தூய்மையில் விளைகின்ற பேரானந்த சிவமுத்திச் செல்வராவார்.—எ-று. (கூக)

வெள்ளையானைச்சாபந்தீர்த்தபடல முற்றியது.

ஆகச்செய்யுள் - ௬௭க.

---

## மூன்றாவது
# திருநகரங்கண்டபடலம்.

கலிநிலைத்துறை.

தானவா றிழி புகர்முகத் தடகரி சாபம்
போன வாறுரை செய்துமேற் புதுமதி முடிமேல்
வான வாறினன் கடம்பமா வனமுது நகர
மான வாறது தனைச்சிறி தறிந்தவா றிசைப்பாம்.

இ-ள். மதநதியொழுகப்பெற்ற புற்கெனு நிறந்தங்கிய முகத்தையுடைய (பகைவரைக்) கொல்லுகின்ற வெள்ளையானையின்சாபநீங்கிய திருவிளையாடலைக் கூறினோம் இனிப்பிறைமதியணிந்தசடைமுடிமீது கங்கையாற்றினையுடைய சுந்தரேசரது கடம்பவனம் பழைய சிறப்புநூலின்வழியே திருநகரமாகிய திருவிளையாடலை (யாம்) கூறுவாம். எ-று. முதுமை, மைவிகுதிதொக்கு ஆகுபெயராய்நின்றது. அதுபகுதிப்பொருள்விகுதி. ()

இன்ன ரம்புள் ரேழிசை யெழான்மிடற் றளிகள்
கின்ன ரம்பயில் கடம்பமா வனத்தினின் கீழ்சார்த்,
தென்னர் சேகர னெனுங்குல சேகர னுலக
மன்னர் சேகர னரசுசெய் திருப்பது மணவூர்.

இ-ள். இனியநரம்புகளைத் தடவுதலாலுண்டாகிய ஏழிசையினையுடைய அவ்வி யாழ்நரம்பினோசைபோன்ற கண்டத்தொனியையுடைய வண்டுகளுங் கின்னரப்புட்க ளுந் தங்கியபெரியகடம்பவனத்தின் கீழைத்திசையிலே குலசேகரபாண்டியன் அரசாட்சி செய்தற்கு இடமாயுள்ளது கலியாணபுரமாம.—எ-று. சேகரன்-மகுடம் போன்றவன்.

குலவு மப்பெரும் பதியிளங் கோக்களி லொருவ
னிலவு மாநிதி போலருச் சனைமுத னியதி
பலவு மாஞ்சிவ தருமமுந் தேடுவான் பரன்பாற்
றலைமை சான்றமெய் யன்பினுன் றனஞ்சய னென்பான்.

இ-ள். விளங்கும் அப்பெரியநகரத்திலே வைசியர்மரபிலே திரவியம்போலப் பூசைமுதலிய பலநியமங்களாகிய சிவபுண்ணியங்களைத் தேடுபவனும் சிவபிரான் மாட்டுச் சிறந்த மெய்யன்பினனுமாகிய தனஞ்சயனென்று சொல்லப்படுவோன் ஒரு வன்.—எ-று. (௩)

செல்வ மாகக ரிருந்துமேற் றிசைப்புலஞ் சென்று
மல்லல் வாணிகஞ் செய்துதன் வளம்பதி மீள்வான்
றொல்லை யேழ்பவக் கடற்கரை தோன்றுவித் தடியா
ரல்ல றீர்ப்பவன் கடம்பமா வனம்புகு மளவில்.

இ-ள். தனது நகரினின்று மேலைத்திசையினுள்ள நாடுகளிற் போய் ஊதியந் தரும் வர்த்தகஞ்செய்து அப்பதிக்குத் திரும்புகின்றவன் பிறவிக்கடற்கரையாகிய மு த்தியை விளக்கி அடியவர்க்குத் துன்பத்தைப் போக்குஞ் சுந்தரேசரது கடம்பாடவி யிற் புகும்போது (அவ்வனத்தை நகரமாக்கும்படி சுந்தரேசரை மீனாட்சிதேவியார் பிரா ர்த்தித்தார்).—எ-று. ஏகதேசவுருவகம். பிரார்த்தனை வடநூலிற் கண்டது. (௪)

இரவி கண்மறைத் தேழ்பரி யிரதமுந் தானு
முரவு நீர்க்கருங் கடலில்வீழ்ந் தொளித்தன னுக
விரவு நீன்மயங் கிருள்வயிற் றமியனாய் மெலியு
மரவு நீர்ச்சடை யண்ணலுக் கன்பினோ னங்கண்.

இ-ள். (உடனே உயிர்களுடைய) கண்களுக்குப் புலப்படாது சூரியன்தேரோடு உலாவு நீர்க்கடலில் மறைந்தான். (அப்போது) வந்த மயங்கத்தக்க மிக்க இருளிலே ஒருவனாய் வருந்துகின்ற அன்பனாகிய வைசியன் அவ்விடத்தே.—எ-று. (௫)

வாங்கு நான்மருப் பேந்திய மதமலை யெருத்தந்,
தாங்கி யாயிரங் கரங்களாற் றடவியெண் டிசையுந்
தூங்கு காரிரு ளொத்துசெஞ் சுடரொளச் சூழ்போய்
வீங்கு காரிரு ளொதுக்கிய விமானநேர் கண்டான்.

இ-ள். ஆதித்தன்போல அட்டதிக்கிலும்போய் இருளைப் போக்குங் கிரணங்களையுடைய அட்டகஜங்கள் தாங்கும் விமானத்தை நேரிலே தரிசித்தான்.—எ-று. (௬)

அடுத்த ணைந்தன னவிர்சுடர் விமானமீ தமர்ந்த
கடுத்த தும்பிய கண்டனைக் கண்டுதொழு துவகை
மடுத்த நெஞ்சின னங்ஙனம் வைகிருள் கழிப்பா
னெடுத்த சிந்தையி னிருந்தன னிருக்குமவ் விருள்வாய்.

இ-ள். (பின்பு) சமீபத்திற்சென்று அவ்விமானத்தில் எழுந்தருளியிருக்கின்ற நீலகண்டராகிய சிவலிங்கப்பெருமானைத் தரிசித்து வணங்கி மகிழ்ச்சிநிரம்பிய மனத்தினனாகி அப்படியே தங்கிய இரவைப் போக்கும்பொருட்டுத் தோன்றிய கருத்தோடிருந்தான் (அங்ஙன) மிருக்கும் அவ்விரவிலே,—எ-று. அணைந்தனன் நெஞ்சினன் முற்றெச்சங்கள். இருள் - ஆகுபெயர். (௭)

சோம வாரமன் றாதலாற் சுரர்களங் கெய்தி
வாம மேகலை மலைமக ளலைமகன் மலர்ந்த
காமர் சேவடி பணிந்தவன் கங்குல்போற் கருதி
யாம நான்கினு மருச்சனை யின்புறப் புரிவார்.

இ-ள். அத்தினம் சோமவாரமாதலாலே (பழிநீங்கி யிந்திரன் பூசித்த அக்காலந் தொடங்கி அன்பொடு பிரதிதினம்வந்து பூசிக்கின்ற) தேவர்கள் அக்கடம்பவனத்தில் வந்து சோமசுந்தரேசரை வணங்கி (அவ்விரவை)ச் சிவராத்திரிபோற் கருதி இன்பம் பெற நான்குயாமங்களிலும் பூஜைபுரிவாராயினர்.—எ-று. வாமம் காமர் - அழகு. (௮)

அண்டர் வந்தது மருச்சனை புரிவது மனைத்துந்
தொண்ட ரன்பினுக் கெளியவன் சுரர்தொழக் கறுத்த
கண்ட னின்னருட் கண்ணினாற் கண்டன னுதலிற்
புண்ட ரம்பயி லன்புடைப் புண்ணிய வணிகன்.

இ-ள். சுந்தரேசரது திருவருட்பார்வை பெற்றமையாலே சிவபுண்ணியச் செல்வ வைசியன் (அங்ஙனம்) தேவர்கள்வந்தது முதலியவற்றைக் கண்டான்.—எ-று.

நான மென்பனி நறும்புன லாயகன் பூசைக்
கான நல்விரை வருக்கமு மமரர்கைக் கொடுத்து
ஞான வெண்மதிச் சடையவன் கோயிலின் ஞாங்கர்த்
தான மர்ந்தருச் சனைசெய்வான் றங்கனா யகனை.

இ-ள். சுந்தரேசரது பூசைக்குரிய கஸ்தூரி பனிநீர் மற்றும் வாசனைதிரவிய முதலியவற்றைத் தேவர்களது கையிற்கொடுத்து (ப் பின்பு தானுஞ் சோமவார விரதமுடையனாதலால்). அவ்வாலயத்தின் ஓரிடத்தே அவ்வைசியன் இருந்து (ஆசாரியனாலே கொடுக்கப்பட்ட) தன்னான்மார்த்த சிவலிங்கபூசை செய்யத் தொடங்கினான்.—எ-று. சிவபூசைசெய்யு மரபினனாதலாலே தங்கணாயகனை என்றார். (௧௦)

வள்ள றன்னைமெய் யன்பினு லருச்சிசெய் வானே
ருள்ள வல்வினை யீட்டமுங் கங்குலு மொதுங்கக்
கள்ள மில்லவன் யாரையுங் கண்டிலன் கண்டான்
றள்ள ருஞ்சுடர் விமானமேற் றனித்துறை தனியை.

இ-ள். (அங்ஙனம்) ஆன்மார்த்த சிவலிங்கத்தை மெய்யன்பால் அருச்சித்தல் செய்பவனாகிய நிருமலதனஞ்சயன் தன்மனத்தைப் பற்றிய வலிய கன்மபாச விருளும் இரவும் அகல(த் திவ்வியதிருஷ்டியும் நீங்கினமையாலே) தேவருள் ஒருவரையுங் காணாமல் விமானத்திலே தனிமையாக அமர்ந்தருளும் ஒப்பில்லாத சொக்கலிங்கப் பெருமானைமாத்திரங் கண்டான்.—எ-று. தல்லீறு தொகை. ஓர்-அசை. கண்டிலன், முற்றெச்சம். (கக)

ஆழ்ந்த சிந்தைய னதிசய மடைந்துசே வடிக்கீழ்த்
தாழ்ந்தெ ழுந்திரு கைகளுந் தலைமிசைக் கூப்பிச்
சூழ்ந்து தன்பதிக் கேகுவா னொருதலை துணிந்து
வாழ்ந்த வன்பினன் விடைகொடு வழிக்கொடு வந்தான்.

இ-ள். (அப்பெருமான்) திருவடியில அழுந்திய கருத்துடைய வைசியன் ஆச்சரியம்பெற்று வணங்கியெழுந்து சிரமேற் கரங்கூப்பி வலம்வந்து தன்னகரத்துக்குச் செல்ல ஒருபக்கந்துணிந்து (அம்மூர்த்தியிடத்து) விடைபெற்று வழிக்கொண்டு (கலியாணபரத்துக்கு) வந்தான்.—எ-று. (கஉ)

முக்க டம்படு களிற்றினன் முகிறவழ் கோயில்
புக்க டங்கலர் சிங்கமன் னனெதிர் புகல்வான்
றிக்க டங்கலுங் கடந்தவெந் திகிரியாய நெருநை
லக்க டம்பமா வனத்திலோ ரதிசயங் கண்டேன்.

இ-ள். (உடனே) யானைச்சேனையுடைய அரசனது மேகந்தவழும் அரமனையிற் புகுந்து பகைவராகிய யானைக்குச் சிங்கம்போன்ற பாண்டியன் எதிரிலே சொல்லுகின்றான். திசைகளை வென்ற வெவ்விய சக்கரப்படையுடைய மகாராஜாவே நேற்றைத்தினம் உயர்ந்த கடம்படவியிலே ஓ ராச்சயரியங் கண்டேன் (அஃதென்னையெனில்)—எ-று. ஏகதேசவுருவகம். (கரு)

வல்லை வாணிகஞ் செய்துநான் வருவழி மேலைக்
கல்ல டைந்தது வெங்கதிர் கங்குலும் பிறப்பு
மெல்லை காணிய கண்டன னிரவிமண் டலம்போ
லல்ல டுஞ்சுடர் விமானமு மதிற்சிவக் குறியும்.

இ-ள். வர்த்தகஞ் செய்து விரைவாக யான் வரும்போது சூரியன் அஸ்தமயகிரியை அடைந்தான் (அப்பொழுது) இரவின் முடிவும் (என்) பிறவி முடிவுங்காண ஆதித்த மண்டலம்போல இருளைப்போக்கும் விளக்கமுள்ள விமானத்தையும் சிவலிங்கமூர்த்தியையுங் கண்டேன்.—எ-று. (கச)

மாவ லம்புதார் மணிமுடிக் கடவுளர் வந்தத்
தேவ தேவனை யிரவெலா மருச்சனை செய்து
போவ தாயினர் யானும்ப் பொன்னெடுங் கோயின்
மேவு மீசனை விடைகொடு மீண்டன னென்றான்.

இ-ள். அவ்விராமுழுவதும் தேவர்கள் வந்து அம்மகாலிங்க மூர்த்தியைப் பூசித்துப்போனார் யானும் அப்பிரானிடத்து விடைபெற்று வந்தேனென்றான்.—எ-று. மா அலம்பு - வண்டுகள் ஒலிக்கும். (கரு)

மூனு மன்பினன் மொழிந்திட முக்கணெம் பெருமான்
றூளு மஞ்சலி கரங்களுந் தலையில்வைத் துள்ள
நீளு மன்புமற் புதமுமே நிரம்பநீர் ஞால
மாளு மன்னவ னிருந்தனன் போயின னருக்கன்.

இ-ள். (அங்ஙனம்) சுரக்கும் அன்புடைய வைசியன்கூற அரசன் சிவபிரான் றிருவடியொடு குவித்தகரங்களைச் சிரமேல்வைத்து மனத்திற் பேரன்பும் ஆச்சரியமும் நிரம்பவிருந்தான் (அப்போது) சூரியன் அஸ்தமயமானான்.—எ-று. ஏ - இசைநிறை அசை. நீர் - ஆகுபெயராய்க் கடலாம். (கசு)

ஈட்டு வார்வினை யொத்தபோ திருண்மலங் கருக
வாட்டு வாரவர் சென்னிமேன் மலரடிக் கமலஞ்
சூட்டு வார்மறை கடந்ததந் தொல்லுரு விளங்கக்
காட்டு வாரொரு சித்தராய்த் தோன்றினர் கனவில்.

இ-ள். இருவினைகளைத் தேடுவார்க்கு அவை சமமானபொழுது (குருமூர்த்தியாய்) ஆணவமல சத்திகெட வாட்டித் திருவடிசூட்டி வேதாதீதமான தம்பழைய சிறப்புவடிவம் விளங்கச்செய்யுஞ் சிவபிரான் (அவ்விரவிலே அரசனது) கனவின் கண்ணே சித்தமூர்த்தியாய் எழுந்தருளி.—எ-று. வாட்டுவார் முதலியன முற்றெச்சங்கள். (கஎ)

வடிகொள் வேலினாய் கடம்பமா வனத்தினைத் திருத்தக்
கடிகொள் காடகழ்ந் தணிநகர் காண்கென வுணர்த்தி
யடிக ளேகினர் கவுரிய ராண்டகை கங்குல்
விடியும் வேலைகண் விழித்தனன் பரிதியும விழித்தான்.

இ-ள். கூரிய வேற்படையுடையாய் கடம்படவியை வெட்டித்திருத்தி அழகிய நகரமாகச் செய்வாயென்று அருளி அம்மூர்த்தி மறைந்தருளினர். அப்பாண்டியராஜன் இரவு விடியும்போதில் நித்திரைநீங்கினன் சூரியனும் உதயமானான்.—எ - று.

கனவிற் றீர்ந்தவ னியதியின் கடன்முடித் தமைச்சர்
சினவிற் றீர்ந்தமா தவர்க்குந்தன் கனத்திறஞ் செப்பி
நனவிற் கேட்டதுங் கனவினிற் கண்டது நயப்ப
வினவித் தேர்ந்துகொண் டெழுந்தனன் மேற்றிசைச் செல்வான்.

இ-ள். சொப்பனத்தி னீங்கியபாண்டியன் நித்திய கன்மங்களை நிறைவேற்றி அமைச்சர்க்குஞ் சாந்தமுள்ள தவத்தினர்க்குந் தான்கண்ட சொப்பன நிலைமையைச் சொல்லி (முதல் நாளிலே) சாக்கிரத்திற் றனஞ்சயன் முகமாகக் கேள்வியுற்றதும் சொப்பனத்திற் கண்டதும் பயன்பட அவாமாட்டு வினவித் தெளிந்து மேலைத்திசைக் குச் செல்ல எழுந்தான்.—எ-று. சினவு - சினத்தல். (கக)

அமைச்ச ரோடுமேக நீபமா வனம்புகுந் தம்பொன்
சமைச்ச விழ்ந்தபொற் றாமரைத் தடம்படிந் தொளிவிட்
டிமைச்ச லர்ந்தபொன் விமானமீ தினிதுவீற் றிருந்தோர்
தமைச்ச ரண்பணிந் தஞ்சலி தலையின்மேன் முகிழ்த்தான்.

இ-ள். (எழுந்து) அமைச்சரோடும் அக்கடம்பாடவியிற் புகுந்து பொற்றாமரை வாவியில் மூழ்கிச் சுவர்ணவிமானத்து வீற்றிருந்தருளும் மூலலிங்க மூர்த்தியை (த்தூரத்தே) வணங்கிச் சிரமீது அஞ்சலி குவித்தான்.—எ-று. (உ0)

அன்பு பின்றள்ள முன்புவந் தருட்கணீர்த் தேக
வென்பு நெக்கிட வேகிவீழ்ந் திணையடிக் கமலம்
பொன்பு னைந்ததார் மௌலியிற் புனைந்தெழுந் திறைவன்
முன்பு நின்றுசொற் பதங்களாற் றோத்திர மொழிவான்.

இ-ள். (பின்பு) அன்பு பின்னின்றுதள்ள அருட்பார்வை முன்னின்று இழுத்துச்செல்ல எலும்பும் உடைந்துருகச் சென்று (சமீபத்தில்) வீழ்ந்து உபயபத கமலங்களைப் பொன்மாலை புனைந்த மகுடமீதுசூடி அப்பெருமான் றிருமுன்னின்று புகழ்மொழிகளாலே தோத்திரஞ்செய்யத் தொடங்கினான்.—எ-று. (உக)

சரண மங்கையோர் பங்குறை சங்கர சரணஞ்
சரண மங்கல மாகிய தனிமுதல் சரணஞ்
சரண மந்திர வடிவமாஞ் சதாசிவ சரணஞ்
சரண மும்பர்க ணாயக பசுபதி சரணம்.

இ-ள். உமாதேவியார் ஒரு பாதித்திருமேனியிலே தங்கப்பெற்ற சங்கரரோ சிவமாகிய ஒப்பில்லாத முதல்வரோ மந்திர ரூபமாகிய சதாசிவமூர்த்தியே தேவர்களுக்கு நாயகரோ பசுக்களுக்குப் பதியாயுள்ளவரோ வந்தனம்.—எ-று. (உஉ)

ஆழி ஞாலமே லாசையு மமரர்வான் பதமேல்
வீழு மாசையும் வெறுத்தவர்க் கனறிமண் ணுண்டு
பீழை மூழ்கிவா னரகொடு பிணிபடச் சுழலு
மேழை யேங்களுக் காவதோ வெந்தைநின் கருணை.

இ-ள். எங்கள் பிதாவே? உமது கருணை, இகபரபோகங்களைவிரும்பும் ஆசையை ஒழித்தவர்க்கன்றிப் பூமியை ஆண்டு துன்பத்தில் அழுந்திச் சுவர்க்க நிரயங்களிலே கட்டுற்றுச் சுழலும் எளியேங்களுக்குக் கிட்டத்தக்கதல்ல.—எ-று. ஆழிஞாலம் - கடல்சூழ்ந்தவுலகம். ஞாலம் வான்பதம் - ஆகுபெயர். (உ௩)

சூள தாமறைச் சென்னியுந் தொடத்தொட நீண்ட
நீள னீயுனக் கன்பில மாயினு நீயே
மூள வன்புதந் தெங்குடி முழுவதும் பணிகொண்
டாள வேகொலிக் கானகத் தமர்ந்தனை யென்று.

இ-ள். (தொடுவேனெனச்) சபதங்கூறியதாகிய வேதசிரசுங் கிட்டுந்தோறும் அப்பாற்பட்ட நீட்சியுடையவர் தேவரீர், (யாங்கள்) உமக்கு அன்பிலமாயினும் தேவரீரோ சுரக்கும் அன்பினைத் தந்தருளி எங்கள் குடிமுழுதும் ஏவல்கொண்டு ஆளுதற்பொருட்டோ இவ்வனத்தில் அமர்ந்தருளினீர் என்ற.—எ-று. (௨௪)

சுரந்த வன்பிரு கணவழிச் சொரிவபோற் சொரிந்து
பரந்த வாற்றொடு சிவானந்தப பரவையுட் படிந்து
வரந்த வாதமெய் யன்பினால் வலங்கொடு புறம்போந்
தரந்தை தீர்ந்தவ னொருசிறை யமைச்சரோ டிருந்தான்.

இ-ள். (அகத்திற்) சுரந்த அன்பு இரண்டு கண்ணிற் சொரிவதுபோற் சொரிந்து (அதனாற்) பெருகிய நதியோடு சிவானந்தக் கடலின்முழுகி மேம்பட்ட மெய்யன்பினால் வலஞ்செய்து புறம்வந்து(பிறவித்)துன்பத்தினீங்கிய அரசன் ஓரிடத்தே அமைச்சரோடிருந்தான்.—எ-று. சொரிவது என்னுந் துவ்வீறு தொகை. (௨௫)

ஆய வேலையின் மன்னவ னாணையா லமைச்சர்
மேய வேவலர் துறைதுறை மேவினர் விடுப்பப்
பாய வேலையி னார்த்தனர் வழிக்கொடு படர்ந்தார்
சேய காடெறிந் தணிநகர் செய்தொழின் மாக்கள்.

இ-ள். அங்ஙனம் இருந்தபொழுது அரசனதாணையால் அமைச்சர் அங்குள்ள ஏவலாளரை இடங்கள்தோறும் அனுப்ப (அவர்)சென்று (ஏவியவுடன்) நெடியகாடுவெட்டி நகர்செய்யுந் தொழிலுடையார் கடல்போல் ஒலித்து(க் காடுவெட்ட) வழிசெய்துகொண்டு சென்றனர்.—எ-று. மேவினர் ஆர்த்தனர் முற்றெச்சம். (௨௬)

வட்ட வாய்மதிப் பிளவின்வெள் வாய்க்குய நவிய
மிட்ட தோளினர் யாப்புடைக் கச்சின ரிரும்பின்
விட்ட காரொளி மெய்யினர் விசிகொள்வார் வன்றோ
றொட்ட காலினர் வனமெறி தொழிலின ரானார்.

இ-ள். இரும்புபோற் கரியவொளி வீசும் உடம்புடைய தொழிலாளர், அர்த்தசந்திரன்போல வெள்ளிய வாயுள்ளவாளும் கோடரியும் வைத்த தோளையும் கட்டிய கச்சை(யுடைய அரை)யையும் வாராற்கட்டிய செருப்புள்ள காலையும் உடையராய்க் காடுவெட்டுந் தொழிலினரானார்.—எ-று. (௨௭)

மறியு மோதைவண் டரற்றிட மரந்தலை பனிப்ப
வெறியு மோதையு மெறிபவ ரோதையு மிரங்கி
முறியு மோதையு முறிந்துவீ ழோதையு முகில்வாய்ச்
செறியு மோதையுங் கீழ்ப்பட மேற்படச் செறியும்.

இ-ள். (போய்) மீளும் ஒலியுடைய வண்டுகள் புலம்ப மரங்கள் தலைமெங்க வெட்டும் ஒலியும் வெட்டுபவர் ஒலியும் (அம்மரங்கள்) முழங்கி முறியும் ஒலியும் முறிந்து வீழும் ஒலியும் (கூடி) மேகவொலி கீழ்ப்பட மேற்படும்.—எ-று. (உ௯)

ஒளிறு தாதொடு போதுசெந் தேனுக வொலித்து
வெளிறில் வன்மரஞ் சினையிற வீழ்வசெங் களத்துப்
பிளிறு வாயவாய் நிணத்தொடு குருதிநீர் பெருகக்
களிறு கோடிற மாய்ந்துவீழ் காட்சிய வனைய.

இ-ள். வயிர வன்மரங்கள் விளங்கு மகரந்தத்தோடு மலருந்தேனுஞ் சிந்த ஒலித்துக் கொம்புமுறிய விழுதல், போர்க்களத்தில் ஒலிக்கும் வாயுடையனவாய் ஊனுடன் உதிரம் பெருக யானைகள் தந்தம் ஒடிய மரித்துவீழுந் தோற்றம்போலும்.—எ-று.

பூவ டைந்தவண் டினமயற் புறவொடும் பழனக்
காவ டைந்தன பறவைவான் கற்பக மடைந்த
கோவ டைந்திட வொதுங்குறு குறுமபுபோற் செறிந்து
மாவ டைந்தன மாடுள வரைகளுங் காடும்.

இ-ள். பூவின் வண்டுகள் பிற காடுகளிலும் வயலுள்ள சோலைகளிலும் பறவைகள் கற்பதாருவிலும் அரசன்வரக் குறும்பர் ஓடுதல்போல (வெட்டுவோர்நெருங்க) மிருகங்கள்கூடிப பிறமலைகளிலுங் காடுகளிலுஞ் சேர்ந்தன.—எ-று. (௩0)

இருணி ரமபிய வனமெலா மெறிந்துமெய் யுணர்ந்தோர்
தெருணி றைந்தசிந் தையின்வெளி செய்துபல் லுயிர்க்கு
மருணி றைந்துபற் றறுத்தர னடிநிழ லடைந்த
கருணை யன்பர்தம் பிறப்பென வேரொடுங் களைந்தார்.

இ-ள். தத்துவஞானிகளின் களங்கமற்ற வுளம்போலத் தொழிலினர் காடுமுழுதும் வெட்டி வெளிசெய்து உயிர்கண்மாட்டுக் கருணைவைத்துப் பற்றுநீங்கிச் சிவபிரான் றிருவடிநீழ லடைந்த அன்பர் பிறவிபோல வேரொடு களைந்தார்.—எ-று. (௩௧)

களைந்து நீணிலந் திருத்திச்செந் நெறிபடக் கண்டு
வளைந்து நன்னக ரொடுப்பதெவ் வாறெனத் தேறல்
விளைந்து தாதுகு தார்முடி வேந்தன்மந் திரரோ
டளைந்த ளாவிய சிந்தையோ டிருந்தன னங்கண்.

இ-ள். (அங்ஙனம்) களைந்து பூமியைத் திருத்தி நல்லவழி யுண்டாக்கி (இனி) வளைவாக நகரம்செய்வது எங்ஙனமென்று பாண்டியன் மந்திரிகளோடு கலந்து யோசிக்குங் கருத்தோடிருந்தான். அவ்விடத்தே.—எ-று. தேறல் - தேன். (௩௨)

மெய்ய ரன்புதோய் சேவடி வியனிலந் தீண்டப்
பொய்ய கன்றவெண் ணீறணிமேனியர் பூதிப்
பையர் கள்ளிருட் கனவில்வந் தருளிய படியே
யையர் வல்லைவந் தருளினா ரங்சுளங் களிப்ப.

இ-ள். சுந்தரேசர், தத்துவ முணர்ந்தோரது அன்பு பொருந்திய திருவடியைப் பூமி புரிசிக்கும்படி பரிசுத்த விபூதியணிந்த திருமேனியரும் திருநீற்றுப் பையினருமாகிக் கனவில் வந்தபடி அரசன் மனமகிழ விரைந்து வந்தருளினார்.—எ-று. (கக)

கனவி லும்பெருங் கடவுளர் காண்பதற் கரியார்
நனவி லும்வெளி வந்தவர் தமையெதிர் நண்ணி
நினைவி னின்றதா ளிறைஞ்சினோர் நின்றுநல் வரவு
வினவி யாதனங் கொடுத்தனன் மெய்யுணர் வேந்தன்.

இ-ள். சொப்பனத்தும் அரிபிரமர் காணக்கூடாதவராயிருந்தும் ஜாக்கிரத்தும் அரசன் (காண) வெளிவந்தருளிய அச்சித்தமூர்த்தியை (அவன்) எதிர்சென்று(தனது) சிந்தனையில் நின்ற (அவர்) பாதங்களை வணங்கித் திருமுன்னே நின்று நல்வரவை வினவி ஆசனங் கொடுத்தான்.—எ-று. (கஉ)

தென்ன ரன்பினி லகப்படு சித்தர்தா முன்னர்ச்
சொன்ன வாதிநூல் வழிவரு சார்புநூற் றொடர்பா
னன்ன ராலய மண்டபங் கோபுர நகர
மின்ன வாறுசெய் யெனவகுத் திமமென மறைந்தார்.

இ-ள். (ஆசனத்தில் அமர்ந்து) பாண்டியர் பத்தி (வலை) யிற்படும் அச்சித்தமூர்த்தி தாம் ஆதியில் அருளிய முதனூல் வழிநூல் சார்புநூல்களின் முறையால் ஆலயமுதலியவற்றை இங்ஙனஞ் செய்யென்று வகுத்து உடனே மறைந்தருளினார்.—எ-று. முதனூல் ஆகமம், வழிநூல் சிற்பம், சார்புநூல்கள் ஏனையன. (கங)

மறைந்தெ வற்றினு நிறைந்தவர் மலரடிக் கன்பு
நிறைந்த நெஞ்சுடைப் பஞ்சவ னிலத்துமேம் பட்டுச்
சிறந்த சிற்பநூற் புலவராற் சிவபரஞ் சுடர்வந்
துறைந்து வைத்தவா றாலய மணிநகர் காண்பான்.

இ-ள். அப்பெருமான் அடிமலரில் அன்புமிக்க பாண்டியன் சிற்பநூல் வல்லவரால் அச்சித்தமூர்த்தி அருளியபடி ஆலய முதலியன அமைக்கின்றவன்.—எ-று. அடிக்கு உருபுமயக்கம். (கச)

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

மறைபயில் பதும மண்டப மருத்த மண்டப மழைநுழை வளைவாய்ப், பிறைபயில் சிகைமா மணடப மறுகாற் பீடிகை திசையெலாம் பிளக்கும், பறைபயி னிருத்த மண்டபம் விழாக்கொள் பன்மணி மண்டபம் வேள்வித், துறைபயில் சாலை திருமடைப் பள்ளி சூழுறை தேவர்தங் கோயில்.

இ-ள். (சுவாமி சந்நிதியிலே) பத்மமண்டபம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், அறுகாற்பீடம், நிர்த்தமண்டபம், உற்சவமண்டபம், யாகசாலை, மடைப்பள்ளி, பரிவாரதேவாலயம்.—எ-று. மழை - மேகம். சிகை - சிகரம். பறை - வாத்தியம். (கரு)

**வலவயி னிமய வல்லிபொற் கோயின் மாளிகை யடுக்கிய மதில்வா,**
**னிலவிய கொடிய நெடியகு ளிகைவா னிலாவிரி தவளமா ளிகைமீன், குல**
**விய குடுமிக் குன்றிவர் செமபொற் கோபுரங் கொண்டல்கண் படுக்குஞ், சுல**
**வெயி லகழிக் கிடஙகுகம் மியநூற் றொலவரம பெலலைகண் டமைத்தான்.**

இ-ள். வலப்புறத்தில் அம்மையாலயம், திருமாளிகைப் பத்தியுடைய திருமதில், ஆகாயத்தில் விளங்கிய கொடியையுடைய நெடிய கைபிடிசுவருள்ள வெள்ளிய நிலாவீசுந் தவளமாளிகை, நக்ஷத்திரங்கள் விளங்கிய சிகரமுள்ள மலைபோலுயர்ந்த செம்பொற் கோபுரங்கள் இவைகளைச் சிற்பநூலிற் கூறிய பழைய வரம்பின்படி (பதநூனாளிற் புதுக்கிச்) சூழ்ந்த அரணையும் அகழியையும உண்டாக்கினான்.—எ-று. ஆலயம் மண்டபம் கோபுர முதலியவைகளிலுள்ள வெடிப்பு சிதைவு முதலியவற்றைச் சரிப்படுத்திப் பததுத் தினததிற் புதுககினான் எனறு வடநூல். (கூஅ)

*சித்திர நிரைத்த பீடிகை மறுகு தெற்றிகள் வாணிலாத் தெளிக்கு*
*நித்தில நிரைத்த விழாவரு வீதி நிழன்மணிச சாளர வொழுககப்*
*பித்திகை மாடப் பெருந்தெரு கவலை பீடுசால் சதுக்கநற் பொதியில*
*பத்தியிற் குயின்ற மன்றுசெய் குன்று பருமணி மேடையா டரங்கு.*

இ-ள். சித்திரங்கள் வரிசைப்பட எழுதிய கடைத்தெருக்கள், சிததிரகூடங்கள், ஒளிநிலவுவீசும் முத்துகள்தொடுத்த திருவிழாக்கொள்ளும் வீதிகள், ஒளிபொருந்திய இரத்தினங்கள் அழுத்திய சாளரவரிசைகள்பெற்ற சுவர்கள்பொருந்திய மாடங்கள் நெருங்கிய பெரியதெருக்கள், கவர்வழிகள், பெருமை அமைந்த நாற்சந்திகள், நல்ல அம்பலங்கள், வரிசைப்படச்செயத சபைகள், செய்குன்றுகள், பருத்தமணிகள் பதித்த மேடைகள், நாடகசாலைகள்.—எ-று. (கூகூ)

*அருந்தவ ரிருக்கை யந்தண ருறையு ளரசரா வணங்குல வணிகப்*
*பெருந்தெரு நல்வே ளாளாபே ரறஞ்சால பெருங்குடி யேனைய கரிதேர்*
*திருநதிய பரிமா நிலைக்களங் கழகந நீஞ்சுவை யாறுநான் குண்டி*
*யிரந்தவர்க் கருத்து நல்லறச் சாலை யினையன பிறவுநன் கமைத்தான்.*

இ-ள். பெரியதபசிகளின் மடாலயங்களும் பிராமணாகிருகங்களும் அமைந்த வீதிகள், இராஜவீதிகள், வைசியர்வீதிகள், பேரறம் அமைந்த பெருங்குடிகளாகிய நல்லவேளாளர் வீதிகள், மற்ற இரதம் யானை குதிரை இவைகளின் கூடஙகள, வித்தியாசாலைகள், அறச்சாலைகள் இவைகள் முதலியவற்றையும் அமைத்தான்.—எ-று. அறுசுவை, கைப்பு - காழ்ப்பு - புளிப்பு- உவர்ப்பு - துவாப்பு - தித்திப்பு. நான்குண்டி, உண்டல் - தின்றல் - நக்கல் - பருகல். (சo)

**துணிகயங் கீழ்நீர்க் கூவல்பூ வோடை தொடுகுளம பொய்கைநந் தவனந்**
**திணிமலர்ச் சோலை துடவையுய் யானந் திருநகர்க் கணிபெறச் செய்து**
**மணிமலர்த் தாரோன் மாளிகை தனக்கம் மாநகா வடகுண பாற்கண்**
**டணிநகா் சாந்தி செய்வது குறித்தா னண்ணலா ரறிந்திது செய்வார்.**

இ-ள். வெட்டியகேணி, கிணறு, ஓடை, குளம், பொய்கை, நந்தவனம், சோலை, உழவுகொல்லை, பூந்தோட்டம், இவைகளைத திருநகரததுக்கு அழகுபெறச்செய்து, பூண்

டியன் அந்நகரத்தின் ஈசானதிசையிலே தனக்குமாளிகையும் அமைத்து, அந்நகரத்திற்குச் சாந்திசெய்தல்வேண்டுமென்று கருதினன். (அதனைச்) சுந்தரேசர் திருவுளங்கொண்டு இதனைச்செய்கின்றார்.—எ-று. (சக)

பொன்மய மான சடைமதிக் கலையின் புத்தமிழ் துருத்தன ரதுபோய்ச்
சின்மய மான தம்மடி யடைந்தார்ச் சிவமய மாக்கிய செயல்போற்
றன்மய மாக்கி யந்நகர் முழுதுஞ் சாந்திசெய் ததுவது மதுர
நன்மய மான தன்மையான் மதுரா நகரென வுரைத்தனர் நாமம்.

இ-ள். பொன்போலும் (தமது) சடையிலுள்ள சந்திரகிரணம்போன்ற இனிய புதியகங்கைநீரை (மழைபோல)ச்சிந்தினர் அத்தீர்த்தஞ்சென்று ஞானமயமாகிய தந்திருவடிகளைச் சார்ந்தவரைச் சிவமயமாக்குஞ் செயல்போல அந்நகர முழுமையும் பரிசுத்தமாக்கிச் சாந்திசெய்தது. அத்தீர்த்தம் நல்லமதுரமயமான தன்மையால் (அன்றுதொடங்கி அந்நகரத்திற்குப்) பெயர் மதுராநகரமென்று பெரியோர் கூறினர்.—எ-று. (சஉ)

கீட்டிசைக் கரிய சாத்தனுந் தென்சார் கீறுவெண் பிறைநுதற களிற்றுக்
கோட்டிளங் களபக் கொங்கையன் னையருங குடவயின்மதுமடை யுடைக்குந்
தோட்டிளந் தண்ணந் துழாயணி மௌலித் தோன்றலும் வடவயிற் றேருடு
நீட்டிரும் போந்தி னிழிரகுழ லெணடோ ணீலியுங் காவலா நிறுவி.

இ-ள். (சிவாஞ்ஞைப்படி) கீழைத்திசையிலே சாஸ்தாவையும், தென்றிசையிலே வெள்ளியபாதிமதிபோல் நெற்றியும் யானைகோடுபோலும் இளமைதங்கிய கலவையணிந்த தனங்களுமுடைய சத்தமாதரையும், மேலைதிசையிலே தேன்மடையுடைக்கும் இதழ்விரிந்த தண்ணிய இளந்துளசிமாலையொடு மகுடம் அணிந்த விஷ்ணுமூர்த்தியையும், வடதிசையிலே நெடியபெரிய பனைமலரிதழணிந்த நிமிர்ந்த அளகமும் எட்டுத்தோள்களுமுடைய காளியையும் காவலாகஸ்தாபித்து.—எ-று. (சங)

கைவரை யுருத்திற் கனவரை கிடந்த காட்சியிற பொலிதொளிர் கோயின்
மைவரை மிடற்று மதுராநா யகரை மரபுளி யருச்சனை புரிவான்
பொய்வரை மறையா கமநெறி யொழுகும புண்ணிய முனிவரை யாதி
சைவரைக் காசிப்பதியினிற் கொணாநது தலத்தினிற றூபனஞ் செய்தான்.

இ-ள். யானையின்பிடரிலே பொன்மலையிருந்த தோற்றமபோல மிகவிளங்கும் விமானத்தில் அமர்ந்தருளிய மதுராபுரேசரை விதிப்படி அருச்சனைசெய்தற்கு மெய்யாகிய வேதசிவாகம வழியொழுகும் புண்ணியவடிவ முனிவராகிய ஆதிசைவ வேதியரைக் காசிக்ஷேத்திரத்தினின்றும் அழைப்பித்து அப்பதியிலே ஸ்தாபித(துக காமிகாதியாகமவிதிப்படி அம்மூர்த்திகருப் பூசைசெய்வித்) தான்.—எ-று. கனகவரை இடைக்குறையாயிற்று. (சச)

உத்தம குலத்து நாற்பெருங் குடியு முயாந்தவு மிழிநதவு மயங்க
வைத்தவு மரன புறக்குடி மூன்று மறைவழுக் காமனு வகுத்த
தத்தம நெறியின் றொழுகவை திகமுஞ் சைவமுந் தருமமுந தழைப்பப்
பைத்தெழு திரைநீர் ஞாலமேற் றிலகம பதித்தென நகர்வளம் படுத்தான்.

இ-ள். உத்தம குலமாகிய பிராமணர் க்ஷத்திரியர் வைசியர் வேளாளரென்னும் நால்வகைப் பெருங்குடிகளும், உயர்ந்தகுல ஆணும் தாழ்ந்தகுலப் பெண்ணுங்கூடிப்

பிறந்த அநுலோமர் தாழ்ந்தகுல ஆணும் உயர்ந்தகுலப் பெண்ணுங்கூடிப் பிறந்த பிரதிலோமர் அநுலோமா பிரதிலோமா கூட்டத்தாலானவர் ஆகிய புறக்குடிகள் மூன்றும், வேதவிதிப்படி மநுவினால் வகுக்கப்பட்ட தங்கள் தங்களுக்குரிய ஒழுக்கத்தில் ஒழுகவும், வேதநெறியும் சைவநெறியும் அவைகளைப்பற்றிய புண்ணியங்களும் பெருகவும் பசுமைத்தாயெழும் அலையுடைய கடல்சூழ்ந்த வுலகத்திலே (பாண்டிநாட்டுக்குத்) திலகம் இட்டாற்போல நகரத்தை வளப்பமாகச் செய்தான்.—எ-று. (௬௫)

அன்றுதொட் டரச னங்க ரெய்தி யணிகெழு மங்கல மியம்ப, வென்று
தொட் டிமைக்கு மனையின்மங் கலநா ளெய்தினா னிருந்துமுப் புரமுங், குன்று
தொட் டெய்தான கோயின்மூன் றுறுபபுங் குறைவிலபூ சனைவழா தோங்கக்,
கன்றுதொட் டெறிந்து கனியுகுத் தான்போற் கலிதுரந் தரசுசெய் நாளில.

இ-ள். (செய்த) அரசன் அன்றுமுதல் அம்மதுரைப்பதியை அடைந்து அழகிய மங்கலவாத்தியங்கள் ஒலிக்கச் சூரியமண்டலத்தை அளாவிவிளங்கும் இராஜகிருகத்திலே (ஒரு) சுபதினத்திலே குடியேறியிருந்து சுந்தரேசரது திருவாலயத்திலே நித்திய நைமித்திக காமியமாகிய மூன்றங்கங்களும் குறைவின்றி நிறைந்த பூசனை வழுவாதோங்க விஷ்ணுமூர்த்திபோலப் பாவங்களைப் போக்கி (ஆறாயிரம் ஆண்டு), அரசாட்சி செய்யுங்காலத்தில்.—எ-று. எய்தினான் முற்றெச்சம். குன்றுதொட்டு - மேருமலையாகிய வில்லில் (விஷ்ணுவாகிய பாணத்தைத்) தொடுத்து. (௬௬)

பவநெறி கடக்கும பாதகிவன் கிரணம் பரப்பிளம் பரிதிபோன் மலயத்
துவசனைப் பயந்து மைந்தன்மேன் ஞாலஞ் சுமத்திநாள் பலகழித் தொருநா
ணவவடி விறந்தோ னுலயத தெய்தி நாதனைப் பணிந்துமூ வலஞ்செய்
துவமையி லின்ப வருணிழ லெய்தி யொன்றியொன் றாகிலை நின்றான.

இ-ள். பிறவிவழியைக்கடக்கும் அக்குலசேகர பாண்டியராஜன் இளஞ்சூரியன் போல மலயத்துவஜ பாண்டியனைப்பெற்று அப்புத்திரன்மீது பூபாரத்தை ஏற்றிப் பலதினங்கழித்து ஒருதினம் அருவம் நானகும் உருவம் நான்கும் உபயமுமாகிய நவவடிவைகடந்த சுந்தரேசரது திருக்கோயிலிற்சென்று அவரை வழிபட்டு ஒப்பில்லாத ஆனந்தமய அருணிழலை அடைந்து கலந்துங்கலவாத அத்துவிதமாய் நின்றான்.—எ-று.

திருநகரங்கண்டபடலமுற்றியது.

ஆகச்செய்யுள் ௹௪அ.

## நான்காவது

# தடாதகைப்பிராட்டியார்

## திருவவதாரப்படலம்.

கலிவிருத்தம்.

கன்னியொரு பங்கினர் கடம்பவன மெல்லா
நன்னகர மானது நவின்றுமுல கீன்ற
வன்னைமக ளாகிமல யத்துவச னுக்கு
தென்னனிடை வந்துமுறை செய்ததுனி செய்வாம்.

இ-ள். சுந்தரேசர் அமர்ந்தருளும் கடம்பவனமுழுதும் நல்ல நகரமான திருவிளையாடலைக் கூறினோம். (இனி) உலகமாதாவாகிய மீனாக்ஷிதேவியார், மலயத்துவஜ பாண்டியனுக்குப் புத்திரியாராய் வந்து செங்கோல்செலுத்திய திருவிளையாடலை (யாம) கூறுவாம்.—எ-று. தென்னனிடை உருபுமயக்கம். (௧)

மனுவுறமு வந்துதன் வழிச்செல நடாத்துமப்
புனிதன்மல யத்துவசன் வென்றிபுனை பூணான்
கனியமுத மன்னகரு ணைக்குறையுள் காட்சிக்
கினியன்வட சொற்கட றமிழ்க்கட லிகந்தோன்.

இ-ள். மலயத்துவஜ பாண்டியன், மகிழ்ந்து மநுநீதியைத் தனது செங்கோல் வழியேசெலுத்தும் அகந்தூய்மையனும் வெற்றியை ஆபரணமாக அணிந்தவனும(சுவை) முதிர்ந்த அமிழ்தம்போல (பசிமுதலியவற்றைப் போக்கி உயிர்களைப் பாதுகாக்கும்) கருணைகரனும் (முறையுங்குறையும் வேண்டினார்) காட்சிக்கு இனியனும் வடநூற்கடலுந் தென்னூற்கடலும் நிலைகண் டுணர்ந்தவனும்.—எ-று. பொதியமலையிலே கொடியை நாட்டினமையால், மலயத்துவசனென்றார். (௨)

வேனில்விறல் வேள்வடிவன் வேட்கைவிளை பூமி
யானமட வார்களபதி னாயிரவ ருள்ளான்
வானெழுகு பானுவழி வந்தொழுகு சூர
சேனன்மகள் காஞ்சனையை மன்றல்வினை செய்தான்.

இ-ள். வேனிற்காலத்து வெற்றிகொள்ளும் காமன்போலும் அழகியவடிவினனும் பூமிபோலக் காமப்பயிர் விளைதற்கிடமான பலபோகமகளிரையுடையவனும் சூரசேன சோழராஜனுடையபுத்திரி காஞ்சனமாலையை விதிப்படி விவாகஞ்செய்தவனும்.—எ-று. (௩)

கணனுதலை முபபொழுதும் வந்துபணி கற்றோ
னெண்ணிலபல னாணமகவி லாவறுமை யெய்திப்
பண்ணரிய தானதரு மமபலவு மாறறிப
புண்ணியவி ரமபுரி வேள்விபுரி குறறான்.

இ-ள். சிவபிரானை வழிபடுதற்குக்காரணமாகிய சைவாகமநூலகளைச் சிறப்பாக வுணர்ந்தவனுமாகிப் பதினாயிரம் ஆண்டு (அரசாட்சிசெய்து சோமவார விரதமுதலியன அநுட்டித்தும்) புத்திரபாக்கியம இன்மையால் (அதுபெறத) தானமுதலியசெய்து அசுவமேதஞ்செய்யத் தொடங்கினான்.—எ-று. புரிகவெனனும அகரந தொகை. (௪)

ஈறின்மறை கூறுமுறை யெண்ணியொரு தொண்ணூற்
றாறினொடு மூன்றுமக மாற்றவம ரேச
னூறுமக முமபுரியி னென்பத னொடிப்பின்
மாறுமென மற்றதனை மாற்றியிது சாற்றும்.

இ-ள். நித்தியமாகிய வேதம் ஓதியமுறையே தொண்ணூற்றொன்பது யாகஞ் செய்ய, (அதனையுணர்ந்த) இந்திரன் நூறுயாகமுஞ் செய்தால் நமதுபதவி கணத்திலே ஒழியுமெனக் கருதி அப்பரிமேதத்தைத் தடுத்து இதனைக் கூறுகின்றான்.—எ-று. (௫)

நன்பொருள் விரும்பினை யதற்கிசைய ஞால
மின்புறு மகப்பெறு மகத்தினை யியற்றி
னன்புறு மகப்பெறுதி யென்றமரா் நாடன்
றன்புல மடைந்திட லுகிமபாகு தாரான்.

இ-ள். (பாண்டியராஜனே நீ) நல்ல புத்திரப்பேற்றை இச்சித்தாய் அதற்கிண ங்க உலகத்தார் இன்புறத்தக்க புத்திரகாமேஷ்டி யாகத்தைச் செய்தால் அன்புமிகப்பெ ற்ற அப் புத்திரப்பேற்றை அடைவா யென்று சொல்லி அவ்விந்திரன் அமராவதியை அடைந்தவளவிலே வேப்பமலர்மாலை விளங்கும் அப்பாண்டியன்.—எ-று. (சு)

மிக்கமக வேள்விசெய் விருப்புடைய ளுகி
யக்கண மதற்குரிய யாவையு மமைத்துத்
தக்கநிய மத்துரிய தேவியொடு சாலை
புக்கனனி ருந்துமக வேள்விபுரி கிற்பான.

இ-ள். மேலான புத்திரகாமேஷ்டியாகஞ் செய்யும் விருப்பமுடையனுகி உட னே அதற்குரியவைகளைத் தேடித் தகுந்தநியமத்தோடு தனக்குரிய மனைவியுடன் யாக சாலையிற்போயிருந்து அவ்யாகஞ் செய்யத் தொடங்கினன.—எ-று புக்கனன் - முற் றெச்சம் (எ)

ஆசறு மறைப்புலவ ராசிரியா காட்டு
மாசறுச டங்கின்வழி மந்திரமு தாத்த
வோசையநு தாத்தசொரி தந்தமுவ வோதி
வாசவனி ருக்கையிலி ருந்தெரிவ ளர்ப்பான்.

இ-ள். (தொடங்கி) வேதவுணர்ச்சியுடைய குரவர்கூறிய சடங்கின் வழியே மந்திரங்களையுச்சரித்து (த்திருக்கோயிலுக்கு)க் கிழைத்திசையிலிருந்து வேள்வித்தீ வள ர்த்தினன்.—எ-று. உதாத்தம - எடுத்தல் அநுதாத்தம் - படுத்தல. சொரிதம் - நலிதல், அநுசமத்துவம். (அ)

விசும்புநில னுந்திசையும் வேளவியடு சாலைப்
பசும்புகைப டர்ந்தொருப டாமெனம றைப்பத்
தசும்புபடு நெய்பொரிச மித்தினொடு வானோர்க்
கசும்புபடு மின்னமுதி னுகுதிம டுத்தான்.

இ-ள். அவ்யாகசாலையி லெழும் புகை எவ்விடத்தும் பரந்து ஒரு போர்வை போல மறைக்கச் சமித்தினோடு கடங்களிலுள்ள நெய் பொரிகளைத் தேவர்பொருட்டு ஊறுகின்ற இனிய அமிழ்தம்போல அக்கினியிற் பெய்தான்.—எ-று. (கூ)

ஐம்முகன நாதிபர மாத்தனுரை யாற்று
னெய்ம்முகந் றைத்தழ னிமிர்த்துவரு மெல்லை
பைம்முக வராவணி பரஞ்சுடர் தனிப்ப
மைம்முக நெடுங்கணிம வான்மனைவி நாண.

இ-ள். அநாதியாயுள்ளவரும் பரமாப்தருமாகிய சதாசிவமூர்த்தி அருளிய வே தவழியால் நெய்யை யாககுண்டத்தில் நிறைத்து அக்கினியை வளர்த்துவரும் பொழுது, சிவபிரான் தனிமையாகவும் மலையரையன் மனைவி மேனை நாணவும்.—எ-று. (க0)

வள்ளன்மல யத்துவச மீனவன வலத்தோ
டுள்ளமனை காஞ்சனை சுருங்கிய மருங்கு
றள்ளவெழு கொங்கைக டதும்பகிமிர் தீம்பால்
வெள்ளமொழு கக்கரிய வேற்கணிட னாட.

இ-ள். மலையத்துவஜ பாண்டியன் வலததோள்துடிக்கவும் அவன்மனைவி காஞ்சனமாலை இடையொசிய எழுந்ததனஙகளிற் பால்ஒழுகவும் இடக்கண் ஆடவும்.—எ-று.

இவ்வுலக மன்றியுல கேழுமகிழ் வெய்தச்
சைவமுத லாயின தவத்துறை நிவப்ப
வெளவிய மறங்கெட வறங்குது கலிப்பத்
தெய்வமறை துந்துபி திசைபபுல னிசைப்ப.

இ-ள். எல்லாவுலகமு மகிழ்ச்சியடையவும் தவவழிக்குரிய சைவமுதலிய அகச்சமயங்கள் (ஏனையசமயங்களைக் கீழாககி) ஓஙகவும் பொறாமைமுதலிய பாவங்கள் ஒழியவும் புண்ணியங்கள் மகிழவும் திவ்விய வேதங்களும் துந்துபிகளும் திசைகளெங்கும் ஒலிக்கவும்.—எ-று. அகச்சமயம், சைவம் - பாசுபதம் - மாவிரதம் - காளாமுகம் - வைரவம் - வாமம். (கஉ)

மைம்மலர் நெடுங்கணர மங்கையர் நடிப்ப
மெய்ம்மன மொழிச்செயலின் வேறுபட லின்றி
யம்மதுரை மாநகரு ளாரக மகிழ்ச்சி
தமமையறி யாதன தலைத்தலை சிறப்ப.

இ-ள். மையெழுதிய நெடிய கண்ணுடைய அரமகளிர் ஆடவும் அம்மதுரைநகரத்தார்க்கு முக்கரணச்செய்கை வேறுபடாது (தோன்றிய) மனமகிழ்ச்சி தம்மைமறக்கச் செய்வதாகத தனித்தனி மேலெழவும்.—எ-று. (கங)

மாநதர்பயின் மூவறுசொன் மாநில வரைப்பிற்
றீநதமிழ் வழங்குதிரு நாடது சிறப்ப
வாய்நதமிழ் நாடர சளித்துமுறை செய்யும்
வேந்தர்களின் மீனவர் விழுத்தகைமை யெய்த.

இ-ள். மானுடர் கற்கும் பதினெண்பாஷைகள் வழஙகும் நாடுகளுள்ளே இனியதமிழ்ப்பாஷை வழஙகும் நாடுகள் சிறக்கவும்(சிவபிரானுஞ் சங்கத்தாரோடுகூடி) ஆராயப்பெற்ற தமிழ்நாட்டரசாகளாகிய சேரசோழ பாணடியர்களுள்ளே பாண்டியன் சிறப்படையவும்.—எ-று. அது பகுதிப்பொருள் விகுதி. (கச)

நொய்தழ லெரிக்கடவு ளேற்றபய னெய்தக்
கொய்தளி ரொனத்தழல் கொழுந்துபடு குண்டத்
தைதவழி தழ்க்கமல மப்பொழு தலர்ந்தோர்
மொய்தளிர விரைக்கொடி முளைத்தெழுவ தென்ன.

இ-ள். அக்கினிதேவன் செய்த தவப்பயன் எளிதாக அடையவும் யாககுண்டத்திலே அழகொழுகும் இதழ்களையுடைய அலர்ந்த புதிய கமலமலரும் நெருங்கிய தளிரும் மணமுமுள்ள ஓர்கொடி முளைத்தெழுதல்போல.—எ-று. (கரு)

விட்டிலகு சூழியம் விழுங்குசிறு கொணடை
வட்டமதி வாய்க்குறு முயற்கறையை மானக்
கட்டியதி னூற்றிய கதிர்த்தரள மாலைச்
சுட்டியதில விட்டொழுகு சூழ்கிரண மொபப

இ-ள். (ஒளி)விட்டு விளங்கும் (முத்துச்) சூழியம் விழுங்கிய சிறிய (வுச்சிக்) கொண்டை, சந்திரனிடத்துள்ள சிறிய முயற்களங்கம்போலாகவும அச்சூழியத்திற கட்டித் தொங்கவிட்ட முததுமாலையோடுகூடிய சுட்டி, அச்சந்திரனிடததினின்று பரநது சூழ்ந்த கிரணம்போலாகவும்.—எ-று. (கசு)

தீயகுதலை யினனமுத மாரபின்வழி சிநதி
யாங்கிளநி லாவொழுகு மாரவட மின்ன
வீங்குடலி ளமபரிதி வெஞ்சுடர் விழுங்கி
வாங்குகடல் வித்துரும மாலையொளி கால.

இ-ள். தித்திக்கின்ற குதலைமொழியாகிய இனியவமிழ்தம் மார்பின்வழி ஒழுகியதுபோல (அம்மார்பிலே) இளநிலவொழுகு முத்துவடம்விளங்கவும் ஒளிமிகக வடிவுடைய இளஞ்சூரியனது கிரணத்தைக கீழாககி வளைநத கடலிற்றேன்றிய பவளமாலை ஒளியை வீசவும்.—எ-று. (கஎ)

சிற்றிடைவ ளைநதசிறு மென்றுகில புறஞ்சூழ
பொற்றிரு மணிசசிறிய மேகலை புலமப
விற்றிரு மணிக்குழை விழுஙகிய குதமபை
சுற்றிருள் கடிந்துசிறு தோள்வருடி யாட.

இ-ள். சிறிய இடையிலே கட்டிய மெலலிய சிற்றுடையின் புறத்தே சூழ்ந்த பொன்னலாகிய அழகிய மணியழுத்திய சிறிய எணகோவை மேகலை ஒலிக்கவும ஒளியுடைய அழகிய இரத்தினகுண்டலததை அகப்படுத்திய குதம்பை, சூழ்ந்த விருளைப் போக்கிச் சிறியதோள்களை வருடியாடவும்.—எ-று. (கஅ)

தெள்ளமுத மென்மழலை சிந்தவிள மூரன்
முள்ளெயி றரும்பமுலை மூன்றுடைய தோர்பெண்
பிள்ளையென மூவொரு பிராயமொடு நின்று
ளெள்ளரிய பலவுயிரு மெவ்வுலகு மீன்றுள.

இ-ள். தெளிவாகிய அமிழ்தம்போலு மெல்லிய மழலைமொழி வெளிப்படவும் இளநகையரும்புங் கூரிய பற்கள் விளங்கவும புகழத்தக்க உயிர்களையும் உலகங்களையும் உற்பத்திசெய்த உலகமாதாவாகிய மீனாட்சிதேவியார் மூன்றுதனங்களும் மூன்று பிராயமுமுடைய ஓர் பிராட்டியாராக நின்றருளினர்.—எ-று. (கக)

அறுசீரடி யாசிரியவிருத்தம்

குறுநதளிர்மெல் லடிக்கிடந்த சிறுமணிநூ புரஞ்சதங்கை குழறி யேங்க
நறுநதளிர்போ லசைந்துதளர் நடையொதுங்கி மழலையிள் நகையுந் தோன்றப்
பிறந்தபெரும் பயன்பெறுபொன் மாலைமடி யிருந்தொருபெண பிள்ளை யாகு
ளறந்தழுவு நெறிநின்றோர்க் கிகபோகமு வீடளிக்கு மம்மையமமா.

இ-ள். தளிர்போலு மெல்லிய சிற்றடியிலே பொருந்திய மணிகள் அழுத்திய சிறு சிலம்புஞ் சதங்கையுங் கலக்தொலிக்கவும் நறிய தளிர்போல அசைந்து தளர்ந்த நடைநடந்து மழலைமொழியும் புன்னகையுந் தோன்றவும் அரவழி யொழுகுவோர்கு இக(பர) போகங்களும் வீடுபேறும் அருளும் அம்மீநாட்சி தேவியார், பிறந்தசனுலாய பெரும்பயனை (இப்பிறவியிற்) பெறந்தகக காஞ்சனமாலை மடிமீது வீற்றிருநது ஒருபி ராட்டியாராக வாயினார்.—எ-று. இகம உபலக்கணம். (௨௦)

செய்யவாய் வெளிறுது துணைமுலைக்கண் கருகாது சேல்போ னீண்ட
மையவாய் மதர்த்தகருங் கண்பசவா தைபிரணடு மதியந தாங்கா
தையவா யிலைவருந்தப பெருதுபெறு மகவையெடுத் தணைத்தாண் மோந்தா
டுய்யவாய் முத்தங்கொண் டின்புற்றாண் முன்பெற்ற ஞோகை யன்னாள்.

இ-ள். சிவந்தவாய் வெளுததல் முலைக்கண்கறுததல் கரியகண் பசத்தலாகிய கருப்ப சின்னமில்லாமலும் பத்துமாதஞ் சுமககாமலும் அழகிய ஆலிலைபோன்ற வயிறு வருந்தாமலும் முன்பு (உமாதேவியாரைப்) பெற்ற மேனைபோன்ற காஞ்சனமாலை பெற்ற புத்திரியாரை எடுத்தணைத்து (உச்சி) மோநது தூயவாயினாலே முத்தமிட்டு ஆனந்தம் அடைந்தாள் —எ-று. ஆலிலை - உவம ஆகுபெயர் அணைத்தாள் மோந்தாள் முற்றெச்சம். (௨௧)

பரையாதி யிருபபறிவு தொழிலாகி யுலகமெலாம் படைத்துக் காத்து
வரையாது துடைத்துமறைத் தருளியவை நின்றுந்தன் வடிவு வேறு
யுரையாதி மறைகடந்த வொருமுதலவி திருமகளா யுதித்தற் கிந்தத்
தரையாளு மன்னவன்செய் தவமிதுவோ வதற்குரிய தவந்தான் மன்னோ.

இ-ள் பராசத்தி திரோதானசத்தி இச்சாசத்தி ஞானசத்தி கிரியாசத்தி ஆகிய பஞ்சசததிகளாகியும் உயிர்களைப் படைத்தல்முதலிய பஞ்சகிருத்தியங்கள் செய்தும் அவைகளினின்று தன்வடிவு வேறாகி மனம் வாக்கு வேதம் இவைகளைக் கடந்த ஒப்பற்ற சிவசத்தியாகிய முதல்வியார் புதல்வியாராய்த தோன்றுதற்கு இப்புவியை யாளுகின்ற மலயத்துவஜ பாண்டியராஜன் இப்பிறவி மாத்திரத்திற்செய்த இததவம் அமையுமோ அதற்குரிய தவம் முற்பிறவிகளிலே பெரிதுஞ் செய்திருத்தல்வேண்டும்.—எ-று. படைத்தல், காத்தல், துடைததலாகிய மூனறும் உயிர்களுக்கு முறையே உடலைக் கொடுத்தலும் நிறுத்துதலும் ஒடுக்குதலும், மறைத்தல், அருளலாகிய இரண்டும் அறிவை விளக்காமையும் விளக்குதலுமாம். மன ஒழியிசைக்கண வந்தது. (௨௨)

கள்ளமா நெறியொழுகும் பொறிகடந்து கரணமெலாங் கடந்தா னந்த
வெள்ளமாம் பரஞான் வடிவுடையா டன்னன்பின் வெளிவந் தின்றோர்
பிள்ளையா யவதரித்த கருணையுந்தன் மனைட்டிதவப் பேறுந் தேறான்
பள்ளமா கடற்றானைப் பஞ்சவர்கோ னெஞ்சத்துப் பரிவு கூர்ந்தான்.

இ-ள். இந்திரியங்களையும் அந்தக்கரண முதலியவற்றையுங் கடந்து மேம்பட்ட ஞானாநந்தப் பெருக்கே திருவுருவாக்கொண்ட தேவியார் தன்னன்பினால் வெளிவந்து இப்பொழுது ஒருபுத்திரியாராய் அவதரித்த அருளும் தன்மனைவியின் தவப்பயனும் பாண்டியன் தெளியாதவனாகி மனத்திலே துன்புமிகுந்தான்,—எ-று. தேறான் முற்றெச்சம்.

முகவின்றிப் பலபகல்யான் வருந்தியருந் தவம்புரிந்தேன் மைந்தற்பேறு
தகவிந்த மகஞ்செய்தே னதுவுமொரு பெண்மகவைத் தந்த தந்தோ
முகவிந்து நிலவொழுக வருபெண்ணு முலைமூன்றாய் முகிழ்த்து மாற்றார்
நகவந்த தென்னேயோ வென்றுவகை யிலனாகி நலியு மெல்லை.

இ-ள். புத்திரபாக்கியமின்றி நெடுங்காலம் யான் வருந்தி அப்புத்திரப்பேற்றிற்குரிய பெருந்தவம் புரிந்தேன் (பின்னும்) இப் புத்திரகாமேஷ்டியாகஞ் செய்தேன் அவ்யாகமும் ஒரு புத்திரியைக் கொடுத்தது முகசந்திரனிடத்து(மந்தகாச)கிரணஞ் சிந்த வந்தபெண்ணும் ஐயோ தனங்கள் மூன்றாக வரும்பிப் பகைவர் நகைக்கும்படி தோன்றியது (ஆதலால யான்செய்த குறைபாடு) யாதோவென்று மகிழ்ச்சியில்லாது வருந்தும் போது.—எ-று. (உச)

மன்னவநின் திருமகட்கு மைந்தர்போற் சடங்கனைத்தும் வழாது வேதஞ்
சொன்னமுறை செயதுபெயா தடாதகையென றிட்டுமுடி சூட்டு வாயிப்,
பொன்னனையா டனக்கிறைவன் வருமபொழுதோா முலைமறையும் புந்தி மாழ்கே, லென்னவர னருளாலோா திருவாக்கு விசும்பிடைநின் றெழுந்த தன்றே.

இ-ள். அரசனே உன்னுடைய புத்திரிக்குப புத்திராபோலச் சடங்குகளை வழுவாமல் வேதவிதிப்படிபுரிந்து தடாதகையென்று நாமகரணஞ்செய்து மகுடஞ்சூட்டுவாய் இப்பொன்போன்ற அருமைமகளுக்கு நாயகன் வருங்கால ஒருதனமறையும் (ஆதலால்) மனமயங்காதேயென்று சிவபிரானது கருணையால் ஒருதிருவாக்கு ஆகாயத்தினின்றும் உண்டாகியது.—எ-று. முத்தனமுடையாள் தடாதகை என்று வடமொழி. (உரு)

அவ்வாக்குச் செவிநிரம்ப வன்புவகை யகநிரமப வகல மெல்லா
மெய்வாக்கு மனமொன்ற விழிவாக்கும் புனனிரம்ப விமலற் போற்றி
நெய்வாக்கு மகநிரப்பி யெழுந்துமனை யொடுஞ்சாலை நீத்தி ரண்டு
கைவாக்கு மியங்கலிப்பக் கடிமாட மனைபுகுந்தான் கழற்கால் வேந்தன்.

இ-ள். அத்திருவாக்கானது செவியிற் கேட்டவுடன் அன்பும் மகிழ்ச்சியும், மனசிலும், முக்கரணங்களும் ஒருவழிப்பட ஒழுகும் ஆனந்தக்கண்ணீர் மார்பிலும் நிறையச் சிவபிரானைப் புகழ்ந்து யாகத்தைப் பூர்த்திசெய்து மலயத்துவஜன் எழுந்து மனைவியோடு அவ்யாகசாலையினின்று நீங்கித் தனதுமாளிகையிற் பிரவேசித்தான்.—எ-று. கழல் - வீரகண்டை. (உசு)

முரசதிர்ப்ப மங்கலங்கொண் டெதிர்வருவார் முகத்துவகை முறுவல் பூப்ப
வரசிருக்கு மண்டபம்புக் கினிதமர்ந்து கனகமழை யான்ற கேள்வி
விரசிருக்கு மறையவாகைப் பெய்தெவர்க்கு மம்முறையால் வெறுப்ப நல்கிப்
பரசிருக்குங் கரதலத்தெம் பரன்கோயி லனிசிறப்புப் பல்க நல்கா.

இ-ள். பேரிகையொலிக்க அட்டமங்கலம் ஏந்தி எதிரில் வரும் புனவமகளிர் அகமகிழ்ந்து முகமலர அரசிருக்கை மண்டபத்திற் புகுந்து சிறடபாகவிருந்து நிறைந்த கேள்வியமைந்த அந்தணர்களது கைகளில் மழைபோலப் பொன்னைப் பொழிந்து ஏனையோர்க்கும் வெறுப்பக்கொடுத்துச் சுந்தரேசரது திருவாலயத்திலே திருவிழா முதலியன சிறப்பாக நடக்கும்படிக்குங்கொடுத்து.—எ-று. பரசு - மழுப்படை. (உஎ)

சிறைவிடுமின் சிறைக்களமுஞ் சிதைத்திடுமி னேழாண்டு தேயத் தீட்டு
மிறைவிடுமி னயல்வேந்தர் திறைவிடுமி னிறைநிதிய மீட்டு மாயத்
துறைவிடுமி னாலயமு மறப்புறமும் பெருக்குமெனத் தொழானைக் காய்ந்த
கறைவிடுமின் னயில்வேலான் வள்ளுவனைக் கூய்முரசங் கறங்கச் சாற்றி.

இ-ள். சிறைப்பட்டவரைவிட்டு அச்சாலையையும் இடியுங்கள்; குடிகளிடத்தில் ஏழாண்டுவாங்கும் வரியைத்தள்ளுங்கள்; அயலரசர் அளக்குந் திறையை ஒழியுங்கள்; பெரும்பொருள் சேர்க்குஞ் சுங்கத்துறையை விலக்குங்கள்; தேவாலயங்களையும் அறச்சாலைகளையும் அபிவிர்த்தி செய்யுங்கள்: என்று பாண்டியன் வள்ளுவனை அழைப்பித்து முரசறைவித்து.—எ-று. சிறை-தேயம்-ஆகுபெயர். கறை-உதிரம். (உஅ)

கல்யாண மணிமௌலி வேந்தரையுங் கால்யாப்புக் கழல நீத்துக்
கொல்யானை பரிநெடுந்தே ரரசுரிமை தொன்முறையாற் கொடுத்துப் போக் [கிப்
பல்லாருங் கொள்கவெனப் பண்டாரந் தனைத்திறந்து பசும்பொன் னாடை
வில்லாரு மணிகொடும்பூண் வெறுக்கைமுத லெனைப்பலவும் வெறுப்ப வீசி.

இ-ள். பொன்னாலாகிய மணியழுத்திய முடிபூண்ட பகையரசரது கால்விலங்கை வெட்டி அரசுரிமையைக் கொடுத்துப்போக்கி அனைவரும் கொள்கவென்று திரவியசாலையைத் திறந்து பீதாம்பரம் இரத்தினம் ஆபரணம் திரவிய முதலியவற்றை உவர்க்கும்படி கொடுத்து.—எ-று. (உகூ)

தூமரபின் வருபெருமங் கலகவிகட் கிருநிதியந் துகில்பூண் டூய்மா
காமர்கரி பரித்தடந்தேர் முதலாய பலபொருளுங் களிப்ப நல்கிக்
கோமறுகு களிதூங்கச் சுண்ணமொடு மெண்ணெய்விழாக் குளிப்ப நல்கி
மாமதுரா நகரன்றி மற்றுமுள நகரெங்கு மகிழ்ச்சி தூங்க.

இ-ள். சிறந்த வித்துவான்களுக்குத் திரவியமுதலியவற்றை அகமகிழக் கொடுத்து இராஜவீதியிலுள்ளார் உவக்கும்படி வாசனைப்பொடிகளொடு சிறப்பாகமூழ்குமவண்ணம் எண்ணெய்கொடுத்து அம்மதுரை நகரன்றிச் சூழ்ந்தநகரங்களுங் களிப்படைய.—எ-று. மறுகு - ஆகுபெயர். (ஙo)

இவ்வண்ண நகர்களிப்ப விறைமகனுங் களிப்பெய்தி யிறைவர் சொன்ன
வவ்வண்ணஞ் சாதமுதல் வினைநிரப்பித் தடாதகையென் றழைத்துத் தேவி
மெய்வ்வண்ண மறையுணரா விறைவிதனை மேனைபோன் மேனாளேற்ற
கைவ்வண்ணத் தளிர்நீண்டி வளாப்பவிம வான்போலக் களிக்கு நாளில்.

இ-ள். அரசனுங் களிப்படைந்து சிவபிரான் திருவாக்குப்படி சாதகர்ம முதலியன முற்றுவித்துத் தடாதகையென்று திருப்பெயரிட்டழைத்து, காஞ்சனமாலையான வள் வைகரிவடிவாகிய நிததியவேதங்களு முணராத அப்பிராட்டியை மேனைபோல முற்பிறவியிலே தவஞ்செய்த அழகிய தளிர்போன்ற கைகளினாலே பரிசித்துவளர்க்க, மலையரையன்போல மகிழுங் காலத்தில்—எ-று. இவ்வண்ண நகர்களிப்பவென்பது அநுவாதம். அரசன் அழைத்து மகிழுங்காலத்திலென்க. வர்ணம்-வண்ணமென்நின்று எழுத்தாயிற்று. (ஙக)

திருந்தாத விளங்குதலை யாயமொடு புறம்போந்து சிறார்க்குச் சிற்றில்
விருந்தாக மணற்சிறுசோ றட்டும்வனை யுரங்கிழித்த வேளும் வாய்மைத்
தருந்தாத விளமுலைவாய் வைத்தருந்தப் பாவைதனக் களித்தும் போதில்
வருந்தாதை யண்டமெலாஞ் சிற்றிலிழைப் பாளாய்க்கு மகிழ்ச்சி செய்தாள்.

இ-ள். பிரமாண்டங்களைச் சங்கற்பமாத்திரையாற் சிறுவீடாக அமைத்துவிளை யாடுந் தடாதகைப் பிராட்டியார், சிறுபெண் கூட்டங்களோடு வீதியிற்சென்று சிறுவீடு (கட்டி) அப்பெண்களுக்கு விருந்தாக மணற்சிறுசோறு சமைத்தும், முருகக்கடவுளும் உண்ணாத இளந்தனங்களை வாய்வைத் துண்ணும்படி பாவைக்குக் கொடுத்தும் மாதாவுக்கு மகிழ்ச்சி செய்தார்.—எ-று. போதில் வருந்தாதை - பிரமா. (கூஉ)

தீட்டுவா ளிரண்டனைய கணகளிப்பந் தோழியர்க்குத் தெரிய வாடிக்
காட்டுவா ளெனக்கழங்கு பந்துபயின் றம்மனையுங் கறறுப் பாசம்
வீட்டுவாண் மேலொடுகீழ தள்ளவெமை வினைக்கயிறு வீக்கி யூச
லாட்டுவாள் காட்டுதல்போ லாடினா ணித்திலத்தாம் பசைத்த வூசல.

இ-ள். வாட்படைபோலுங் கண்களிக்கும்படி தோழிமார்கு விளங்க ஆடிக் காட்டுவார்போலக் கழங்கும் பந்தும் அம்மனையும் ஆடியும், பாசதனைப்போக்க மேல்கீழாகிய துறக்கநிரயங்களிற் புகுமபடி எங்களை வினைக்கயிற்றூற கட்டி யூசலாட்டுகின்ற அப்பிராட்டியார் (இங்கே அதனைக்) காட்டுதல்போல முத்துவடம்பூட்டிய வூசலாடினார்.—எ-று. வீட்டுவாள் - முற்றெச்சம். (கூரு)

இம்முறையாற் றுயர்க்குந தோழியர்க்கு மகத்துவகை யீந்தா ளாகி
யம்முறையாற் றுதைக்கு மகத்துவகை யீவாளா யாத்த வாய்மைச்
செம்மறையா ரணமுதனா லீரெட்டுக் கலைமுழுதாந தெளிநதா ளந்த
மெய்ம்மறையார் கலையனைத்து மேகலையா மருங்கசைத்த விமலை யம்மா.

இ-ள். இங்ஙனம் மாதா முதலாயினார்க்கு மனமகிழ்ச்சிசெய்து வேதமுதலிய வற்றை மேகலையாக அணிந்த அப்பிராட்டியார் அங்ஙனம் பிதாவுக்கும் மகிழ்ச்சிசெய்ப வராக ஆப்தவாக்கியமாகிய அவ்வேதமுதலிய அறுபத்துநாலுகலைகளையும் ஓதாதுணர்ந் தார்.—எ-று. ஈவாளாய் - செயவெனெச்சத்திரிபு. ஆரணம் - வேதத்தின்பிரிவு. (கூச)

சொல்வாய்மைக்கலைத்தெளிவு முழுமதியைப்பிளந்திருபாற் சொருகியன்ன
பல்வாய்மைக் கடகரிதேர் பரியுகைக்குந் திறனுமழற் பகழி தூர்க்கும்
வில்வாள்வச் சிரமுதற்பல் படைத்தொழிலுங் கண்டிளமை விழுங்கு மூப்பிற்
செல்வாய்மைத் திறலரசன் றிருமகட்கு முடிசூட்டுஞ் செய்கை பூண்டான்.

இ-ள். கலையுணர்ச்சியும் இரதகஜதுரகங்கள் செலுத்தும் வலிமையும் அம்பு செலுத்துந் தனுசுமுதலிய படைத்தொழில் வலிமையும்நோக்கி மூப்பினையுடைய பாண் டியன் தன்னுடைய புத்திரியார்க்கு மகுடாபிஷேகஞ் செய்தலைக்கைக்கொண்டான்.— எ-று. பல்வாய் - தந்தம்பொருந்திய. (கூரு)

முடிகவிக்கு மங்கலநாள் வரையறுத்துத் திசைதோறு முடங்கல் போக்கிக்
கடிகெழுதார் மணிமௌலிக் காவலரை வருவித்துக் காவல் சூழ்ந்த
கொடியணிமா நகரெங்கும் விழாவெடுப்ப வழகமைத்துக் குன்ற மன்ன
தொடிகெழுதோட் சுமதிதிரு மணத்தினுக்கு வேண்டுவன சூழ்நது செய்தான்.

இ-ள். சுமதியென்னு மந்திரி மகுடாபிஷேகத்திற்குரிய சுபதினம் நிச்சயித்துத் திக்குகளெங்கும் திருமுகமனுப்பி மணிமுடியரசரை அழைப்பித்து மதுரைமாநகரத்தார் அனைவரும் மனைகடோறுஞ் சிறப்புச்செய்ய அலங்கரித்து அம்மகுடாபிஷேக கலியாண மகோற்சவத்துக்கு வேண்டுவனவற்றை ஆலோசித்துத் தேடினான்.—எ-று. நகர் - ஆகுபெயர். (கசு)

மங்கலதூ ரியமுழங்க மாலயானை யுச்சிமிசை வந்த பூத
கங்கைமுத லொன்பதுநீர்த் தமுநிரப்பிக் கதிர்விடுபொற் கடம்பூ சித்துப்
புங்கவரை மந்திரத்தீ வளர்த்தமுத மருத்தியெரி பொன்னுற செய்த
சிங்கமணி யாதனத்தை நேசித்துப் பூசித்துத் தெய்வ மேற்றி.

இ-ள். (பின்பு மலயத்துவஜபாண்டியன்) மங்கலவாச்சியங்கள் ஒலிக்க மதயானைமுடிமீது வைத்துக் கொண்டு வந்த சுத்தமாகிய கங்கை, யமுனை, சரஸ்வதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி, துங்கபத்திரை, தாமிரபாணியென்னும் நவதீர்த்தங்களையும், சுவர்ணகடங்களிற் பூரித்துப் பூசித்து மந்திரமுச்சரித்து அக்கினிவளர்த்து அமரர்களுக்கு அவிர்ப்பாகங்கொடுத்து இரத்தின சிங்காசனத்தை அன்போடு பூசித்து (அதற்குரிய) தெய்வத்தைப் புகழ்ந்து.—எ-று. (கள)

திருமுடியை மதயானைமிசைவத்து நகரைவலஞ் செய்து பூசித்
தருமணியாற் சுடிகையிழைத் தாடகந்தாற் குயிற்றியதோ ரைவாய் நாகம்
பெருமணிநீள் படம்பரப்பி மிசைகவிப்ப வசசிங்க பீடத் தேற்றிக்
குருமணிவா ணகைமயிலைக் கும்பத்துப் புண்ணியநீர் குளிர வாட்டி.

இ-ள். மகுடத்தை யானைமேல் ஏற்றி நகர்வலஞ்செய்து பூஜித்து மணிகளாற் சூட்டியற்றிப்பொன்னுற செய்த ஐந்தலை நாகமானது மாணிக்கமழுத்திய நெடிய படங்களைப் பரப்பி மேலே கவிக்கும்படி நிறம்பொருந்திய முத்துடபோலுந் தந்தங்களையுடைய தடாதகைப் பிராட்டியாரை அசசிங்காசனத்தில் எழுந்தருளச்செய்து கடங்களிலுள்ள தீர்த்தங்களை அபிஷேகித்து.—எ-று. (கஅ)

புங்கவர்மந் தாரமழை பொழியவருந் தவராக்கம் புகலத் தெய்வப்
பங்கயமென் கொமபனையா ராடமுனி பன்னியர்பல் லாண்டு பாட
மங்கலதூ ரியமுழங்க மறைதழங்க மாணிக்க மகுடஞ் சூட்டி
யெங்கருணைப் பெருமாட்டிக் கரசமைச்சர பணியுந்தன் னிறைமை நல்கா.

இ-ள். தேவர்கள் மந்தாரபுஷ்ப வருஷஞ் சொரியவும் முநிவர்கள் ஆசீர்வதிக்கவும் தேவமகளிர் ஆடவும் முநிவர்பத்திநிகள் பலலாண்டு பாடவும் மங்கலவாசசியங்கள் ஒலிக்கவும் வேதங்கள் கோஷிக்கவும் இரத்திநமகுடஞ்சூட்டி எங்கள் கருணைப் பெருமாட்டியார்க்கு அயலரசரொடு அமைச்சரும் வணங்கத்தக்க தன்னரசுரிமையைக் கொடுத்து.—எ-று. (கக)

பாலனைய மதிக்கவிகை மிசைநிழற்ற மதிகிரணம் பரப்பி யன்ன
கோலமணிக் கவரிபுடை யிரட்டமலா் மழைதேவர் குழாங்க டூற்றக்
காலையிளங் கதிர்கயிலை யுதித்தெனவெண் கடாயானைக் கழுத்தில் வேப்ப
மாலைமுடிப பெண்ணரசை மங்கலதூ ரியமுழங்க வலஞ்செய் வித்தான்.

இ-ள். சந்திரன்போலும் வெண்கொற்றக்குடை மேலே நிழலைச்செய்யவும் அச்சந்திரன் கிரணங்களைப் பரப்பியதுபோலச் சாமரைகள் பக்கங்களில் வீசவும் தேவர்கு ழாங்கள் புஷ்பவருஷங்களைப் பொழியவும் உதயகாலசூரியன் வெள்ளியங்கிரியில் உதித்தாற்போல வேப்பம்பூமாலை யணிந்த மகுடத்தையுடைய மங்கையர்க்கரசியாரை வெள்ளையானையின் பிடரிலே (எழுந்தருளச்செய்து) நகாவலஞ் செய்வித்தான்.—எ-று.

விண்ணாடு மொழிகேட்ட மகிழ்ச்சியினுந் திருமகடன் விளக்க நோக்கி
யுண்ணாடு பெருங்களிப்புத் தலைசிறப்பச் சிலபகல்சென் றொழிய மேனாட்
புண்ணாடு வேன்மங்கை குதுகலித்து நடிப்பத்தன் புயமேல் வைத்த
மண்ணாடு மகட்களித்து வானாடு பெற்றனைய மகவு பெற்றான்.

இ-ள். (தன்னுடைய) செல்வப் புதல்வியாரின் விளக்கத்தை (உற்று) நோக்கி அப்புதல்வியாரைப் பெற்ற மலயத்துவஜபாண்டியன் (பகைவருடலிற்) புண்ணைநாடும் வேலேந்திய வீரலட்சுமி மகிழ்ந்து நடிக்கத் தனபுயத்திற பொறுத்த மண்ணுலகை அப்பிராட்டியாருக்குக்கொடுத்து ஆகாசத்திற்கூறிய அசரீரிவாக்கைக்கேட்ட (தினத்து) மகிழ்ச்சியினும் உளத்திற் கழிபேருவகை மேற்படச் சிலதினஞ்சென்றபின் விண்ணுலகை யடைந்தான்.—எ-று. (சக)

விரதநெறி யடைந்திற்றுக் கடன்பிறவுந் தாதைக்கு விதியா லாற்றி
யரதனமெல் லணைமேற்கொண் டுலகமெலா மொருகுடைக்கீழாள்வாளானாள்
சரதமறை யாய்மறையின் பொருளாயப் பொருண்முடிவு தானாய்த் தேனி
னிரதமெனப் பூவின்மண மெனப்பரம னிடம்பிரியா வெம்பி ராட்டி.

இ-ள். சத்தியவேதமும் அதன்பொருளும் அப்பொருண முடிவுந் தாமாய்த் தேனிரதமும் பூவினமணமும்போலச் சிவபிரானிடத்தினின்றும்பிரியாத எங்கள தடாதகைப் பிராட்டியார் விரதங்களை அநுட்டித்து அபரகிரியை முதலியவற்றைப் பிதாவுக்கு (வேதசிவாகம) விதிப்படிசெய்து இரத்தினசனத்தில் அமாந்தருளி உலகமுற்றும் ஒரு வெண்கொற்றக் குடைநிழற்கீழ் ஆளுவாராயினா.—எ-று. (சஉ)

வேறு.

மண்ணர சிறைஞ்ச ஞால மனுவழி புரந்து மாறன்
விண்ணர சிருக்கை யெய்தப் பெற்றபின் விடையோ னுள்ளத்
தெண்ணர சனன மென்னத் தென்னவ னீன்ற கன்னிப்
பெண்ணர சிருந்து நேமி யுருட்டிய பெருமை சொல்வாம்.

இ-ள். (ஆளும்) அப்பிராட்டியார் இருந்தவிடத்திருந்து ஆஞ்ஞாசக்கரத்தை(எங்கும்) செலுத்திய மகிமையை இனிக் கூறுவாம்.—எ-று. (சங)

இன்னிய மியம்பு மாக்க ளெழுப்பவா னிரவி தோன்றக்
கன்னலைந் தென்னப் பள்ளித் துயிலெழீஇக் கடிநீ ராடித்
தன்னிறை மரபுக் கேற்ற நியதிமா தான மன்பு
துன்னிய கடவுட் பூசைத் தொழின்முத லினைதது முற்று.

இ-ள். இனியவாத்தியங்களை முழக்குவோர் எழுப்ப (அப்பிராட்டியார்) சூரியோதயமதற்கு ஐந்துநாழிகைக்குமுன் சயனத்தினின்று நித்திரை நீங்கி வாசனைநீர்த்தத்தின் மூழ்கித் தமது க்ஷத்திரிய மரபுக்குத்தக்க நித்திய கன்மம் சோடசதானம் பேரனபோடு செய்யும் ஆன்மார்த்த சிவபூஜைத்தொழில்முதலிய வனைத்தும் முடித்து—எ-று.

திடம்படு மறிஞர் சூழச் சிவபரன் கோயின் முன்னிக்
கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை மறைவண் டார்க்கும்
விடம்பொதி கண்டத் தேனை விதிமுறை வணங்கி மீண்டு
குடம்பயில் குடுமிச் செம்பொற் குருமணிக் கோயி னண்ணி.

இ-ள். உறுதிமொழிகூறு மந்திரிகள் சூழத் திருக்கோயிலை அடைந்து பரார்த்த மூர்த்தியாகிய சுந்தரேசனை ஆகமவிதிப்படி வழிபட்டுத் திரும்பித் தமது கோயிலிற் சேர்ந்து—எ-று. (சரு)

அரசிறை கொள்ளுஞ் செம்பொ னத்தாணி யிருக்கை யெய்தி
நிரைசெறி மடங்க லாறு முடங்கின நிமிர்ந்து தாங்க
விரைசெறி மலாமீப் பெய்த வியனமணித் தவிசின் மேவித்
திரைசெறி யமுதிற் செய்த பாவைபோற் சிறந்து மாதோ.

இ-ள். அரசரது திறைகளை ஏற்கும் அத்தாணிமண்டபத்தை அடைந்து இரத்தினசிங்காசனத்தில் வீற்றிருந்தருளிக கடலமிழ்தாற் செய்யப்பெற்ற பிரதிமைபோலப் பொலிவுற்று—எ-று. அத்தாணி - கொலு. திரை-ஆகுபெயர். (சசு)

அனிந்திதை யமுதின் சாயற் கமலினி யணங்கு காதல்
கனிந்தபார் மகளி ராய்வந் தடைப்பைபொற் களாஞ்சி யேந்த
வினந்திரி பதுமக் கோயி லிருவரு மனைய ராகிப்
புனைந்தவெண் கவரிக் கற்றை யிருபுடை புரட்டி வீச.

இ-ள். (திருக்கைலாசமலையில் அகத்தொண்டுசெய்யும்) அநிந்திதை கமலினி என்னுந்தோழியர் மாநுடமகளிராய்வந்து பொன்னாலாகிய அடைப்பையும் களாஞ்சியுந் தாங்கவும் செந்தாமரை வெண்டாமரை மலர்கோயிலின் அமரும் இலக்குமி சரசுவதிகள் மாநுடப்பெண்களாய்ப் பக்கங்களில் வெண்சாமரைவீசவும்.—எ-று. சாயல் - மேன்மை. (சஎ)

செடியுட லெயினச் செல்வன் சென்னிமேற் சுமந்து சாத்துங்
கடியவிழ் மலரிற் பொன்னி காவலன் குடக்கோ னேனை
முடிகெழு வேந்த ருள்ளார் முடிமிசை மிலைந்த தாம
மடிமிசைச் சாத்தி நங்கை யாணையா றேவல் செய்ய.

இ-ள். (கார்) ஒளியுள்ள திருவுருவுடையு வேடராகிய கண்ணப்பநாயனார் திருமுடியிற்றாங்கி யணிந்த திருப்பள்ளித்தாமம்போலச் சோழன்முதலிய அரசர் முடிமேலணிந்த மாலையைத் திருவடிகளிற்சாத்தி (வணங்கி) அப்பிராட்டியார தாணைவழியொழுகவும்.—எ-று. (சஅ)

வையுடை வாள ராகி மார்புறப் பின்னி யார்த்த
கையின ராகி யன்னை யென்றுதன் கருணை நோக்கஞ்
செய்யுமென் றிமையார் நோக்கி நோக்குமேற் செங்கை கூப்பி
யுய்குந மெனவாய் பொத்தி யுழையர்தம் பணிகேட் டுய்ய.

இ-ள். ஏவலாளர் கூரியவாளினரும் மார்பிற் பின்னிக்கட்டிய கையினருமாகிப் பிராட்டியார் எப்பொழுது தங்கருணைப்பார்வைசெய்வாரோவென்று கண்ணிமையாது, நோக்கிப் பார்த்தருளினுற் கைகுவித்துப் பிழைத்தோமென்று வாய்பொத்தித் தமக்குரிய பணிவிடைகளைச் செய்து உய்யவும்.—எ-று. இமையார் - முற்றெச்சம். (சகூ)

ஆங்கவன் மராடர் வேந்த னவன்கரு நாடர் வேந்த
னீங்கிவன் விராடர் வேந்த னிவன்குரு நாடர் வேந்த
னூங்குவன் சேரன் சென்னி யுவனெனக் கோலாற் சுட்டிப்
பாங்கிரு மருங்குங் காட்டக் கஞ்சுகப் படிவ மாக்கள்.

இ-ள். கஞ்சுகிகள், (திறையளககவந்த) மராடமுதலிய தேசததரசர்களை முறையே இருபுறத்துஞ் சுட்டிக்காட்டவும்,—எ-று ஆஙகு முதலியன இடத்தின்மேலும், அவன் முதலியன பொருண் மாத்திரையின் மேலும் நின்றன. (ஙo)

செந்தமிழ் வடநூ லெல்லை தெரிந்தவர் மறைநூ லாதி
யந்தமி லெண்ணெண் கேள்வி யளந்தவர் சமய மாறும்
வந்தவர் துறந்தோர் சைவ மாதவர் போத மாண்ட
சிந்தனை யுணர்வான் மாயை வலிகெடச் செற்ற வீரர்.

இ-ள் தென்னூல் வடநூல்களின் வரம்புகண்டவர் நித்தியமாகிய வேதாதி கலைகள் முற்றுங் கற்றவர், (புறப்புறம் புறம், அகப்புறம் அகம் என்னு நாற்கூற்) றறுவகைச் சமயநூல்கள் கைவந்தவர், வைதிகசந்நியாசிகள், சைவசந்நியாசிகள், தற்போதங் கெடுதற்குக்காரணமாகிய (ஒற்றுமைப்பட்டுச்)சிந்தித்தற்குரிய அருட்போதத்தால் மாயையின்வலிமைகெடும்படி வென்ற வீரராகியதத்துவஞானிகள்.—எ-று. சமயம்-ஆகுபெயர்.

முன்னிருந் தினிய தேற்று மூத்தவ ரெண்ணி யெண்ணிப்
பன்னுமைந் துறுப்பிற் கால மளந்தறி பனுவன் மாந்தர்
பின்னுமுன் னேக்குஞ் சூழ்ச்சிப் பெருந்தகைச் சுமதி யோடு
மின்னமு தனைய கேள்வி மந்திரர் யாருஞ் சூழ.

இ-ள். திருமுன்னிருந்து உறுதியுள்ளவைகளைத் தெளிவிக்கும் அறிவினு மூத்தவர், எண்ணி எண்ணிக் கூறுந் திதி வார நக்ஷத்திர யோக கரணங்களாலே காலங்களை யளந்தறிகின்ற சோதிடநூலார், மற்றும் வருவனவற்றை யுணரத்தக்க ஆலோசனையிற் பெருந்தன்மையுடைய சுமதி முதலிய மந்திரிகள் ஆகிய அனைவருஞ் சூழவும்.—எ-று. (ஙஉ)

கற்றறி யந்தணாளர் விருத்திகள் கடவுட் டானத்
தற்றமில் பூசைச் செல்வ மறப்புற நடக்கை யேனைச்
செற்றமில் குடிகண் மற்று மமைச்சராற் றெளிந்தும் வெவ்வே
றுற்றுவிட் டுணர்ந்தும் வேறு குறையுண்டே லொறுத்துத் தீர்த்தும்.

இ-ள். அந்தணர் விருத்தி, தேவாலய பூஜைச் சிறப்பு, அறச்சாலை நிகழ்ச்சி, குடிகளினியல்பு, மற்று முள்ளன ஆகிய விவைகளை மந்திரிகளா லுணர்ந்தும் வேறு வேறு ஒற்றரைவிட்டு வேறாகவுணர்ந்தும், (அவைகளிற்) குற்றமுளதாயிற் றண்டித்துத் தீர்த்தும்.—எ-று. அற்றம்-செற்றம்-குற்றம். (௫௩)

ஆதியுத் தேசத் தானு மிலக்கண வமைதி யானுஞ்
சோதனை வகைமை யானுஞ் சொன்னூ லனுவா தித்து
நீதியி னவற்றுற கண்டித் தவ்வழி நிறுத்தித் தம்மில்
வாதிகள் வாதஞ் செய்யுங் கோட்டிமேன் மகிழ்ச்சி கூர்ந்தும்.

இ-ள். உத்தேச லக்ஷண பரீக்ஷைகளாற் கூறிய நூற்பொருள்களை அநுவாதஞ் செய்து முறையினையுடைய அவைகளாற பரிகரித்து அவ்வழியே ஸ்தாபித்து வாதிகள் தம்முள் வாதஞ்செய்யும் கூட்டத்தில் மகிழ்ச்சி மிகுந்தும்.—எ-று. உத்தேசம்-பெயர் மாத்திரையாலே பொருளை யெடுத்துரைத்தல். இலக்கணம்-அப்பொருளின் சிறப்பியல்பு கூறல். பரீக்ஷை-அப்பொருளில இலக்கணம் உளதோ இலதோவென ஆராய்தல். அநுவாதம்-பிறர் கூறியதனை எடுத்துரைத்தல். (௫௪)

பையுள பருவாய நாகப் பள்ளியோ னாதி வானோர்
கையுள வலியா லட்ட கடலமு தனைத்தும வாரிப்
பொய்யுள மகலக் கற்ற புனிதநூற புலவர் நாவிற்
செய்யுளின் விளைவித் தூட்டத் திருச்செவி தெவிட்ட வுண்டும்.

இ-ள். விஷ்ணுவாதி தேவர் கைவலியாற் கடைந்த கடலமிழ்தை வாரி 'மனத்தின் அறியாமை நீங்கவுணர்ந்த நூலின் வல்லவர் (தமது) நாவாகிய கழனியிற் செய்யுளாக விளைவித்தூட்டத் திருச்செவி தெவிட்டும்படி பருகியும்.—எ-று. செய்யுள் அமிழ்தம்போற் சுவையுடைத்தென்பது கருத்து. (௫௫)

தொல்லைநான் மறையோர் சைவர் துறந்தவர் யார்க்கு மின்பம்
புல்லவா னமுதுங் கைப்பப் பாகநூற் புலவ ரட்ட
முல்லைவான் முகையி னன்ன வறுசுவை முரியா மூர
னல்லவூ ணருத்தி யன்னோர் நாவிருந் தமுது செய்தும்.

இ-ள். பிராம்மணர் முதலியோர் அனைவர்க்கும் மகிழ்ச்சிமிகத் தேவாமிர்தமும் உவர்க்கும்படி பாகநூலுணர்ந்தவர் சமைத்த முல்லையின் வெள்ளிய அரும்புபோன்ற முரியாத அன்னமும் அறுசுவைக் கறிகளும் ஆகிய நல்லவுணவை யுண்பித்து அவ்வனைவரும் நாவாற்(றுதிக்கும்)புகழாகியவிருந்தினை அமுதுசெய்தும்.—எ-று சுவை-விருந்து ஆகுபெயர். (௫௬)

எல்லவ னுச்சி நீந்து மெல்லையி னான்கு மாறும்
வல்லவர் சூத னோதி வகுத்தமூ வாறு கேள்வி
சொல்லவுண் மலர்ந்து மேனை மனுமுதற் றுறைமாண் கேள்வி
நல்லன கயந்து கேட்டு நன்பகற் போது நீத்தும்.

இ-ள். ஆதித்தன் ஆகாயத்தினுச்சியினின்று கடந்துசெல்லுங்கால் நான்குவேதம் ஆறுசாத்திரங்களின் வல்லுநர் சூதமுனிவர்வகுத்த பதினெண்புராணங்களை யோதக்கேட்டுத் திருவுளமகிழ்ந்தும் மற்ற மநுநூல்முதலியவற்றை விரும்பிக்கேட்டும் (இங்ஙனம்) நல்ல பகற்காலத்தைப் போக்கியும்.—எ-று. கேள்வி- ஆகுபெயர். (௫௭)

கலைக்குளா விரிப்பா ரென்ன வறுமையிற் கல்வி போலப்
புலப்படா மருங்கு னல்லா ரெந்திரப் புலவன் பூட்டி
யலைத்திடு பாவை போனின் றுடல்செய் யாடற் கணனு
நலத்தகு பாடற் கண்ணு நல்லரு ளுட்டஞ் செய்தும்.

இ-ள். வறுமைககாலத்திலே கல்வி (விளங்காமை) போல(க்கண்களுக்கு) விளங்காத நுண்ணிய இடையுடையமடவார, சூததிரப்பாவையை ஆட்டும் அறிவினன் சூததிரத்திற் பூட்டியாட்டும் பிரதிமைபோல நின்று (இரவிலே) பரதநூற்பொருளை விரிப்பார்போல (அபிநயிதது) ஆடும் ஆடலினும் நல்லபாடலினும் அருணோக்கம் வைத்தும்.—எ-று. (கஅ)

இன்னிலை யொழுகுந தொல்லோ ரியற்றிய தருமம் வேறு
மந்நிலை நிறுத்தும வேள்வி யறம்பல் வாக்கஞ் செய்ய
நன்னிதி யளித்தும் வேள்வி நடாததியுஞ் செல்வங் கல்வி
தன்னிரு கண்க ளாகத் தழைந்திட வளர்க்கு நாளும்.

இ-ள். இல்லறத்தில ஒழுகும் பழையோர்புரிந்த தருமங்களும் மற்றும் அவ்வாச்சிரமத்தை நிலைபெறச்செய்யும் ஐம்பெருவேள்வியென்னுந் தருமங்களுமாகிய பலவும் அபிவிர்த்தியாகும்படி திரவியங்கொடுதேதும் (தாமே) யாகங்களை நடாத்தியும் (இவ்வாறு) செல்வங்கல்விகளைத் தமதிருகண்களாக்கொண்டு அப்பிராட்டியார் நாடோறுந் தழைத்தோங்கும் வணணஞ் செய்தருளுவார்.—எ-று. ஐம்பெருவேள்வி, பிரமயாகம், தேவயாகம் - மாநுடயாகம் - பிதிர்யாகம் - பூதயாகம். இவைமுறையே வேதமோதல் - ஓமம்வளாத்தல் - விருந்தோம்பல் - நீர்க்கடனுற்றல் - பலியீதலாம். (கக)

ஒப்புரு முதலீ றில்லா வொருத்திதன் சத்தி பெற்ற
முப்பெருந் தேவ ராலே முத்தொழி னடாத்து மெனறு
செப்பலும் புகழன் றென்னிற் றென்னவன் கன்னி யாகி
யிப்புவி மனுவிற் காக்கு மென்பதென் பேதை மைத்தே.

இ-ள். உவமம் வடிவம் ஆதி அந்தம் இவைகளற்ற சிவசத்தியாகிய முதல்வியார் தஞ்சத்திகண்மாட்டுத்தோன்றிய தேவர்மூவராலே முத்தொழிலு நடாத்துவாரெனறு எடுத்துரைத்தலும் புகழல்லவாயிற் பாண்டியராஜன் புத்திரியாராய் இப்பூமியைக் காத்தருளுவாரென்பது எனது பேதைமைப்பாலதே.—எ-று. (௨0)

கலிநிலைததுறை.

வளைசெய் பூண்முலைத் தடாதகை மடவரற் பிராட்டி
விளைசெய் தார்முடி வேய்ந்துதண் குடைமனு வேந்தன்
களைசெய் நூல்வழி கோல்செலக் கன்னியாம் பருவத்
தரசு செய்தலாற் கன்னிநா டாயதந் நாடு.

இ-ள். தடாதகைப்பிராட்டியார் மகுடந்தரித்துத் தண்ணிய வெண்கொற்றக் குடைநிழலின் அமர்ந்து மநுநூல் வழியே செங்கோல்செல்லக் கந்நிப்பருவத்தே அரசாட்சிசெய்தமையால் அப்பாண்டிநாடு கந்நிநாடென்னும் பெயர்பெற்றது.—எ-று. வளை - மலை; களைதல் - சொல்லுதல். (௨க)

இன்ன வாறுமை யவதரித் திருந்தன ளென்னுப்
பொன்ன வாவினர் பெறவெறி பொருநைகால் பொருப்பன்
சொன்ன வாய்மைகேட் டகங்களி தூங்கினர் தொழுது
மின்னு வார்சடை முனிவரோர் வினவுரை செய்வார்.

இ-ள். இங்ஙனம் மீநாக்ஷிதேவியார் அவதரித்திருந்தாரென்று அகஸ்தியமகாமுநிவர் அருளிய மெய்ம்மொழியைக்கேட்டு மனமகிழ்ந்து வணங்கி நைமிசவனமுநிவர் ஒருவினச்செய்யத் தொடங்கினர்.—எ-று. கால்பொருப்பு-பெற்றபொதியமலை தூங்கினர் - முற்றெச்சம். (சுஉ)

திருந்து நான்மறைச் சென்னியுந் தீண்டுதற் கரிதா
யிருந்த நாயகி யாவையு மீன்றவெம் பிராட்டி
விரிந்த வன்புகூர் தக்கனும் வெற்பனும் பன்னாள்
வருந்தி நோற்றலா லவர்க்கொரு மதலையாய் வந்தாள்.

இ-ள். வேதசிரசுகளும் பரிசித்தற்கரிய உலகமாதாவாகிய உமாதேவியார், அன்புமிக்க தக்கனும் மலையரையனும் நெடுங்காலம் அருந்தவமபுரிந்தமையால் அவர்களுக்குப் புத்திரியாராய் அவதரித்தார்.—எ-று. (சுௗ)

மனித்த னாகிய பூழியன் மகளென வீங்குத்
தனித்த காரணம் யாதெனத் தபனியப் பொதுவிற்
குனித்த சேவடிக் கன்புடைக் குடமுனி யருள்கூர்ந்
தினித்த தோர்கதை கேண்மினென் றெடுத்துரை செய்வான்.

இ-ள். மானுடனாகியபாண்டியராஜன் புத்திரியாராய்(ச் சிவபிரானிடத்தினின்று) இப்பூமியிலே தனித்தகாரணம் யாதென்றுகேட்க, (அதற்கு) அகஸ்தியமகாமுநிவர் கருணைமிகுந்து ஒருகதைகேளுங்களென்று கூறுவார்.—எ-று.—மனிதன் - விரித்தல்விகாரம். குனித்தல் - நடித்தல். (சுச)

விச்சு வாவசு வெனுமொரு விச்சையன் பயந்த
நச்சு வாள்விழி மடந்தைவிச் சாவதி நாம
மச்சு வாகத மொழியினா ளம்பிகைக் கன்பு
வைச்சு வாழ்வுறு மனத்தினா டாதையை வணங்கா.

இ-ள். (முநிவர்களே) விச்சுவாவசுவென்னும் ஒருவித்தியாதரன் பெற்றமகளுக்கு வித்தியாவதியென்னும் பெயராம். அவள் அம்பிகைமாட்டு அன்புவைத்துவாழும் மனத்தையுடையவளாய்ப் பிதாவைவணங்கி.—எ-று. நச்சு - வலித்தல்விகாரம். அச்சுவாகதம் - உயர்ந்தகிளி, அல்லது அஞ்சுவாகதம் - வலித்தல்விகாரம் பெற்றதாகக்கொள்க.—

ஐய வம்பிகை தன்னையா னன்பினால் வழிபட்
டுய்ய வேண்டுமென் றுளவ னுலகெலாம் பயந்த
வையன் மந்திரந் தனைமக டனக்குப தேசஞ்
செய்ய வந்நெறி யொழுகுவாள் செப்புவாள் பின்னும்.

இ-ள். பிதாவே? அம்பிகையை நான் அன்பினால் வழிபட்டு ஈடேற வேண்டு மென்று விண்ணப்பஞ்செய்தாள் (அதற்கு) அவ்விச்சுவாவசு, உமாதேவியாரது திருமந்திரத்தைத் தன்புத்திரிக்கு உபதேசஞ்செய்ய அவ்வுபதேசவழி யொழுகும் அவ்வித்தியாவதி பின்னும் (பிதாவைநோக்கிக்) கூறுகின்றாள்.—எ-று. (சுசு)

இறைவி தன்னையா தரிப்பதற் கிம்பரிற் சிறந்த
குறைவி லன்னகா யாதெனக் கூறுவான் கேள்வித்
துறைவி ளங்கினோர் பயில்வது துவாதச முடிவென்
றறைவ ளம்பதி யவனிமேற் சிவபுர மாமால்.

இ-ள். அம்பிகையை அன்பின் வழிபடுதற்கு இவ்வுலகிற் சிறந்த க்ஷேத்திரம் யாதென்று கேட்க, (அதற்கு அவ்விச்சுவாவசு) கூறுகின்றான். (கற்றல்) கேட்டல்களின் வல்லவர் தங்குதற்கிடமாகிய துவாதசாந்தமென்றும் பூலோகசிவலோகமென்றுஞ் சொல்லத்தக்க செல்வநகரம் (ஒன்று) உளதாம்.—எ-று. (சுஎ)

சேடு தாங்குமூ வுலகினுட் சிறந்தன சத்தி
பீட மூவிரு பத்துநான் கவற்றின்முற் பீட
மாட மோங்கிய மதுரையா மற்றது போகம்
வீடும் வேணடிய சித்தியும் விளைப்பதென் றெண்ணு.

இ-ள். மகிமைபெற்ற மூவுலகங்களிலே சிறந்த சத்திபீடங்கள் அறுபத்து நான்காம் அவற்றில் முதன்மையாகிய பீடம் அத்துவாதசாந்தஸ்தலமாம். அத்தலம் புத்தி முத்தி சித்திகள் மூன்றையுந் தருவதென்று கருதி.—எ-று. (சுஅ)

அல்லு மெல்லும்வா னகர்க்கத வடைப்பின்றிச் சுவர்க்கச்
செல்வ ரங்கடைந் துமையருள் சித்தியால் வினையை
வெல்லு வாரதான் றெநதையோ டைவர்கள் வேணடி
நல்வ ரம்பல வடைந்தனர் நமர்களந் நகரில்.

இ-ள். தேவர்கள் இரவும் பகலுந்துறக்க வுலகவாயிற் கதவு அடைத்தலின்றி அப்பதியை அடைந்து மீனாக்ஷிதேவியார் அருளிய சித்தியால் வினையை வெல்லுவார்கள். அஃதன்றி என்னுடைய பிதாவோடு நமர்கள் ஐவர்கள் விரும்பிப் பல நல்லவரங்களை அப்பதியில் (அத்தேவியாரை வழிபட்டுப்) பெற்றார்.—எ-று. (சுகூ)

எம்மை யாரையும் யாவையு மீன்றவங் கயற்க
ணம்மை யாவரோ யாயினு மன்பினு தரிப்போ
ரிம்மை யாகிய போகம்வீ டெண்ணியாங் கெய்தச்
செம்மை யாகிய வின்னருள் செய்துவீற் றிருக்கும்.

இ-ள். உலகமாதாவாகிய அம்மீனாக்ஷிதேவியார் அன்பின் வழிபடுவோர் யாவராயினும் இக (பர) போகங்களும் வீடுபேறும் எண்ணியபடி அடையும் வண்ணம் அருள் புரிந்து வீற்றிருப்பார்.—எ-று. எம்மையும் என்னும் ஏண்ணும்மை தொகை. (எ0)

என்ற தாதையை யிறைஞ்சின ளனுச்சைகொண் டெழுந்தாண்
டுன்றன் மாமலர்வல்லிபோல் வழிக்கொடு கானங்
குன்ற மாறுபின் கிடப்பமுன் குறுகின ளன்பி
னின்ற வாதியெம் பரையரு ணிறைந்தவந் நகரில்.

இ-ள். என்ற பிதாவை வித்தியாவதி வணங்கி விடைபெற்று (அங்கு நின்றும்) எழுந்து பூங்கொடிபோல் வழிக்கொண்டு வனமுதலியன பிற்படத் தொண்டர்கள் அன்பிற் குடிகொண்ட அங்கயற்கண்ணம்மையாா கருணை நிரம்பிய அம்மதுரைப்பதியிற் சேர்ந்தாள்.—எ-று. இறைஞ்சினள் எழுந்தாள், முற்றெச்சம். (எக)

அடைந்தி ளம்பிடி யாடல்போ லாடக கமலங்
குடைந்து நான்மறைக் கொழுந்திடங் கொண்டுறை குறிபாற்
படர்ந்த பொன்மலை வல்லியைப் பணிந்துவெங் கதிரோன்
றொடர்ந்த வான்சுறு மதியமே யாதியாத் தொடங்கா.

இ-ள். சேர்ந்து இளம்பெண்யானைபோலப் பொற்றாமரைவாவியில் மூழ்கி(ச் சித்திவிநாயகரையும்) உபநிடதங்களின் பொருளாகிய பரசிவன் அதிட்டித்துள்ள சிவலிங்கப் பெருமா(னாகிய பவளமலையின்) பாகத்திலே படர்ந்த அழகிய மலைக்கொடியாகிய மீனாட்சி தேவியாரையும் (சொக்கலிங்க மூர்த்தியையும்) வணங்கித் தைமதிமுதலாகத் தொடங்கி,—எ-று. கொழுந்து, இலக்கணை. மகரராசியிற் சூரியன்பிரவேசித்த மதிஎன்க.

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

பெரும்பக னல்லூண் கங்குலூ ணுதவப் பெற்றவூ ணிலைமுதற் பல்லூ
ணரும்பொடி யெள்ளுண் சாந்திரா யணமா னைந்துபா னறியநீர் தருப்பை
யிரும்புத லுனிநீர் காலிவை நுகர்ந்து மியற்றரும பட்டினி யுற்றும்
வரம்புற விராறு திங்களு நோற்று வாடிமேல வருஞ்சுறு மதியில்.

இ-ள். (தொடங்கிய மகரமதியின்) பகலில் நல்லவுணவும் (கும்பமதியின்) இரவில் அவ்வுணவும் (மீனமதியிலே) கிடைத்தவுணவும் (மேடமதியில்) இலை கிாய்கனிகளும் (இடபமதியில்) எட்பொடியும உண்டும், (மிதுனமதியிலே) சாந்திராயண விரதம் அநுட்டித்தும், (கடகமதியிலே) பஞ்சகவ்வியமும (சிங்கமதியிலே) பாலும் (கந்நிமதியில்) நல்லஜலமும் (துலாமதியிலே) பெரிய தருப்பைப் புல்லினுனி நீரும் (விருச்சிகமதியில்) வாயுவும் உண்டும், (தநுர்மாசத்தில்) உபவாசமாயிருந்தும் இவைகளை வரம்புபடப் பன்னிரண்டுமாசமும் அநுட்டித்து (உடலம்)வாடி மேல்வந்த மகரமாசத்தில்.—எ-று. சாந்திராயணம - சந்திரகலை ஒவ்வொன்று வளருந்தோறும் ஒவ்வொரு கவளங் கூட்டியும் குறையுந்தோறும் ஒவ்வொரு கவளங்குறைத்தும் உண்பது. (எ௨)

சன்னிதி யடைந்து தாழ்ந்துநின் றிளமாந் தளிரடிக் காஞ்சிசூழ் கிடந்த
மின்னிகர் மருங்கு லிழையிடை நுழையா வெம்முலைச் செம்மலர்க் காந்தட்
பொன்னிரை வளைக்கை மங்கலக் கழுத்திற் பூரண மதிக்கலை முகத்தி
னின்னிசை யளிசூழ் திருட்குழற் கற்றை யிறைவியை யிம்முறை நினையா.

இ-ள். மீனாட்சி தேவியாரது சந்நிதிசேர்ந்து வழிபட்டுநின்று மாவின் இளந் தளிர்போன்ற திருவடி, காஞ்சியென்னும் இருகோவையணி பூண்ட மின்போன்ற மருங்குல், இடையே நூலநுழையாததனம், செம்பொன்னாலாகிய வளையல் வரிசையுடைய காந்தண் மலர்போன்ற திருக்கரம், மங்கல சூத்திரம் அணிந்த திருக்கழுத்து, முழுமதி போன்ற முகம், இனிய இசைபாடும் வண்டுகள்சூழ்ந்த இருள்போன்ற அளகம், இவைகளையுடைய அத்தேவியாரை இங்ஙனம் பாதாதி கேசாந்தமாகத் தியானித்து (அகப்பூஜைசெய்து புறத்தே தினந்தோறும் நூற்றெட்டுக் கலசங்களாற் புனணிய தீர்த்தங்களைப் பூரித்து அபிஷேகிப்பித்து ஆடை ஆபரணம் கந்தமுதலிய வுபசாரங்களாலே பூசிப்பித்து ஆயிரத்தெட்டுக் கருநெய்தல்மலர்களாலே தொடுக்கப்பட்ட மாலையைக் கொடுத்தாள்)'—எ-று. அகப்பூஜையாதி வடநூலிற் கண்டன. (எச)

கோலயாழ்த் தெய்வம் பராய்க்கரங் குவித்துக் கொழுஞ்சுடர்ப் பசுங்கதிர் விளக்கம், போலநூற் பொலலம பொத்துபொன் னிறத்த போர்வைநீத் தவிழ்கடி முல்லை, மாலைமேல் வீக்கிப் பத்தாபின் கிடபப மலர்க்குழ ளேய்சுவற் கிடத்திச், சேலைநேர் விழியாண மாடகந திரித்துத் தெறித்தனள் பண்ணநீந் திசைப்பாள்.

இ-ள். அவ்வித்தியாவதி (கானவிதனையில் வல்லவளாதலால்) அழகிய யாழுக்குரிய அதிதேவதையைப் புகழ்ந்து தொழுது (யாழையெடுத்துக்) கொழுவிய கிரணமுடைய இளஞ்சூரியனது ஒளிபோல விளங்கும் நூறசரட்டினாலே தைத்த பொன்னிற வுறையை நீக்கி மலர்ந்த மணமுள்ள முல்லைமலர்மாலையை மேலே சூட்டிப் பத்தர் பின்னேகிடக்க மலரையுடைய அளகந்தோய்ந்த பிடரிற்சேர்த்தி முறுக்காணியைத் திருக்கி (நரம்பினை)த் தெறித்துப் பண்வகையுணர்ந்து பாடுகின்றாள்.—எ-று. தெறித்தனள்-முற்றெச்சம். (எரு)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

ஒளியா லுலகின் றுயிரனைத்து மீன்போற் செவ்வி யுறநோக்கி
யளியால் வளர்க்கு மங்கயற்க ணன்னே கன்னி யன்னமே
யளியர் ஹிமவான் றிருமகளா யாவி யன்ன மயிலபூவை
தெளியா மழலைக் கிளிவளர்த்து விளையாட் டயருஞ் செயலென்னே.

இ-ள். ஜநநிசத்தியால் உயிர்களைப் படைத்து அவைகளை மீனபோலப் பக்குவப்படப் பார்த்துக் கருணையாற் காக்கும் அங்கயற்கண்ணம்மையே கன்னிமைப் பருவத் தன்னமே, (இப்பெருந்தகைமையுடைய நீ) மலையரையனுக்குப் புதல்வியாய் வாவிக்கண்ணுள்ள அன்னம் மயில் நாகணவாய்ப்புள் கிளி இவைகளை வளர்த்து விளையாடுஞ்செய்கையாது? கருணையாலோ.—எ-று. அளியின் காரியமாகிய அருளை அளியெனவுபசரித்தார். (எசு)

அண்டக் குவைவெண் மணற்சிறுசோ றுக்கித் தனியே விளையாடுங்
கொண்டற் கோதாய் படியெழுத லாகா வுருவக் கோகிலமே
கொண்டற் குடுமி யிமயவரை யருவி கொழிக்குங் குளிர்முத்தால்
வண்டற் குதலை மகளிரொடும் விளையாட் டயரும் வனப்பென்னே.

இ-ள். அண்டக் கூட்டங்களை மணற்சிறுசோறுபோல வுண்டாக்கித் தனிமையாகவிளையாடும் மேகம்போலுங் கூந்தலுடைய அன்னையே ஒப்பெழுதலாகா வடிவுடைய குயிலே (இப்பெருந் தன்மையுடையநீ) இமயமலையிலே முத்துகளாலே விளையாட்டுப் பெண்களோடுகூடி விளையாடும் அழகு யாது? (கருணையாலோ).—எ-று. (எஎ)

வேத முடிமே லானந்த வுருவாய் நிறைந்து விளையாடு
மாத ரரசே முத்தநகை மானே யிமய மடமயிலே
மாத ரிமவான் றேவிமணி வடந்தோய் மார்புந் தடந்தோளும்
பாத மலர்சேப் புறமிதித்து விளையாட் டயரும் பரிசென்னே

இ-ள். வேதசிரசின்கண் ஆனந்தமே திருவுருவாக்கொண்டு இடையறாது விளையாடுகின்ற மங்கையர்க்கரசியே முத்துப்போலு நகையினையுடைய மானே (இப்பெருந்தகைமையுள்ள நீ) இமயமலையிற் றோன்றிய மடமயில்போல மலையரையன்மனைவி மார்பிலுந் தோளிலும் திருவடிக்கமலஞ் சிவக்கும்படி மிதித்து விளையாடுந் தன்மையாது? (கருணையாலோ).—எ-று. மூன்றுமடி மாதர், அழகு. (எஅ)

எழுசீரடி யாசிரியவிருத்தம்.

யாழியன் மொழியா ளிவ்வழி பாடி யேத்தினு ளாகமெய் யுள்ளத்
தாழிய வன்பின் வலைப்படு கருணை யங்கயற் கண்மட மானேர்
சூழிய நுழைமெல் லளகுழற் குதலைத் தொண்டைவா யகவைமூன் றெய்தி
வாழிளங் குழவி யாகியா லயத்து வந்துநின் றுள்வரங் கொடுப்பாள்.

இ-ள். யாழ்நரம்பி னெழுந்த இசைப்பாட்டால் இம்முறைபாடித் துதிக்க மெய்ம்மை யுள்ளத்துப் பேரன்பாகிய வலைப்படுங் கருணையுடைய அங்கயற் கண்ணம்மையார் ஒப்பற்ற உச்சிக்கொண்டை பொருந்திய மெல்லிய சிறிய அளகமும் குதலைமொழியும் கொவ்வைக்கனிபோலும் வாயும் மூன்றுவயசும் பெற்றுவிளங்குஞ் சிறுபெண்ணின்றிருவுருக்கொண்டு (அவ்வித்தியாவதிக்கு) வரம் அருளும் திருவுளமுடையவராகத் திருக்கோயிலின்கண் எதிர்ப்பட்டு நின்றார்.—எ-று. இன் - தவிர்வழிவந்தசாரியை. ()

இறைஞ்சியஞ் சலித்தா டன்னையெம் மன்னை யாதுவேண் டினையென வென்று
நிறைந்தபே ரன்பு நின்னடிப் போதி னீங்கலா நிலைமைதத் தருளென்
றறைந்தன ளின்னும் வேண்டுவ தேதென் றருளவிம் மகவுரு வாகிச்
சிறந்துவந் தென்பா லருள்சுரந் திருக்கத் திருவுளஞ் செய்யெனப் பணிந்தாள்.

இ-ள். (அங்ஙன நின்றருளியபொழுது) வணங்கிக் கைகுவித்த வித்தியாவதியை (நோக்கி) எங்கள் மீனாட்சிதேவியார் (நீ) யாது விரும்பினையென்று வினவியருள (அதற்கு வித்தியாவதி தாயே) உனது பாததாமரையில் என்றும் நீங்காத பேரன்பு ஓங்கும்படி செய்தருளென்று விண்ணப்பஞ் செய்தாள். இன்னமும் விரும்பியது யாதென்றுகேட்டருள (நீ தரிசனங்கொடுத்த) இப்பெண்ணுருவாய்ச் சிறப்போடு அவதரித்து என்மாட்டுக்கருணைசுரந்திருக்கத் திருவுளஞ் செய்தருளென வணங்கினாள்.—எ-று.(அo)

சிவபரம் பரையு மதற்குநேர்ந் தருள்வா டென்னவர் மன்னனுய் மலயத்
துவசனென் றொருவன் வருமவன் கற்பின் றுணைவியாய் வருதியப் போதுன்
றவமக வாக வருவலென் றன்பு தந்தனள் வந்தவா றிதுவென் [தார்.
றுவைமையில் பொதியத் தமிழ்முனி முனிவர்க் கோதினு னுள்ளவா றுணர்ந்

இ - ள். அதற்கு மீனாட்சிதேவியாருந் திருவுளஞ் செய்தருள்கின்றவா பாண்டியர்மரபில் ஆசனாக மலயத்துவஜனென ஒருவன் (இப்பதியில்) வந்து பிறப்பான் (நீ) அவனுக்குக் கற்பினையுடைய பத்தினியாகவருவாய் அப்பொழுது உனக்குத் தேவபுத்திரியாக நாம் வருவோமென்று கருணைசெய்தார் (பாண்டியனுக்குப் புத்திரியாராக) அத்தேவியார் அவதரித்தருளின விதம் இதுவென்று அகஸ்தியமகாமுநிவர் முநிவர்களுக்குச் சொல்லியருளினார் அம்முநிவர்கள் உள்ளபடி யுணர்ந்தார்கள்.—எ-று. அன்பின்காரியத்தை அன்பென்றார். (அக)

தடாதகைப்பிராட்டியார் திருவவ்தாரப்படல முற்றியது.

ஆகச்செய்யுள் ருகரு

## ஐந்தாவது
# திருமணப்படலம்.

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

தரைபுகழ் தென்னன் செல்வத் தடாதகைப் பிராட்டி தானே
திரைசெய்நீர் ஞாலங் காத்த செயல்சிறி துரைத்தேன் றெய்வ
விரைசெய்பூங் கோதை மாதை விடையவன் மணந்து பாராண்
டரசுசெய் திருந்த தோற்ற மறிந்தவா றியம்ப லுற்றேன்.

இ-ள். உலகத்தார் புகழ்கின்ற மலயத்துவஜ பாண்டியராஜனுக்குப் புதல்வியாராகிய தடாதகைப் பிராட்டியார் கடல்சூழ்ந்த வுலகத்தைக் காத்தருளிய திருவிளையாடலைக் கூறினேன் (இனி) அப்பிராட்டியாரைச் சிவபிரான் றிருமணஞ்செய்தருளி(ச் சுந்தரபாண்டியராய்) உலகத்தில் அரசாட்சிசெய்த திருவிளையாடலைச் சிறிதறிந்தவாறு (யான்) கூறுகின்றேன்.—எ-று. (க)

காயிரும் பரிதிப் புத்தேள் கலியிரு டுமிப்பச் சோதி,
பாயிருங் குடைவெண் டிங்கட் படரொளி நீழல் செய்ய
மாயிரும் புவன மெல்லா மனுமுறை யுலக மீன்ற
தாயிளங் குமரி யாகித் தனியர சிருக்கு நாளில்.

இ - ள். விளங்குகின்ற பெரிய (ஆஞ்ஞா சக்கரமாகிய) ஆதித்தக் கடவுள் துன்பமாகிய இருளைக்கெடுக்கவும், ஒளிவீசும் பெரிய வெணகொற்றக் குடையாகிய சந்திரன் மிக்கபுகழாகிய நிழலைச்செய்யவும், உலகங்களை மநுநூல்வழி உலகமாதாவாகிய தடாதகைப் பிராட்டியார் குமரிப்பருவம் அடைந்து அரசாட்சி செய்திருக்குங்கால்,—எ-று. பரிதி - ஏகதேச வுருவகம். (உ)

மருங்குறேய்ந் தொளிப்பச் செம்பொன் வனமுலை யிறுமாப் பெய்தக்
கருங்குழற் கற்றை பானுட் கங்குலை வெளிறு செய்ய
விருங்குதல் யாழ்மென் றீஞ்சொ லின்னகை யெம்பி ராட்டிக்
கருங்கடி மன்றல் செய்யுஞ் செவ்விவந் தடுத்த தாக,

இ-ள். இடைசுருங்கி மறையவும், பொன்னணிபூண்ட அழகிய தனங்கள் வளிரவும், கரியஅளகத்திரள் அர்த்தராத்திரி யிருளை வெண்மையாக்கவும், ஒலிக்கின்ற யாழின் இசைபோன்ற மெல்லிய இனியசொல்லையும் நல்ல நகையையுமுடைய எங்கள் தடாதகைப் பிராட்டியாருககு அரிய திருமணப்பருவம் வந்தடுக்க.—எ-று. (க)

பனிதரு மதிக்கொம் பன்ன பாவையைப் பயந்தா ளேக்கிக்
குனிதர நிறையப் பூத்த கொம்பனுய்க் கின்னங் கன்னி
கனிதரு செவ்வித் தாயுங் கடிமணப் பேறின் றென்னுத்
துனிதரு நீர ளாகிச் சொல்லினுள் சொல்லக் கேட்டாள்.

இ-ள். குளிர்ச்சிபெற்ற சந்திரனையுடைய கொம்புபோன்ற தடாதகைப் பிராட்டியாரைக் காஞ்சனமாலை பார்த்து வளையும்படி பூத்த கொம்புபோன்ற உனக்குக் கந்நிப் பருவமுதிர்ந்தும் இன்னமும விவாகப்பயன் கிட்டவில்லையென்று வருந்துந் தன்மையளாய்ச் சொன்னுள். அதனைப் பிராட்டியார கேட்டார்.—எ-று. (ச)

அன்னைநீ நினைந்த வெண்ண மாமபொழு தாகும் வேறு
பின்னைநீ யிரங்கல் யான்போய்த் திசைகளும பெருநீர வைப்பு
மென்னது கொற்ற நாட்டி மீள்வலின் கிருததி யென்னுப்
பொன்னவிர் மலர்க்கொம பன்னுள் பொருக்கென வெழுநது போந்தாள்.

இ-ள். (கேட்ட) பிராட்டியார் (காஞ்சனமாலையை நோக்கி) அன்னையே நீ கருதிய கருத்து சித்திக்கும்பொழுது சித்திக்கும் (ஆகையாற்) பல்வேறுகவருந்தாதே யான்சென்று திக்குகளிலும இப்பூமியிலும் என்னுடைய வெற்றியை நாட்டித் திரும்புவேன். நீ இங்கேயிருப்பாயென்று விரைவாக எழுந்து சென்றுர்.—எ-று. (ரு)

தேம்பரி கோதை மாதின் றிருவுளச் செய்தி நோக்கி
யாம்பரி சுணர்ந்த வேந்த ரமைச்சரும் பிறரும் போந்தார்
வாம்பரி கடாவித் திண்டேர் வலவனுங் கொணர்ந்தான் வையந
தாமபரி வகல வந்தா ளேறினுள் சங்க மார்பப.

இ-ள். வாசந்தங்கிய கேசமுடைய பிராட்டியாரது திருவுளக் குறிப்புணர்ந்து (அரசாட்சிக்குரித்)தாகிய தன்மையறிந்த அரசர்முதலாயினுர் வந்தனர். சாரதியுந் தேரைக் கொண்டுவந்தான். உலகத்தார் துன்பம் ஒழியும்படி வந்தருளிய அப்பிராட்டியாருஞ் சங்கமுழங்க அத்தேரில் ஏறினுர்.—எ-று. (சு)

ஆர்த்தன தடாரி பேரி யார்த்தன முருடு மொந்தை
யார்த்தன வுடுக்கை தக்கை யார்த்தன படகம் பம்பை
யார்த்தன முழவந் தட்டை யார்த்தன சின்னந் தாரை
யார்த்தன காளந தாள மார்த்தன திசைக ளெங்கும.

இ-ள். (உடனே) திக்குகளெல்லாம தடாரிமுதலியன முழங்கின.—எ-று. (எ)

வீங்கிய கொங்கை யார்த்த கச்சினர் விழிபோற் றைப்ப
வாங்கிய சிலையே யிட்ட கணையினர் வட்டத் தோல்வா
டாங்கிய கையர் வைவேற் றளிர்க்கையர் பிணுத்தெய் வம்போ
லோங்கிய வாயத் தாரு மேறினு ருடனத் திண்டேர்.

இ-ள். (சிலர்) பருத்த தனங்களிற் கட்டிய கச்சினரும் (சிலர்) தங்கண்போற் றைக்கும்படி வளைந்த வில்லிற்பூட்டிய அம்பினரும் (சிலர்) கேடகம் வாள்கள் தாங்கிய கையினரும் (சிலர்) கூரிய வேலேந்திய தளிர்போன்ற கையினருமாகிப் பெண்தெய்வம்போல் (அழகின்) மிக்கமாதர் குழாங்களும் அப்பிராட்டியாரோடு அந்தேரில் ஏறினார்கள்.—எ-று. (அ)

கிடைப்பன வுருளாற் பாரைக் கீண்டுபா தலத்தி னெல்லை
யடைப்பன பரந்த தட்டா லடையவாந் திசைக ளெட்டு
முடைப்பன வண்ட முட்டி யொற்றிவா னகங்கை நீரைத்
துடைப்பன கொடியாற் சாரி சுற்றுவ பொற்றிண் டேர்கள்.

இ-ள். (அப்பிராட்டியாரின தேரைச்சூழ்ந்து) இடசாரி வலசாரி சுற்றுவனவாகிய பொன்னாலியன்ற திண்ணிய தேர்கள், பூண்டனவாயவுருளைகளாற் பூமியைக்கிழித்துப் பாதலத்தினெல்லையை அடைப்பனவும் பரந்த தட்டினாற பெரிய திசைகளெட்டையும் முற்றுந் தகர்ப்பனவும் கொடிகளால ஆகாயத்தைப் பெரிதுமளாவி அவ்விடத்துள்ளகங்கைநீரைத் துடைப்பனவு மாயின.—எ-று. (கூ)

செருவின்மா தண்டந் தாங்கிச் செல்லுமவெங் கூற்ற மென்ன
வருவிமா மதநீர் கால வரத்தவெங் குருதிக் கோட்டாற்
கருவிவான் வயிறு கீண்டு கவிழுநீர் வாயங் காந்து
பருகிமால வரைபோற் செல்வ பருஉப்பெருந் தடக்கை யானை.

இ-ள். மிகப்பருத்து நீண்ட கைகளையுடைய யானைகள், போரிலே பெரிய படையெடுத்துச் செல்லுங் கொடிய கூற்றுவன்போலவும் அருவிபோல மிக்கமதநீர் சிந்தும்படி சிவந்த வுதிரந்தோய்ந்த கொடிய கொம்புகளாலே கூட்டமாகிய மேகத்தின்வயிற்றைக் கிழித்து (அதினின்று) ஒழுகுநீரை வாயைத்திறந்துணடு பெரிய மலைபோலவுஞ் செல்கின்றன வாயின.—எ-று. (௰)

ஒலியவார் திரையி னன்ன வொழுங்கின யோக மாக்கள்
வலியகா லடக்கிச் செல்லு மனமெனக் கதியிற் செலவ
கலியநீர் ஞாலங் காபபான கடையுக முடிவிற் றோற்றம்
பொலியும்வாம் புரவி யொன்றே போலவன புரவி வெள்ளம்.

இ-ள். ஒலியுடைய கடல்சூழ்ந்த வுலகத்தை (ப்பாவத்தினீக்கி) க்காக்கக் கலியுகமுடிவில் விஷ்ணுமூர்த்தி அவதரித்துத் தாவுங்குதிரைபோன்றனவாகிய குதிரைக் கூட்டங்கள், ஒலியுள்ள நீண்டதிரைபோன்ற ஒழுங்கினவும் யோகிகள் வாயுவையடக்கி (ஒருவழிப்பட) ச்செலுத்து மனம்போல (ப்பாகாகள் தம்வசப்படுத்திச்செலுத்த ஒருவழிப்பட்டு) விரைவிற் செல்வனவுமாயின.—எ-று. (கக)

காலினுங் கடிது செலலுஞ் செலவினர் கடுங்கட் கூற்ற
மேலினு மிகையுண் டாயின் வெகுண்டுவெல கண்டு மீளும
பாலினர் பகுவாய் நாகப் பலலினும பிலகு மால
வேலினர் வீயா வென்றி வீக்கிய கழற்கால வீரர்.

இ-ள். கெடாத வெற்றியினால் வீரகண்டையணிந்த காலையுடைய வீரர்கள், கூற்றுவன்மேலுங் குற்றமுண்டாயிற் கோபித்துப் போரிற்புறங்கண்டு மீளுந்தன்மையினரும் பாம்புப்பல்லின் விடத்திலும் விடஞ்சிந்தும் வேற்படையினரும் காற்றினும் விரைந்துசெல்லுஞ் செலவினருமாயினர்.—எ-று (கஉ)

எண்புதைத் தெழுந்த வீர ரிவுளிதேர் யானை வெள்ள
மண்புதைத் தனப தாகை மாலைவெண் கவிகை பீலி
விண்புதைத் தனநுண் டூளி வெயிலவிடு பரிதிப புத்தேள
கண்புதைத் தனபே ரோதை கடலொலி புதைத்த தன்றே.

இ-ள். அளவில்லாத வீரப்படைமுதலியன பூமியையும் துவஜமுதலியன ஆகாசத்தையும் நுண்ணியதூளி சூரியன்கண்ணையும பேரொலி கடலொலியையும் மறைத்தன.—எ-று. (கங)

தேரொலி கலினப் பாயமான் செலவொலி கொலைவெண் கோட்டுக்
காரொலி வீர ராக்குங் கனையொலி புனைதார்க் குஞ்சி
வாரொலி கழற்காற் செங்கண் மள்ளாவன் றிண்டோள் கொட்டும
பேரொலி யண்ட மெல்லாம் பிளந்திடப் பெருத்த தன்றே.

இ-ள். இரதகஜதுரகங்கள் செல்லுதலின் ஒலியும் வீரர்கள் ஆரவாரிக்கும் ஒலியும் அவர்கள்திண்ணிய புயங்களைத்தட்டும ஒலியும் அண்டங்கள் அனைத்தும் பிளவுபட அதிகரித்தது—எ-று கலினம் - கடிவாளம கார் - ஆகுபெயா. வாரொலிகழல் - மிக்க வொலியுள்ள வீரகண்டை. (கச)

பார்கெழு பூழி போர்ப்பப் பகலவன் மறைந்து முந்நீர்க்
கரந்தவன போன்று ளாக்க கங்குலவந் திறுத்த தேயபாச்
சுரந்திரு ணிறைய முத்தின் சோதிவெண் குடையும வேந்தர்
நிரந்தபூண் வயிர வாளு நிறைநிலா வெறிக்கு மன்றே.

இ-ள். (இங்ஙனஞ் சேனைசெல்லுதல் பற்றிப்) பரந்தெழுகின்ற புழுதிபோர்த்தலால் ஆதித்தன் மறைந்து கடலில ஒளித்தவன்போலாக (அதனால) இராத்திரிவந்தது போல இருள்மிகுந்து நிறைய (அதனைப்போக்க) முத்துக்குடையும் அரசர்களேந்திய பூணுள்ளவயிரவாளும் மிகுந்த நிலவைவீசும் —எ-று. (கரு)

தேர்நிரை கலனாய்ச் செலலப் பரிநிரை திரையாய்த் துள்ள
வார்முர சொலியாய்க் கலல வாட்கலன் மீனாய்க் கொட்பத்
தார்நிரை கவரிக் காடு நுரைகளாய்த் ததும்ப வேழங்
கார்நிரை யாகத் தானைக் கடல்வழிக் கொண்ட தன்றே.

இ-ள். தேர்வரிசை மரக்கலமாய்ச்செல்லவும், குதிரைவரிசை அலையாய்த்துள்ளவும், முரசினொலி கல்லென்னுமொலியாய் ஒலிக்கவும், வாட்படை மீனாய்ச்சுழலவும், (வெண்மலர்) மாலை வரிசைபோன்ற சாமரைவரிசை நுரையாயெழவும், யானைவரிசை (நீரையுண்ணவரும்) மேகமாய் நெருங்கவும் சேனாசமுத்திரம் வழிக்கொண்டது.-எ-று ()

கள்ளவிழ் கோதை மாத ரொடுதெற்றி கவரிக் காடு
துள்ளவந் தணர்வா யாசி யொருபுறந் துவன்றி யார்ப்பத்
தெள்விளி யமுத கீத மொருபுறந் திரண்டு விம்ம
வள்ளைவா குழையும மன்னோ பணிசெதிண்டோ நடந்த தன்றே.

இ-ள். தேனொழுகு மலர்ந்த மலர்மாலை பூண்ட மடவார் வீசுஞ் சாமரை(ஒருபுறந்) துள்ளவும், அந்தணர் வாயின் ஆசீர்வாதம் ஒருபுற மிகுந்து முழங்கவும், அமிழ்தம்போலுந் தெள்ளிளியாகிய இசைப்பாட்டு ஒருபுறந் திரண்டொலிக்கவும், வள்ளையிலைபோலு நீண்ட திருச்செவியுடைய எங்கள் மாதாவாகிய பிராட்டியாரது மணியழுத்திய இரதம் நடந்தது.—எ-று. (கஎ)

மீனவன் கொடியும் கான வெம்புலிக் கொடியுஞ் செம்பொன்
மானவிற் கொடியும் வண்ண மயிற்றழைக் காடு தோட்டம்
பானலங் கருங்கட் செவ்வாய் வெண்ணகைப் பசுந்தோ ளிப்பத்
தேனலம் பலங்கல் வேய்ந்த செல்வித்தேர் மருங்கிற் செல்ல.

இ-ள். வலிய மீன(வரைந்த) கொடியும் (சோழனது) புலிக்கொடியும் (சேரனது) செம்பொன்னாலாகிய பெரிய விற்கொடியும் அழகிய மயிற்பீலி(க்குடை)க் கூட்டமும் இதழையுடைய கருங்குவளை மலர்போன்ற கரியகண், சிவந்தவாய், வெள்ளிய நகதம், பசியதோள் இவைகளை யுடைத்தாய் வேப்பம்பூமாலையணிந்த பிராட்டியார் தேரின் அருகே செல்லவும்.—எ-று (கஅ)

மறைபல முகங்கொண் டேத்தி வாய்தடு மாறி யெய்ப்ப
நிறைபரம் பரைநீ யெங்க ளிருபாகோன் மகளாய் வைய
முறைசெய்து மாசு தீர்ப்பா யடியனேன் முகத்து மாசுங்
குறையென நிழற்றுந் திங்கட் கொள்கைபோற் கவிகை காப்ப.

இ-ள் வேதங்கள் பலவழிப்பட்டுத் துதித்து (ங் காணக்கூடாமையால்) வாய் தடுமாறி யிளைக்கும்படி நிறைந்த சிவசத்தியாகிய நீ எங்கள் (மரபினனாகிய) மலயத்துவஜபாண்டியன் புத்திரியாய்ச் செங்கோல்செலுத்தி யுலகத்தின் களங்கத்தை யொழிக்கின்றாய் (அதுபோல) அடியேன் முகத்தின் களங்கமும் ஒழிப்பாயென்று வந்து நிழலைச் செய்யும் சந்திரனது கொள்கைபோல வெண்கொற்றக் குடைநிழல் செய்யவும்.—எ-று.()

அங்கயற் கண்ணி மான்றேர்க் கணித்தொரு தடந்தேர் நூர்ந்து
வெங்கதிர் வியாழச் சூழ்ச்சி மேம்படு சுமதி யென்போ
னிங்கிதன் குறிப்பு நோக்கி நாற்பெரும் படையுஞ் செல்லச்
செங்கையிற் பிரம்பு நீட்டிச் சேவகஞ் செலுத்திச் செல்ல.

இ-ள். விரும்புங் கிரணமுடைய தேவமந்திரி சூழ்ச்சியினும் மேம்பட்ட (சூழ்ச்சியுடைய) முதன்மந்திரியாகிய சுமதி என்போன் பிராட்டியாரது தேருக்குச் சமீபமாக ஓரிரதஞ் செலுத்தி அப்பிராட்டியாரின்றிருவுளக் குறிப்புணர்ந்து நால்வகைப் படைகளுஞ் செல்லும்படி பிரப்பங்கோலாற் சுட்டிக்காட்டி வீரஞ் செலுத்திக்கொண்டு செல்லவும்.—எ-று. (உ0)

அலகிலாக் கருவிச் சேனை யாழ்கட லனைத்துந் தன்போன்
மலர்தலை யுலக மன்றி மகபதி யுலக மாதி
யுலகமும் பிறவுஞ் செல்ல வுலப்பிலா வலிய தாக்கித்
திலகவா ணுதலாள் மன்னர் திருவெலாங் கவரச் செல்வாள்.

இ-ள். அளவில்லாத நால்வகைப் படையாகிய கடல்முழுதும் தம்மைப்போல இவ்வுலகமன்றி எவ்வுலகமுஞ் செல்லும்படி (ஸ்ரீபஞ்சாக்கரத்தை யுச்சரித்துத் திவ்விய நேத்திரம் ஆகாயகமனமுதலிய) திவ்விய சத்தியுடையதாக்கி அரசர் செல்வங்களை அபக ரிக்கும் வண்ணம் எண்ணிப் பிராட்டியார் செலவாராயினார்.—எ-று. (உக)

கயபதி யாதி யாய வடபுலக் காவல வேந்தர்
புயவலி யடங்க வென்று புழைக்கைமான் புரவி மான்றேர்
பயன்மதி நுதலவே லுண்கட் பாவைய ராய மோடு
நயமலி திறையுங் கொண்டு திசையின்மே னாட்டம் வைத்தாள்.

இ-ள். கஜபதி துரகபதி நரபதி முதலிய வடநாட்டு வேந்தர்கள் அனைவரை யும் வென்று யானை குதிரை தேர் அர்த்த சந்திரனைபோலும் நெற்றியும் நெய்பூசிய வேற் படைபோலுங் கண்களுமுடைய மடவார்கூட்டம் (நூறறிருபத்து மாற்றுள்ள சுவர்ணம் சித்திரத்தினம் ஆபரணம் சித்திரப்பட்டுவாசனைப்பொருள்கள்) ஆகிய இவைகளோடு திறையும் அவர்கள் கொடுக்கப்பெற்று(த தனதானியங்களால் நிரம்பப்பட்ட தம்முடை யராச்சியத்துக்குச் சக்கரவாள மகாசைலம்போலப் பிராகாரத்தைச் செய்வித்து)த திக் குப்பாலர்களை வெல்லக்கருதி அத்திசைகள்மேற் பிராட்டியார் சென்றார்.—எ-று. வரு வித்தல்கள் விடநூலிற் கண்டன. (உஉ)

வார்கழல் வலவன் றேரை வலியகா லுதைப்ப முந்நீ
ரூர்கல னொப்பத் தூண்ட வுமபர்கோ னணிகத் தெய்திப
போர்விளை யாடு முன்னாப புரந்தரன் மிலைந்த தும்பைத
தார்விழ வாற்றல சிந்தத் தருக்கழிந் தகன்று போனான்.

இ-ள். வலியகாற்றுத் தள்ளக் கடலிற்செல்லு மரக்கலம்போல நீண்ட வீரக ண்டையணிந்த தோப்பாகன் தேரைத்தூண்ட (முதலிலே) பிராட்டியார (அமராவதியை யடைந்து-அமரர்களுக்கு அபசயத்தை யுண்டாக்கிப் பின்பு) இந்திரனது சேனையிற் புகுந்து போர்புரியுமுன் அவ்விந்திரன் சூடிய தும்பைமாலை விழவும் வலியிழக்கவும் செருக்கொழிந்து (பிராட்டியாரைவணங்கிப் போர்க்களத்தினின்றும்) ஓடினான்.—எ-று.

இழையிடை நுழையா வண்ண மிடையிற வீங்கு கொங்கைக்
குழையினோ டூடாது மீளுங் கொலைக்கணா குழுவுந தான
மழைகவிழ் கடாதது வெள்ளை வாரண மாவுங் கோவுந
தழைகதிர் மணியுந் தெய்வ தருக்களுங் கவாந்து மீண்டாள்.

இ-ள். இடைகெடும்படி நூல்நத்தியிற் புகாது பருத்ததனங்களையும் செவிவரை சென்றுமீண்டு (காமுகரை) வருத்துதலுடைய கண்களையுமுடைய தேவமகளிர் குழாத் தையும மதநீரொழுகுஞ் சுவட்டையுடைய வெளளையானையையும் வெள்ளைக்குதிரை யையும் காமதேனுவையும் சிந்தாமணிமாலையையும் பஞ்சதருக்களையும் (இந்திரனோடு க்கப்)பிராட்டியார்கைக்கொண்டு திரும்பினார்.—எ-று. மணி - ஆகுபெயர். (உ௩)

கலித்திலைத்துறை.

இவ்வாறு மற்றைத் திசைக்காவலர் யாரை யும்போய்த்
தெவ்வாண்மை சிந்தச் செருச்செய்து திறையுங் கைக்கொண்
டவ்வாறு வெல்வா ளனமூன் றரணட்ட மேருக்
கைவார் சிலையான் கயிலைக் கிரிநோக்கிச் செல்வாள்.

இ-ள் இங்ஙனம (அசுகிங்கநகரத்தைவென்று அவரூற்கொடுக்கப்பட்ட திவ்வியவஸ்திரங்கள் வாகனங்கள் இரத்தினங்கள் சுவர்ணமுதலிய பலபொருள்கள் ஆகிய இவைகளைத் திறையாக்கொண்டும், இயமநகரத்தைவென்று நீலப்பட்டு கஸ்தூரி நீலமணி முதலியவற்றை அடைந்தும்,) மற்ற வருணன்முதலிய திக்குப்பாலர்களையும்போய்ப் பகைவலிகெடப் போர்செய்து அவர்கள் கொடுக்குந் திறையைக்கொண்டும் (பின்பு) அங்ஙனம் வெல்வாராகப்பிராட்டியார (ஈசானதிக்கிலுள்ள) சிவபிரானது திருக்கைலாசமலையைநோக்கிச் செலவாராயினார்.—எ-று. (௨௫)

சலிக்கும புரவித் தடந்தேருடைத் தம்பிராட்டி
கலிக்கும் பலதூ ரியங்கைவரை பெய்யவந் திணைபோர்
வலிக்கும் பரிமளரா வழங்கொலி வாங்கி நேரே
யொலிக்கும்படிகிட்டின ளூழிதோ றோங்கு மோங்கல்.

இ-ள். (செல்லுகின்ற) அப்பிராட்டியார, ஒலிக்கும் பலவாச்சியங்களும் யானை, தேர், (வீரன்செலுத்த) வுடன்படுகின்ற குதிரை இவைகளும் வீரர்களும் முழங்கும் முழக்கத்தைத் திருக்கைலாசமலை ஏற்று எதிரொலிக்கும்படி சமீபித்தார்.—எ-று, (௨௬)

வானா கயிலை மலையான் மகடன்னை நீத்துப்
போனாள் வந்தாளென் றருவிக்கட புனலுங் கந்நீ
ரானா வொலியா லனைவாவென் றழைஇத்தன் றேசு
தானா னகையாற் றழீஇயெதி ரேற்பச் சென்றாள்.

இ-ள். திருக்கைலாசமலை, தன்னை நீங்கிச்சென்ற பார்ப்பதிதேவியார் (இப்பொழுது) வந்தாரென்று அருவியாகிய கண்ணீர் ஒழுகி நீங்காத அந்நீரொலியால் அன்னையே வாவென்று அழைத்துத் தனது கிரணமாகிய கையினாலே தழுவி எதிர்கொள்ளப் பிராட்டியார சென்றார.—எ-று. (௨௭)

கிட்டிப் பொருப்பைக் கிரியொடு கிரிக டாக்கி
முட்டிப் பொருதா லெனவேழ முழங்கிப பாயப்
புட்டிற புறத்தார மறத்தார்கணை பூட்டு வில்லார்
வட்டித் தருமே றெனவார்த்து வளைந்து கொண்டார்.

இ-ள். (சென்ற பிராட்டியார்) திருக்கைலாசமலையின் மத்திய சிகரத்திலே சிவபிரான் எழுந்தருளியிருக்கின்ற தேஜோவதி நகரத்தை (வெல்லும்வண்ணம்)நெருங்கி (ச்சூழும்படி ஏவ) மலையொடுமலை மிகத்தாக்கிப் போர்செய்தாற்போல யானைகள் முழங்கிப்பாய வீரர்கள் அம்பறாத்தூணி தாங்கிய முதுகினரும் அம்பேறிட்ட வில்லினருமாய் (வெல்வோமென)ச் சபதங்கூறி இடியேறுபோல முழங்கி (அந்நகரை) வளைந்துகொண்டார்கள்.—எ-று. புறத்தார் வில்லார் - குறிப்புமுற்றெச்சம். (௨௮)

ஓடித் திருமாமலை காவல ருமப ராக்கு
நாடிப் பணிதற் கரிதாகிய நந்தி பாதங்
கூடிப் பணிந்துத் திறங்கூறலுங் கொற்ற வேணந்
தேடிக் கிடையா வுளந்தேர்ந்தன னந்தி யெந்தை.

இ-ள். (விளைந்தவுடனே) அத்திருமாமலையைக் காப்போர் ஓடித் தேவர்கட்கும் ஆராய்ந்து வணங்குதற்கரிய திருநந்தி தேவரது திருவடிகளை அடைந்து வணங்கி இச் செய்தியை விண்ணப்பஞ்செய்தலும் பன்றிவடிவங் கொண்ட விஷ்ணுவுந் தேடி யுணராத சிவபிரானது திருவுளத்தை அத்திருநந்தி தேவருணர்ந்து —எ-று. தேர்ந்தனன் - முற்றெச்சம். (உகூ)

வென்றிக் கணத்தை விடுத்தான் கனமீது பெய்த
குன்றிக் கணம்போற சுழல்கண்ணழல் கொப்பளிப்பச்
சென்றிக் கனைய மொழியாள்பெருஞ் சேனையோடு
மொன்றிக் கடலுங் கடலும்பொரு தொத்த தன்றே.

இ-ள். பூதகணங்களை ஏவினார். அவை, ஆகாயத்தினின்று மேகம்பொழிந்த குன்றிமணிக் கூட்டம்போலச் சுழல்கண்கள் தீப்பொறியைச் சிந்தும்படி சென்று கரும்பின் இரதம்போலு மொழியுடைய பிராட்டியாரது படையொடு பொருந்திக் கடலுங் கடலும் பொருததுபோல (ப் போர்செய்தன).—எ-று. இகுகு - ஆகுபெயர். பொருதது என்பாலது பொருது என இடைக்குறையாய் நின்றது. (௩0)

சூலங்கண் மழுப்படை தோமர நேமி பிண்டி
பாலங்கள் கழுக்கடை வாட்படை தண்ட நாஞ்சி
லாலங்க விழ்க்கின்ற வயிர்ப்படை வீசி யூழிக்
காலங்க லிக்குங் கடல்போன்ற களம ராபட்.

இ-ள். சூலப்படை முதலியவற்றை (ஒருவர்மேல் ஒருவர்) வீசி வீரர் ஆரவாரிப்பன ஊழிக்காலக் கடலொலிகள் போன்றன.—எ-று. தோமரம், ஈட்டி. பிண்டிபாலம், எறிபடை. கழுக்கடை, சிறியஈட்டி. நாஞ்சில், கலப்பை. அயில், வேல். ஏடல், ஆகுபெயர். (௩௧)

எறிகின்றன வோச்சுவ வெய்வன வாதி யாகச்
செறிகின்றன பல்படை செங்கிறப் புண்ணீர் மூழ்கிப்
பறிகின்றன வும்மிழைக் கின்றவும் பட்டுத் தாக்கி
முறிகின்றன வும்முயன் றோர்வினைப் போக மொத்த.

இ-ள். எறிகின்றவை முதலியவாகப் பொருந்திய பலபடைகள், உதிர நீரில் மூழ்கி யூடுருவுகின்றனவும் (உடலிலே) தாக்காது போகின்றனவும் தாக்கி முறிகின்றனவுமாய் முயற்சியுடையார்க்கு இருவினைக்கீடாக வரும் போகங்கள் முறையே நெடுங்காலம் நிற்பனவும் போலியாய்ப் போகின்றனவும் சிலகால நிற்பனவும் போன்றன.—

தெரிசிக் கவந்த சிலதேவர் சிறைப்புளூர்தி
வெருவிப் பறந்த வொழிந்தோர்விலங் கூர்தி மானங்
கருவிப் படையாற் சிதைபட்டன கால னூர்தி
குருதிப் புனலுக் கதுகொற்றவை யுண்ட தென்ன.

இ-ள். (அங்ஙனம் போர்புரியும்போது சிவபிரானைத்) தரிசிக்கவந்த சிலதேவர்களுடைய கருடன்முதலிய வாகனங்கள் பயந்து பறந்தன. மற்றுஞ் சில தேவர்களுடைய ஐராவத யானைமுதலியவும் விமானங்களுமாகிய வாகனங்கள் படைகளால் உருவழிந்தன. (முன்) காளியுண்ட உதிரம்போல இயமனுடைய வாகனமாகிய எருமைக்கடா உதிரத்தை யுமிழ்ந்தது.—எ-று. (௩௨)

பொருகின் றதுகண்டு விச்சாதரர் போகம் வீடு
தருகின் றவனைத் தொழுவானெறி சார்பது நேரே
வருகின் றவர்வேறு வழிக்கொடு போவ ரன்புக்
குருகின் றளிரமெல் லடியாரொடு மூடற மஞ்சா.

இ-ள், புதமுத்திகளைத் தருஞ் சிவபிரானை வழிபட ஆகாயவழியாக நேரே வருகின்றவராகிய வித்தியாதரர், போர்செய்தலை நோக்கி(த் தமக்கு நேர்படும்) இடையூற்றுக் கஞ்சி அன்புக்கு உருகும் இனிய தளிர்போலும் மெல்லடி நல்லாரோடு வேறுவழிகொண்டு செல்வர்.—எ-று. (௬௪)

திங்கட் படைசெய் சுடரோன்படை சீறு மேற்ற
வங்கிப் படைநீர் புயலான்படை யாற்ற வெங்க
துங்கப் படைசிம் புளுமப்படை சூறைச் செல்வன்
வெங்கட் படைபன் னகவெம்படை மாறி விட்டார்.

இ-ள். (இருவகை வீரர்களும்) சந்திராஸ்திரத்திற்குச் சூரியாஸ்திரமும், ஆக்கினேயாஸ்திரத்திற்கு வாருணாஸ்திரமும், நாரசிங்காஸ்திரத்திற்குச் சரபாஸ்திரமும், வாயவியாஸ்திரத்திற்கு நாகாஸ்திரமும் மாறிவிட்டார்கள்.—எ-று. (௬௫)

கொட்புற் றமராடு மிக் கொள்கையர் தம்மி லாற்ற
நட்புற் றவர்கைப் படைநாட்ட ஞான மூர்த்தி
பெட்புற் றருள வருமெங்கள் பிராட்டி வெய்ய
கட்புற் றரவிற் கணைமாரிக ளேற்றி நின்றாள்.

இ-ள். (இவ்வாறு இடசாரி வலசாரி) சுழன்று போர்செய்யும் வீரர்களிலே திருநந்திதேவருக்கு நண்பினராகிய பூதகணரது கைப்படைகள் துகள்படும்படி சிவபிரான் விருப்பமுற்று அருள்புரிய வரும் எங்கள் பிராட்டியார் புற்றிலுள்ள கொடியகண்ணுடைய பாம்புகள்போன்ற பாணவருஷங்களைப் பொழிந்தார்.—எ-று. (௬௬)

கையிற் படையற் றனர்கற்படை தொட்டு வீரர்
மெய்யிற் படுகென்று விடுங்குமுன் வீரக் கன்னி
பொய்யிற் படுநெஞ் சுடையார்தவம் போல மாய
செய்யிற் படுவச் சிரவேலை நிமிர்த்து வீசி.

இ-ள். கையிலுள்ள படைகள் அற்ற பூதகணங்கள் கல்லாகிய படைகளை எந்திப் பகைவீரர் உடலிற் படுகவென்று எறியுமுன் பிராட்டியார், பொய்மனத்தார் தவம்போல (அக்கற்படை) கெடும்படி செய்யூசிய வச்சிரப்படையை ஓங்கி எறிந்து.—எ-று.

துண்டம் படவே துணித்தக்கண வீரர் நம்மைத்
தீண்டங் கொடுதாக் கினள்சாய்ந்தவர் சாம்பிப் போனா
ரண்டங்கள் சராசரம் யாவையுந் தானே யாகக்
கொண்டெங் குநின்றாள் வலிகூற வரம்பிற ருமோ.

இ-ள். (அவற்றைத்) துண்டுதுண்டாக அறுத்து அப்பூதகண வீரனைத் தண்டா யுதத்தால் மோதினர். (உடனே வீரர்) சாய்ந்துவாடி ஓடினர். உலகெலாந் தாமேயுண்டாக்கி அவற்றினிறைந்து நிற்கும் பிராட்டியாரது பேராற்றலை (ஒருவர்)கூற அளவினதாமோ.—எ-று. (கூஅ)

படையற் றுவிமான முழம் பற்றற வற்றுச் சுற்றுந்
தொடையற் றிகன்முண் டெழு தோள்வலி யற்றுச் செற்ற
மிடையறு வீர நகையற்றட லேறு போலு
நடையற் றடைவார் நிலைகண்டன னந்தி யண்ணல்.

இ-ள். படையும் விமானமும் அணிந்த (தும்பை) மாலையும் போரில் மிகுந்தெழும் புயவலியும் கோபமிகுதியும் வீரநகையும் வலிய இடபம்போலு நடையுமின்றி வரும்பூதகணவீரரது நிலையைத் திருநந்திதேவர் கண்டு.—எ-று. கண்டனன்-முற்றெச்சம்.

உடையா னடிதாழ்ந் திவையோதலு மோர்ந் தீர்ந்தச்
சடையா னிளவா னகைசெய்து தருமச் செங்கண்
விடையான் சிலையா னிகல்வென்றி விளக்குந் தெய்வப்
படையா னெழுந்தா னமராடிய பாரிற் சென்றான்.

இ-ள். ஆன்மாக்களை அடிமையாகவுடைய சிவபிரானது திருவடிகளைவணங்கி நிகழ்ந்தவைகளை விண்ணப்பஞ் செய்யவும் அப்பெருமான் திருப்புன்முறுவலசெய்து தரும விடைமேற்கொண்டவரும் பினாகவில்லை யேந்தியவரும் போரில் வெற்றிதருந் திவ்வியாஸ்திரங்களை யுடையவருமா யெழுந்து போர்க்களத்திற் சேர்ந்தருளினர்—எ-று. விடையான் - சிலையான் - படையான - குறிப்புமுற்றெச்சம். எழுந்தான் - முற்றெச்சம். (சo)

அறுசீரடி யாசிரியவிருத்தம்

மேவி யாகவப் பாரிடைப் பாரிட வீரரை யமராடி
யோவி லாவலி கவர்ந்தது மன்றினி யுருத்தெவ ரெதிர்ந்தாலுந்
தாவி லாவலி கவரவு மடங்கலின் றனிபபிணா வெனநிற்குந்
தேவி யாதிரு வுருவமுஞ் சேவகச் செய்கையு மெதிர்கண்டான்.

இ-ள். சேர்ந்து போர்க்களத்திலே பூதகண வீரரோடு போர்செய்து (அவரது) நீங்காத வலியைப் போக்கியது மன்றி இனிக் கோபித்து யாவர் எதிர்ந்தாலும் கெடாத (அவரது) வலியைப் போக்கவுந் தக்கதாக ஒப்பிலாப் பெண்சிங்கம்போலநிற்கும் பிராட்டியாரது திருவுருவமும் வீரச்செய்கையும் நேரே பார்த்தருளினர்.—எ-று. ஐ உருபு மயக்கம். அன்றியென்னும் வினையெச்சம் உகரம்பெற்று நின்றது. (சக)

ஒற்றை வார்கழற் சரணமும் பாம்பசைத் துடுத்தவெம் புலித்தோலுங்
கொற்ற வாண்மழுக் கரமும்வெண் ணீறணி கோலமுந நூன்மார்புங்
கற்றை வேணியுந் தன்னையே நோக்கிய கருணைசெய் திருநோக்கும்
பெற்ற தன்வலப் பாதியைத் தடாதகைப் பிராட்டியு மெதிர்கண்டாள்.

இ-ள். நீண்ட ஒரு வீரகணடையணிந்த திருவடியும், பாம்பாகிய கச்சால் இறுகக்கட்டிய வெவ்விய புலித்தோலாடை (யுடைய திருவரை) யும், வெற்றிபெற்ற மழுப்படையேந்திய திருக்கரமும், வெள்ளிய விபூதியணிந்த திருக்கோலமுடைய உப வீதம்பூண்ட திருமார்பும், திரண்ட சடாமுடியும, தம்மையே நோக்குகின்ற கருணைபுரி யுந் திருக்கண்களுமாகிய இவைகளையுடைய தமது வலப்பாகமான சிவபிரானைப் பிராட் டியாரும் நேரே பார்த்தார்.—எ-று. (சஉ)

கண்ட வெலலையி லொருமுலை மறைந்தது கருத்தினுண் மடனச்சந்
கொண்ட மைந்திடக் குனிதர மலர்ந்தபூங் கொம்பாபோ லொசிந்தொல்கிப
பண்டை யன்புவந் திறைகொளக் கருங்குழற் பாரமும் பிடர்தாழக்
கெண்டை யுண்கணும் புறவடி நோக்கமண் கிளைத்துமின் னெனநின்றாள்.

இ-ள். (அங்ஙனம்) தரிசித்தவளவில (எனக்குமுன்னே விந்தியபர்வதமபோல விரிந்தமாகிய) ஒருதனம் (அருகிலுள்ளோர்ஆச்சரியமடைய) மறைதலாலே திருவுளத்தில் நாணமும் மடமும அச்சமும் குடிகொள்ள, (விலலைவிட்டு) வளையும்படி மலர்ந்த பூங் கொம்புபோல ஒசிந்து துவணடு (சிவபிரான்மாட்டுத்) தமது பழைய அன்புவந்து பொ ருந்த, அளகபாரம் பிடரிலே தாழவும கண்கள் புறவடியை நோக்கவும் (திருவடிப்பெரு விரலால்) மண்ணைக கிளைத்துககொணடு மின்போல (ப் பிராட்டியார) நின்றார். (சரு)

நின்ற மென்கொடிக் ககல்விசும் பிடையர னிகழ்த்திய திருமாற்ற
மன்ற நிந்தமூ தறிவனுஞ் சுமதிசீ றடிபணிந் தன்னையிக்
கொன்றை யஞ்சடைக் குழகனே நின்மணக் குழகனென் றனுமன்பு
துன்ற நின்றவட் பார்த்தருட் சிவபரஞ் சோதிமற் றிதுகூறும.

இ-ள். (இவ்வண்ணம்)நின்ற பிராட்டியாருக்கு ஆகாயத்திலே சிவபிரான் அரு ளிய திருவாக்கை அந்நாளிலே யுணர்ந்த பேரறிவினனாகிய சுமதி என்பவன் (அப்பிரா ட்டியாரது) சிறிய திருவடிகளை வணங்கி அன்னையே கொன்றைமாலையை அணிந்த சடாமுடியையுடைய இந்தச் சுந்தரேசரே உன்னுடைய திருமணத்திற்குரிய அழகி னரொன்று (இரகசியமாக) விண்ணப்பஞ்செய்தலும் அன்பு மேலிடநின்ற பிராட்டியா ரைநோக்கிக் கருணையுடைய அச்சிவபிரான் இதனை அருளுகின்றார்.—எ-று. (சச)

என்று தொட்டுநீ திசையின்மேற் சயங்குறித் தெழுந்துபோந் தனையாமு
மன்று தொட்டுநம் மதுரைவிட் டுனைவிடா தடுத்துவந் தனமுன்னைத்
தொன்று தொட்டநான் மறையுரை வழிவரு சோமவா ரத்தோரை
நன்று தொட்டநாண் மணஞ்செய வருதுநின் னகர்க்குநீ யேகென்றான்.

இ-ள். எக்காலந்தொடங்கித் திக்குகளின் மீது (சென்று பொருது) வெற்றி கொள்ளக் கருதி நீ எழுந்து புறப்பட்டாயோ அக்காலந்தொடங்கி நம்மதுரைப்பதியை விட்டு (மகாலிங்கத்தினின்றும் வெளிப்பட்டுப் பதினுறுவயசும் யவ்வனமும் திவ்விய தேஜசு முதலியவு முடையோமாய் உன்னை மணமபுரியுங் கருத்துக்கொண்டு ஒருவரு முணராவண்ணம்) உன்னோடுகூட (எவ்விடங்களுக்கும்) யாமும் அடுத்துவந்தோம் (அத ற்கிசைவாயென்று சிவபிரான் அருள அதற்கு மதுரைப்பதியில் வதியும் என்னுடைய மாதா காஞ்சனமாலை அநுமதிபெற்றுத் தேவரீர் விவாகஞ்செய்யத் தக்கதென்று பிராட் டியார்விண்ணப்பஞ்செய்ய அதற்குச் சிவபிரான் நீ கூறியபடி உன்னுடைய மாதா அநு மதிபெற்றுப்) பழைய வேதத்தில் ஓதியபடி வருகின்ற சோமவார சுபதினத்தில் நல்ல

முகூர்த்தங்கூடிய காலத்தில் உன்னை மணம்புரிதற்கு (யாம்) வருவோம் உன்னுடைய மதுரைப்பதிக்கு நீசெல்வாயென்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று. வருவித்தல்கள வடமொழியிற் கண்டன. (சகு)

என்ற நாதன்மே லன்பையு முயிரையு மிருத்தியா யனுசூழக்
குன்ற மன்னதோ மேற்கொடு தூரியங் குரைகட லெனவார்ப்ப
நின்ற தெய்வமால் வரைகளும் புண்ணிய நீத்தமு நீத்தேகி
மன்றன மாமது ராபுரி யடைந்தனண் மதிக்குல விளக்கன்னாள்.

இ-ள் (அங்ஙனம்) திருவாய்மலர்ந்தருளிய நாயகராகிய சுந்தரேசராமாட்டுசேசந்திரகுலத்திற்குத் தீபம்போன்ற பிராட்டியார் தமதன்பையும் உயிரையுமவைத்து மாதர் குழாஞ்சூழும்படி மலைபோலுந் தேரின்மேற்கொண்டு கடலொலிபோல வாச்சியங்கள் ஒலிக்கப் பருவதமுதலியவற்றைக் கடந்து மணங்கமழும் மதுரைமாநகரை அடைந்தருளினர். ()

மங்கை நாயகி மங்கல மெதிர்கொள வந்துவா னிழிசெலவம்
பொங்கு மாளிகை புகுந்தன ளாகமேற புதுமணத் திறந்தீட்டி
யெங்கு மோலையுயத் தமைச்சாமங் கலவினைக் கியைவன வமைக்கின்று
ரங்கண மாநக ரெங்கணுங் கடிமுர சானைமே லறைவித்தார்.

இ-ள். (அதைத்) பிராட்டியார் அட்டமங்கலம் எதிர்கொள்ளச் சென்று தேவலோகச் செல்வத்தை இகழ்தற் கேதுவாகிய செல்வம் விளங்குந் திருக்கோயிலை அடைந்(து மாதாவுடன் எல்லாஞ்சொல்லிக் கலந)திருக்க அதன்மேற புதிதாக நிகழுந் திருமணச்செய்தி எழுதிய திருமுகத்தை எவ்விடத்துக்கும் அனுப்பி அத்திருமணச் செய்கைக்கு வேண்டுவனவற்றை அமைக்கின்றவராகிய அமைச்சர் அழகிய இடமுடைய அம்மதுரை நகரத்தார் அறியும்படி மங்கலமுரசை யானைமேலேற்றி அறைவித்தார்.—எ-று. அமைக்கின்றார், வினைமுற்றுப்பெயர் (சஎ)

வேறு.

கன்னிதன் மணமுர சறைதலுங் கடிநக ருறைபவர் களிகெடத
துன்னிய வுவகையர் கடவுளைத் தொழுகையர் உடல முகிழ்ப்பெழப்
பன்னிய துதியின ரியலெழின் மகளிரை யழகுசெய் பரிசென
வின்னிய லெழில்வள நகரெலாஞ் செயலவினை யணிபெற வெழிலசெய்வார்.

இ-ள் பிராட்டியாரது திருமணத்தைக்குறித்து முரசறைவித்த மாத்திரத்தில் அம்மதுரை நகரவாசிகள், அளவில் மகிழ்ச்சியினரும சுந்தரேசரைத் தொழுங்கையினரும் உடலிற் புளகமரும்பத் துதிக்கின்றவருமாய இயற்கை யழகுடைய மடவாரை (ஆபரணமுதலிய) செயற்கையினால் அழகுசெய்தலபோல இனிய இயற்கை யழகுநீட்டிய நகரிலுள்ள (யாவையை) யெல்லாம் செயற்கையாகிய கைத்தொழிலால் அழகுபெற அலங்காரஞ்செய்யத் தொடங்கினர்கள்.—எ-று. (சஅ)

கோதையொ டும்பரி சந்தனக் குப்பைக ளோந்தனா வீசுவார்
சீதள மெய்ப்பனி நீரகடேய்ச் சிந்தின பூழி யடக்குவார்
மாதரு மைந்தரு மிறைமகண மன்றன மகிழ்ச்சி மயக்கினாற்
காதணி குழைதொடி கண்டிகை கழல்வன தெரிகிலர் தொழிலசெய்வார்.

இ-ள். மடவாரும் ஆடவரும் பூமாலையொடு நீங்கிய சந்தனச் சுண்ணமயக்க லாந்து (புறத்தே) யெறிபவரும குளிர்ச்சியாகிய மெல்லிய பனிநீரைத் தூவிச் சிதறிய புழுதியை அடக்குபவரும் பிராட்டியாரின் திருமணத்திலெழுந்த மகிழ்ச்சி மயக்கத்தாற் காதிலணிந்த குண்டலம் வளையல் கண்டிகை ஆகிய இவைகள கழலுதல் தெரியாதவருமாய் அலங்காரஞ் செய்பவராயினா.—எ-று. (சகூ)

மங்கல மென்றென வினவுவார வருமதி நாளென வுரைசெய்வார்
தங்களை யொல்லை தழீஇக்கொள்வார தாங்கரு மோகை தலைக்கொளவார
திங்களி னெல்லையு மாறுநா ளாறுக மென்று செலுத்துவார்
நங்கைய ருங்கடி காணவோ துடித்தன தோள்க ணமக்கென்பார.

இ-ள். (பிராட்டியாரது) திருமணம் எப்பொழுதென்று (ஒருவரை யொருவர்) வினவுவார். வருகின்ற சோமவாரதினமெனக் கூறுபவரை விரைந்து தழுவிக்கொளபவராய்த் தாங்குதற்கரிய மகிழ்ச்சி யடைவார். சோமவாரம வருமளவு ஆறுதினம் (ஆயினும் அவை) ஆறுயுகமாமென்று கருதிக் கழிப்பார. (அத்திருமணத்தைத்) தரிசித்து மகிழவோ நமக்குத தோள்கள் துடித்தனவென்று சொல்லுவார்.—எ-று. கொள்வார், குறிப்பு முற்றெச்சம். எல்லையும உம்மை அசை. (ரு௦)

பித்திகை வெள்ளை புதுக்குவார் பெட்புறு வார்களும் பெட்புறச்
சித்திர பந்தி நிறுத்துவார் தெற்றிகள் குங்கும நீவுவார்
வித்திய பாலிகை மென்றழை விரிதலை நீர்நிறை பொற்குடம
பத்தியின் வேதி நிரப்புவார தோரணம வாயில் பரப்புவார.

இ-ள். சுவர்களைச் (சங்குச்) சாந்திறாற் புதுக்குவார். (யாவராலும்) விரும்பத்தக்கவராகிய (சிற்பத்தொழில) வல்லோரும விரும்பும்படி சித்திரங்களை வரிசையாக அமைப்பார். வெளிததிண்ணைகளிற் குங்குமக் குழம்பு பூசுவார. (பின்பு) அத்திண்ணைகளில் முளைத்த பாலிகைகளையும் மெல்லிய (மாந்) தழைவிரிந்த தலையுடைய நீர்நிறைந்த பொற்குடங்களையும் வரிசையாக வைப்பார். தோரணங்களை வாயிலிற்கட்டுவார.—எ-று. வேதி - கடைகுறை. (ருக)

நீளிடை மணிமறு கெங்கணு நெடுநடைக் காவண நாட்டுவார
பாளைகொள் கமுகு சுவைக்கழை பழுககுலை வாழை யொழுக்குவார
கோளிறை கொண்டென வாடிகள் கோத்தணி வார்மிசை கொடிநிரை
வாளரி யெழுபரி யடிபட மத்திகை நிரையென வைப்பரால்.

இ-ள். அகன்ற விடத்தையுடைய அழகிய வீதிகளெங்கும் நெடிய நடைப்பந்தர் இடுவார். கமுகு கரும்பு பழுத்தலுடையகுலையுள்ள வாழை இவைகளை வரிசைப்படக்கட்டுவார். நவக்கோள்கள் தங்கியிருத்தல்போலக் கண்ணாடிகளைக் கோவையாகக் கட்டுவார். மேலேகொடிவரிசைகளை ஒளியுடைய சூரியன (தேர்க) குதிரைமேலும் தாக்கும்படி சம்மட்டியின் வரிசைபோலக் கட்டுவார்.—எ-று. அரி - இலக்கணை. (ருஉ)

பூவொடு தண்பனி சிந்துவார பொரியொடு பொற்சுணம் வீசுவார்
பாவை விளக்கு நிறுத்துவார பைந்தொடை பந்தரி னாற்றுவா
ராவண மென்ன வயிரப்புற வணிமறு கெங்கணு மரதகக்
கோவையு மாகத மாலையுங் கோபபவள யாரமுந் தூக்குவார்.

இ-ள். மலர்களும் பனிநீருஞ் சிந்துவார். பொரிகளும் பொற்பொடியும் வீசுவார். பிரதிமைகளேந்திய தீபங்களை வைப்பார். பசிய மலாமாலைகளைப் பந்தரிற் றூங்க கக்கட்டுவார். கடைவீதியென்று சந்தேகிக்கும்படி அழகிய வீதிகளெங்கும் இரதநக் கோவையும் மரகதமாலையும் கோவைபெற்ற முத்துமாலையும் தொங்கக்கட்டுவார்—எ-று.

அடுகரி சிந்தூ'மப்புவா ரழன்மணி யோடை மிலைச்சுவார்
கடுநடை யிவுளி கழுத்தணி காலணி கலனை திருத்துவார்
சுடர்விடு தோ்பரி பூட்டுவார் தொடையொடு கவரிக டேக்குவார்
வடுவறு பொற்கல நவமணி மங்கல தீப மியற்றுவார்.

இ-ள். கொல்லும் யானை(நெற்றியிலே) சிந்தூரம் இடுவார். நெருப்புப்போலும் இரத்நபட்டத்தைக் கட்டுவார். கடிய நடையுள்ள குதிரைகளுக்குக் கழுததணி காலணி சேணம இவைகளைச் செவ்விதாக அணிவார். தேரிலே குதிரைகளைப் பூட்டி மாலை சாமரைகளைத தொங்கவிடுவார். உயர்ந்த பொற்பாத்திரங்களில் நவரதந சுபதீபங்களைவைப்பார்.—எ-று. கல்லணை,இடைக்குறையாயிற்று. பூட்டுவார், முற்றெச்சம்-(௩௪)

பழையன கலனை வெறுப்பராற் புதியன பணிகள் பரிப்பரா
குழைபனி நீரளை குங்குமங் குவிமுலை புதைபட மெழுகுவார்
மெழுகிய வீரம் புலாத்துவார் விரைபடு கலவைக ளப்புவா
ரழகிய கணணடி நோக்குவார் மைந்தரை யாகுல மாக்குவார்.

இ-ள். (பெண்கள்) பழைய அணிகளைத்தள்ளிப் புதிய அணிகளைத் தரிப்பார். பனிநீரிற் குழைத்த குங்குமச் சேற்றைக் குவிந்த தனங்கள் மறையப் பூசுவார். பூசிய (அவ்) வீரத்தை (அகிற்புகையால்) உலரச்செய்வார். வாசனைக் கலவைகளை அப்புவார். அழகிய கண்ணடியைப் பார்ப்பார். (தங்கள் தங்கள்) கணவரை வருததுவார்.—எ-று. வெறுப்பர்-முற்றெச்சம். (௩௫)

அஞ்சனம் வேல்விழி தீட்டுவா ராடவர் மார்பிடை நாட்டுவார்
பஞ்சுகள் பாத மிருத்துவார் பரிபுர மீது திருத்துவார்
வஞ்சியா தேற லருந்துவார் மருங்கு றளாட வருந்துவார்
கொஞ்சிய கனிமொழி கழறுவார் குழுவொடு குரவைகள் குழறுவார்.

இ-ள். வஞ்சிக்கொடிபோலும் பெண்கள் வேற்படைபோலுங் கண்களில் மையெழுதி நாயகர்மார்பிலே நாட்டுவார். கால்களிற் செம்பஞ்சிக குழம்பு பூசுவார். அவற்றின் மீது சிலம்புகளை அணிவார் மதுவினை உண்பார். (அம்மயக்கால) இடை தளர (நடந்து) வருந்துவார். (தங்களநாயகர்)கொஞ்சும்படி கனிந்த மொழிகளாற் பேசுவார். (பெண்கள்) கூட்டத்தோடு கைகோத்தாட்டின பாடலைக் குழறிக்கூறுவார்.—எ-று. தீட்டுவா - முற்றெச்சம். தள்ளாட, இடைக்குறையாயிற்று. (௩௬)

கின்னர மிதுன மெனச்செல்வார் கிளைகெழு பாணொடு விறலியர்
கன்னிய ரரசை வணங்குவார் கடிமண மெய்து களிப்பினு
லின்னிசை யாழொடு பாடுவா ரீந்தன துகில்விரித் தேந்துவார்
சென்னியின் மீதுகொண் டாடுவா ரேறலை யுண்டு செருக்குவார்.

இ - ள். பாடல்மகளிர், சுற்றமாகிய பாணரோடு யாழேந்திய மிதுநராசிபோ லிப்பேரய்ப் பிராட்டியாரை வணங்குவார். திருமணநிகழு மகிழ்ச்சியால் இனிய யாழின் இசையோடு (வேறுபடாது) பாடுவார். (சம்மானமாகக்)கொடுக்கும் பொருள்களை ஆடைவிரித்து ஏந்துவார். சிரமேற்கொண்டு ஆடுவார். மதுவையுண்டு களிப்பார்.—எ-று.

மன்னவர் மகளிரு மறையவர் மகளிரும வந்துபொன் மாலையைத
துன்னினர் சோபனம வினவுவார் தோகைதன் மணவணி நோக்குவார்
கன்னித னேவலர் வீசிய காசறை காப்புர வாசமென்
பொன்னறுங் கலவையின் மெய்யெலாம புதைபட வளநெடும் போவரால்.

இ - ள். அரசர்மகளிரும் அந்தணர்மகளிரும் வந்து காஞ்சனமாலையை அடைந்து திருமணப் பெருமையை வினவி மகிழ்வார். பிராட்டியாரது திருமணக்கோலத்தைத் தரிசித்துக் களிப்பார் அப்பிராட்டியாருடைய பணிசெய்வோர் வீசிய மயிர்ச்சாந்தினலும் பச்சைக்கர்ப்பூர வாசங்கலந்த மெல்லிய பொன்னிறமுள்ள நல்ல கலவைகளாலும் உடலம் மறைய அச்சிறப்போடுஞ் செல்வார்.—எ-று. (ருஅ)

அங்கன கஞ்செய் தசும்பின வாடைபொ திந்தன தோடவிழ்
தொங்கல் வளைந்தன மங்கையர் துள்ளிய கவரியி னுள்ளன
கங்கையும் வாணியும் யமுனையுங் காவிரி யுமபல துறைதொறு
மங்கல தூரிய மாரப்பன மதமலை மேலன வருவன.

இ - ள். கங்காதீர்த்த முதலியன பல துறைகளிலிருந்து அழகிய பொற்குடங்களில் நிறைக்கப்பெற்றனவும் ஆடைகளாற் பொதியப்பெற்றனவும இதழ்விரிந்த பூமாலைகளாற் புனையப்பெற்றனவும மடவார் வீசுஞ் சாமரைகளில அடங்கினவும் யானைமேலுள்ளனவும் மங்கலவாச்சியங்கள் முழங்கப் பெற்றனவுமாய் வாராநிற்பன.—எ-று. (ருக)

அங்கவர் மனைதொறு மணவினை யணுகிய துழனிய ரௌமறைப்
புங்கவ ரினிதுண வறுசுவைப் போனக மடுவினை புரிகுவா
ரிங்கடு வனபலி யடிகளுக் கெனயதி களையெதிர் பணிகுவார்
சங்கர னடியரை யெதிர்கொள்வா சபரியை விதிமுறை புரிகுவார்.

இ - ள். அந்நகரத்தவர் தத்தம் மனைகளில் மணச்செய்கைகள் வந்தனபோல ஆரவாரமுடையராய் அந்தணர் செவ்விதாக அருந்தும்படி அறுசுவைக் கறிகளையும் அன்னங்களையும் சமைக்குந்தொழில்செய்வார். சுவாமி (களு) க்குப் பிட்சை இங்கே சமைக்கின்றேமென்று வைதிக சந்நியாசிகளை எதிர்ந்து வணங்குவார். சிவபெருமான் திருத்தொண்டரை எதிர்கொண்டு (திருவமுது கொள்ளும்படி) விதிமுறை பூஜை செய்வார்.—எ-று. (சுo)

இன்னண நகர்செய லணிசெய விண்ணியிவி மணமகன் மணவினைக்
கன்னியு மனையவ ளெனனினிக் கடிநகர் செயுமெழில் வளனையா
மென்னவ ரியநகர் செயலெழி லிணையென வுரைசெய்வ தெவ்விதன்
முன்னிறை மகடமர் மணவணி மணடப வினைசெயு முறைசொல்வாம்.

இ - ள். இவ்வாறு நகரத்தை அலங்காரஞ்செய்ய, இத்திருமணத்திற்குரிய பிரானே ஒப்பில்லாதவர் பிராட்டியாரும் அத்தனமையரோயெனில் விளக்கமாகிய

இந்நகரத்திற் செய்யும் அழகிய அலங்காரத்தை அறிய எப்படிப்பட்ட நகரத்தின் அலங்காரமே(யானாலும்)ஒப்பாமென்று யாம் சொல்வதற்கு யாதிருக்கின்றது. (ஒன்றுமில்லை) இதன்மேல் அப்பிராட்டியாருடைய சுற்றத்தார் திருமணமண்டபத்தை அலங்கரிக்கு முறைமையைச் சொல்லுவாம்.—எ-று. (௬௧)

வேறு.

கருவி வான்முகி லூர்தியைப் பொருதநாட் கவர்ந்த மருமாட்டி
செருவில வாங்கிய விமானமா லைகளெனச் செய்வது வரையெலலா
மருவி யந்நகர் வைகிய தம்பிறை மடமக டனைக்காணபான்
றுருவி நின்றென நட்டன ரெட்டிவான் றுருவிலை நெடுந்தேர்கள்.

இ-ள். சந்திரன் மரபில் அவதரித்த பிராட்டியார், இந்திரனைப் போரில்வென்ற காலத்தில் அபகரித்த விமானங்களை வரிசையாக வைத்ததுபோலவும், மலைகளெல்லாம் வந்து அம்மதுரைப்பதியில் அமர்ந்த நங்கள் அரசனுடைய புத்திரியாரைத் தரிசிக்கும்பொருட்டு ஆராய்ந்து நின்றாற்போலவும் ஆகாசத்தை யளாவுகின்ற நெடிய நிலைத் தேர்களை நாட்டினார்கள்.—எ-று. (௬௨)

பளிக்கி னேழுயர் களிறுசெய் தமைத்தபொற் படியது பசுஞ்சோதி
தெளிக்கு நீலத்தி னாளிக ணிரைமணித் தெற்றிய துற்றோராய்
வெளிக்கு ளாடிய வோவியப் பாவைபோன் மிளிர்பளிங் காற்சோதி
தளிர்க்கும் பித்திய நிடையிடை மரகதச் சாளரத் ததுமாதோ.

இ-ள். எழுமுழமுயர்ந்த யானைகளை (இருபுறத்தும்) பளிங்கினாற் செய்தமைத்த பொற்படியினதும், பசியகிரணம் வீசும் நீலரத்நத்தினால் யாளிகளை வரிசைப்படச் செய்தமைத்த மணிகள் பதித்த திண்ணையினதும், அருகில் வருவோரது சாயல்கள் வெளியில் ஆடிய சித்திரப்பாவைபோல விளங்குகின்ற பளிங்கினாற் செய்யப்பட்டுக் கிரணம் வீசுஞ் சுவரினதும், இடையிடையே மரகதத்தினாற்செய்த சாளரத்தினதும்.—எ-று. ()

பல்லு ருச்செய்த பவளக்கா லாயிரம் படைத்ததிந் திரநீலக்
கல்லு ருத்தலைப் போதிய தாடகக் கவின்கொளுத் தரமேல
தல்லு ருக்கிய செம்மணித் துலாத்ததா லமுதுடற் பசுந்திங்கள்
வில்லு ருக்குகன் மாடம தாகிய வேள்விமண் டபஞ்செய்தார்.

இ-ள். பலவடிவங்கள் செய்த பவளத்தாலாகிய ஆயிரங்காலினதும், அவற்றின்மேல் இந்திரநீல ரத்தினத்தினால் வடிவமையச்செய்த போதிகையினதும், மேலே பொன்னாற்செய்த அழகிய உத்தரத்தினதும், இருட்டையோட்டுஞ் செம்மணியாலாகிய துலாத்தினதும், சந்திரனது கிரணங்களை யுருக்குதற் கேதுவாகிய கல்லாற்செய்த மேனிலையினதுமாகிய திருமணமண்டபஞ் செய்தமைத்தார்.—எ-று. ஆல் - அசை. (௬௪)

முத்திற் பாளைசெய் தவிர்மர கதத்தினான் மொய்த்தபா சிலைதுப்பின்
கொத்திற் றீம்பழம் வெண்பொனாற் கோழரை குயின்றபூ கமுந்துப்பின்
றொத்திற் றூங்குபூச் செம்பொனாற் பழுக்குலை தூக்கிப்பொன் னாற்றண்டு
வைத்துப் பாசொளி மரகத நெட்டிலை வாழைபு னிரைவித்தார்.

இ-ள் முத்தினாற் பாளையும் மரகதத்தினாற் பசிய இலையும் பவளக்கொத்தினாற் பழமும் வெள்ளியினால் அரையுஞ் செய்தமைத்த கமுகுகளையும், பவளக்கொத்தினாற்

நெருங்கும் பூவொடு செம்பொன்னாற் பழுத்தலுடையகுலை தூக்கிப் பொன்னாற் றண்டு செய்து, மரகதத்தினால் நீண்ட இலையமைத்த வாழைகளையும (அத்திருமண மண்டபத் தில்) வரிசைப்படக் கட்டினார்.—எ-று. (௬௫)

பித்தி மாதவி சமபகம் பாதிரி பிறவுமண் டபஞ்சூழப்
பத்தி யாவளர்த் தளிகள்வாய திறந்துபன் பாடலின் மதுக்காலந்
தத்தி யாய்மணங் கவர்ந்துசா ளரந்தொறுந் தவழ்ந்தொழு கின்றதென்ற
றித்தி யாகிற்கு மதுத்துளி தெளித்திடச் செய்தன ருய்யானம.

இ-ள். சிறுசண்பகம் குருக்கத்தி முதலியவும் அம்மண்டபத்தைச் சூழ வரிசைப் படவளர்ந்து வண்டுகள் இசைபாடவும் (மலர்கள்) தேனை ஒழுக்கவும் (அவற்றிற்)சென்று நறுமணத்தைக் கவர்ந்து சாளரந்தோறும் தவழ்ந்து செல்லும் மந்தமாருதம தேன்றுளிக ளைச் சிந்தவும் உத்தியானவனஞ் செய்தமைத்தார்.—எ-று. பித்திகை - கடைக்குறை யும், உத்தியானம - இடைக்குறையுமாயின. (௬௬)

வேள்விச் சாலையும் வேதியுங் குண்டமு மேகலை யொடுதொன்னூற்
கேள்விச் சாற்றிற கண்டுகண் ணாடிவிடை கிளர்சுடர் பெண்ணுருச
நீள்விற் சாமரம வலம்புரி சுவத்திக நிறைகுட மெனவெட்டு
வாள்விட் டோங்குமங கலந்தொழில் செய்பொறி வகையினு லிருமித்தார்.

இ-ள். யாகசாலை வேதிகை ஓமகுண்டம இவைகளை வரம்புகளோடு பழைய சிவாகமநூல் விதியால வகுத்து, கண்ணாடி, இடபம், தீபம், இடையிற பெண்குழந்தை யுடைய பெணவடிவமாகிய ஸ்ரீவற்சம மிக்க ஒளியுள்ள சாமரம, வலம்புரிச்சங்கம், மண்டபவடிவமாகிய சுவஸ்திகம் (ஜல) பூரணகும்பம என்னும ஒளிவீசியுயர்ந்த அஷ்ட மங்கலங்களைத் தொழிலசெய்கின்ற யந்திரவகையினால அமைத்தார்.—எ-று. சுவஸ்தி கம், மேழிவடிவமுமாம். (௬௭)

மணங்கொள் சாந்தொடு குங்குமப் போதளாய் மான்மதம் பனிநீர்தோய்த்
திணங்கு சேறுசெய் திருநிலந் தடவிவா னிரவிமண் டலநாணப்
பணங்கொ ளுரகமா மணிவிளக் கிருகையும பாவைக ளெடுத்தேந்தக்
கணங்கொ டாரகை யெனநவ மணிகுயில கம்பலம விதானித்தார்.

இ-ள். சந்தனம் குங்குமப்பூ கஸ்தூரி பனிநீா இவைகளைக் குழைத்துச் சேறு செய்து பூமியில் மெழுகிச் சூரியமண்டலம் நாணும்படி நாகரத்தின தீபங்களை இருபுற த்தும பிரதிமைகளேந்தி நிற்ப நக்ஷத்திரக் கூட்டம்போல நவமணிகள் கோத்த மேற் கட்டிகளை மேலே கட்டினார்.—எ-று. (௬௮)

செம்பொற் கோயின்முன சேண்டொடு காவணந் திசையெலாம் விழுங் கச்செய், தம்பொற் பாலிகைப் பாண்டில்வாய் முளைதெளித் தமபுயத் தவ னுதி, யும்பர்க் கேற்றபொற் கம்பல மேலவிரித் துள்ளுறத் தவிசிட்டுத, தும் பைத் தாழ்சடை யான்றமாக் காதனஞ் சூழவிட் டதனுப்பண்.

இ-ள். அத்திருமண மண்டபத்தின் முன்னே ஆகாசத்தையும் திக்குகளையும் அளாவி மன்றக்கின்ற பந்தர் இடுவித்துப் பொன்னாலாய வட்டப்பாலிகையில முளைதெ ளித்துப் பொறகமபலம் மேலேவிரித்து அதனுள்ளே பிரமாமுதலிய தேவர்களுக்கு ஆச னங்களும் அவற்றுளளே சூழச் சிவபிரான் திருத்தொண்டர்களுக்கு ஆசனங்களும் இட்டு அவற்றின் மத்தியிலே.—எ-று. (௬௯)

கற்பகந்தரு வயிரவா ளரிப்பிடர் கதுவப்பொற் குறடேற்றி
யெற்படுந்துகி ராற்குடஞ் சதுரமா வியற்றிய வெருத்தத்தூண்
விற்படும்பளிக் குத்தரந் துப்பினால் விடங்கமே னிலமூன்றுப்
பொற்ப நூல்வழி விமானமபன் மணிகளாற் பொலியச்செய் துள்ளாக.

இ-ள். கற்பதாருதந்த வயிரத்தாலியன்ற ஒளியுடைய சிங்கங்களின் பிடரிற் பொருந்தப் பொற்குறடெழுப்பி ஒளிவீசும் பவளத்தாலாகிய குடத்தோடு சதுரமாச் செய்த கழுத்துடைய தூணகளை (நிறுத்தி) ஒளிவிடும் பளிஙகினால் உத்தரஙகளையும் பவளத்தினாற் கொடுங்கைகளையும் (பரப்பி இஙஙனம்) மேல நிலமூனறுக அழகுசெய்யச் சிறபநூலவழியே பல இரத்தினஙகளால் விமானம விளங்கச்செய்து அதனுளளாக.—எ-று

அங்க மாறுமே காலகளாய் முதலெழுத் தமபொற்பீ டிகையாகித்
துங்க நான்மறை நூலகளே நிதிலந் தொடுத்தசை தாமமாகி
யெங்க ளையக னெம்பெரு மாட்டியோ டிருப்பதற் குருக்கொண்டு
தங்கி னாலென நவமணி குயின்றபொற் றவிசது சமைத்திட்டார்.

இ-ள். ஆறங்கங்கள் கால்களும், பிரணவம் பீடமும், நான்கு வேதங்கள் வடமுமாகி எங்கள் சிவபிரான் தடாதகைப் பிராட்டியாருடன அமர்ந்தருளுதற்கு வடிவங்கொண்டு தங்கியதுபோல நவமணிகள் அழுத்திய சுவாசனம அமைத்தார்.—எ-று.()

புரந்த ரன்றரு கறபகம பொலந்துகில் பூண்முத லியாகல்கச்
சுரந்த ரும்பெற லமுதமை வகையறு சுவையுண முதலாகப்
பரந்த தெய்வவான் பயப்பச்சிந் தாமணி பறபல வுஞ்சிந்தித்
திரந்து வேண்டுவ தரத்தர வீட்டின ரிந்திர னகர்நாண.

இ-ள். கற்பதாரு பீதாமபரமுதலியனவும் காமதேநு பால் (முதலிய) பஞ்சகவ்வியம் அறுசுவையுணவு முதலியனவும் சிந்தாமணி சிந்தித்து யாசித்து வேண்டுவனவும் கொடுக்கக கொடுக்க இந்திரனகர் நாணும்படி (பெற்றுத) திரட்டினர்.—எ-று. (எ௨)

தென்னர் சேகரன் றிருமக டிருமணத் திருமுகம வரவேற்று
மன்னா வந்தெதிர் தொழுதுகைக் கொணடுதம் மணிமுடி மிசையேற்றி
யனன வாசகங் கேட்டனர் கொணர்ந்தவாக் கருங்கலந் துகினல்கி
முன்ன ரீர்த்தெழு களிபபுற மனத்தினு முந்தினர் வழிக்கொள்வார்.

இ-ள். பிராட்டியாரது திருமணஞ்செய்திவரைந்த திருமுகம்வர (அதனை) அரசர்கள் வந்து எதிரேற்று வணஙகிக கைப்பற்றித் தம்முடிமேற் சூடி அதில் வரைந்த வாசகங்களைக கேட்டுத (திருமுகங்) கொண்டு வந்தவர்களுக்குச் சம்மானஞ்செய்து (தம்மை) முன்னே இழுத்துச் செல்லு மகிழ்ச்சிமேற்பட மனவேகத்தினு முற்பட்டு வழிச் செல்வாராயினர்.—எ-று. கேட்டனர் முந்தினர் - முற்றெச்சம். (எ௩)

கொங்கர் சிங்களர் பல்லவர் வில்லவர் கோசலர் பாஞ்சாலர்
வங்கர் சோனகர் சீனர்கள் சாளுவர் மாளவா காம்போச
ரஙகர் மாகதர் ராரியா நேரிய ரவந்தியர் வைதர்பபா
கங்கர் கொங்கணா விராடாகன் மராடாகள் கருநடர் குருநாடா

கலிங்கர் சாவகர் கூவிள ரொட்டியர் கடாரர்கள் காந்தாரர்
குலிங்கர் கேகயர் விதேகர்கள் பௌரவர் கொல்லர்கள் கல்யாணர்
தெலுங்கர் கூர்ச்சரர் மச்சர்கண் மிலேச்சர்கள் செஞ்சையர் முதலேனைப்
புலங்கொண் மன்னருந் துறைதொறு மிடைந்துபார் புதைபட வருகின்றார்.

இ-ள். கொங்குதேச முதலியவற்றிலுள்ள அரசர்கள் தம்மிடந்தோறு நின்று புறப்பட்டு நெருங்கிப் பூமி மறையும்படி வரத்தொடங்கினார்கள்.—எ-று. (எசு) (எரு)

இத்த கைப்பல தேயமன் னவர்களு மெண்ணிடம் பெறாதீண்டிப
வைத்த வாழிபோ னிலமகண் முதுகிறப் பரந்ததா னையராகித்
தத்த நாட்டுள பலவகை வளனொடு தழீஇப்பல நெறிதோறு
மொய்த்து வந்தனர் செழியர்கோன் றிருமகண் முரசதிர் மணமூதூர்.

இ-ள். இத தன்மையுடைய பலதேசத் தரசர்களும் பலவழிதொறுஞ் சேர்ந்து எள்ளிட இடமின்றி நெருங்கிப் பரந்த கடல்போலப் பூதேவி முதுகுமுறிய விரிந்த சேனையுடையவர்களாய்த் தங்கள் தங்கள் தேசத்துள்ள செல்வங்களோடுங் கூடிப் பிராட்டியாரது திருமணமுரசுமுழங்கும் மதுரைப் பதியில் வந்தனர்.—எ-று. (எசு)

வந்த காவல ருழையர்சென் றுணர்த்தினா வருகென வருகுய்ப்பச்
சந்த வாளரிப் பிடரணை மீதறந் தழைத்தருள் பழுத்தோங்கும்
கந்த நாணமலர்க கொமபினைக் கண்டுகண் களிபபுற முடித்தாமஞ்
சிநத வீழ்ந்தருள் சுரந்திடத் தொழுதுபோய்த் திருந்துதம மிடம்புக்கார்.

இ-ள். வந்த அரசர்களது (வரவை) வாயில் காப்போர் சென்று (பிராட்டியாருக்கு) விண்ணப்பஞ் செய்தனர். (பிராட்டியார், அவ்வரசா) வரக்கடவரென ஆஞ்ஞாபிக்க (அவரைக் காவலாளர்) அருகேசெலுத்த (அவ்வரசர்) அழகிய ஒள்ளிய சிங்கங்களின் பிடரிலுள்ள ஆசனத்தில் அறந்தழைத்து அருள்கனிந்து மிக்க மணமுடைய புதியமலர்க கொம்புபோல் (அமர்ந்த) பிராட்டியாரைக கண்களிக்கத் தரிசித்து முடிமாலை (கீழே)விழ வணங்கி(ப் பிராட்டியார்) திருவருள்புரிய (மீட்டுந்)தொழுது சென்று தங்களுக்கு (ஏறபடுத்திய) இடங்களை அடைந்தனர்.—எ-று. பிராட்டியார் உயிர்கள்பொருட்டு அறம்வளர்த்து அருள்மிகுந்து முகமலர்ந் தமர்கின்றா ரென்பது கருத்து. (எஎ)

வரைவ ளங்களும் புறவினில் வளங்களு மருதத்தண் பணைவேலித்
தரைவ ளங்களுஞ் சலதிவாய் நடைக்கலந் தருவளங் களுமீண்டி
யுரைவ ரம்பற மங்கலம் பொலிநததிவ் வூரினி நால்வேதக்
கரைக டந்தவன் றிருமணஞ் செயவரு காட்சியைப் பகர்கின்றேன்.

இ-ள். மலை காடு மருதம் கடல் இவற்றின் பொருள்கள் முற்றும் நிரம்பி இம்மதுரைமா நகரம் சொல்லளவைக் கெட்டாத மங்கலகரமாக விளங்கியது. இனி வேதாதீதராகிய சுந்தரேசர் திருமணம் புரியவரும் அற்புதத்தை (யான்) கூறுகின்றேன்.—எ-று. (எஅ)

வேக நாயகி மீண்டபின் ஞாட்பிகந் திரசத கிரியெய்தி
நாக நாயக மணியணி சுந்தர நாயக னுயிர்க்கெல்லாம்
போக நாயக னாகியபோ கமபுரி புணர்ப்பறிந் தருணந்தி
மாக நாயகன் மாலய னுருத்திரா வரவின்மேன் மனமவைத்தான்.

இ-ள். பிராட்டியார் (மதுரைப்பதிக்குத்) திரும்பியபின் சுந்தரேசர் போர்க்களத்தினீங்கித திருக்கைலாசத்தை யடைந்து போகமூர்த்தியாய், உயிர்களுக்குப் போகத்தைத் தருதற்கேதுவாகிய திருக்குறிப்பொடு (வீற்றிருத்தலை) அருளையுடைய திருநந்திதேவர் உணர்ந்து. இந்திரன் முதலாகிய தேவர்களது வரவின்மீது திருவுளங் கொண்டருளி.—எ-று. வைத்தான் - முற்றெச்சம். (எக)

சங்கு கன்னனை யாதிய கணதியர் தமை விடுத் தனனன்னா
செங்க ணேற்றவர் மாலயன் முதற்பெருந் தேவர்வான் பதமெய்தி
யெங்க ளையகன் றிருமணச் சோபன மியம்பின ரதுகேட்டுப்
பொங்கு கின்றபே ரன்புபின் றள்ளுறப் பொள்ளென வருகின்றார்.

இ-ள். சங்குகன்னர்முதலாகிய சிவகணத்தலைவரை அனுப்பினார். அவர் உருத்திரர் விஷ்ணு பிரமா முதலிய தேவர்களது பதவிகளை அடைந்து எங்கள் சிவபிரானது திருமணச் சுபத்தைக் கூறினார். அதனைக்கேட்டு (அத்தேவர்கள்) அன்பு பின்பு நின்று தள்ள விரைவாகவரத் தொடங்கினாகள்.—எ-று ஐ-சாரியை. (அ௦)

அஞ்சு கோடியோ சனைபுகைந் திருமடங் கழன்றவா தமைப்போலி
ரஞ்சு தீயுருத் திரர்புடை யுடுத்தவ ரழற்கணாற் பூதங்க
ளஞ்சு நூறுருத் திரரண்டத் துச்சிய ரரியயன் முதற்றேவ
ரஞ்சு மாணையு மாற்றலும் படைத்தவர் கொடுகுறட படைவீரர்.

இ-ள். ஐந்துகோடி யோசனைதூரம புகைந்து பத்துக்கோடி யோசனைதூரந் தீச்சிகைவிட்டெரியுங் காலாக்கினி ருத்திரரும் அவரைப் போன்ற(வர்களா யவரைச்சூழ்ந்துள்ள) பத்துருத்திரர்களும் (அப்பதின்மருள் ஒவ்வொருவரையும்) புடைசூழ்ந்து சேவித்து நிற்கும் ஒவ்வொருகோடி யுருத்திராகளும் தீபொறி சிந்துங் கண்களாற் பூதங்களஞ்சத்தக்க அண்டத்தி னுச்சியிலிருப்பவராகிய நூறுருத்திரர்களும் அரிபிரமாதி தேவரும் அஞசத்தக்க வாணையும் வலிமையுமுடைய கொல்லும் பூதப்படை வீரர்களும்.—எ-று. (அக)

புத்தி யட்டகர் நாலிரு கோடிமேற் புகபெயத நரகங்கள்
பத்தி ரட்டியுங் காப்பவா பாரிடப படையுடைக் கூமாண்டர்
சத்தி யச்சிவ பரஞ்சுட ருதவிய சதவுருத் திரரன்ற
ருய்த்த ளித்தவி ாைம்பது கோடிய ருருத்திரா கணநாதர்.

இ-ள். புத்திதத்துவத்திற் பொருந்திய பைசாசபுவனமுதலிய எட்டுப்புவனங்களி லுள்ளோரும் இருபதெட்டுக்கோடி நரகஙகளையும் காப்பவர்களும் பூதப்படையுடைய கூர்மாணடரும சிவபிரானருளிய நூறுருத்திராகளும் அவ்வுருதிரர் படைத்த நூறுகோடி யுருத்திரர்களும் கணநாதர்களும.—எ-று. (அஉ)

பட்ட காரிவா யரவணி பவர்பசு பதியுருத் திராதி
யட்ட மூர்த்திகண் மேருவி னவிர்சுட ராடகர் தோடேந்து
மட்ட ருமலர் மகன்செருக் கடங்கிட மயங்கிய விதிதேற்ற
விட்டை யாலவ னெற்றியிற றோன்றிய நீலலோ கிதநாதா.

இ-ள். பவர் முதலிய அட்டமூர்த்திகளும் பொன்மலைபோல விளங்கு மொளியுடைய ஆடகேசுரரும் பிரமன செருக்கடங்கவும் அவன் மயங்கிய படைப்புத்தொழிலைத் தெளிவிக்கவும திருவாக்கால அவனது நெற்றியிற றோன்றிய நீலருத்திரரும்.—எ-று. காரி-விடம். (௮௩)

பால மேற்றசெங் தழலவிழி யுருத்திரர் பதினொரு பெயர்வாகைச
சூல மேற்றகங் காளக பாலியர் துரகத நெடுங்காரி
நீல மேற்றபைங் கஞ்சுகப் போர்வையி னெடியவர் திருவாணைக
கோல மேற்றவ ரெண்மரு ளிப்புறங் கொண்டகேத் திரபாலர்.

இ-ள். ஏகாதசருத்திரரும வெற்றிச் சூலமும் முழுவெலும்புங் கபாலமுந் தரித்த சிவகணத் தலைவர்களும குதிரைவாகனமுள்ள சாஸ்தாவும் கரிய பசிய சட்டையிட்ட சிவகணததலைவர்களும திருவாணிகளாய்ச் சுவானமேற்கொண்ட க்ஷேத்திரபாலரெண்மர்களும.—எ-று. (௮௪)

செய்ய தாமரைக் கண்ணுடைக் கரியவன செம்மலர் மணிபீடத்
தையன் வாசவ னாதியெண் டிசைபபுலத் தமரரெண் வசுதேவர
மையில் கேள்விசா லேழெழு மருத்துகண் மருத்துவ ரிருவோரவர்
வெய்ய வாள்வழங் காறிரண் டருக்கரோர் வெண்சுடர் மதிச்செல்வன்.

இ-ள். விஷ்ணுவும பிரமாவும் இந்திரன் முதலிய திக்குப்பாலகரும் அஷ்டவசுக்களும் நாற்பத்தொன்பது மருத்துக்களும் அசுவினிதேவரிருவரும் துவாதசாதித்தரும் சந்திரனும்.—எ-று. வாள-ஒளி. (௮௫)

கையுங் கால்களுங் கண்பெற் றுகந்திபெற்ற கடும்புலி முனிச்செல்வன்
பைய ராமுடிப் பதஞ்சலி பாற்கடல பருகிமா தவன்சென்னி
செய்ய தாள்வைத்த சிறுமுனி குறுமுனி சிவமுணர் சனகாதி
மெய்யு ணர்ச்சியோர் வாமதே வன்சுகன வியாதனா ரதன்மன்னோ.

இ-ள். வியாக்கிரபாத முனிவரும் பதஞ்சலி முனிவரும் பாற்கடலுண்டு கிருஷ்ணரது முடியில் அடிமலர் சூட்டிய வுபமந்யு முனிவரும அகஸ்திய மகாமுனிவரும் சநகாதி நான்குமுனிவரும் வாமதேவ முனிவரும் சுகமுனிவரும் வியாசமுனிவரும் நாரதமுனிவரும் —எ-று. (௮௬)

எழுவ ரன்னையர் சித்தர்வித் தாதர ரியக்கர்கின் னரர்வேத
முழுவ ரம்புணர் முனிவர்யோ கியர்மணி முடித்தலைப் பலநாகர்
வழுவில வான்றவ வலியுடை நிருதர்வாள வலியுடை யசுரேசர்
குழுவொ டும்பயில் பூதவே தாளர்வெங் கூளிக ளரமாதர்.

இ-ள். சப்தமாதரும் சித்தரும் வித்தியாதரரும் இயக்கரும் கின்னரரும முனிவரும் யோகிகளும் உரகரும் இராக்கதரும் அசுரேசுரரும் பூதவேதாளரும் கூளிகளும தெய்வமகளிரும.—எ-று. (௮௭)

ஆண்டி னோடய னம்பரு வந்திங்க ளாறிரண் டிருபக்க
மீண்டு மைம்பொழு தியோகங்கள் கரணங்க ளிராப்பக லிவற்றோடும்
பூண்ட நாழிகை கணமுதற் காலங்கள் பொருகட னதிதிக்கு
நீண்ட மாலவரை திக்கய மேகமின் னிமிர்ந்தவைம் பெரும்பூதம்.

இ-ள். (தைவத்வடிவங்கொண்டு) அறுபது வருஷங்களும் இரண்டயநங்களும், ஆறிருதுக்களும் பன்னிரண்டு மாதங்களும் இரண்டு பக்ஷங்களும் ஐம்பொழுதுகளும் யோகங்களும் கரணங்களும் இராக்காலமும் பகற்காலமும் நாழிகைகளும் கண முதலிய காலங்களும் சப்தசாகரங்களும் சப்தநதிகளும் அஷ்டதிக்குகளும் அஷ்டகுல பருவதங்களும் அஷ்டகஜங்களும் சப்தமேகங்களும் மின்னல்களும் பஞ்சமகா பூதங்களும்— எ-று. ஈண்டல - நெருங்கல். (அஅ)

மந்தி ரம்புவ னங்கடத் துவங்கலை வருணங்கள் பதம்வேதந்
தந்தி ரம்பல சமயநூல் புறந்தழீஇச் சார்ந்தநூ றருமாதி
முந்தி ரங்கிய சதுர்விதஞ் சரியையே முதலிய சதுட்பாத
மிந்தி ரங்குநீர் முடியவ ரடியவ ரிச்சியா வெண்சித்தி.

இ-ள். மந்திரங்கள் பதங்கள் வர்ணங்கள் ஆகிய சப்தாத்துவாக்களும் புவனங்கள் தத்துவங்கள் கலைகள் ஆகிய அர்த்தாததுவாக்களும் வேதங்களும் சிவாகமங்களும் அகம் அகப்புறமாகிய சமயநூல்களும் புறம் புறப்புறமாகிய சமயநூல்களும் முதன்மையான அறமுதலாகக் கூறிய நான்குறுதிப் பொருள்களும் சரியைமுதலிய நான்கு பாதங்களும் அஷ்டமகா சித்திகளும்.—எ-று. இந்து இரங்கும் நீர் - சந்திரனும் ஒலிக்குங் கங்கையு மணிந்த. (அகூ)

ஆயி ரங்கட லனையவாய்ப் பரந்தெழு மாயிர மணிகத்து
ளாயி ரங்கதி ரனையரா யுருத்திர ரந்தாத் தவரண்ட
மாயி ரந்தகா பட்டெனத் துந்துபி யாயிரங் கலந்தார்ப்ப
வாயி ரஞ்சத கோடியோ சனைவழி யனைக்கணத் திடைச்செல்வார்.

இ-ள். பலகடல்கள் போன்றனவாய்ப் பரந்தெழுகின்ற சேனைகளுள்ளே பல ஆதித்தர்போல உருத்திரருந் தேவரும், பலவண்டங்கள் உடைபட்டனவென்று சொல்லும்படி பலவாச்சியங்கள் கலந்தொலிக்க இலட்சங்கோடி யோசனைவழியைக் கடந்து செல்லுகின்றவராயினர்.—எ-று. (கூ0)

சித்தந் தேர்முனி வேந்தரும் தேவருஞ் சிவனுருத் தரித்தோரும்
தத்தந் தேர்முத லூர்தியர் வாரதிகழ் சந்தன மணிக்கொங்கைக்
கொத்தந் தேமலர்க் குழன்மனை யாரொடுங் குளிர்விசும் பாறுச்சென்
றத்தந் தேரிடை யாள்பங்க னணிவரைக் கணியராய் வருகின்றார்.

இ-ள். உருத்திரர் முதலியோர் தங்கள் தங்கள் வாகனங்களையுடையராய்ப் பத்தினிகளோடும் ஆகாயவழியாகப் போய்ச் சிவபிரான் திருக்கயிலாய மலைக்குச் சமீபராய் வருகின்றவரானார்.—எ-று. வார் - கச்சு. அத்தந்து ஏரிடையாள் - அநத நூலபோலும் அழகிய இடையுடைய வுமாதேவியார். (கூக)

இழிந்த வூர்தியர் பணிந்தெழும் யாக்கைய ரிறைபுகழ் திருநாம
மொழிந்த நாவினர் பொடிப்பெழு மெய்யினா முகிழ்த்தகை முடியேறக்
கழிந்த வன்பினர் கண்முதற் புலங்கட்குங் கருணைவான் சுவையூறப்
பொழிந்த வானந்தத் தேனுறை திருமலைப் புறத்துவண் டெனமொய்த்தார்.

இ-ள். (இங்ஙனம் வந்தவர்கள்) வாகனங்களினின்றும் இறங்கினவர்களும் தொழுதெழும் உடம்பினர்களும் சிவபிரான் திருப்புகழ்களையுந் திருநாமங்களையும் ஓது நாவி

ணர்களும் புளகமருமபும் யாக்கையினர்களுமாய்க் குவிந்ததகை முடிமேலேறும்படி, பேர ன்பினாது (அறிவன்றி) ஐம்பொறிகட்கும் உயர்ந்த வருட்சுவை யூறும்வண்ணம் பொழி ந்த ஆநந்தத் தேனாகிய அப்பரசிவன் அமரும் திருக்கைலாசமலையருகே வண்டுகள் போல நெருங்கினார்கள்.—எ-று. (கஉ)

விரவு வானவர் நெருக்கற வொதுக்குவான் வேத்திரப் படையோச்சி
யரவு வார்சடை நந்தியெம பிரானவ ரணிமணி முடிதாக்கப்
பரவு தூளியிற் புதைபடு கயிலையம் பருப்பதம் பகலகாலு
மிரவி மண்டலத் தொடுங்குறா வொடுங்கிய விந்துமண் டலமானும்.

இ-ள். தேவர்(முதலியோர) நெருக்கற ஒதுக்கும்படி திருநந்திதேவர் வேத்தி ரப் படையைவீசி அவர்களது முடியிலே தாக்குதலால் (உதிர்ந்து) பரவிய இரத்நத்துக ளில் மறைந்த திருக்கைலாசமலை, அமாவாசியை தினத்திலே ஆதித்த மண்டலத்தில் ஒடுங்கிய சந்திரமண்டலம்போலும்.—எ-று. பகலகாலும் - ஒளிவீசும். (கங)

அந்த வானவர் புறநிற்ப நந்தியெம வள்ளலுங் குள்ளெய்தி
யெந்தை தாள்பணிந் தையவிண் ணவரொலா மீண்டினா ரெனவீண்டுத்
தந்தி டென்னவந் தழைத்துவேத் திரத்தினாற் றராதரந் தெரிந்துய்ப்ப
முந்தி முந்திவந் திறைஞ்சினார் சேவடி முண்டக முடிசூட.

இ-ள். தரிசிக்க வந்தவர்கள புறத்தேநிற்க, திருநந்திதேவர் அகத்தே புகுந்து சிவபிரான் திருவடிகளை வணங்கி ஐயரோ தேவர்முதலிய யாவரும் வந்து நெருங்கினா ரென் விண்ணப்பஞ்செய்யச் சிவபிரான்(அதற்கு அவர்களை) இங்கே அழைப்பாயென்று ஆஞ்ஞாபிக்க, (நந்திபிரான) வந்து (அவர்களை) அழைத்துப் பிரப்பங்கோலால் உயர் வுதாழ்வுகள் உணர்ந்து (உள்ளே) செலுத்த (அவர்கள்) முற்பட்டு முற்பட்டு வந்து சிவ பிரான் திருவடிக்கமலங்களைத் தம்முடிசூட வணங்கினார்கள்.—எ-று. (கச)

தீர்த்தன் முன்பணிந் தேத்துகின ரார்களிற் சிலர்க்குத்தன் றிருவாயின்
வார்த்தை நல்கியுஞ் சிலர்க்கருண் முகிழ்நகை வழங்கியுஞ் சிலர்க்குக்கண்
பார்த்து நீண்முடி துளக்கியுஞ் சிலர்க்கருட் பரிசிறந் தெழுந்தண்டங்
காத்த கண்டனோ மண்டபத் திடைபுக்குக் கடிமணக் கவின்கொள்வான்.

இ-ள். பரிசுத்தராகிய நீலகண்ட பரமசிவன் தனு சந்நிதியில் வழிபடுவோரிற் சிலர்க்குவார்த்தையும் சிலர்க்குக் கருணையரும்பும் புன்னகையும் சிலர்க்குத் திருநோக்கும் சிலர்க்குத் திருமுடி யசைத்தலும் சிலர்க்கு அநுக்கிரகமாகிய சம்மானமும் அருளி(ப் பி ன்பு) அங்குநின்றும் எழுந்து ஓர் மண்டபத்திற் புகுந்தருளித் திருமணக்கோலங் கொ ள்ளுங் கருத்துடையராயினார். —எ-று. (கரு)

ஆண்ட நாயகன் றிருவுளக் குறிப்புணர்ந் தளகைநா யகனுள்ளம
பூண்ட காதன்மேற் கொண்டெழு மன்புநதன புனிதமெய்த் தவப்பேறு
மீண்ட வாங்கணைந் தெண்ணிலா மறைகளு மிருவரு முனிவோருந
தீண்ட ருந்திரு மேனியைத் தன்கையாற் றீண்டிமங் கலஞ்செய்வான்.

இ-ள். அச்சிவபிரான திருவுளப் பாஙகினையறிந்து குபேரனைவன் அன்புாதவப்பயனுங் கூடுதலால் அம்மண்டபத்திற் சென்று வேதாதிகளும் பரிசித்தற்கரிய திருமேனியைப்பத தனது கரங்களாற் பரிசித்துத திருமணக்கோலஞ் செயயத தொடங்கினன்.—எ-று. (கசு)

பூந்து கிற்படாங் கொய்சகத் தானைபின் போக்குகோ வணஞ்சாத்தி
யேநதி ரட்டைஞாண படடிகை யிறுக்கிவண டினைக்குநாண் மலாகஞ்சி
வேய்ந்து கற்பகப் புதுமலாச சிகழிகை மிலேச்சுநீ றணிமெயயிற்
சாந்த மான்மதந் தண்பனி நீரளாய்த் தடக்கையான் மடடித்தான.

இ-ள். வஸ்திரத்தை (முன்புறததிலே) கொயசகமாகவும் பின்புறத்திலே போக்குகின்ற கோவணமாகவுஞ் சாத்தி (அதனமேல்) இரட்டையாகிய திருவரை நாணொடு பட்டிகையும் இறுக்கி மலர்களை அணியததகக சிகையை(க கொணடையாக)ப் புனைந்து கற்பகப்புதுமலர் மாலையை (மேலே)சூடி விபூதியணிந்த திருமேனியிற சந்தன முதலிய வற்றைக் கலந்து பூசினன —எ-று. (கஎ)

இரண்டு செஞ்சுடர் நுழைநதிருந தாலென வினைமணிக் குழைக்காதிற்
சுருண்ட தோடுபொற குண்டலந் திணியிரு டூரந்துதோட் புறநதுள்ள
மருண்ட தேவாைப பரமென மதிபபவா மையலவல விருண்மான
விருண்ட கண்டமேன் முழுமதி கோததென வினைத்தகண டிகைசாத்தி.

இ-ள். சங்கக் குண்டலமுடைய இரணடு திருச்செவியிலும இரண்டு சூரியர் இருந்தாற்போலத் தோடு குண்டலமும் இருளைப்போககித தோளிலசைய (த தரிததும் அடிமுடி காணாது) மயஙகிய தேவரைப் பரமெனக கருதுவோரது மயக்கமிருள் போல விருண்டகண்டத்திற் பூரணசந்திரனைக் கோததாற்போல முத்துக்கண்டிகை தரித்தும்.—எ-று. (கஅ)

வலங்கி டந்தமுந் நூல்வரை யருவியின் வயங்குமார் பிடைச்சென்னித்
தலங்கி டந்தவெண் டிங்களூற் றமுதெனத் தாளமா லிகைசாத்தி
யிலங்கி டந்தமா லிகைப்பரப பிடையியைத் திருவாமுகம் பிளந்தாரங்
கலங்கி டநதபாற் கடன்முளைத் தெழுமிளங் கதிரெனக் கவின்செய்து.

இ-ள். வலப்புறங்கிடந்த பூணூலானது மலையி னருவிபோல விளங்குந் திருமார்பிலே, திருமுடியிற் றஙகிய சந்திரன் ஊற்றும் அமிழ்தம்போல முத்துமாலையைச சாத்தியும், விளஙகும் அம்மாலிகைப் பரப்பின் மத்தியில் இருவாயோட்டிய மாணிகக வடததைப் பாற்கடலிற் றோன்றும் இளஞ்சூரியன்போல அழகுசெய்யத தரித்தும்.—எ-று. பிளந்தவென்னும் அகரவீறு தொகை. கலம்-மரக்கலம். (கக)

திசைக டந்தநாற் புயங்களிற் பட்டிகை சேர்த்துவா ளெறிக்குந்தோ
ணசைக டந்தகல் லாமனங் கவர்ந்துயிர் நக்கவங் கதஞ்சாத்தி
யசைக டங்கலுழ் வாரண வுரிவைநீத் தணிகொளுந் தரீயம்பெய்
திசைக டந்தமந் திரபவித் திரமெடுத தெழிலவிர லுழைவித்து.

இ-ள். திருப்புயங்களிலே பட்டிகைகளையும் ஒளிவீசும் அப்புயங்களில் ஆசைகொண்ட (முனிவர்) மனைவியரது மனத்தை அபகரிதது அவரது உயிரையும் பருகிய

அங்குசங்களையும் யானைப்போர்வையை நீக்கி உத்தரீயத்தையுஞ்சாத்தியும் திருவிரல்களிலே சொல்லக்கூடாத மந்திரரூப பவித்திரத்தைச் சாத்தியும்.—எ-று. கடத்தைக் கவிழ்த்து அசைகின்ற வாரணமென்க. (க00)

உடுத்த கோவண மிசைப்பொலந் துகிலசைத் தாகமைந் தலைநால
விடுத்த போலவெயின் மணித்தலைக் கொடுக்குமிவ் விடவிரு புறந்தூக்கித்
தொடுத்த தார்புயந் தூக்கிநூ புரங்கழல சொறபதங் கடந்தன்பாக்
கடுத்த தாளிலிட் டிருந்திக் கோமக னருந்தவப் பயன்பெற்றான்.

இ-ள். அணிந்த கோவண வடையின்மீது பொன்னுடை புனைந்து (அதன்மேலே) பாம்புகள் ஐந்தலைகளைத் தொங்கவிட்டனபோல ஒளிரிய மாணிக்கத்தலைக் கொடுக்குகளை இருபுறமுந் தூக்கியும், புயங்களிலே தொடுத்தமாலைகளைச் சாத்தியும், சொல்லளவைக் கடந்தும் அன்பாக்குச் சமீபித்த திருவடிகளிலே சிலம்பு வீரகண்டைகளைச் சாத்தியும் அக்குபேரன் அரியதவப்பயனை அடைந்தான்.—எ-று. பதமுமென்னுரு சிறப்புமமைதொகை. (க0க)

செங்கண் மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்க்கும் யாவர்க்கு
மங்க லந்தரு கடைக்கணு யகனொரு மங்கலம் புனைந்தான்போற்
சங்கை கொண்டிகும் போதரன் முதுகின்மேற் சரணம்வைத் தெதிர்போந்த
துங்க மால்விடை மேற்கொடு நடந்தனன் சுரர்களபூ மழைதூர்த்தார்

இ-ள் திருமால் முதலிய தேவர்க்கும் மற்றும் யாவர்க்கும் மங்கலந்தருகின்ற திருக்கடை நோக்குடைய சிவபிரான் தாமொரு மங்கலக் கோலங் கொண்டவர்போலத் திருவுளங்கொண்டு கும்போதரர் முதுகின்மீது திருவடிசாத்தி எதிரேவந்த தருமவிடை மேற்கொண்டு எழுந்தருளினர். (உடனே) தேவர் பூமழைபொழிந்தனர்.—எ-று.

அந்த ரத்தவ ரந்தர துந்துபி யைந்துமார்த் தனசூழ
வந்த ரக்கரு மியக்கரும் பூதரு மங்கல வியங்கல்லக்
கொந்த லர்க்கருங் குழலர மடந்தையர் கொளைவலவிஞ் சையர்தாளந்
தந்த சைத்திட மலர்ந்தபூங் கொம்பர்போற் சாய்ந்தசைந் தனராட.

இ-ள். தேவர்கள் தேவதுந்துபிகள் ஐந்துமுழக்கிச் சூழவும் அரக்கர் முதலாயினோர் வந்து மங்கலவாத்தியங்களைக் கல்லென்றொலிக்கவும் இசையில் வல்லவித்தியாதரர் தாளம்போட் டாட்டுவிக்கத் தேவமகளிர் சாய்ந்தசைந்தாடவும்.—எ-று கொந்து-கொத்து. (க0௩)

துங்க மாயிரங் கருவியா யிரமலைத் தூங்கிருண் முழைதோறுஞ்
சிங்க மாயிரம் வாய்திறந் தார்த்தெனச் சிரங்களா யிரந்திண்டோ
ளங்க மாயிர மாயிர முடையவ னாயிர முகந்தோறுஞ்
சங்க மாயிர மாயிர மாயிரந் தடக்கையும் பிடித்தூத.

இ-ள. மிகுதியாயொலிக்கின்ற அருவியோடுகூடிய மலையில் இருள் தங்கிய ஆயிரங்குகைகளில் ஆயிரஞ்சிங்கங்கள் முழங்கினாற்போல ஆயிரஞ் சிரங்களும் இரண்டாயிரம் புயங்களுமுடைய பாநுகம்பன், ஆயிரம் வாய்களில் ஆயிரஞ் சங்கங்களை(வைத்து) இரண்டாயிரங் கைகளாற்பற்றி யூதிவரவும்.—எ-று. (க0௪)

பேர்க்கு மாயியவன் புணர்ப்பையு மிருண்மலப் புணர்ப்பையுங் கடீந் தெய்மைக், காக்கு நாயக னருச்சனை விடாதருட் கதியடைந் துளவாணன், றாக்கு நேர்பட வாயிரங் கரங்களாற றொம்மென முகநதோறுந், தாக்க வேறு வே றெழுகுட முழாவொலி தடங்கட லொலிசாய்ப்ப.

இ - ள். குற்றமுடைய மாயாமலம் இருண்ட ஆணவமலம் (கன்மமலம் ஆகிய மூன்றின்) தொடர்ச்சியையும் (இயல்பாகவே) நீங்கி எங்களைக் காத்தருளுஞ் சிவபிரான் திருவடிப்பூஜை விடாமற் (செய்து) அருண்ஞானம்பெற்றவாணன் (அங்கு நிகழும்) பாடலுக்கேற்ப (த் தனது) ஆயிரங் கைகளினால் (ஆயிரம்) முகங்கள்தோறுந் தாக்குதலாலே தொம்மென வெவ்வேறெழுங் குடமுழாவொலி பெருங்கடலொலியைக் கீழ்ப்படுத்தவும்.—எ-று. இனம்பற்றிக் கன்மமலம் வருவிக்கப்பட்டது. கதி-ஞானம். (கoரு)

முனிவ ரஞ்சலி முகிழ்த்தசெங் கையினர் மொழியுமா சியருள்ளங்
கனிவ ரும்பிய வன்பினர் பரவவுட் கருத்தொடு வழிகொண்டோா
துனிவ ருங்கண நாதாகொட் டதிாகரத் துணையினா மழைபோலப்
பனிவ ருங்கண ராடிய தாளினா பாடுநா வினரேத்த.

இ - ள். முனிவா அஞ்சலி செய்பவரும் ஆசீர்வதிப்பவரும அன்பினருமாய்த் துதித்துவரவும், வழிக்கொணடோராகிய துன்பமிலலாக் கணநாதர் கொட்டுதல் முழங்குங் கையினரும் (ஆனந்தபாஷ்பஞ்) சிந்துங் கண்ணினரும ஆடிய காலினரும் பாடிய நாவினருமாய்ப் புகழ்ந்துவரவும்.—எ-று. (கoசு)

இந்தி ரன்மணிக் களாஞ்சிகொண் டொருமருங் கெய்தமெல் லிலைவாசந்
தந்தி லங்குபொன் னடைபபைகொண் டீசனோர் சாாவர மருத்துக்கோ
வநதி ரஙகொலி யாலவட் டமபணி மாறவா ரழறூபந்
தந்து நேரநீக் கடவுள்பொற் கோடிகந் தாமரைக் கரந்தூக்க.

இ - ள. இந்திரன், காளாஞ்சி யேந்திவரவும், ஈசானமூர்த்தி, வெற்றிலையும் வாசனைப்பொருளுங் கொடுத்து அடைப்பையேந்திவரவும், வாயுதேவன், ஆலவட்டம் வீசிவரவும், அக்கினிதேவன், தூபக்கலசமேந்திவரவும், வருணதேவன், பூந்தட்டேந்திவரவும்.—எ-று. (கoஎ)

நிருதி யாடிகொண் டெதிர்வர வடிக்கடி நிதிமுகந் தளகைக்கோன்
கருதி யாயிரஞ் சிதறிடத் தணடிநன் காஞ்சுகா வினைசெய்யப்
பரிதி யாயிரம் பணுடவி யுரகரும பன்மணி விளக்கேநதச்
சுருதி நாயகன் றிருவடி முடியின்மேற் சுமநதுபின் புறஞ்செல்ல.

இ - ள். நிருதி, கண்ணாடியேந்தித் திருமுன் வரவும், குபேரன், திரவியங்களை மொண்டு சிதறவும், இயமன், கஞ்சுகிகள்போல நெருக்கத்தை விலக்கிவரவும், நாகர்கள், பலவிரத்ந தீபங்களேந்திவரவும், வேதபுருடன் சிவபிரான் றிருவடியை முடிமேற் றூங்கிப் பின்னேவரவும்.—எ-று. பரிதிபோல விளங்கும் ஆயிரம் படக்காடுடைய வுரகரெனக. (கoஅ)

கங்கை காவிரி யாதிய நவநதிக் கன்னியர் குளிர் தூங்கப
பொங்கு வாாதிரைக் கொழுந்தெனக் கவரிகள புரட்டவெண் பிறைக்கீற்றுத்
துங்க வாளெயிற் றிருளுடூற் குழிவிழிச் சுடரழற் செமபங்கிச்
சஙக வாாகுழைக் குறியகுண் டோதரன் றணமதிக் குடைதாஙக.

இ-ள். கங்கைமுதலிய நவநதிகளாகிய பெண்களும் நீண்ட திரைபோலச்சாமரைகள் வீசவும், குண்டோதரபூதம் வெண்குடை பிடித்துவரவும்.—எ-று. துங்கம்-உயர்வு. பங்கி - மயிர். (கoகூ)

இடிக்கும் வானுரு மேறுயர் நெடுங்கொடி யெகினவெண் கொடிஞால
முடிக்கு மூழிநா ளுளாகடுங் காலென மூச்செறி விடநாகஞ்
துடிக்க வாயிடு முவணவண் கொடிமுதற சூழ்ந்துசே வகஞ்செய்யுங
கொடிக்கு ழாத்தினுட் கொடியர சாய்விடைக் கொடிபுடை பெயாநதாட.

இ-ள். சூழ்ந்து சேவகஞ்செய்யும் இடிகொடி அன்னக்கொடி கருடக்கொடி முதலிய கொடிக்கூட்டத்தில இடபக்கொடி தலைமையாய் அசைந்தாடவும்—எ-று. வானில் இடிக்கும் உருமேறென்க. உளாதல் - சுழலல். (கக0)

கண்ணு தற்பிரான் மருங்கிரு கடவுளர் கபபுவிட் டெனத்தோன்றும்
வண்ண முத்தலைப் படையெடுத் தொருகுட வயிறுடைய பெரும்பூதம்
பண்ண வப்பதி னெண்படைக் கலமுந்தன் பக்கமாச் சேவிபப
வண்ணன் முச்சுடர் முளைத்தொரு வரைநடந் தனையதோர் மருங்கெய்த.

இ-ள் சிவபிரானது இருபுறத்தும் பிரம விஷ்ணுக்கள் கப்புவிட்டாற்போல விளங்கும் அழகிய முத்தலைச் சூலப்படையைத் தாங்கி ஒரு பெரும்பூதம் பதினெணவகைத் திவ்வியாயுதங்களும் தன்பக்கமாகச் சேவித்து வரும்படி சிறந்த சோமசூரியாக்கினிகள் உதித்த ஒருமலை நடந்ததுபோல வரவும—எ-று. (கக்க)

பந்த நான்மறைப பொருட்டிரட் டெனவட பாடல்செய் தெதிர்புட்ப
தந்த னேத்தவா னுயிருண வுருத்தெழு தழல்விடத் தெதிர்நோக்கு
மநத மாதியி லாணிழல வடிவமா யாடியி னிழல்போல
வந்த சுநதரன் சாத்துநீ றுடுதிரு மாலையு மெடுத்தேந்த.

இ-ள். சதுர்வேதார்த்த சங்கிரகம்போல வடமொழிச் சுலோகஞ்செய்து திருமுன்னே புட்பதந்தமுநிவா துதித்துவரவும, தேவாகள துயிரைப் பருகக் கோபித்து வந்த ஆலாகல விடத்தின முனசென்ற சிவபிரானது பிரதிபிம்ப ரூபமாய்க் கண்ணுடியின் சாயைபோல வந்த சுந்தரமூர்த்தி அணிகின்ற விபூதிவட்டகையும் திருமாலையும் எந்திவரவும்.—எ-று. பந்தம் - வேதத்தின் ஒருறுப்பு. (ககஉ)

அன்னத தேரின னயன்வலப் பாங்கரு மராவணி கவர்சேன்
வன்னத் தேரினன் மாவிடப் பாங்கரு மலர்க்கரங் குவித்தேத்தப்
பொன்னத்தேமலர்க் கொன்றையான் வெள்ளியம் பொருப்பொடு மெழீஇப்
போந்தா, லென்னத் தோணி மதுரைமா நகர்ப்புறத் தெய்துவா னவ்வேலை.

இ-ள். பிரமா வலப்புறத்தும் விஷ்ணு இடப்புறத்தும் கைகள் கூப்பிப் புகழச் சிவபிரான், வெள்ளியங்கிரியொடும் எழுந்து வந்தாற்போல (இடபமீது) மதுரைப்பதியின் புறத்தில் எழுந்தருளுகின்றார் அப்பொழுது.—எ-று. (ககங)

ஷை வேறு.

தேவர்க டேவன் வந்தான் செங்கண்மால் விடையானு வந்தான்
மூவர்கண் முதல்வன் வந்தான் முக்கணெம் பெருமான் வந்தான்
பூவல ரயன்மால காணாப் பூரண புராணன் வந்தான்
யாவையும் படைப்பான் வந்தா னென்றுபொற் சின்ன மார்ப்ப.

இ-ள். வெளி. புராணன் - பழையோன். (கககச)

பெண்ணினுக் கரசி வாயிற் பெருந்தகை யமைச்ச ரேனை
மண்ணினுக் கரசர் சேனை மன்னவர் பிறரு மீண்டிக்
கண்ணினுக் கினியான் றன்னைக் கண்டெதிர் கொண்டு தாழ
விண்ணினுக் கரச னூரின் வியத்தகு நகரிற் புக்கான்.

இ-ள். தடாதகைப் பிராட்டியாரின் அரமனைவாயில் அமைச்சர் முதலாயினோர் நெருங்கி இடபாரூடராகிய சுந்தரேசனை எதிர்கொண்டு தரிசித்து வணங்க, (தரிசித்த அவர்களோடு சுந்தரேசர்) இந்திரனகரினுஞ் சிறந்த மதுரைமாநகரிற புகுந்தருளினா.—எ-று. (கககரு)

முகிறவழ் புரிசை மூதூர் முகபபெரு வாயி னீநதி
யகிறவழ் மாட வீதி வலம்பட வணைவா னாக
நகிறழை பொலங்கொம் பன்ன நன்னகர் மகளி ரம்பொற்
றுகிறழை மருங்கு லாயத் தொகைபுறந தழுவச் சூழ்ந்தார்.

இ-ள். (புகுந்த சுந்தரேசர்) மதுரை நகரின் முதற்பெருங் கோபுரவாயிற் கடந்து அகிற்புகை தவழும் மாடமுடைய வீதியில் வலமாக எழுநதருள அந்நகரத்துள்ள தனமாகிய அரும்புதோன்றிய பொற்கொம்பு போனற மகளிர் பொன்னுடை புனைந்த இடையுடைய தோழியர் குழாம் புறம்பே நெருங்கிவர அங்கே சூழ்ந்தார்—எ-று. (கககசு)

தமிழ்முதற் பதினெண் டேத்து மகளிருந தாரு நாட்டி
னமிழ்தமன் னவரு முல்லை யமபுயங் குமுத நீலங்
குமிழ்நறுங் கோங்கு காந்தள் கோழிணை ரசோகம் வாச
முமிழ்தா மலர்ந்த நந்த வனமென வொருங்கு மொய்த்தா.

இ-ள். மண்ணுலக மாதரும் விண்ணுலக மாதரும் கலந்து முல்லை முதலியன மலர்ந்தநந்தவனம்போல நெருங்கினார்கள்.—எ-று. தாமரைமலர்முகமும், முல்லையரும்பு தந்தமும், ஆம்பன் மலர் வாயும், நீலமலர் கண்களும், குமிழம்பூ நாசியும், கோங்கரும்பு தனங்களும், காந்தண்மலர் கைகளும், அசோகந்தளிர் மேனியுமாகக் கொள்க. (கககஎ)

எம்மைநீர் விடுதி ரேயோ வென்பபோற் கலையுஞ் சங்கும்
விம்மநாண் மடனு முங்க ணெஞ்சுடை வெளியா ருக
வும்மைநீத் தோடு மநதோ வுரைத்தன முரைத்தோ மென்று
தம்மைநா புரங்கால் பற்றித் தடுப்பபோ லார்ப்பச் சென்றார்.

இ-ள். எங்களை நீங்கள் கைவிடுகின்றீர்களோ என்று முறையிடுதல்போல(ச் சோரும்) மேகலையும் வளையலும் ஒலிக்கவும் நாணமும் மடமும் உங்கள் உடைந்த மன

வெளியே வழியாக்கொண்டு ஐயோ உங்களைக் கைவிட்டோமே (அதனை) நாங்கள் சொன்னோஞ் சொன்னோமென்று சிலம்புகள் தங்களைக் கால்கள் பற்றித் தடுத்தல் போல ஒலிக்கவும் வீதியிற் சென்றார்கள்.—எ-று. (கக்அ)

கடியவிழ் கமலக் காடு பூத்ததோர் கருணை வாரி
யடிமுதன் முடியீ றாக வலாவிழிக் குவளை சாத்திக்
கொடியசெம் பதுமப் போது குழனமிசைச் சூடு வார்போற்
றொடியணி கரங்கள கூப்பித் துதியென வினைய சொல்வார்.

இ-ள். அநேக கமலமலர்கள் மலர்ந்த ஓர்கருணையங்கடலாகிய சுந்தரேசா திருவடிமுதல் திருமுடியீறாகக் கண்களாகிய நீலமலர்களைச் சூட்டிக், கொடியையுடைய செங்கமல மலர்களைக் கூந்தலிற் சூடுவார்போலக் கைகளைக் குவித்துத், துதித்தல்போல இப்படிப்பட்ட வசனங்களைக் கூறத்தொடங்கினர்.—எ-று. திருமுகம் கண் வாய் கரம் உந்தி அடி இவைகள் கமலமலர்போ லிருத்தலிற் கமலக்கா டென்றார். (ககக)

நங்கையென் னோற்றாள் கொல்லோ நமபியைத திளைத்தற கென்பார்
மங்கையை மணபபா னென்னோ வள்ளலு நோற்றா னென்பா
ரங்கடி மதுரை யென்னோ வாற்றிய தவநதா னென்பா
ரிங்கிவர் வதுவை காண்பா னென்னநா நோற்றோ மென்பார்.

இ-ள். பிராட்டியார் இந்தச் சுந்தரேசனை அநுபவித்தற்கு யாது தவஞ்செய்தாரோ என்றும் இச்சுநதரேசர் இப்பிராட்டியாரைத் திருமணஞ்செய்தற்கு யாது தவஞ்செய்தாரோ என்றும (இவ்விருவரும் வரும் வண்ணம்) இம்மதுரை நகரம யாது தவஞ்செய்ததோ என்றும் யாங்கள் இவாகள் திருமணத்தைத் தரிசிக்கும்பொருட்டு யாதுதவஞ் செய்தோமோ வென்றுங் கூறுவார்.—எ-று. (கஉ௦)

தென்னவன் வருநதி மேனாட் செய்தவப் பேறாப் பெற்ற
தன்மகள் வதுவை காணத் தவஞ்செயதா னிலனே யென்பார்
கன்னித னழகுக் கேற்ற வழகனிக் காளை யென்பார்
மனனவ னிவனே யன்றி வேறிலே மதுரைக் கென்பார்.

இ-ள். வெளி. தென்னவன்-மலயத்துவஜபாண்டியன். (கஉக)

நங்கைதன் னலனுக் கேற்ப நமபியைத் தந்த திந்தத்
துஙகமா மதிநூல வல்ல சுமதிதன் சூழ்ச்சி யென்பா
ரங்கவ டவபபே றென்பா ரன்னைதன் கன்னிக் கன்றி
யிங்கிவன் மருக னாக வெத்தவ முடையா ளென்பார்.

இ-ள். பிராட்டியார தழகுக் கேற்பச் சுநதரேசனைத் தந்தது இச்சுமதி மந்திரியின் ஆலோசனையென்றும் பிராட்டியாரது தவப்பயனென்றும் காஞ்சனமாலை தன்னுடைய புத்திரியை அடைதற்கன்றி இச்சுந்தரேசர் மருகராதறகு எந்தவுயர்ந்த தவமுடையாளென்றுங் கூறுவார்.—எ-று. (கஉஉ)

பூந்துகி னெகிழ்ப்பார் சூழ்வார் புணர்முலை யலைப்பார் பூசு
சாந்தினை யுகுப்பர் நாணந தலைக்கொண்டார் போலச் சாய்வா
கூநதலை யவிழ்ப்பர் வாரிக் கூட்டுவா முடிப்பா மேனி
மாநதளி ரெங்கு மாரன் வாளிகள் புதையச் சோாவாா.

இ-ள். வெளி. நெகிழ்த்தல்-அவிழ்த்தல். உகுதுதல்-உதிாத்தல. (கஉங)

தண்ணளி யொழுக்கஞ் சார்ந்த குணத்தினைச் சார்ந்து மிந்த
வண்ணமென் மலர்க ளென்னே வாளியாய்த் தைத்த வென்பார்
கண்ணறுங் கூந்தல் வேய்ந்த கடியவிழ் நீலத் தாரும்
வெண்ணகை யரும்பு முல்லைத் தாமமும் வெறுத்து வீழ்ப்பார்.

இ-ள். தண்ணிய கருணையாகிய ஒழுக்கம்பெற்ற குணத்தையடைந்தும் (தண்ணிய வண்டுகளின் வரிசையாகிய வில்லினுணியை யடுத்தும) இந்த நிறமுள்ளமெல்லிய மலர்கள் பாணங்களாய்த் தைத்தன என்ன அதிசயமென்பார். தேன்மணம் வீசும் அளகத்தில் அணிந்த குவளைமலர்மாலையும் வெள்ளிய நகைபோலு முல்லையரும்புமாலையும் (மன்மத பாணமாதலால்) வெறுத்தெறிவார்.—எ-று. (கஉச)

விம்மிச்செம் மாந்த கொங்கை மின்னனா சிலர்விற் காமன்
கைம்மிக்க கணையே றுண்டு கலங்கிய மயக்காற் றங்கண
மைம்மிக்க நெடுங்கண மூரல் வதனமு மவணம் பென்றே
தம்மிற்றம் முகத்தை நோக்கார் தலையிறக் கிட்டுச் செல்வார்.

இ-ள். சில பெண்கள் காமபாணங்கள் தைத்துக் கலங்கிய மயக்கத்தாலே தங்களது கண்ணாகிய குவளைமலரும் தந்தமாகிய முல்லையரும்பும் முகமாகிய தாமரைமலரும் அக்காம பாணங்களென்றே அம்மாதர் குழாங்களில் ஒருவர்முகத்தை யொருவர் பாராது தலைகுனிந்து போவார்.—எ-று. நோக்கார் முற்றெச்சம். (கஉரு)

பற்றிய பைம்பொன் மேனிப் பசப்பது தேறா ரண்ண
லொற்றைமால் விடையின் மேலகொண் டிருநதுமெ முளத்து மேவப்
பெற்றன மிதென்கொன் மாயம பேதைமீர் பெருமா னீண்ட
கற்றைவார் சடைப்பூங் கொன்றை யிதுவன்றோ காண்மி னென்பார்.

இ-ள் பசிய பொன்னிறமேனியிற் பொருந்திய பசப்பினை யுணராது, சுந்தரேசர் இடபாரூடராய்க் காணப்பட்டும் நமதுளததிலும் வரப்பெற்றோம். பெண்களே? இஃது என்னமாயம் (அதற் கடையாளம்) அப்பெருமான் சடையிலுள்ள கொன்றை மலர் இதுவன்றோ இதனைப் பாருங்களென்(று அபபசப்பினைச் சுட்டிக்காட்டு) வார்.—எ-று. அது - பகுதிப்பொருள் விகுதி. தேறார் - முற்றெச்சம். (கஉசு)

திங்களென் றெழுந்து நம்மைச் சுடுவதென் செந்தீ யென்பார்
புங்கவன் சென்னி மீதுங் கிடப்பதே போலு மென்பா
ரங்கவற் கிந்த வெப்ப மிலைகொலென் றயிர்ப்பா ராற்றக்
கங்கைநீர் சுமந்தா னென்பா ரதனையுங் காணமி னென்பார்.

இ-ள். சிவந்த நெருப்பானது திங்களென்னும் பெயர்கொண்டு உதித்தும் நம்மைச் சுடுவதென்னை யாச்சரியமென்பார் (சிலர்.) (அந்த நெருப்பானது,) சுந்தரேசர் திருமுடியிலும் இருக்கின்றது போலுமென்பார் (சிலர்.) (அங்ஙனமாயின்,) அப்பெருமானுக்கு இந்த வெம்மை இராதுபோலு மென்று சந்தேகிப்பார் (சிலர். அந்தவெம்மையை) ஆற்றுதற்காகவே கங்கையாற்றைத் தாங்கினானென்பார் (சிலர்.) அக்கங்கையையும் பாருங்களென்று சுட்டிக் காட்டுவார் (சிலர்).—எ-று. அங்கு - அசை. (கஉள)

கலையொடு நாணம் போக்கிக் கருத்தொடு வண்ணம் வேறா
யுலையொடு மெழுகிட் டென்ன வுருகுகண் ணீர ராகிக்
கொலையொடு பயிலவேற கண்ணா குரிசிறன் பவனி நோக்கி
யலையொடு மதியஞ் சூடு மையன்மெய் யனப ரொத்தார்.

இ-ள். மடவார், சுந்தரேசர் திருவுலாவைத் தரிசித்து ஆடையும் நாணமும் இன்றி மனமும் உடலினிறமும் வேறுபட்டு உலையிலிட்டமெழுகுபோல உருகுங் கண்ணீருடையராய் அப்பெருமான திருத்தொண்டர் போனறா.—எ-று. (கஉஅ)

நட்டவாக் கிடுக்க ணெய்த நன்றிகொன் றவர்போற் கையில்
வட்டவாய்த் தொடியுஞ் சங்கு மருங்குசூழ் கலையு நீங்க
விட்டபொற சிலம்பிட் டாங்கே நன்றியி னிகவார் போற்கா
லொட்டியே கிடப்ப நின்றா ருகுத்தபூங் கொம்ப ரனனா.

இ-ள். நணபருககுத் துன்பம் வந்தவளவில் நன்றிமறந்தவர் (நீங்குதல்) போலக் கையில் வளையுஞ் சங்கமும் இடையில் ஆடையும் நீஙகவும, நன்றிமறவாதவர் (நீங்காமைபோலத்) தரிதத சிலம்பு இட்டபடியே காலிற் பொருந்தியே கிடக்கவும் நின்றார் உதிர்த்த பூங்கொம்பு போன்ற மகளிர் —எ-று. (கஉகூ)

மின்னகு வேற்க ணாளோர விளங்கிழை விடைமே லையன்
புன்னகைப போது நோக்கப் போதுமுப புரமும் வேனின்
மன்னவன் புரமுஞ் சுடட வலலவோ கெட்டேன் வாளா
வின்னவை சுடாது போமோ வேழையேன் புரமு மென்றாள்.

இ-ள். ஒரு பெண், சுந்தரேசரது மநதகாசமலரும் கண்மலரும் (முறையே) திரிபுரங்களையும் மன்மதனது சரீரத்தையும் சுட்டனவலலவோ! ஆகெட்டேன் இவை எனதுடம்பையும் சுடாது சும்மாவிடுமோ வென்றாள்.—எ-று. விளஙகிழை - அன்மொழித்தொகை. (கஙo)

உழைவிழி யொருத்தி தன்க ணுருவெளி யாகித் தோன்றுங
குழகனை யிரண்டு செமபொற் கொங்கையு மொன்றாய் வீஙகத்
தழுவுவா ளூற்றங் காணா டடமுலை யிரண்டே யாகி
யிழையிடை கிடக்க நீங்கி யிருக்கைகண் டிடைபோ லெய்த்தாள்.

இ-ள். ஒருபெண், தன்னுடைய கண்களுக்கு உருவெளியாய்த் தோன்றுஞ் சுந்தரேசனைச் செம்பொன்னிறத் தனங்களிரண்டும் ஒன்றாய் விம்மத் தழுவுகின்றவள் பரிசித்தடையாது தனங்கள் (மெலிந்து) இரண்டேயாய் அணிகள் இடையே கிடக்கப் பிரிந்திருத்தலை நோக்கி இடைபோல உடல மெலிந்தாள்.—எ-று. காணாள் - முற்றெச்சம் (கஙக)

வாரிருங் கொங்கை யாளோர் மாதராள் வானோ ருய்யக்
காரிருள் விடமுண் டன்று கறுத்ததே யன்று கொன்றைத்
தாரிருஞ் சடையார் கண்டந் தையனமீர் தமது நெஞ்சங்
காரிரும பென்றே காட்டக் குறியிட்ட கறுப்பே யெனறாள்.

இ-ள். ஒருபெண், மாதர்களே தேவர்கள் உய்யும்படி அந்நாளிலே விடத்தையடைந்தனலே சுந்தரேசரது கண்டம் கறுத்ததேயல்ல, (நம்மிடத்தே) தமது திருவுள்ளக் கரிய இருமபென்றே காட்டுதற்கு அடையாளஞ்செய்த கறுப்பே யென்றாள்.—எ-று.()

பொன்னவிர் சடையான் முன்னே போனதென் னெஞ்சு தூதா
யன்னது தாழ்த்த தென்னென் றழுங்குவா ளொருத்தி கெட்டே
னென்னது நெஞ்சும் போன தென்றன ளொருத்தி கேட்ட
மின்னனாள் வேற்கண் சேந்தாள் விளைத்தன ளவளும் பூசல.

இ-ள் எனது மனம், சுந்தரேசரது திருமுன்னே தூதாகச்சென்றது அம்மனம் (இன்னமும் என்னிடத்தே வாராது) தாழ்த்தது என்ன காரணமென்று ஒருத்தி துன்பமிகுவாள். (அதனையுணர்ந்த) மற்றொருத்தி ஆ! கெட்டேன் எனது மனமும் (அவரிடத்தே) தூதாகச் சென்றது (இன்னமும் வரவில்லை) என்றனள். (அதனைக்) கேட்ட அப்பெண் கண்சிவந்து (எனக்குரிய நாயகரிடத்தே நீ இச்சை கொண்டது யாதுகாரணமென்று) அவளோடும் போர்செய்தனள்.—எ-று. சேந்தாள் - முற்றெச்சம். (கஙரு)

செப்பிளங் கொங்கை யாளோர் தெரிவைநீர் திருநோக் கெம்பால்
வைப்பதென் மதன் போ லெமமைச் சுடுவதே மதனுக் காவி
யப்பொழு தளித்தாற் போலெம மாவியு மளித்தா லின்று
மெய்ப்புக ழுமக்குண் டின்றேற் பெண்பழி விளையு மென்றாள்.

இ-ள். ஒருபெண், (சுந்தரேசரே) நீர் (எம்மிடத்தே) திருநோக்கம் வைப்பது யாது மன்மதனைச் சுட்டது)போல எம்மையுஞ் சுடுகின்றீர், அம்மன்மதனுக்கு உயிரையுடனே கொடுத்தாற்போல் எம்முயிரையும் கொடுத்தால இந்நாளில் உணமைப்புகழ் உமக்குண்டாம் இல்லையானாற் பெணபழி சம்பவிக்கு மென்றாள்.—எ-று. (கஙச)

கவனமால் விடையான் றன்னைக் கடைக்கணித் திலனென் றங்கோர்
சுவணவான கொடியோ ரோவத் தொழிலவல்லான் குறுக நோக்கி
யிவனைநீ யெழுதித் தந்தால வேணடுவ வீவ னென்று
ளவனையா ரெழுத வல்லா ரென்றன ளாவி சோர்ந்தாள்.

இ-ள். மேலான பொற்கொடிபோன்ற ஒருபெண், சுந்தரேசர் தன்னைச் சிறிதுங் கடைக்கண்ணாற் பார்க்காது சென்றனரென்று (கருதும்போது) சித்திரம் எழுதவல்ல ஒருவன்வர (அவனைப்) பார்த்து இச்சுந்தரேசரது சொரூபலக்ஷணததை நீ எழுதிக்கொடுத்தால் வேண்டுவன கொடுப்பேனென்று கூறினள (அதற்கு அவன் நவ்வடிவுங் கடந்த) அப்பெருமானது சிறப்பிலக்கணத்தை யாவரெழுதவல்லவரென்று சொல்ல(உடனே அப்பெண்) ஆவி அயர்ந்தாள்.—எ-று. கவனம் - விரைவு. (கஙரு)

வலத்தயன் வரவு காணாள் மாலிடங் காணாள் விண்ணோர்
குலத்தையுங் காணாள் மண்ணோர் குழாத்தையுங் காணாள் ஞானப்
புலத்தவர் போலக் கண்ட டொருளெலா மழுமான் செங்கைத்
தலத்தவன் வடிவாக் கண்டா ளொருதனித் தையன் மாது.

இ-ள். ஒருபெண், சுந்தரேசரைச் சூழ்ந்துவரும் பிரமாமுதலியோரைக் காணாது சிவஞானிகள் போலப் பார்த்த பொருள்களை மான்மழுவேந்திய அப்பரசிவன் திருவுருவாகவே கண்ணுற்றாள்.—எ-று. (கஙசு)

முழ்பெற்றங் காலிற் செல்ல வண்ணலை முன்போய்க் காண்பான்
பின்பற்றி யாசைப் பாசம் பிணித்தெழ வோடு வாளோர்
பொன்பெற்ற முலையாள் கொம்ப ருகுமலர் போலத் தாளின்
மின்பெற்ற காஞ்சி தட்ப விலங்கொடு நடப்பா ளொத்தாள்.

இ - ள். இடபம் வாயுப்போல (வேகமாய) முன்னே செல்லுதலாலே சுந்தரேச ரை முன்புபோய்த் தரிசித்தற்பொருட்டுப் பின்னே நின்று ஆசைக் கயிறானது மிக்கக் கட்டி யிழுத்துக்கொண்டுபோக முன்னே யோடுகின்றவளாகிய ஒருபெண், கொம்பினின்று உகுகின்ற மலர்போல (இடையினின்று நழுவிய) காஞ்சியானது காலினை (மேல் விழுந்து) தடுக்க (அதனால்) விலங்கொடு நடப்பவளபோன்றாள்.—எ-று. (சஅஎ)

விதுக்கலை மிலைந்து செங்கண் விடையின்மேல வருமா னந்த
மதுக்கட றனைக்கண் வாயான் முகந்துண்டு மகளி ரெல்லாம்
புதுக்கலை சரிவ தோரார் புரிவளை கழலவ தோரார்
முதுக்குறை வகல்வ தோரார் மூழ்கினார் காம வெள்ளம்.

இ - ள். இடபத்தின்மீது வருஞ் சுந்தரேசராகிய இன்பத்தேன் கடலை மடவார் அனைவரும் கண்ணாகிய வாயால் முகந்து பருகி ஆடை நழுவுதலையும் வளையல் கழலுத லையும் பேரறிவு நீங்குதலையும் ஆராயாதவராய்க் காமவெள்ளத்தில் அமிழ்ந்தினார் —எ-று. விது - சந்திரன். (சஅஅ)

பைத்தழ கெறிக்கு மாட பந்திமே னின்று காண்பார்
கைத்தலங் கூப்பி யாங்கே கண்களு நோக்கி யாங்கே
சித்தமுங் குடிபோய்ச் சொல்லுஞ் செயலு மாண் டங்கண் மாண
வைத்தமண் பாவை யோடு வடிவுவே றற்று நின்றார்.

இ - ள். மாடவரிசைமேல் நின்று (சுந்தரேசரைத்) தரிசிக்கும் பெண்கள், கைகள் குவித்தபடியாயும் கண்கள் பார்த்தபடியாயும் (நின்று) சித்தமும் (அவர்பாற்)குடிபோய் வார்த்தையும் அசைதற்றொழிலும் ஒழிந்து அம்மாடத்தில் மாட்சிமைப்பட வைத்த சுதை யாலாகிய பிரதிமையொடு தம்வடிவு வேறுபாடின்றி நின்றார்கள்.—எ-று. பைத்து- பரந்து. (சஅக)

அன்பட்ட புரமுங் காம னாகமுஞ் சுட்ட தீயிம்
மின்பட்ட சடிலத் தண்ணன் மெய்யென்ப தறியார் நோக்கிப்
பொன்பட்ட கலனு மெய்யும் பொரிகின்றா ரவனைப் புல்லி
னென்பட்டு விடுமோ வைய வேழைய ராவி யம்மா.

இ - ள். அன்பு நீங்கிய திரிபுரத்தவரையும் மன்மதன் உடலையுஞ் சுட்டெரித்த தீ இச்சுந்தரேசரது திருமேனியெனபது சிறிதும் அறியாராய் (விரும்பி)ப் பார்த்து ஆபரணமும் உடலும் பொரிகின்றவர் அப்பெருமானைத் தழுவினால் அம்மடவார் துயிர் யாதாகி விடுமோ.—எ-று. (சகூ0)

கொடிகள்பூத் துதிர்ந்த போதிற் கொம்பனார் கலையுஞ் சங்குந்
தொடிகளுஞ் சுண்ணத் தூளுஞ் சுராபொழி மலரு நந்தி
யடிகள்கைப் பிரம்பு தாக்கச் சிந்திய வண்ட வாணர்
முடிகளின் மணியுந் தாருங் குப்பையாய் மொய்த்த வீதி.

இ-ள். மலர்ந்து கொடிகளினின்றும் உதிர்ந்த பூக்கள்போல மகளிரது ஆடை முதலியவும் தேவர்கள் பொழிகின்ற மலர்களும் திருநந்தி தேவரது பிரம்பு தாக்குதலில் பற்றித் தேவர் முடிகளினின்று சிதறிய இரதநமுதலியவும் வீதியிற் குப்பையாயின.—எ-று. (கசக)

துன்னிய நருப்பை கூட வரசிலை துழாவித் தோய்த்துப
பொன்னியல் கலச நன்னீர் பூசுரர் வீச வன்னர்
பன்னியா வட்ட மாக வானவிற் பதித்தா லென்ன
மின்னிய மணிசெய் நீரா சனக்கலம் விதியாற் சுற்ற.

இ-ள். அந்தணா, பொற்கலச தீர்த்தத்திலே தர்ப்பையும் அரசிலையுஞ்சேர்த்துத் தோய்த்துப் புரோட்சிக்கவும் அவ்வந்தணருடைய பத்தினிமார் இந்திரதநுசை வட்டமாக வைத்தாற்போல மணிகள்பதித்த ஆலத்தியை விதிப்படி சுற்றவும்.—எ-று. (கசஉ)

கொடிமுர சாடி செம்பொற் குடமணி நெய்யிற் பூத்த
கடிமல ரனைய தீப மங்குசங் கவரி யென்னும
படிவமங் கலங்க ளெட்டும பரித்துநேர் பதுமக் கொம்பா
வடிவினர் வந்து காட்ட மாளிகை மருங்கிற் செல்வான்.

இ-ள். அப்பெண்கள் அஷ்டமங்கல வடிவங்களைத் தாங்கிக் காட்டவும் (சுந்தரேசர்) திருககோயிலின் அருகே செல்வாராயினா —எ-று. பதுமமலரையுடைய கொம்புபோலும் வடிவினரென்க. (கசங)

செப்புரங் கவர்ந்த கொங்கை யரமபையா தீபங் காட்டுங்
துப்புர வன்பி னார்க்குத் தூயமெய்ஞ் ஞான நல்கு
முப்புரங் கடந்தான் றன்னை மும்முறை யியங்க ளேங்கக்
கப்புர விளக்கந் தாங்கி வலஞ்செயக் கருணை பூத்தான்.

இ-ள். (பூஜையிலே) தீபங்காட்டியவலிய அன்புடையார்க்கு ஞானம் அருளும் முப்புரப பகைவராகிய சுந்தரேசா, தம்மை வாத்தியங்கள் ஒலிககக் காப்பூர தீபமேந்தித தேவமகளிர் மூன்றுமுறை வலமாகச சுற்றக் கருணைசெய்தார்,—எ-று. செப்பின் வலியைப்போக்கிய தனமென்க (கசச)

கோயின்முன் குறுக லோடு மைம்புலக் குறும்பு தேய்த்த
தூயநால் வேதச் செல்வர் சுவத்திக ளோத நந்தி
சேயிருந் தடக்கை பற்றிச் செங்கணே றிழிந்து நேர்ந்து
மாயனு மயனு நீட்டு மலர்க்கர மிருபாற் பற்றி.

இ-ள். திருக்கோயிலின்முன் சமீபித்தவுடனே அந்தணர் மங்கல வாழ்த்துச் சொல்ல, (சுந்தரேசர்) திருநந்திதேவரது செவ்விதாகிய பெருமைபெற்ற திருக்கரம்பற்றி இடபத்தினின்றும் இறங்கி விஷ்ணுவும் பிரமாவும் நேர்பட்டு இருபுறமும் நீட்டும் (கமல) மலர்போலுங் கைகளைப் பற்றி.—எ-று. (கசரு)

எதிர்த்தரு மறைகள் காணு திளைத்தடி சுமந்து காணு
முதிர்ந்தவன் புருவ மான பாதுகை முடிமேற் சூடிப்
பதிந்தவர் தலைமேற் கொண்டு பாசவல் வினைதீர்ந் துள்ளம்
பொதிந்துபே ரின்ப நல்கும் பொன்னடிப் போதுசாத்தி.

இ-ள். அரியவேதங்கள் தேடிக்காணாமையால் இளைத்து (இனி) திருவடிக ளைச் சுமந்தாதல் தரிசிக்கலாமென்று கருதிப், பேரன்புவடிவமாகிய திருப்பாதுகை முடி மீது, திருவருட்சத்தி பதிந்த அடியவர் முடிமேற்கொள்ளப் பெற்று அவர்களது ஆண வமலம் கன்மமலம் (மாயாமலம் ஆகிய மூன்றினையும்) ஒழித்து இருசார்பையும் விட்டு நீங் காது பேரானந்தத்தை அருளும் பொன்போலும் திருவடிமலர்களைச் சாத்தியருளி.— எ-று. பாதுகை மீது அடிமலர் சாத்தியென்க இனைய பற்றிக் கன்மமலம் வெருவிக்கப் பட்டது (கசுசு)

பையரா வுரியி னன்ன நடைப்பாடாம் பரப்பிப் பொங்கு
கொய்யவிழ் போதி னீத்தங் குரைகழ லிறைஞ்சப் பத்
தெய்வமந் தார மாரி திருமுடி நனைப்பத் தெவ்வ
ருய்யவந் தருளு மைய னுளமெழுந் தருளு மெல்லை.

இ-ள். பாம்பின் சட்டைபோன்ற நடைப்பாவாடை விரிந்து (ஆகாயமேலே) பரப்பிய மலரின் தேன்வெள்ளம் திருவடியையும் (தேவர்கள் பொழியும்) மந்தாரமலரி ன் தேன்வெள்ளம் திருமுடியையும் நனைக்கச் சுந்தரேசர் உள்ளே யெழுந்தரு (ளிவேதி கையிலே திருவடிவைக்கும்)போது —எ-று (கசுஎ)

மங்கல மகளி ரோடுங் காஞ்சன மாலை வந்து
கங்கையின் முகந்த செம்பொற் கரகநீ ரனையார் வாங்கத்
திங்களங் கண்ணி வேய்ந்த சிவபரஞ் சோதி பாத
பங்கயம் விளக்கி யந்நீர் தலைபெய்து பருகி னின்றாள்.

இ-ள். காஞ்சனமாலைவந்து கூடவந்த சுமங்கிலிகள் கங்காதீர்த்தத்தைக் கரக த்தால் வார்க்கச், சுந்தரேசரது திருவடிக் கமலங்களைச் சுத்திசெய்து அத்தீர்த்தத்தை முடிமேற் புரோட்சித்து உள்ளும் பருகினின்றாள்.—எ-று (கசுஅ)

பாதநாண் மலர்மே லீரம் புலரவெண் பட்டா லொற்றிச்
சீதமென் பனிநீ ராட்டி மான்மதச் சேறு பூசித்
தாதவிழ் புதுமந் தாரப் பொன்மலர் சாத்திச் சென்னி
மீதிரு கரங்கள் கூப்பி வேறுநின் றிதனைச் சொன்னாள்.

இ-ள். புதிய (கமல) மலர்போலும் திருவடியின் ஈரம் உலரும்படி வெள்ளிய பட்டுப் பரிவட்டத்தால் ஒற்றிப் பனிநீர் அபிடேகித்துக் கஸ்தூரிகலந்த (சந்தனக்) குழ ம்பு பூசி மந்தாரமலர்சாத்தி முடிமேல் இருகரங்களையுங் குவித்து அயலேநின்று இதனை விண்ணப்பஞ் செய்யத்தொடங்கினாள்.—எ-று. (கசுகூ)

அருமையா லடியேன் பெற்ற வணங்கினை வதுவை செய்தித்
திருநகர்த் திருவுங் கன்னித் தேயமுங் கைக்கொண் டாளென்
றுரைசெய்தா ளதற்கு நேர்வா ருண்ணகை யுடைய ராகி
மருகனா ரியங்க ளார்ப்ப வதுவைமண் டபத்தைச் சேர்ந்தார்.

இ-ள். அடியேனுடைய தவபுத்திரியை(த் தேவரீர்) திருமணஞ்செய்து இம் மதுரைநகர்ச் செல்வமும் பாண்டிநாடும் கைப்பற்றி ஆளக் கடவீரென்று விஞ்ஞாபித்தான். அதற்குத் திருவுளங்கொண்டருளுகின்ற மருகராகிய சுந்தரேசர் திருப்புன்முறுவல் செய்து திருமணமண்டபத்தை அடைந்தருளினார்.—எ-று. (கஙo)

அருத்தநான் மறைக ளார்ப்ப வரிமணித் தவிசி லேறி
யிருத்தனுங் கிருந்துசூழ நின்றமா லயனை யேனை
யுருத்திரா தியரைப் பின்னு மொழிந்தவா னவரைத் தத்த
மிருத்தகு தவிசின் மேவத் திருக்கடை நாட்டம் வைத்தான்.

இ-ள். (அடைந்த) சுந்தரேசர் சிங்காதனத்தில் இருந்தருளித் தம்மைச் சூழநின்ற விஷ்ணுவாதி தேவரை அவரவர்க்குரிய ஆசனத்தில் இருக்கும்படி திருக்கடைக்கண் வைத்தருளினார்.—எ-று. அருத்தம் - பொருளமைந்த. (கஙக)

விண்டல வானோ ரேனோ மிடைதலான் ஞாலச் செல்வி
பண்டைய ளனறி யின்று பரித்தனள் பௌவ மேழு
முண்டவன் றன்னைத் தானின் றுத்தரத் திருத்தி னானோ
வண்டர்நா யகன்ற னாணை வலியினோ வறியே மம்மா

இ-ள். அனைவரும் நெருங்குதலாலே பூதேவி இமயமலையில் நிகழ்ந்த திருமணக் காலத்துச் சாய்ந்ததுபோலச் சாயாமல் இப்பொழுது (அனைவரையும்) தாங்கினாள் சுந்தரேசர் அகஸ்தியமகாமுனிவரை இப்போது வடதிசையில் இருத்தினமையாலோ (அல்லது) தமதாஞ்ஞாசத்தியாலோ (யாம்) அறியோம்.—எ-று. (கஙஉ)

மாமணித் தவிசில் வைகி மணவினைக் கடுத்த வோரை
தாம்வரு மளவும் வானத் தபநிய மலர்க்கொம் பனனார
காமரு நடன நோக்கிக் கருணைசெய் திருந்தா னிப்பாற்
கோமகள் வதுவைக் கோலம் புனைதிறங் கூற லுற்றேன்.

இ-ள். (சுந்தரேசர்) இரத்நாசனத்தில் அமர்ந்து திருமணச் சடங்குக்குரிய மற்றையவும் இலக்கினமும் வரும்வரை தேவமகளிர் ஆடலை நாடிக்கொண்டிருந்தார் இனித் தடாதகைப் பிராட்டியார் திருமணக் கோலங்கொள்ளுந் தன்மையை (யான்) கூறத் தொடங்கினேன்.—எ-று. தபநியம் - பொன். (கஙங)

மாசறுத் தெமையா ணந்த வாரிநீ ராட்டிப் பண்டைத்
தேசுரு விளக்க வல்ல சிவபரம் பரையைச் செம்பொ
னாசனத் திருத்தி நான மணிந்துகுங் குமச்சே றப்பி
வாசநீ ராட்டி னாகண் மதிமுகக் கொம்ப ரன்னார்.

இ-ள். (மும்மலக்) குற்றத்தைப்போக்கி எங்களை (நிரதிசய) இன்ப வெள்ளநீரில் மூழ்குவித்து அநாதியாகிய சிவத்துவத்தை விளக்கவல்ல சிவசத்தியாகிய பிராட்டியாரை ஆசனத்தில் எழுந்தருளச்செய்து கஸ்தூரியணிந்து குங்குமக்குழம்பு பூசி வாசநீரால் நீராட்டினார்கள் பெண்கள்.—எ-று. (கஙச)

பூரசொடு சங்க மேங்க மூழ்கிநுண் டூசு சாத்தி
யாசிய லறத்திற் சேற்ப வந்தணர்க் குரிய தானம்
விரைசெறி தளிர்க்கை யார வேண்டிவ வெறுப்பத் தந்து
திரைசெய்நீ ரமுத மன்ன டிருமணக் கோலங் கொள்வாள்.

இ-ள் பிராட்டியார் மூழ்கி வஸ்திரந் தரித்து இராஜதருமத்துக்கேற்க அந்தண ர்க்குரிய தானமுதலியன செய்து திருமணக்கோலங் கொள்வாராயினார்.—எ-று. (கஅ௫)

செம்மலர்த் திருவும வெள்ளைச் செழுமலர்த் திருவுந் தங்கள்
கைம்மலர்த் தவப்பே றின்று காட்டுவார் போல நங்கை
யம்மல ரனிச்ச மஞ்சு மடியிறசெம பஞ்சு நீட்டி
மைம்மலர்க் குழன்மேல் வாசக் காசறை வழியப் பெய்து.

இ-ள். இலக்குமியுஞ் சரசுவதியும் தங்கள் கைகளின் தவப்பயனை இன்று விள க்குவாராய்ப் பிராட்டியாரது அனிச்சமலரிற் றேய அஞ்சுந் திருவடியிலே செம்பஞ்சுக் குழம்பூட்டிக் கூந்தலில மயிர்ச்சாந்து வழியச் சாத்தி.—எ-று. போல-அசை. (கஅ௬)

கொங்கையின் முகட்டிற சாந்தங் குளிர்பனி நீர்தோய்த் தட்டிப
பங்கய மலர்மே லன்னம் பவளச்செவ் வாயவிட் டரற்றத்
தங்கிய தென்ன வார நூபுரந் ததும்பச் செங்கே
ழுங்கதிர்ப் பாத சாலங் கிணகிணி யலம்பப் பெய்து.

இ-ள். தனத்தின் உச்சியிலே பனிநீர்கலந்த சந்தனத்தை அப்பி, கமலமலர் மேல் அன்னப்புள் ஒலித்தற்குத் தங்கியதுபோல நூபுரமும் பாதசாலமும் கிங்கிணி யும் ஒலிக்கும்படி திருவடிகளிற் பொருந்த அணிந்து.—எ-று. (கஅ௭)

எண்ணிரண் டிரட்டி கோத்த விரிசிகை யிருபத் தொன்றிற்
பண்ணிய கலாப மீரேழ் பருமநா லிரண்டிற் செய்த
வண்ணமே கலையி ரண்டிற் காஞ்சியிவ் வகையோ ரைந்தும்
புண்ணியக் கொடிவண் டார்ப்பப் பூத்தபோற் புலம்பப் பூட்டி.

இ-ள். விரிசிகைமுதலிய ஐந்தினையும், புண்ணிய வடிவக்கொடி வண்டொ லிக்கப் பூத்ததுபோல (இடையில) ஒலிக்கும்படி அணிந்து.—எ-று. (கஅ௮)

பொன்மணி வண்டு வீழ்ந்த காந்தளம போது போல
மின்மணி யாழி கோத்து மெல்விரற் செங்கைக் கேற்ப
வன்மணி வைர யாப்புக் கடகமுந் தொடியும வானத்
தென்மணிக் கரங்கள் கூப்ப விருதடந் தோளி லேற்றி.

இ-ள். பொன்வண்டும் நீலவண்டும் வீழ்ந்த காந்தள்மலர்போல விரல்களிலே நீலமணிபதித்த பொன்மோதிரம் தரித்து, சிவந்த கைகளுக்குப் பொருந்த வலிய வைர மணியழுத்திய கடகங்களும் இரண்டு தோளகளிலே தொடிகளும் ஆகாயத்துள்ளாவுஞ் சூரியன் கைகள் குவிக்கும்படி அணிந்து.—எ-று. (கஅ௯)

மரகத மாலை யம்பொன் மாலைவித் துரும மாலை
நிரைபட வான வில்லி னிழல்பட வார தாமம்
விரைபடு களபச் சேறு மெழுகிய புளகக் கொங்கை
வரைபடு மருவி யன்றி வனப்புநீர் நுரையு மான.

இ-ள். வாசனைக் கலவைச்சேறு பூசிய புளகமரும்பிய தனங்களில், மரகதம் பொன் பவளம் இவற்றின் மாலைகளை இந்திர தநுசைப்போல ஒளிவீச வரிசையாகவும், முத்துமாலையானது மலையின் அருவியை (ஒத்திருத்தலும்) அன்றி அழகியநீரில் எழுந்த நுரையையும் ஒத்திருக்கவும் —எ-று. (கசுO)

உருவமுத் துடுவா யம்முத் துடுத்தபல் காசு கோளாய்
மருவவக் காசு சூழ்ந்த மாமணி கதிராய்க் கங்குல்
வெருவவிட் டிமைக்கு மார மேருவின் புறஞ்சூழ்ந் தாடு
துருவசக் கரம்போற் கொங்கை துயல்வர விளங்கச் சூட்டி.

இ-ள். அழகிய முத்துகள் நக்ஷத்திரங்களாகவும் அம்முத்துகளைச் சூழ்ந்த பல விரத்தினங்கள் கோள்களாகவும் அவ்விரத்தினங்களைச் சூழ்ந்த நடுநாயகமணி சூரியனாக வும் பொருந்த(ப் புனைந்த) இருளஞ்சியோட ஒளிவீசி விளங்கும் பதக்கமானது மேரு வின் புறஞ்சூழ்ந்து செல்லுந் துருவசக்கரம்போல அத்தனங்களிலே தொங்கி யசைய த்தக்கதாகவும் அணிந்து.—எ-று. (கசுக)

கொடிக்கய லினமாய் நின்ற கோட்சுற வேறும் வீறு
தொடிக்கலை மதியுந் தங்கோன் றொல்குல விளக்காய்த் தோன்றும்
பிடிக்கிரு காதி னூடு மந்தணம் பேசு மாபோல
வடிக்குழை மகரதோடு பரிதிவாண் மழுங்கச் சேர்த்து.

இ-ள். கொடியில் எழுதப்பட்ட கயலுக்கு இனமாய் நின்ற வலிய மகரவேறும் உயருங் கலைகளுடைய வட்டமாகிய சந்திரனும் தந்தலைவனாகிய மலயத்துவஜ பாண்டி யனுடைய பழைய குலதீபமாய் அவதரித்த பெட்டையானைபோலும் பிராட்டியாரது இருசெவியிலும் இரகசியம் பேசு முறைபோல நீட்சியுடைய குழையினை மகரகுண்டல த்துடன் சூரியன் ஒளிமழுங்க அணிந்து.—எ-று. பாண்டியா குலதீபத தலைவியாராகிய வுமக்குக் கிடைத்த தலைவர்க்கு ஒரு குலமுங் கிடையாதென்பதை யறிவிக்குங் குறிப் பை மந்தணம் பேசுமாபோ லெனறா (கசுஉ)

மழைக்குமா மதிக்கு நாப்பண் வானவிற் கிடந்தா லொப்ப
விழைக்குமா மணிசூழ் பட்ட மிலம்பக மிலங்கப் பெய்து
தழைக்குமா முகிலை மைந்தன் றளையிடல் காட்டு மாபோற்
குழைக்குநீர்த் தகர ஞாழற் கோதைமேற் கோதை யார்த்து.

இ-ள் மேகத்துக்கும் பூரணசந்திரனுக்கும் இடையே இந்திர தநுசு கிடந்தாற் போல மணிகள் பதித்த பட்டமும் நுதலணியும் (நெற்றியில்) அணிந்து, (இனிப்) புதல் வராகிய உக்கிர குமாரபாண்டியர் மேகத்தைத் தளையிடுவதைக் காட்டுமுறைபோலப்பனி நீர்விட்டுக்குழைத்த மயிர்ச்சாந்தணிந்த கூந்தலின்மேல மலர் மாலை யணிந்து.—எ-று.()

கற்பகங் கொடுத்த விந்தக் காமரு கலன்க ளெல்லாம்
பொற்பமெய்ப் படுத்து முக்கட் புனிதனுக் கிறு,லாத
வற்புத மகிழ்ச்சி தோன்ற வழகுசெய் தமையங் தோமமுச
சொற்கலே யாளும் பூவின கிழத்தியுந தொழுது நோககி.

இ-ள். (இங்ஙனம்) எல்லா அணிகளையும் (பிராட்டியாரது) அழகிய திருமேனியிலே, சுந்தரேசருக்கு முடிவில்லாத ஆச்சரியத்தோடு மகிழ்ச்சியுண்டாக அலங்காரஞ் செய்தவழி முகூர்த்தகாலம்வரச் சரசுவதியும இலக்குமியும் வணங்கி நோககி.—எ-று.

சுந்தர வல்லி தன்னைச் சோபன மென்று வாழ்த்தி
வந்திரு கையுந் தங்கண் மாநதளிரக் கைக நீட்டக
கொந்தவிழ் கோதை மாது மறமெலாங் குடிகொண டேறு
மந்தளிரச் செங்கை பற்று வெழுந்தனண மறைக ளார்ப்ப.

இ-ள். பிராட்டியாரை வாழ்த்தி இருபுறமுமவந்து தஙகள இருகரமும் நீட்ட (அவைகளை) அப்பிராட்டியாரும திருககரஙகளாற் பற்றி எழுந்தருளினர்.—எ-று. அறமெலாம் - முப்பத்திரண்டு தருமஙகளும (கசுரு)

கலிவிருத்தம.

அறைந்தன தூரிய மார்த்தன சஙக
நிறைந்தன வானவர் நீணமலா மாரி
யெறிந்தன சாமரை யேநதிழை யாரவாய்ச்
சிறந்தன மங்கல வாழ்தமெழு செல்வம்.

இ-ள். வாத்தியங்களுஞ் சஙகங்களும ஒலித்தன. தேவர்களது புஷ்பவருஷங்கள் நிறைந்தன. சாமரைகள் வீசப்பட்டன. பெணகளின்வாயில வாழ்ததாக எழுகின்ற செல்வங்கள் சிறந்தன.—எ-று. (கசுசு)

அடுத்தன ளிந்திரி யமபொ னடைபபை
யெடுத்தன ளாடி திலோத்தமை யேநதிய
பிடித்தனள் விந்தை பிடிததனள் பொற்கோ
லுடுத்த நெருக்கை யொதுக்கி நடந்தாள.

இ-ள். இநதிராணி அடுத்து அடைப்பை தாஙகினள். திலோத்தமை கண்ணுடிபிடித்தனள. வீரலட்சுமி பொற்கோலகொணடு சூழ்ந்த நெருககை விலக்கி நடந்தாள்.—எ-று. அடுததனள் பிடிததனள - முற்றெசசஙகள. (கசுஎ)

கட்டவிழ் கோதை யரம்பைக ளாஞ்சி
தொட்டன ளூரப்பசி தூமணி யால
வட்டம சைத்தனள் வன்னம ணிக்கா
சிட்டிழை கோடிக மேநகை கொணடாள்.

இ-ள். அரம்பை காளாஞ்சி யேந்தினள் ஊரவசி தூய இரத்ந ஆலவட்டம் அசைத்தனள். மேநகை நிறமும் அழகும் பெற்ற மணியழுத்திய பூந்தட்டேந்தினள்.—எ-று. (கசுஅ)

கொடிகளெனக்குளிர போதொடு சிந்தும
வடிபனி நீரினர் வீசுபொன் வண்ணப்
பொடியின ரேந்திய பூம்புகை தீபத்
தொடியணி கையினர் தோகையர் சூழ்ந்தார்.

இ-ள். கொடிகள்போலும் பூக்களோடு தூவும் வடித்த பனிநீரினரும், (வாசம்) வீசும் பொன்னிறப் பொடியினரும், அழகிய புகைபொருந்திய தீபமேந்திய கையினருமாகிய மடவாருஞ் சூழ்ந்தனர்.—எ-று. (கசுகூ)

தோடவிழ் கோதையர் சோபன கீதம
பாடவி ரைபபனி நீரொடு சாநத
மேடவிழ் மென்மல ரிட்டப டத்திற்
பாடக மெலலடி யைப்பைய வையா.

இ-ள். இதழ்விரிந்த பூக்களையணிந்த கூந்தலுடைய (சில) பெண்கள் மங்கல சங்கீதம்பாட, பனிநீருஞ் சந்தனமும் மலர்களும் இட்ட நடைபாவாடையிலே பாடக மணிந்த மெல்லிய திருவடிகளைப் பிராட்டியார் மெல்லவைத்து.—எ-று. (கஎo)

செம்மல ராளொடு நாமக டேவி
கைம்மலர் பற்றின கல்வியொ டாக்க
மிம்மையி லேபெறு வார்க்கிது போதென்
றம்மணி நூபுர மார்ப்பந டந்தாள்.

இ-ள். இலக்குமி சரசுவதிகளின் கைகளைப் பிராட்டியாரது கைமலர்கள் பற்றினமையால் இம்மையிலே செல்வங் கல்விகளைப் பெறுவார்க்கு இது சமயமென்று அழகிய இரத்ந நூபுரங்கள் ஒலிக்க நடந்தார்.—எ-று (கஎக)

ஒலகினண் மெல்ல வொதுங்கின ளன்பு
நிலவி யிருந்த பிரானரு கெய்தி
மெலகி யெருத்த மிசைத்தலை தூக்கிப்
புல்கிய காஞ்சி புலமபவி ருநதாள்.

இ-ள். (நடந்துபிராட்டியார்) துவண்டு மெல்ல ஒதுங்கி (த்தம்மேல்) அன்பு நிறைந்திருந்த சுந்தரேசரதருகே அடைந்து மெல்கிப் பிடரின்கண் (தமது) திருமுடிவைத்துப பொருந்திய காஞ்சியொலிக்க அமர்ந்தருளினர்—எ-று. ஒல்கினள் ஒதுங்கினள், முற்றெச்சங்கள். (கஎஉ)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

அற்பக விமைக்குஞ் செம்பொ னரதன பீடத் தும்பர்ப்
பொற்பக லாத காட்சிப் புனிதனோ டிருந்த நங்கை
யெற்பகல் வலங்கொண் டேகு மெரிகதிர் வரையி னுச்சிக்
கறபக மருங்கிற் பூதத காமரு வல்லி யொத்தாள்.

இ-ள். இருள்கெட விளங்கும் மணிகள்பதித்த செம்பொற் பீடத்தின்மேலே சுந்தரேசரோடு அமர்ந்தருளிய பிராட்டியார், மேருமலையின் உச்சியிலே கற்பகவிருட்ச

த்தின் அருகிலே மலர்ந்த அழகிய கொடிபோன்றார் —எ-று. விளங்குஞ் சூரியன் இராப்பகல் வலம்வருமலையென்க (கஎரு)

பண்ணுமின் னிசையு நீருந் தண்ணளியும் பாலுமபாலி
னண்ணுமின் சுவையும் பூவு நாற்றமு மணியு மங்கேழ்
வண்ணமுமவேறு வேறு வடிவகொண் டிருந்தா லொத்த
தண்ணலு முலக மீன்ற வம்மையு மிருந்த தம்மா.

இ-ள். சுந்தரேசரும் பிராட்டியாரும் எழுந்தருளியிருந்தல், பண்முதலியவும் இசைமுதலியவும் வெவ்வேறு வடிவுகொண டிருந்தாற்போன்றது. (கஎசு)

விண்ணுளார் திசையி னுளளா வேறுளார் பிலத்தி னுள்ளார
மண்ணுளார் பிறரும் வேள்வி மண்டபந் தடங்கி யென்றும்
பண்ணுளா ரோசைபோலப் பரந்தெங்கு நிறைந்த மூன்று
கண்ணுளா ரடியி னீழல் கலந்துளார் தம்மை யொத்தார்.

இ-ள். அனைவரும் சிவபிரான் திருவடிநிழலிற் கலந்தவரபோலத் திருக்கல்யாணமண்டபத்தில அடங்கி ஆநந்தமடைந்தார்.—எ-று. பண்ணும ஓசையும்போல நிறைந்தவென்க. (கஎரு)

ஆயபோ தாழி யங்கை யண்ணல்பொற் கரக நீராற்
சேயவான் சோதி யாடற் சேவடி விளக்கிச் சாந்தந்
தூயபோ தவிழச் சாத்தித் தூபமுஞ் சுடருங் கோட்டி
நேயமோ டருச்சித் தைய னிறையருள் பெற்று நின்றான்.

இ-ள். இப்படிப்பட்ட சமயத்தில் விஷ்ணுமூர்த்தி கரகஜலத்தினாலே சுந்தரேசரது திருவடிகளைச் சுத்திசெய்து கந்தபுஷ்பங்கள் சாத்தித் தூபதீபங்கள்காட்டிப் பத்தியொடு பூசித்து அப்பரசிவன் திருவருளபெற்று நின்றார.—எ-று (கஎசு)

விண்டலத் தவரு ளாதி வேதியன் பாத நீர்த்த
முண்டகத் தவனு மாலு முனிவரும புரந்த ராதி
யண்டரு நந்தி தேவு மடிகணத் தவரு மேனைத்
தொண்டரும் புறம்பு முள்ளு நனைத்தனர் சுத்தி செய்தார.

இ-ள். தேவர்களுள்ளே முதன்மைபெற்ற பிராமணராகிய சுந்தரேசரது பாததீர்த்ததை அரிபிரமர் முதலிய அனைவரும் உள்ளேபருகிப் புறத்தே புரோட்சித்துச் சுத்திசெய்தார்.—எ-று. (கஎஎ)

அத்தலை நின்ற மாயோ னதிசெங் கரத்து நங்கை
கைத்தலங் கமலப் போது பூத்ததோர் காந்த ளொப்ப
வைத்தரு மனுவா யோதக் கரகநீர் மாரி பெய்தான்
றொத்தலர் கணணி விண்ணோர் தொழுதுபூ மாரி பெய்தார.

இ-ள் அவ்விடத்தே நின்ற விஷ்ணு சுந்தரேசரது திருக்கரமாகிய கமலமலரிலே பிராட்டியாரது திருக்கரமாகிய காந்தள்மலரை வைத்து மந்திரம் உச்சரித்துக்

கரகநீரைவார்த்தார். தேவர்கள் வணங்கிப் பூமழைபொழிந்தார்.—எ-று. காத்தற் கடவுளாகிய விஷ்ணு தேவர்களுள்ளே க்ஷத்திரியராதலின் க்ஷத்திரியவேடம் பூண்ட. சுந்தரேசரது திருக்கையிலே பிராட்டியாரைத் தத்தஞ்செய்தார் என்பது கருத்து. இனம்பற்றிப் பிரமா வைசியனென்பதும் இந்திரன் சூத்திரனென்பதும் கொள்க. (கஎஅ)

ஆடினா ரரம்பை மாதா விஞ்சைய ரமுத கீதம்
பாடினா ரரவென் றார்த்துப பரவினார் முனிவர் வானோர்
மூடினா புளகப் போர்வை கணத்தவர் முடிமேற் செங்கை
சூடினா பலரு மன்றற் றொடுகட லின்பத் தாழ்ந்தார்.

இ-ள். வெளி. அரகரவென அடுக்கியுரைக்க. பலர் - மற்றையோர், மன்றல் - திருமணம் (கஎகூ)

பித்தனா ரெறிந்த கலலும் போதென பிலைந்த வேத
வித்தனா ரடிக்கீழ வீழ விண்ணவா முனிவ ரோனோர்
சுத்தநா வாசி கூறிக் குங்குமத் தோயந தோய்ந்த
முத்தவா லரிசி வீசி மூழ்கினா போக வெள்ளம்.

இ-ள். சாக்கியநாயனார் எறிந்தகல்லும் (அன்புபற்றி) மலராகச்சூடிய உயர்ந்த வேதகாரணராகிய சுந்தரேசர் திருவடிக்கீழ் வீழும்படி தேவாமுதலாயினார் நாவால் ஆசிர்வதித்து முத்துப்போலும் வெள்ளிய அரிசியைக் குங்குமநீரிலே கலந்து வீசி இன்பப் பெருக்கில் அமிழ்ந்தினார்.—எ-று. (கஅ0)

அம்மையோ டப்ப னென்ன வலர்மணம் போல நீங்கார்
தமமருள் விளையாட் டாலே யாற்றநாட் டமியர் போல
நம்மனோர் காணத் தோனறி நன்மணம புணர ஞால
மும்மையு முய்ந்த வென்றுந் தத்தமின மொழிய லுற்றார்.

இ-ள். (உயிர்கட்கெல்லாம் அறிவைப் பிறப்பிக்கும்) அம்மையும் அப்பருமென்று சொல்லப்பட்ட பூவு மணமும்போலப் பிரியாதவராகிய சுந்தரேசரும் பிராட்டியாரும் தமதருள்விளையாட்டினாலே நெடுங்காலம் பிரிந்தவர்போலக் காணப்பட்டு (இப்பொழுது) திருமணஞ் செய்ததமையால் எவ்வுலகும் பிழைத்ததென்று தங்கள் தங்களுள்ளே (அனைவரும்) புகழ்ந்தனர்.—எ-று ஞாலமும்மை உபலக்கணம் (கஅக)

காமரு சுரபித் தீம்பால் கற்பகக் கனிநெய் கன்ன
லாமரு சுவைய வின்ன நறுமது பருக்கஞ் செம்பொ
னாமணி வட்டத் திண்காற் பாசனத் தமையப் பெய்து
தேமரு கொன்றை யானைத் திருக்கைதொட் டருள்க வென்றார்.

இ-ள். பசுப்பால், வாழைக்கனி, நெய், சர்க்கரையாகிய மதுபர்க்கத்தை மணியழுத்திய பொற்பாத்திரத்திலே வார்த்துத் திருவமுது செய்தருளுகவென்று சுந்தரேசரை(ச் சமஸ்தரும்) பிரார்த்தித்தார்.—எ-று. பர்க்கம், சேர்க்கை. (கஅஉ)

அங்கைவைத் தமுது செய்தாங் ககமகிழ்ந் தட்ட மூர்த்தி
கொங்கவிழ் குமுதச் செவ்வாய் கோட்டிவாண் முறுவல் பூத்தான
புங்கவர் முனிவர் சுறபின் மகளிரும்போதின் மேய
மங்கைய ரிருவ ரோடு மங்கலம பாட லுற்றார்.

இ-ள். சுந்தரேசா (அமமதுபர்க்கததைத்) திருக்கரததாற் பரிசித்துத திருவமு து செய்தருளினாற்போலத் திருவுள மகிழ்ந்து திருவாய் குவித்துத் திருப்புன்முறுவல் செய்தருளினர். (அப்பொழுது) தேவா முனிவருடைய பத்தினிகள் இலக்குமி சரசுவ திகளொடு மங்கலவாழ்ததுப் பாடத் தொடங்கினார்கள்.—எ-று. (கஅக)

மாக்கடி முளரி வாணன் மைந்தரோ டொருங்கு வைகி
நாக்களி னடுநா வாரத சுடுவையா னறுநெ யார்த்தி
வாகிட வார மாநதி வலஞ்சுழித் தகடு வீங்கித
தேக்கிடு மொலியி னார்ததெ ழிமிாநதது தெய்வச செந்தீ.

இ-ள். பிரமா. சநகாதிமுநிவரோடு (ஓமகுண்டத்து முன்னே) இருந்து எழுநா க்களில் நடுநாவாற சுவையறியும்படி சுருக்கு சுருவஙகளால் நெய்யை நிரப்பிவார்க்க அக்கினிதேவன் அருந்தி வலஞ்சுழிதது வயிறு நிரம்பித தேக்கெறியும் ஓசைபோல ஒலி த்து எழுந்தான்.—எ-று. மாககடி-உயர்வுடைய வாசனே. (கஅச)

சுற்றுநான் மறைக ளார்ப்பத் தூரியஞ் சங்க மேங்கக்
கற்றநான் முகத்தோன வேள்விச சடங்குநூல கரைநத வாற்றான்
முற்றமங் கலநாண் சாத்தி முழுதுல கீன்றாள் செங்கை
பற்றினன் பற்றி லார்க்கே வீடருள பரம யோகி.

இ-ள். பிரமா, வேதசிவாகமங்கள் கூறியபடி திருமணச் சடங்கினை முடிக்க, சுந்தரேசர் மஙகல சூததிரம அணிநது பிராட்டியாரது திருககையைப் பறறியருளி னார்—எ-று. அநாதிமுததராகிய சுந்தரேசா, யோகமூர்த்தியாய் யோகிகட்கு யோகமு ததி அருளிப், போகமூாத்தியாய்ப் போகிகட்குப் போகமும் அருளுவாரொனபார், பற்றி லார்க்கே வீடருள் பரமயோகி யுலகீன்றாள் செங்கைபற்றின னெனறா. (கஅரு)

இணரெரித் தேவுந் தானே யெரிவளாப் பவனுந தானே
யுணவுகொள் பவனுந தானே யாகிய வொருவன் வையம
புணாவுறு போக மூழ்கப் புருடனும பெண்ணு மாகி
மணவினை முடிததா னன்னான் புணர்ப்பையார் மதிக்க வல்லார்.

இ-ள். பலசுடரையுடைய அக்கினியும் அக்கினியை வளர்ப்பவனும் அக்கினிமு கமாக அருந்துங் கடவுளும் தாமேயாகிய சிவபிரான் உயிர்கள் போகததை யநுபவிக்கும் படி சுந்தரேசரும் பிராட்டியாருமாகி ஓமச் சடஙகினை முடித்தருளினர். அவரது செ யலை உணரவல்லார் யாவா. (ஒருவருமில்லை).—எ-று. (கஅசு)

பின்புதன் பன்னி யோடு பிறைமுடிப் பெருமான் கையி
னன்பொரி வாங்கிச் செநதீ நாமடுத் தெனைத்து மான
தன்பயு வுணர்நத வேத முனிவாக்குத தக்க தானை
மின்பகந ததும்ப நலகி யெரிவல முறையால வநது

இ-ள். பின்பு சுந்தரேசர் தந்தேவியாரோடு திருக்கையிலே பொரியை வாங்கி அக்கினியிற் பெய்து முனிவர்களுக்கு மனமகிழத் தானஞ்செய்து அவ்வக்கினியை வலம் வந்து.—எ-று. தன்-சிவம். படிவம படியென ஈறுதொக்கது. (கஅஎ)

மங்கலம் புனைந்த செம்பொ னம்மிமேன் மணுட்டி பாத
பங்கய மலரைக் கையாற் பரிபுரஞ் சிலம்பப் பற்றிப
புங்கவன் மனுவா லேற்றிப புண்ணிய வசிட்டன் றேவி
யெங்கெனச் செங்கை கூப்பி யெதிரவர வருட்கண் சாத்தி.

இ-ள். சுந்தரேசர், மங்கலமாக அலங்கரித்த அம்மிமீது தேவியாரது திருவடிக் கமலத்தைத் திருக்கையாலே பற்றி [இந்தக் கல்லிலே நிற்கக்கடவாய் இந்தக் கல்லைப்போல (நம்மிடத்தே) நிலையாயிருக்கக கடவாய என்னும் பொருளுடைய வைதிக] மந்திரம் ஓதி ஏற்றி, அருந்ததி எங்கேயென்று வினவ அவ்வருந்ததி கைகுவித்து எதிரேவரத் திருவருணோக்கம் வைத்து.—எ-று. வலததிருககரத்தாலே தேவியாா திருக்கரத்தைப்பறறி யிருததலால் இடததிருககரததாலே தேவியாா திருவடியைப்பற்றி ஏற்றினரெனபது கருத்து. (கஅஅ)

விதிவழி வழாது வேள்வி வினையெலா நிரம்ப விங்ங
னதிர்கட லுலகந்தேற வாற்றினான் மறைக ளார்ப்பக்
கதிர்மணி நகையரா வாழ்த்தக் காமனைக் காய்ந்த நம்பி
மதிநுதன் மங்கையோடு மணவறை தன்னிற் புக்கான்

இ-ள் இங்ஙனம் விதிபபடி திருமணச சடங்குகளை உலகந்தெளியும்வண்ணம் சுந்தரேசா முற்றுவிதது வேதங்கள முழங்கவும் பெண்கள் வாழ்த்தவும தேவியாரோடு திருமணவறையிற் புகுந்தருளினர்.—எ-று. (கஅகூ)

மனிதரு மிமையா தையன் மங்கல வனபபு நோக்கிப்
புனிதவா னவரை யொத்தா ரவர்க்கது புகழோ வெந்தை
கனிதரு கருணை நாட்டம் பெற்றவா கடவு ளோராற
பனிதரு மலரிட் டேத்தி வழிபடற் பால ரன்றே.

இ-ள். சுந்தரேசரது பேரழகை மானுடருங் கண்டு தேவர்போலும் இமையாநாட்டம்பெற்றனர். அவருக்கு அது புகழாமோ? அப்பெருமான் திருவருணோக்க முற்றவர் தேவராற் பூசிக்கறபால ரல்லவா—எ-று. (ககூ0)

மானுட ரிமையோ ரென்னும வரம்பில ராகி வேள்வி
தானிட ரகல நோக்கித் தலைத்தலை மயங்கி நின்றார்
கானிட நடனஞ் செய்யுங் கண்ணுத லருட்க ணோக்கா
லூனிட ரகலு நாளி லுயர்ந்தவ ரிழிந்தோ ருண்டோ.

இ-ள். மனிதர் தேவர் என்கிற எல்லையில்லாதவராய்த் திருமணச் சிறப்பைத் தரிசித்து இடந்தோறுங் கலந்துநின்றார். சிவபிரான தருட்பார்வையாற் பிறவித்துன்பம் ஒழியுங்கால் உயர்ந்தவர் தாழ்ந்தவர் இல்லை யல்லவா.—எ-று. கான் - சர்வசங்காரமான மயானம். (ககூக)

மணவறைத் தவிசி னீங்கி மன்றன்மண் டபத்திற் போந்து
கணமணிச் சேக்கை மேவிக் கருநெடுங் கண்ணன் வாணி
துணைவனே முதல்வா னோர்க்குஞ் சூழ்கணத் தொகைக்குமென்றுந்
தணவறு செலவந் தந்தோன் சாறுசால சிறப்பு நல்கி.

வெட்டுவாய் முளரி யான்மா லேனைவா னவருந் தத்த
நாட்டுவாழ் பதியிற் செலல நலவிடை கொடுத்துவேந்தர்க்
காட்டுவா னடிக் காட்டுந் தன்மைபோ லரசு செய்து
காட்டுவா னாகி யையன் றிருவுளங் கருணை பூத்தான.

இ-ள். அரிபிரமாதியோர்கக்கு எனுநான்றும் நிசநியச் செல்வத்தைத் தாதரு ளியவராகிய சுந்தரேசர் திருமணவறையி லின்று நீங்கித் திருககல்யாண மணடபத திற்கு வந்து இரதநாசனத்து வீற்றிருந்து அம்மகோற்சவத்திற்கு அமைந்தவரிசைகளை (அவ்வனைவாக்குய) கொடுத்தருளி அவ்வனைவருந் தங்கள தங்கள் பதவிகளிற் செலலு மபடி விடையருளி ஆட்டுபவன் ஆடிக்காட்டுந் தன்மைபோல அரசர்க்கு அரசாட்சி செய்து காட்டுவோராய்த் திருவுளங்கொண டருளினா.—எ-று. கணம்-கூட்டம். தந்தோன ஐயனென்று கூட்டுக. (கசுஉ)(கசுரு)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அதிர்விடைக் கொடியங் கயற்கொடி யாக வராக்கலன பொற்கல னாகப்
பொதியவிழ் கடுக்கை வேம்பல ராகப புலியதள் பொலந்துகி லாக
மதிமுடி வைர மணிமுடி யாக மறைகிடந தலம்புமா மதுரைப
பதியுறை சோம சுந்தரக் கடவுள பாணடிய னாகிவீற் றிருந்தான.

இ-ள். இடபக்கொடி மீனக்கொடியும், பாம்பணி பொனனணியும், கொன றைப்பூமாலை வேப்பம்பூமாலையும் புலித்தோல் பொன்னுடையும், சடாமுடி இரத்தினமுடியு மாகச் சுந்தரேசர் பாணடியராஜ வேடமபூண்டு வீற்றிருந்தார்.—எ-று. (கசுச)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

விண்டவழ் மதியஞ் சூடுஞ் சுந்தர விடங்கப் புத்தேள்
கொண்டதோர் வடிவுக் கேற்பக் குருதிகொப பளிக்குஞ் சூலந்
திண்டிறற் சங்கு கன்னன் முதற்கணத் தேவர் தாமும்
பண்டைய வடிவு மாறிப் பார்த்திவன் பணியி னின்றார்.

இ-ள். பேரழகராகிய சுந்தரேசர் கொண்டருளிய இராஜவேடத்துக்கு ஏற்பச் சங்குகன்னர் முதலாகிய சிவகணத்தலைவரும் தேவரும அமைச்சாமுதலிய வடிவங் கொண்டு அச்சுந்தரபாண்டியராஜரது பணிவிடையினின்றார்—எ-று. (கசுரு)

தென்னவன் வடிவங் கொண்ட சிவபர னுலகங் காக்கு
மன்னவர் சிவனைப பூசை செய்வது மறையா றெனறு
சொன்னது மன்ன றொல்லாந் துணிவது பொருட்டுத் தானு
மந்நகர் நடுவு ளொன்றோ ரணிநகர் சிறப்பக் கண்டான.

இ-ள். உலகங்காக்கும அரசா சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்வது முறையெ ன்று வேதத்தில் அருளியதை அரசர் அனைவரும் துணி(ந்து கைக்கொள்ளு)தற் பொ ருட்டுப் பாண்டியராஜ வேடம்பூண்ட சுந்தரேசா அம்மதுரைப்பதியில நடுவேயொன்று ஒரு நகரம் உண்டாக்கினர்.—எ-று. சிவபரன்றானு மெனக்கூட்டுக. (கசுசு)

மெய்ம்மைநூல் வழியே கோயில் விதித்தருட் குறிநி றீஇப்பே
ரிம்மையே நன்மை நல்கு மிறையென நிறுவிப் பூசை
செம்மையாற் செய்து நீப வனத்துறை சிவனைக் கால
மும்மையுந் தொழுது வைய முழுவதுங் கோன டாத்தும்.

இ-ள். (பின்பு அந்நடுவூரிலே சுந்தரபாண்டியர்) சிற்பநூன்முறையே ஆலயம் அமைத்துச் சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து இஷ்டப் பிரதேசுவரரென்றும், (தேவி திருவுருப் பிரதிஷ்டைசெய்து நடுவூர்நாயகியென்றும்) திருப்பெயரிட்டுப்பூசித்துத் திருவாலவாயில் எழுந்தருளியிருக்குஞ் சொக்கலிங்கப் பெருமானை முக்காலமும் வழிபட்டு உலகமெங்குஞ் செங்கோல் செலுத்தினர்.—எ-று. (ககஎ)

பூவரு மயன்மா லாதிப் புனிதரு முனிவ ரேனோ
யாவருந் தனையே பூசித் திகபர மடைய நின்ற
மூவருண் மேலா முக்கண் மூர்த்தியே பூசை செய்த
தாவர லிங்க மேன்மைத் தகுதியா ரளக்க வல்லார்.

இ-ள். பிரமாமுதலிய அனைவருந் தம்மையே பூஜித்து இருமைப்பயனும் அடையும் வண்ணம் நின்ற துரியமூர்த்தியாகிய சுந்தரேசர் பிரதிஷ்டைசெய் தர்ச்சித்த தாவர லிங்கமூர்த்தி மகிமையை யாவர் அளவிடற்பாலர்—எ-று. மூவருக்கு மேலாமென்பது மூவருண் மேலாமென வுருபுமயங்கியது. (ககஅ)

ஷை வேறு

மனித்த ருக்கர சாகித்தெவ் வேந்தர்க்கு மடங்கலாய் மடநல்லார்க்
கினித்த வைங்கணைக் காளையாய் நிலமகட் கிணர்த்துழா யணிமாலா
யனித்த நித்தமோர் திகபரத் தாசைநீத் தகந்தெளிந் தவர்க்கொன்றாய்த்
தனித்த மெய்யறி வானந்த மாம்பர தத்துவ மாய்நின்றான்.

இ-ள். (இங்ஙனம் பாண்டியராஜவேடம்பூண்ட சுந்தரேசர்) மானுடருக்கு அரசராயும்பகைமன்னராகிய யானைகளுக்குச்சிங்கமாயும் மடவார்க்கு மன்மதராயும்பூதேவிக்கு விஷ்ணுவாயும் நித்தியாநித்தியப்பொருளை ஆராய்ந்து (அநித்தியமாகிய) இம்மை மறுமைப்பயன்களில் விருப்பமொழிந்து மனந்தூயரானவர்க்கு ஏகமாகிய பதிப்பொருளாயும் ஒப்பற்ற சச்சிதாநந்த சொரூபமாகிய பரதத்துவப்பொருளாயும் நின்றார்.—எ-று. ()

திருமணப்படலமுற்றியது.

ஆகச்செய்யுள் - எகஅ.

---

ஆறாவது

# வெள்ளியம்பலத்திருக்கூத்தாடியபடலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உலகிய னிறுத்து வான்வந் தொருபரஞ் சுடர்வான் றிங்கட்
குலமணி விளக்கை வேட்டுக் கோமுடி கவித்துப பாராண்
டிலகுறு தோற்ற மீதான் முனிவர ரிருவர் தேற
வலகிலா னந்தக் கூத்துச் செய்தவா றறைய லுற்றாம்.

இ-ள். ஒப்பற்ற பரஞ்சோதியாகிய சுந்தரேசர் உலகியலை நிறுத்தும்பொருட்டுச் சுந்தரபாண்டியராய்ச் சந்திரகுலத்துக்கு இரத்ந தீபமாகிய தடாதகைப் பிராட்டியா

ளைத் திருமணஞ்செய்து இராஜமகுடஞ் சூடி உலகையாண்டு விளங்கிய திருவிளையா டில் இதுவாம். பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர் இருவருந் தரிசித்துய்யும்படி (அச்சுந் தரேசர்) அளவில்லாத ஆநந்ததாண்டவஞ் செய்தருளிய திருவிளையாட்லை (இனியாம்) கூறுவாம்.—எ-று. (க)

புண்ணிய மலாமென் கொம்பை வேட்டபின் புவனந்தாங்கும்
கண்ணுதன் மூர்த்தி யாய கவுரியன் மணத்தில் வந்த
மண்ணியல் வேந்தர் வானோர் மாதவர் பிறரு முண்ண
நண்ணுதி ரொன்ன லோடு நண்ணுவார் விளைவி னெய்த.

இ-ள். புண்ணியமலர் விரிந்த (அருள்வடிவக) கொடியாகிய பிராட்டியாளைத் திருமணஞ்செய்த பின்பு உலகத்தை யாளுஞ் சுந்தரபாண்டியா, திருமணத்துக்குவந்த அனைவரும் அமுதுசெய்ய வரக்கடவீர் என்று ஆஞ்ஞாபித்த வளவில் (அங்ஙனம்) வருபவர் சீக்கிரம் வரும்பொருட்டு.—எ-று. (உ)

பொன்னவிர் கமலம் பூத்த புனிதநீ ராடித் தத்த
நன்னெறி நியம முற்றி நண்ணினா புலிக்கா லோனும
பன்னக முனியுந் தாழ்ந்து பரவியம பலத்து ளாடு
நின்னரு ணடங்கண டுண்ப தடியேமக ணியம மென்றார்.

இ-ள். பொற்றாமரைத் தீர்த்தத்தில ஸ்நாநஞ்செய்து விதிமுறையே தங்கள் தங்கள் நியமங்களை முடித்துவந்தனா. பதஞ்சலி வியாக்கிரபாத முனிவர் இருவரும் (சுந்தரபாண்டியனை) வணங்கித் துதித்துக் கனகசபையிலே ஆடியருளுந் தேவரீரது ஞான நடனத்தை அடியேங்கள் தரிசித்து அமுதுசெய்வது நியமமென்று விண்ணப்பஞ் செய்தனர்.—எ-று. (ஙு)

என்னலு மந்தக் கூத்தை யிங்குநாஞ் செய்துந் தில்லைப்
பொன்னக ருலக மெல்லா முருவமாம் புருடற் குள்ள
மின்னதாந் துவாத சாந்த மென்றிறை யருளிச் செய்ய
மன்னவ வேனை யங்கம யாவென மன்னன் சொலவான்.

இ-ள். அங்ஙனம் விண்ணப்பஞ்செய்த வளவிலே சுந்தரபாண்டியர் அத்தாண்டவத்தை இம்மதுரைப்பதியிலே யாஞ்செய்வோம சிதம்பர க்ஷேத்திரம உலகமுற்றும் வடிவமாகிய விராட்புருடனுக்கு இருதயமும் இம்மதுரைப்பதி துவாதசாந்தமுமாகக் கொள்ளப்படும் என்று கூறியருள (அதற்கு முனிவர்கள்) பாண்டியராஜரே ஏனையங்கங்கள் எந்தக்ஷேத்திரங்களாகக் கொள்ளப்படுவன வென்று கேட்க (அதற்கு)ச சுந்தரபாண்டியர் அருளுகின்றார்.—எ-று. (ச)

அரைக்குமே லுலகே ழென்று மரைக்குக்கீ ழுலகே ழென்று
முரைக்கலா லுலக மெல்லா முருவமாம் புருடற் கிந்தத்
தரைக்குமே லனந்த தெய்வத் தானமுண் டேனுந் துங் கூறின்
வரைக்குறு சிலதா னங்கள் வகுத்துரை செய்யக் கேண்மின்.

இ-ள். விராட்புருடனுக்கு அரைக்குமேல் ஏழுலகும் அரைக்குக்கீழ் ஏழுலகுமென்று நூல்கள் கூறுதலால் (அவ்வுலகங்களினுள்ள கழிதருட்குறிகள் நமதிச்சையால்

இவ்வுலகத்தினுள்ள இலிங்கங்களை அதிஷ்டித்து அடியாருக்கு அருள்புரிகின்றன வாத லின் இவ்விலிங்கங்களை அவ்விராட்புருடனுடைய மூலாதார முதலியவற்றிலுள்ள இலி ங்கங்களாகப் பாவிக்கவேண்டும் அத்தன்மையுடைய) இவ்வுலகத்துள்ள பல விலிங்கத் தானங்களைக் கூறப்புகுந்தால் அளவுபடா தாதலின் (அவற்றுள்ளே)சில தானங்களைமா த்திரங் கூறக்கேளுங்கள்.—எ-று. வருவித்தல்கள் வடமொழியிற் கண்டன. (ரு)

திருவள ராரூர் மூலந் திருவானைக் காவே குய்ய
மருவளர் பொழிலரு ணண்ணு மலைமணி பூர நீவி
ரிருவருங் கண்ட மன்ற மிதயமாந் திருக்கா ளத்தி
பொருவருங் கண்ட மாகும் புருவமத் தியமாங் காசி.

இ-ள். திருவாரூர் மூலாதாரமும், திருவானைக்கா சுவா திட்டானமும், திருவ ண்ணுமலை மணிபூரமும், சிதம்பரம் அநாகதமும், திருக்காளத்தி விசுத்தியும, காசி ஆஞ் ஞையும்.—எ-று. (சு)

பிறைதவழ் கயிலைக் குன்றம் பிரமரந் திரமாம வேத
மறைதரு துவாத சாந்த மதுரையீ ந்திக மெந்த
முறையினு லெனனின் முன்னர்த் தோன்றிய முறையா லென்றக்
கறையறு தவத்த ரோடு கவுரியன் கோயில் புக்கான்.

இ-ள். திருக்கயிலாசமலை பிரமரந்திரமும் மதுரைப்பதி துவாதசாந்தமுமாகக் கொள்ளப்படும். இமமதுரைப்பதி எம்முறையால் உயர்ந்ததென்றால் (எலலாப்பதிகட்கு) முதலில் உண்டாகிய முறையாலென்று அருளி அம்முநிவரோடு சுந்தரபாண்டியர் திரு க்கோயிலின்கண் எழுந்தருளினர்.—எ-று. (எ)

தன்னரு ளதனு னீத்த தன்னையே தேடிப் போந்த
மின்னவிர் கயிலை தானே விடையுரு மாறி யிங்ஙன்
மன்னிய தேயோ திங்கண் மண்டல மேயோ வென்னப
பொன்னவிர் விமானக் கீழ்பால் வெள்ளியம் பொதுவுண் டாக.

இ-ள் தன்னினின்று நீங்கிய சுந்தரேசரையே தேடிவந்த திருக்கயிலாச மலை யோ இடபவூர்தி தன்வடிவம் வேறுபட்டு இங்ஙனம் அமைந்ததோ சந்திரமண்டலம் (இங்ஙனம் வந்த)தோவென்று சொல்லும்படி (சொக்கலிங்கப்பெருமான் அமரும்) சுவர்ணவிமானததின கீழைத்திசையிலே தஞ்சத்தி சங்கறபததினுல் (ஞானமயமா கிய) வெள்ளியமபலம் உண்டாக.—எ-று. அருளால் உண்டாகவெனக. அருள்-இல க்கணை. (அ)

மின்பயில் பரிதிப் புத்தேள் பாற்கடல் விளங்கி யாங்குப்
பின்பதன் மிசைமா ணிக்கப் பீடிகை தோன்றிற் றன்ன
தன்பர்த முளமே யாகு மல்லது வேதச் சென்னி
யென்பதா மஃதே யன்றி யாதென விசைக்கற் பாற்றே.

இ-ள். பாற்கடலிலே சூரியன் தோன்றியதுபோலப், பின்பு அவ்வெள்ளியம் பலத்திலே மாணிக்கமயமான பீடம் (ஒன்று) தோன்றியது. அது அடியார் இருதயமே யாம், அல்லது வேதசிரசேயாம், இங்ஙனம் அன்றி யாதெனக் கூறற்பாலது.—எ-று.()

அன்னதோர் தவிசி னும்ப ராயிரங் கரத்தா லள்ளித்
துன்னிருள் விழுங்குங் கோடி சூரிய ரொருகா லுத்து
மன்னின ருதித்தா லொப்ப மனமொழி பக்கங் கீழ்மேற்
பின்முதல் கடந்த ஞானப் பேரொளி வடிவாய்த் தோன்றி.

இ-ள். ஏககாலத்திலே கோடிசூரிய ருதித்தாற்போல அப்பீடத்தின்மேலே மனவாக்கு முதலியவற்றைக் கடந்த பரஞானப் பிரகாசரூபமாய்த் தோன்றி.—எ-று ()

முந்துறு கணங்கண் மொந்தை தண்ணுமை முழக்கஞ் செய்ய
நந்திமா முழவந் தாக்க நாரண னிடக்கை யார்ப்ப
வந்துகந் தருவ நூலின் மரபுளி யிருவர் பாட
வைந்துதூந் துபியுங் கல்லென் றார்கலி முழக்கங் காட்ட.

இ-ள் வெளி. முந்துறுகணம் - முதன்மையான சிவகணம். கந்தருவநூல் - இசைநூல். இருவர் - தும்புரு நாரதர். ஆர்கலி - கடல். (கக)

மதுமுகத் தலர்ந்த வெண்டா மரைமகள் சுருதி கூட்டச்
சதுர்முகத் தொருவன் சாம கீதயாழ் தடவிப் பாட
விதுமுகத் தருகு மொய்க்கு மீனென ஞான வெள்ளிப்
பொதுமுகத் தமரர் தூற்றும் பூமழை யெங்கும் போர்ப்ப.

இ-சரசுவதி சுருதிகூட்டவும், பிரமா சாமவேத கீதத்தை யாழிலிசைத்துப்பாடவும், சந்திரனருகே நெருங்கும் நக்ஷத்திரங்கள்போல ஞானமயமாகிய வெள்ளியம்பலத்திலே தேவர்பொழியும் புஷ்பவருஷம் (பக்கம) எங்கும் சூழவும்.—எ-று. (கஉ)

பொருங்கட னிறத்த செந்தீப் பொங்குளைக் குறளன் மீது
பெருங்கடல வடவைச் செங்கண் பிதுங்கமேற் றிரிந்து நோக்கி
முருங்கட லெரியிற் சீற முதுகிற வலத்தா ளூன்றிக்
கருங்கடன் முளைத்த வெய்யோன் காட்சியிற் பொலிந்து நின்று.

இ-ள். பொருகின்ற கடல் நிறம்போலும் (கரியவுருவும்) சிவந்ததீபோல விளங்கும் புறமயிருமுடைய முயலகன்மீது பெரிய கடலின் வடவைத்தீபோலச் சிவந்த கண்கள் பிதுங்கவும், மேலே சுழன்று பார்த்து (உலகினை)க் கெடுக்கும் வலியுடைய அவ்வடவைபோற் கோபிக்கவும் முதுகுமுறியவும் வலத்திருவடித் (தாமரை) யூன்றிக் கரியகடலின் உதித்த சூரியன் தோற்றம்போல விளங்கிநின்று.—எ-று. (கங)

கொய்யுஞ்செங் கமலப் போது குவிந்தென வெடுத்துக் கூத்துச்
செய்யும்புண் டரிகத் தாளுந் திசைகடந் துளவி னைந்து
கையுந்திண் படையுந் தெய்வ மகளிரங் கலனாண் காத்த
மையுண்ட மிடறுஞ் சங்க வார்குழை நுழைந்த காதும்.

இ-ள். செங்கமலமலர் குவிந்தாற்போலத் தூக்கியாடும் (இடத்) திருவடித்தாமரையும் திக்குகளைக்கடந்த பத்துத்திருக் கரங்களும் (அவைகளின் முறையே வலப்புறத்தே அபயத்தோடு கூடிய சூலம், டமருகம், சரம், கட்கம், பரசு, இடப்புறத்தே வரத்தோடு கூடிய சர்ப்பபாசம், அக்கினி, காரமுகம், கேடகம, தண்டம் என்னும்) படை

களும் இலக்குமி முதலிய தெய்வப்பெண்களின் மங்கலசூத்திரந் தங்கும்படி ஆலாகலவி டமுண்ட கண்டமும் நீண்ட சங்கக்குண்டலம் பூண்ட திருச்செவியும்.—எ-று. (கசி)

செக்கரஞ் சடையுந் தேசார வெண்டிரு நீறுந் தெய்வ
முக்கணு முரகக் கச்சு முள்ளொளி திமைக்கு மார்பு
மைக்கருங் கயற்க ணங்கை வல்லியி னொதுங்கி நிற்கும்
பக்கமு மவணமேல் வைத்த பார்வையு நகையுந் தோன்ற.

இ-ள். சிவந்த சடையும் விளக்கமாய வெள்ளிய திருநீறும் சோமசூரியாக்கினியாகிய முக்கண்ணும் பாம்பாகிய கச்சும் கூரிய வராகதந்தம் விளங்கும் திருமார்பும் மீனாக்ஷிதேவியார் ஒதுங்கிநிற்கும் இடப்பக்கமும் அரசதேவியாமீதுவைத்த திருநோக்கமும் திருப்புன்முறுவலும் தோன்றவும்.—எ-று. (கரு)

கங்கையா றலம்பு மோசை கடுக்கைவண் டிரங்கு மோசை
மங்கல முழவி னோசை மந்திர வேத வோசை
செங்கையா டெரியி னோசை திருவடிச் சிலம்பி னோசை
யெங்கணு நிரம்பி யன்ப ரிருசெவிக் கமுத மூற.

இ-ள். கங்கைநதியினொலிமுதலியன எங்குநிரம்பி அன்பராகிய பதஞ்சலி வியாக்கிரபாதரது செவிகளுக்கு ஆநாந்தாமிர்த மூற்றவும்.—எ-று. மந்திரவோசை எனவுங் கூட்டுக. கடுக்கை - கொன்றை. (கசு)

ஆடினா னமல மூர்த்தி யஞ்சலி முகிழ்த்துச் சென்னி
சூடினா ரடியில வீழ்ந்தார் சுருதியா யிரநா வாரப்
பாடினார் பரமா னந்தப் பரவையிற் படிந்தா ரன்பு
நீடினார் நிருத்தா னந்தங் காணபது நியமம் பூண்டார்.

இ-ள். (பாண்டியராஜ வேடம்பூண்ட) நிருமலராகிய அச்சுந்தரேசர் (ஆநந்த) தாண்டவஞ் செய்தருளினார். அநநிருத்த தரிசனம் செய்தலைக் கடமையாக்கொண்ட அம்முநிவர், கைகளைக் குவித்து முடிமேற்சூடினார். திருவடியில நமஸ்கரித்தார். நாவினாற் பொருந்த அநேகவேதங்களை ஓதினார். பரமாநந்த சாகரத்தில் மூழ்கினார். அன்பின் மிககராயினார்.—எ-று. (கஎ)

முனிவர்க நருவர் வானோர் தானவர் மோன யோகர்
புனிதகிம புருட ராதிப் புலவரு மிறைஞ்சி யன்பின்
கனிதரு மினபத் தாழ்ந்தார் திருமணங் காண வந்த
மனிதருங் காணப் பெற்றார் மாதவர் பொருட்டான் மன்னோ.

இ-ள். அம்முநிவர் பொருட்டால் (அத்தாண்டவத்தை) அனைவருந் தரிசிக்கப் பெற்றார்.—எ-று. (கஅ)

அனந்தனா முனிவர் வேந்த னளவிலா னந்த மூறி
மனந்தனி னிரம்பி மேலும் வழிவது போல மார்பம்
புனைந்தபுண் ணியவெண் ணீறு கரைந்திடப் பொழிகண் ணீரு
ணனைந்திரு காமுங் கூப்பி நாதனைப் பாடு கின்றான்.

இ-ள். ஆதிசேடராகிய பதஞ்சலிமுனிவர் சுந்தரேசரைத் துதிக்கின்றார்.—எ-று.

பார்பர முதலே போற்றி பத்தியில் விளைவாய போற்றி
சராசர மாகி வேறாய் நின்றதற் பரனே போற்றி
கராசல வுரியாய் போற்றி கனகவம் பலத்து ளாடு
நிராமய பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

இ-ள். வெளி. பராபரமுதல் - படைப்புக்கு முன்னும் பின்னுமுள்ளமுதல்வர். தற்பரன்-ஆத்மநாதர். நிராமயன் - நோயில்லாதவர். போற்றி - காக்க. (உ0)

ஒன்றாகி யைந்தா யையைந் தாருவாகி வருவாய் போற்றி
யின்றாகிச் சென்ற நாளா யெதிர்நாளா யெழுவாய போற்றி
நன்றாகித் தீய தாகி நடுவாகி முடிவாய் மன்று
ணின்றாடும் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

இ-ள். வெளி. ஒன்று-பதியாகிய ஒருபொருள். ஐந்து - படைப்பு முதலியவற்றைத் தனித்தனி செய்யும் பஞ்சகாதகர் ஐயைந்து - சந்திரசேகரர் முதலிய இருபத்தைந்து மூர்த்தங்கள். நடுவாகி முடிவாயென்றதனால் ஆதியாயெனபதுங் கொள்க. (உக)

அடியரோம் பொருட்டு வெள்ளி யம்பலத் தாடல் போற்றி
பொடியணி தடந்தோள் போற்றி புரிசடை மகுடம் போற்றி
கடியவிழ் மலர்மென் கூந்தற் கயல்விழி பாகம்போற்றி
நெடியநற் பரமா னந்த நிருத்தனே போற்றி போற்றி.

இ-ள். வெளி. (உஉ)

என்றுநின் றேத்தி னன்பின் னிருவரை நோக்கி வெள்ளி
மன்றுணின் றாடா நின்ற மறைமுதல கருணை கூர்ந்து
நன்றுநீர் வேட்ட தென்னென் றருள்செய நாதன் பாதந்
துன்றுமெய் யன்பிற் றாழ்ந்து தொழுதுநின் றிதனைச் சொல்வார்.

இ-ள். என்று (பதஞ்சலி முநிவர்) துதித்தார். பின்பு அம்முநிவரிருவரையு நோக்கிச சுந்தரேசா கருணையிருந்து நீவிர் விரும்பியது யாதென்று வினவியருள அந் நடராஜர் திருவடிகளை மெய்யன்பினால்வணங்கி (அம்முநிவர்) அஞ்சலிசெய்து நின்று இதனை விண்ணப்பஞ்செய்கின்றார்.—எ-று. (உ௩)

எந்தையித் திருக்கூத் தென்று மிந்நிலை நின்றியா வர்க்கும்
பந்தவெம பாச நீங்கப் பணித்தருள் செய்தி யென்னச்
செந்தமிழ்க் கன்னி நாடு செய்தமா தவப்பே றெயதத்
தந்தன மென்றான் வேதந் தலைதடு மாற நின்றான்.

இ-ள். எங்கள் பிதாவே, இவ்வாநந்ததாண்டவத்தோடு எந்நாளும் இவ்வெள்ளியம்பலத்தில் நின்றருளி அனைவர்க்கும் கொடியபாசத்தொடர்பு நீங்கும்படி திருவருள் செய்யுமென்றுவேண்ட, வேதாதீதராகிய சுந்தரேசர் அங்ஙனம் தந்தருளினோமென்றார்.—எ-று. (உ௪)

அராமுனி யீது வேண்டு மாதியெம் பெரும விந்த
நிராமய பரமா னந்த நிருத்த னோ கண்டோ ரெல்லாந்
தராதல மிசைவந் தெய்தாத் தனிக்கதி பெறுதல் வேண்டும்
பராபரவென்று தாழ்ந்தான் பகவனு மதற்கு நேர்ந்தான்.

இ-ள். பதஞ்சலிமுனிவர் இதனை வேண்டுகின்றார் ஆதியாகிய எம்பெருமானே பராபரரே இந்திருமல பரமானந்ததாண்டவத்தைத் தரிசித்தவர் அனைவரும் பிறவாத பேர முத்தி பெறுதல்வேண்டுமென்று வணங்கினார் சுந்தரேசரும் அதற்கு இசைந்தருளினார். —எ-று. (பின்னுஞ் சுந்தரேசர் நம்மடியவர் மூவுலகங்களினும் வருந்தியடைதற்குரிய எதனை எதனை விரும்புகின்றாரோ அதனை அதனை எளிதாகக்கொடுப்பதே நமதுவிரதம். துவாதசாந்தஸ்தானத்தில் நமதானந்ததாண்டவ மூர்த்தியைத் தியானித்துக்கொண்டு நம துசந்நிதியில் நீயிருப்பாயாக. ஏனெனில் எல்லாவுலகங்களினும் பிரமாவும் அவனிலும் விஷ்ணுவும் அவனிலும் உருத்திரனும் அவனிலும் மகேசனும் அவனிலும் சதாசிவனும் அவனிலும் விந்துவும் அதனிலும் நாதமும் அதனிலும் பராசத்தியும் அதனிலும் பரம சிவனும் சிறந்தபடியால் இந்த நவதத்துவங்கள் எந்தவஸ்துவிலே இலயம் அடைகின்றனவோ அந்தவஸ்து துவாதசாந்தஸ்தானத்திலிருக்கிற பரமானந்த தாண்டவமூர்த்தியே. இதினுமேலானதில்லை என்று புத்திமான் எல்லாவற்றையுமவிட்டுப் புத்திமுத்தி காரணமாக ஆநந்ததாண்டவமூர்த்தியைத் தியானஞ்செய்யக்கடவன். சூக்குமபஞ்சாக்கரமாகிய பிரணவத்துக்கும் பஞ்சகிருத்தியஞ்செய்யும ஆநந்ததாண்டவமூர்த்திக்கும் வாசக வாச்சியசம்பந்தம் நித்தியமாயுள்ளது. ஆதலால், சமஷ்டிபூதமும் வேதமூலமுமாகிய அப்பிரணவத்துக்கு நாமேபொருள். வியஷ்டிப் பிரணவத்துக்குப் பிரமாமுதலியோர பொருள். துவாதசாந்தமாகிய நமது க்ஷேத்திரத்தில எவாகள் கணப்பொழுது ஆநந்ததாண்டவமூர்த்தியைத் தியானிக்கின்றார்களோ அவர்கள் ஜீவன்முத்தர்களாவார்கள். ஐயமில்லை. யாதொருவன் பிறவியிடையிலே ஒருமுறை நமதாநந்த தாண்டவத்தைத் தரிசிப்பானே அவன் புத்திமுத்திக்கு உரியவனாவன் நீ யிப்பதியில் நெடுங்காலந்தங்கி ஒப்பற்றசுகம் அநுபவித்துப் பின்பு முத்தனாவாய். பிறப்பிறப்புக்கடலைக் கடத்தற்குக்காரணமும் அதிரகசியமும் தரிசிப்பவருக்கு மங்கலமுற்றுந் தருவதுமான இத்தாண்டவம் உன்னால் எந்நாளுந் தரிசிக்கத்தக்கதென்றுகூறி அருட்பார்வையால் அநுக்கிரகித்து எல்லாமுனிவர்களையும் போஜனத்துக்குச் செல்லும்படி ஆஞ்ஞாபித்தார். அதுமுதல் இப்பதியில் அத்தாண்டவம் வெள்ளியம்பலத்திலே பெரிதும் விளக்கமாயிருக்கிறது.) வருவித்தல்கள் வடமொழியிற் கணடன. (௨௫)

ஆர்த்தனர் கணத்தோர கைகொட் டாடின ரலர்பூ மாரி
தூர்த்தனர் விண்ணோர் கணணீர் துளும்பினா முனிவ ராகம்
போர்த்தனர் புளக மன்பிற் புதைந்தனர் விழுங்கு வார்போற்
பார்த்தனர் புலவிக் கொண்டார பரவியவ் விருவா தம்மை.

இ-ள். சிவகணத்தோர் ஆரவாரித்துக் கைகொட்டாடினர். தேவர் பூமழைபொழிந்தனர். (ஏனைய) முனிவர் உடலிற் புளகம்போர்த்து அன்புவெள்ளத்தின் முழுகிக் கண்ணீர்ததும்பி அம்முனிவரிருவரையும் வணங்கிக் கண்களால விழுங்குவார்போல நோக்கித்தழுவினார்.—எ-று. (௨௬)

வேறு.

அனித்த மாகிய பூதமைம் பொறிபுல னதியா ராகி
யினித்த மாயையோ டிருவினைத் தொடக்கினு மிருளினும் வேறாகித்
தனித்த யோகிக ளகநிறைந் தாடிய தனிப்பெருந் திருக்கூத்தைக்
குனித்த வண்ணமாக கண்டவர்க் கிகபரங் கொடுத்தவ னுறைகின்றாம்.

இ-ள். யோகிகளது அகத்தில் நிறைந்தாடிய ஆநந்ததாண்டவத்தை(ப் புறத்தே) ந.த்தவிதமாகத் தரிசித்தவாக்கு இருமைப்பயனுங் கொடுதது அவ்வெள்ளியமபலத்தில் வதிகின்றேம.—எ-று. பூதங்களைந்து, ஞானேந்திரியங்களைந்து, தன்மாத்திரைகளைந்து, கன்மேந்திரியங்களைந்து, அந்தக்கரணங்கணூன்று, குணதத்துவமொன்று, ஆகிய ஆன்மதத்துவம் இருபத்துநான்கும், வித்தியாதத்துவம் ஏழும், சுத்ததத்துவம் ஐந்தும் என்னும் முப்பத்தாறு தத்தவமும், அபரிபக்குவாக்கு இனிமையுடையு மாயையும, கன்மமலமும், ஆணவமலமுமாகிய இவற்றின் வேருகித் தனிமையான யோகிகளென்க. ()

குனிவி லாதிரைத் தினநதொடுத் தெதிர்வரு கொடுவிலா திரையெலலே
புனிதவாடக முளரிதோய்ந தத்தனிப பொதுநடந் தரிசித்தங்
கினிது வைகியா யிரததெட்டெம மநதிர மெண்ணியிந நிலேநிற்குங்
கனியு மனபினு ரெணணியாங கெய்துவர் கருதிய வரமெல்லாம.

இ-ள். மார்கழிமாசந் திருவாதிரைநக்ஷத்திரந் தொடங்கி மேல்வரு மார்கழிமாசந் திருவாதிரை நக்ஷததிரமவரையும் பொற்றாமரைவாவியில் மூழ்கி அவ் வெள்ளியம்பலத்தில் நமது நடனததைத் தரிசிதது நமது சந்நிதியிலிருநது நமது மந்திரமாகிய பிரணவத்தை ஆயிரததெட்டுரு ஜபிதது வழுவாது நிற்கும் பேரன்பினா எணணியபடி எண்ணிய வரங்கள் முற்றும இப்பொழுதே அடைவர்.—எ-று. இந்நிலேயே யென்னுந் தேற்றேகாரந்தொகை. (உஅ)

வெள்ளியமபலத் திருக்கூத்தாடியபடலமுற்றியது.

ஆகசசெய்யுள் - அஉகூ.

---

ஏழாவது

# குண்டோதரனுக்கு அன்னமிட்டபடலம்.

கலிநிலைத்துறை.

பன்ன கேசனு மடுபுலிப பாதனும் பணிய
மின்னு வாாசடை மன்னவன் வெள்ளிமன் றுடல
சொன்ன வாறிது பசித்தழல் சுடவொரு பூத
மன்ன மாமலே தொலேத்தவா றெடுத்தினி யறைவாம்.

இ-ள். பதஞ்சலிமுனிவரும் வியாககிரபாதமுனிவரும் வழிபட்டுவேண்டச் சுந்தரபாண்டியராஜர் வெள்ளியம்பலத்தில் ஆநந்ததாண்டவஞ் செய்தலேக்கூறிய திருவிளையாடல் இதுவாம். உதராக்கினி வருத்துதலாலே குண்டோதரபூதம் மலேபோலும் அன்னக்குவியலே அருந்திய திருவிளேயாடலே இனி (யாம) கூறுவாம்.—எ-று. (க)

கன்னி யர்க்கர சாயினுள் கடிமனே புகுந்த
மின்னி யற்சடை மாதவர் வேதிய ரோடு
ரெங்கி லத்துள மன்னவா யாவாக்கு முறையே
பொன்னி யற்கலத தறுசுவைப போனக மருததா

பூசு கின்றவு மூடுப்பவும் பூண்பவும் பழுக்காய்
வாசு மெல்லிலை யேனவு மம்முறை வழங்காத்
தேச மன்னவ ரேனையோர்ச் செல்லுநர்ச் செலுத்தி
யீச னன்புறு கற்பினு ளிருக்குமவ் வேலை

இ - ள். மங்கையர்க்கரசியாராகிய பிராட்டியார் (தமது) திருமணத்தின் பொருட்டு அரமனைக்குவந்த அனைவர்க்கும் அறுசுவைக்கறிகளோடுகூடிய அன்னத்தை யுண்பித்துச் சந்தனம் வஸ்திரம் ஆபரணம் தாம்பூலமுதலியன கொடுத்து அரசர் முதலாயினருள்ளே செல்லக் கருதுகின்றவரைச் செலுத்தி அமர்ந்தருளுங்கால்.—எ-று. கன்னியர்க்கரசாயினுள் ஈசனன்புறுகற்பினுள் எனக்கூட்டுக. (௩)

மடைவ லாத்தொழிற் புலவர்வந் தடியிணை வணங்கி
யடிய ரேமட்ட போனக மாயிரத் தொன்றி
னிடைய தாயினுந தொலைந்தில தியாங்கண்மேற் செய்யக்
கடவ தேதெனப் பிராட்டிதன கணவர்முன் குறுகா.

இ - ள். நன்றாக அந்நம் (முதலியன) சமைத்தலில் வல்லவர்வந்து திருவடிகளைவணங்கி அடியேங்கள் சமைதத அந்நம் (முதலியன) ஆயிரததொரு கூறாயினுங் கழிந்திலது அடியேங்கள் இனிச் செய்யற் பாலது யாதென்று விண்ணப்பஞ்செய்யப் பிராட்டியார் தந்நாயகராகிய சுந்தரபாண்டியர் சந்நிதியை அடைந்து.—எ-று. (௪)

பணிந்தொ துங்கிநின் றடிகண்மூப பத்துமுக் கோடி
கணங்க டம்மொடு மிங்கெழுந் தருள்வது கருதி
யிணங்கு மின்சுவைப் போனக மெல்லையின் றாக்கி
யுணங்கு கின்றதுண் டெஞ்சிய தெனைத்தென வுரைக்கின்.

இ - ள். வணங்கி அயலிலே நின்று சுவாமி அநேககோடி கணங்களோடு இங்கே எழுந்தருளுதலை உத்தேசித்து அன்னங் கறிகள் அளவில்லாது சமைத்து உலர்கின்றன. (அவற்றிலே) புசித்துச் சேடித்தது எவ்வளவினதென்று கூறுமிடத்து.—எ-று. (௫)

இமயக் குன்றமு மடைகலா யிதன்புறங் கிடந்த
சிமயக் குன்றுக ளீட்டமுஞ் சோறெனெ நிமிரச்
சமையக் கொட்டிய வாலரிப் புழுக்கலுஞ் சாதக்
கமையக் கொட்டிய கறிகளின் வருக்கமு மாகும்.

இ - ள். இமயமலையும் அதன்புறநதே தாங்கும் மலைகளாய்க்கிடந்த சிறுமலைக்கூட்டமும்போல வெள்ளிய அரிசியாலாகிய அன்னமும் கறிகளின் வகையுமாம்.—எ-று. சாதக்கு என்பதில் அத்துச் சாரியைதொகை. (௬)

என்ற போதிறை யெம்பிரான் றேவியா ரிடத்தி
லொன்று மன்பினு லொருவிளை யாடலை நினைத்தோ
தன்ற னிக்குடைப் பாரிடத் தலைவனை தாற்ற
லன்றி யாவரு மறிந்திடக் காட்டவோ வறியேம்.

இ - ள். என்று விண்ணப்பஞ்செய்தபொழுது சுந்தரபாண்டியர் தந்தேவியாரிடத்தேவைத்த பிரீதிபற்றி ஒரு திருவிளையாடல் புரிதலைக்கருதியோ தமது குடையை எந்திய தலைமைபெற்ற குண்டோதரபூதத்தினது வலிமையை அப்பொழுது யாவரும் அறியும்படி காட்டவோ (யாம்) அறியேம்.—எ-று. (௭)

சிறிது வாணகை செய்துமூ வேந்தரிற் சிறந்த
மறுவின் மீனவ னரும்பெறன் மகளுனக் கரிதிற்
பெறுவ தேதுவான் றருவுகின் பணிசெயப் பெற்றிங்
குறைவ தேற்பிறர் திருவெலா முன்னதே யன்றோ.

இ-ள். திருப்புன்முறுவல் செய்து சேரசோழபாண்டியரிற்சிறந்த மலயத்துவஜ பாண்டியராஜருடைய அருமைப்புத்திரியே, உனக்கு அரிதிற்பெறத்தக்கது யாதுளது துறக்கவுலகத்துப் பஞ்சதாருக்களும் உனது பணிவிடைசெய்யபபெற்று இங்கே வசிப்ப தாயின் அயலரசர் செல்வமுற்றும் உன்னுடையதல்லவா.—எ-று. (அ)

அளவி லாதநின் செல்வத்தின் பெருக்கைநா மறிய
விளைவு செய்தனை போலுநின விருந்துணப் பசியாற்
களைய டைந்தவ ராகிநங் கணத்தினுட் காணேங்
தளவ மூரலா யாஞ்செயத் தக்கதே தென்றான்.

இ-ள். முல்லையரும்புபோலுந் தந்தபங்தியுடைய பிராட்டியே உனது செல்வப்பெருக்கை நாம் அறியவிளக்கினைபோலும உனது விருந்தினை அருந்துதற்கு நம்முடைய கணங்களுள்ளே பசியுடையவரைக் காணும் நாஞ் செய்யத்தக்கது யாதென்றருளினர்.—எ-று. (கூ)

அடுக்க நின்றகுண் டோதர னகட்டிடை யழலை
யிடுக்கண் செய்திடு வடவைபோ லெரிவுற நினைததான்
றுடைக்கு மாலமுண் டாங்குடன் சோர்ந்துவேர்த் தாவி
யொடுக்க முற்றைய பசியினு லுயங்கினே னென்றான்.

இ-ள். சமீபமாகநின்ற குண்டோதர பூதத்தினது வயிற்றின்கண்ணதாகிய அக்கினியைத் துன்பஞ்செய்யும் வடவாநலம்போலச் சுவாலிக்கும்படி (சுந்தரபாண்டியர்) சங்கற்பித்தார். உடனே (அப்பூதம்) கொல்லும்விடத்தை யுணடாற்போலத் தளர்ந்து வேர்த்து உயிரொடுங்கிப் பாணடியராஜரோ பசியினால் வருந்தினேனென்று ஓலமிட்டது.—எ-று. (க0)

குடையெ டுக்குமிக் குறியதாட் குறட்கொரு பிடிசோ
றிடுமி னப்புறஞ் சோறுமா லெனத்தொழு தெலலா
முடைய நாயகி போயினுள் குறியனு முடனே
நடைத ளர்ந்துகண் புகைந்துவாய் புலாந்திட நடந்தான்.

இ-ள். மின்போலும் பெண்ணே குடைபிடிக்கும் இப்பூதத்திற்கு ஒரு பிடியன்னம் இடு அப்பாற் கூறுதுமென்று (சுந்தரபாண்டியர்) அருள, பிராட்டியார் வணக்கிப் போயினர், உடனே (அவர் பின்னே) அப்பூதமும் நடந்தது.—எ-று. இதனாலே பிராட்டியார் கற்புநிலையை விளக்கியபடி. (கக)

படைக்க ணேவல ரிறைமகள் பணியினுற் பசிநோய்
தொடுத்த வன்றனைக் கொண்டுபோய்ச் சொன்றிமுன் விடுத்தா
ரடுத் திருநததே கண்டன ரன்னமா மலையை
யெடுத்த யின்றது மடிசிலங் கிருந்ததுங் காணார்.

இ-ள். வாட்படைபோலுங் கண்களுடைய ஏவற்பெண்கள் பிராட்டியாரது கட்டளைப்படி பசியுள்ள அப்பூதத்தை அழைத்துப்போய் அன்னமலைமுன்னே விட்டார்கள். (அந்தன்மூன்) அடுத்திருந்ததைக் கண்டார்களேயன்றி (அப்பூதம்) அதனையுண்டதும் அஃதிருந்ததும் காணார்கள்.—எ-று. (கஉ)

சிலம்பு நூபுரச் சீறடிச் சேடியர் சில்லோ
ரலம்பு வால்வளைக் கைநெரித் ததிசய மடைந்தார்
புலம்பு மேகலை யார்சிலர் பொருக்கென வெருண்டார்
கலம்பெய் பூணமுலை யார்சிலர் கண்புதைத் திரிந்தார்.

இ-ள். தோழியரிற் சிலர்கையை நெரித்து அதிசயித்தனர். சிலர் அச்சமுற்றனர். சிலர் கண்களைமூடி ஓடினார்—எ-று. (கங)

மூரலை போகிய முரிவிலவான் மூரல்பால் வறையல்
கருனை தீம்பய றடுதுவை பலவகைக் கறிகள்
விரவு தேம்படு பாறயி ரிழுதுதேன் வெள்ளம்
வரைவி லாதன மிடாவொடு வாரிவாய் மடுத்தான்.

இ-ள். தவிட்டினீங்கிய முரிதலில்லாத வெள்ளிய அரிசியாலாகிய அன்னத்தையும் திரட்டுப்பால், பொரிக்கறி, இனிய பயறுகலந்து சமைத்த புளிங்கறியாகிய பலவிதக்கறிகளையும் பொருந்திய இனிமைபெற்ற பால், தயிர், நெய், தேன் இவைகளின் பெருக்கையும் (மற்றும்) அளவில்லாத பதார்த்தங்களையும் மிடாக்களொடு வாரி வாரியுண்டான்.—எ-று. முரிவில்வால - பண்புத்தொகைப் புறத்துப்பிறந்த அன்மொழித்தொகை. (கச)

பலப ழக்குவை வேற்றுருப் பண்ணியங் கன்னன்
மெல்சு வைத்தண்டு தெங்கிவை யன்றியும வேவா
வல்சி காய்களின் வருக்கமு நுகர்ந்துமா றும
லெல்லை தீர்நவ பண்டமு மெடுத்துவாய் மடுத்தான்.

இ-ள். பலகனிக் குவியல்கள் வேறு வேறு வடிவப் பலகாரங்கள் சர்க்கரை மெல்லுதற்குரிய இனியகரும்பு தேங்காய் இவைகளன்றி வேவாத அன்னம் காய்களின் கூட்டம் ஆகிய எல்லாவற்றையும் உண்டும் (பசி) தீராமையால் அளவில்லாத புதிய பதார்த்தங்களையும் எடுத்து வாயிற்போட்டான்.—எ-று. (கரு)

பாரித் துள்ளவிப் பண்டமும் பருஉக்குறுங் கையால்
வாரித் தன்பெரு வயிற்றிடை வைபபவுந துடுவை
பூரித் தாகுதி பண்ணிய தழலெனப் பொங்கிக்
கோரித் தொன்பது வாயிலும் பசித்தழல் கொளுத்த.

இ-ள். மிகுத்துள்ள இப்பதார்த்தங்களையும் பருத்தகுறியகையால் வாரிப்பெரியவயிற்றில்வைக்கவும் சுருககு சுருவங்களால் (நெய்யை) நிரப்பி ஆகுதிசெய்த வேள்வித்தீபோல உதராக்கினிகோரமாய்ப்பொங்கி நவத்துவாரங்களினும் கொளுத்த.—எ-று.

அலங்க லோதிகண் டதிசய மடைந்துதன் னன்பி
னலங்கொ ளுயகன் முன்புபோய் நாணமுட் கிடப்ப
விலங்கு பூங்குழல சுவன்மிசை யிறக்கியிட் டொல்கி
நிலங்கி ளைத்துநின் றுணிலை கண்டன னிருபன்.

இ-ள். பூமாலை புனைந்த கூந்தலுடைய பிராட்டியார் (இப்பூதச்செய்கையை) நோக்கி ஆச்சரியம் அடைந்து தம்முடைய நாயகர் சந்நிதிசேர்ந்து நாணம் அகத்திற் கிடக்க அளகத்தைப் பிடரிலே தாழ்த்தித் துவண்டு பூமியைத் (திருவடிப் பெருவிரலாற்)கிளைத்துநின்றார். சுந்தரபாண்டியராஜர் அந்நிலைமையை நோக்கியருளினார்.—எ-று.

அஞ்சி லோதியை வினவுவா னறிகலான் போலக்
குஞ்சி யாரழ லன்னவக் குழிவயிற் றவனுண்
டெஞ்சி யுள்ளவேற் பூதங்க ளின்னமும் விடுத்துன்
னெஞ்சு வப்பவே யருத்துது மென்னலு நிமலை.

இ-ள். அழகிய வட்டத்தகட்டணி யணிந்த அளகமுடைய பிராட்டியாரை வினவுகின்ற சுந்தரபாண்டியர் அறியாதவர்போல அக்குண்டோதரபூதம் உண்டு சேடித்துள்ளனவேல் இன்னமும் பூதங்களை அனுப்பி உன்மனமகிழ வுண்பிப்போம் என்றருளுதலும், பிராட்டியார்—எ-று. (க௯)

ஐய வின்னுமிக் குறட்பசி யடங்கிடா வேறு
வெய்ய பாரிட வீரரை விடுத்தியே லெடுத்து
வையம யாவையும வயிற்றிடை வைபபரோ யதனாற்
செய்ய காலருத் திரப்பெயர் தேற்றமா முனக்கே.

இ-ள். சுவாமீ, இன்னமும் இக்குண்டோதரபூதத்தின் பசி அடங்கவில்லை, [வே]றும் பூதங்களை அனுப்புவீராயின உலகங்களையெல்லாம் தூக்கி வயிற்றின்கண் வைக்குமல்லவா? அதனாலே ஊழிக்கால (சங்கார) ருத்திரனென்னுந்திருப்பெயர் தேவரீர்க்கு நிச்சயமாம்.—எ-று. (கக)

சங்க வார்குழைக் குறண்மகன் றன்செய லுனே
யிங்கு வந்துரை செய்திட வறிதியென் றிறைமுன்
மங்கை நாயகி குமுதவாய் மலர்பொழு தெயிற்றுத்
திங்கள் வாய்முழை யான்பசித் தீச்சுட வந்தான்.

இ-ள். அக்குண்டோதரபூதம் தன் செய்கையைத் தானே இங்கேவந்து விஞ்ஞாபிக்கத் தேவரீர் உணர்வீரென்று சுந்தரபாண்டியர் சமுகத்திலே பிராட்டியார் விஞ்ஞாபிக்குங்கால அப்பூதம் உதராக்கினி சுடவந்தது—எ-று. பிறைபோலும் பல்லும் குகைபோலும் வாயுமுடைய பூதமென்க. (உ0)

நட்ட மாடிய சுந்தர நங்கையெம் பிராட்டி
யட்ட போனகம் பணிவரை யனையவாய்க் கிடந்த
தொட்டு வாய்மடுத் திடவுமென் சுடுபசி தணியா
திட்டு ணாதவர் வயிறுபோற் காந்துவ தென்றான.

இ-ள். வெள்ளியம்பலத்தில் ஆனந்ததாண்டவஞ்செய்த சுந்தரபாண்டியரே, பிராட்டியார் சமைப்பித்த இமயமலைபோன்ற அன்னக்குவியல்களை வாயிற்போடவும் என்பசிதணியாமல் (முற்பிறவியிலே பிட்சை) இட்டு உண்ணாதவர் (இப்பிறவியிலே வறுமைபற்றிப் பசியால் எரிகின்ற) வயிறுபோல் எரிகின்றதென்று ஓலமிட்டது.—எ-று

கையர் முப்புரத் திட்டதீ கடும்பசி யுருவாய்ப்
பொய்ய னேன்வயிற் றிடைக்குடி புகுந்ததோ வென்னுங்
கையெ றிந்திடு மண்டங்கள் வெடிபடக் கதறு
மைய கோவெனு முயிர்த்திடு மாவிசோர்ந் தயரும்.

இ-ள். வெளி. கையர் - வஞ்சகர். எறிதல் - தாக்கல். (உஉ)

குண்டோதரனுக்கு அன்னமிட்டபடல முற்றியது.

ஆகச்செய்யுள் - அ௬அ.

எட்டாவது

# அன்னக்குழியும்வைகையுமழைத்தபடலம்.

வேத நாயகன் பாரிட வேந்தனுக் களவிலா
வோத னாதிக ளருத்திய தன்மையீ துவையும்
போத ராமையா லமைவுறப் போனகக் குழிதந்
தோத மாநதி யருத்திய செய்தியு முரைப்பாம.

இ-ள். வேதநாயகராகிய சுந்தரபாண்டியர் குண்டோதர பூதத்துக்கு அளவில்லாத அந்நமுதலியன உண்பித்த திருவிளையாடல் இதுவாம். அவ்வந்நமுதலியன போதாமையால் (அப்பூதந்) திருததிபெற அந்நக்குழியும் பெரிய வெள்ளமுள்ள (வைகை) நதியும் அழைத்து உண்பித்த திருவிளையாடலை (யாம் இனி)க்கூறுவாம்.—எ-று. (க)

கவன மால்விடை யாளிபின் கடிகமழ் தென்றற்
பவன மாமலை யாட்டியைப் பார்த்துளே நகைத்துத்
தவன மாபசி யுடையவன் றன்பொருட் டன்ன
புவன மாதினை நினைத்தன னினைக்குமுன் போநதாள்.

இ-ள். விஷ்ணுவை விரைந்துசெல்லும் இடபவாகனமாகவுடைய சுந்தரபாண்டியர் பின்பு பிராட்டியாரை நோக்கி அகத்தே நகைத்தருளிப் பெரும்பசியும் (பெருந்)தாகமுமுடைய அக்குண்டோதர பூதத்தின் பொருட்டு(த தமது சத்தியாகிய) அந்நபுவநத்திற் குரிய அந்நபூரணியைக் கருதினர் உடனே அவள் (அந்நரூபமாய்) வருகின்றாள்.—எ-று. பவனம், காற்று. (உ)

நாற்ற டந்திசைத் தயிர்க்கட னளநதலை நிலங்கீண்
டூற்றெ ழூநதுநாற் கிடங்கரா யுதித்தெழூந் தாங்கு
மாற்ற ருஞ்சுவைத் தீந்தயிர் வாலரிப் பதத்தோ
டேற்றெ ழுந்தது நாற்குழி யிடத்திலும் பொங்கி.

இ-ள். நாற்றிசையினுஞ் சூழ்ந்த தயிர்க்கடலானது பூமிநடுவைக்கிழித்து ஊற்றெடுத்து நான்கு கிடங்குகளாய்த் தோன்றினதுபோல, இனிய சுவையுள்ள தயிர் வெள்ளிய அரிசியாலாகிய அந்நத்தோடு நான்குகுழியில் உயர்ந்து பொங்கியெழுந்தது.—எ-று. உம்-அசை. (௩)

குரும திக்குல மன்னவன மருகனக் குணடப்
பெருவ யிற்றிரு பிறையெயிற றெரிசிகைப பேழ்வா
யொருகு றடகுடை வீரனை யுன்பசி தணியப
பருகெ னபபணித தருளலும பாரிடத தலைவன்.

இ - ள். மலயத்துவஜபாண்டியனுடைய மருகராகிய சுந்தரபாண்டியா அக்குண்டோதரபூதத்தைநோக்கி உனபசியொழிய வுணபாயென்று கட்டளையிட்டருள அப்பூதம்.—எ-று. (௪)

அத்த யிரப்பதக கிடங்கரி லலைகடல கலக்கு
மத்தெ னககரம் புதைததெடுத் தெடுத்து வாய் மடுத்துத்
துய்த்தி டபபசி விடுத்தது சுருதிநா யகன்று
பத்தி வைததுவீ டுணாநவா பழவினைத் தொடாபோல்.

இ - ள அந்ததத்தயிரன்னககுழியிலே, கடல்கடையுமததாகிய மந்தரமலைபோலக் கைகளை அமிழ்த்தி எடுததெடுநது வாயிலிட்டுண்ண, சிவபிரானறிருவடியிற பத்திசெய்து வீடுபெறறறையுணர்நதவரது சஞசிதகனமபாசம (ஒழிவது)போலப பசியொழிந்தது.—எ-று (௫)

வாங்கி வாங்கிவாய் மடுததலு முடமபெலாம வயிறுய
வீங்கி ஞைறறை கிழிபடப பொருபபென வீழ்நதா
னீங்கு நீருயிாப பிலனுடல புரண்டன னீாவேட்
டாங்கு நீாநிலை தேடுவா னுயிறு னெழுநதான்.

இ - ள. அங்ஙனம் உண்டவளவில் உடலமுற்றும வயிறுய்ப்பருத்துப் பூமிகிழியும்படி மலைபோலவீழ்ந்து (வெளியிற) செல்லும நெட்டுயிாப்பின்றி உடலபுரண்டு நீரை விருமபி அங்கேயுள்ள குளங்களைததேடி எழுநதது.—எ-று. வீங்கினுன்முதலியன-முறறெச்சங்கள (௬)

ஆவி யன்னவாப பிரிநதுறை யணங்கனா போலக்
காவி நாண்மலா தாமரைக் கடிமலா வாட
வாவி யோடையுங குளங்களும வறப்பவாய் வைத்துக்
கூவ நீணிலை நீாகளும பசையறக் குடித்தான.

இ - ள. பிராணநாயகரைப் பிரிநதமரும பெணகள்(வாட்டமடைதல்)போல, நீலமலர், கமலமலா வாடவும், வாவிமுதலியனவறணடு பசையறவும நீரைககுடித்தது.—எ-று. வாவி-நடைகிணறு கூவம-கிணறு. (௭)

அனைய னாகியு நீர்நசை யாறறலன் வருநதுங
வினைய னாகிவா னதிசசடை வேதியன பாதத்
தினைய நாதனுந தன்றிரு முடியினமீ திருக்கு
நனைய நாணமல ரோதியைப பாாத்தொனறு நவிலவான.

இ - ள். அததன்மையுடையதாகியும் தாகந்தணியாதுவருந்துஞ்செய்கையுடைய தாய்க் கங்கைதங்கியசடையுடைய தேவப்பிரமணராகிய சுந்தரபாண்டியர் திருவடி

யில்(வீழ்ந்து)வருந்த (அதற்கு) அவர் தம்முடியிற்குடிகொண்ட கங்காதேவியை நோக்கி அருளுவார்.—எ-று. நளைய நாண்மலர்-தேனையுடைய புதியமலா. (அ)

தேங்கு நீர்த்திரை மாவிகைச் செல்விநீ யிந்த
வாஙகு நீர்த்தடம் புரிசைசூழ் மதுரையின் மாடோ
ரோங்கு நீத்தமா யொல்லென வருதியென் றுரைத்தா
னீங்கு நீர்த்திரு மாதவ ளொருமொழி நிகழ்த்தும்

இ-ள். ததும்புநீரும் அலைவரிசையுமுடைய கங்கையே, வளைந்த அகழியுள்ள பெரியமதில் சூழ்நத இம மதுரைப்பதியின் அருகே ஒரு பெருநதியாய் நீ விரைந்து வருவாயாகவென்று ஆஞ்ஞாபிததார். (சடையினின்று) நீஙகும அககங்காதேவி ஒரு விண்ணப்பஞ்செய்கின்றாள்.—எ-று. (கூ)

அன்று மெம்பிரா னுணையாற பகீரதன் பொருட்டுச்
சென்று நீயொரு தீாத்தமாய்த் திளைப்பவா களஙக
மொன்று தீவினை தொடக்கறத் தொழுகென பணித்தா
யின்று மோர்நதி யாகெனப் பணித்தியே லெனனை.

இ-ள். எம்பெருமானே, முனனும் ஆஞ்ஞையினாலே பகீரதன்பொருட்டுப்போய் நீ ஒருதீாத்தமாகி மூழ்குவோரது பாபதொடாபைககெடுதது்ச் செல்வாயெனறு கட்டளையிட்டா இன்றும் ஒரு நதியாகவருவாயென ஆஞ்ஞாபிபபீராஞல, என்னை.—எ-று.()

தெரிசித் தோர்படிந தாடினோர் செஙகையா லேனும
பரிசித் தோாபவத தொடாச்சியின் பறறுவிட் டுள்ளத்
துருசித் தோர்வுறு பத்தியும் விச்சையு முணாவாய்
விரிசித் தோாவுறு மெய்யுணா வாலவரும வீடுமெ.

இ-ள். கண்டவர் அடைந்துமுழ்கினவா தீண்டினவா பிறவிததொடார்பின் பற்றுநீங்கி மனததில் இனிகதச்சிந்திததற்குரியபத்தியும, ஞானமும், ஒளியாய் (எங்கு) நிறைந்தசிததுருவாகிய தேவரீரையுணரும (அம) மெய்யுணாவால்வரும வீடுபேறும்.—எ-று. உருசிதது - செயவெனெச்சத்திரிபு. (கக)

தந்தி டப்பணித் தருளனுத தடமபுனற் செலவி
சுநத ரப்பெருங கடவுளை வரங்கொண்டு தொழுது
வநத ளபபிலா வேகமோ டெழுநதுமா நதியா
யநத ரத்துநின் றிழிபவ ளாமென வருமால்.

இ-ள் தருமபடி கட்டளையிட்டருளுவீரென்று கங்காதேவி மகாதேவராகிய சுந்தரபாணடியனை வரம்பெற்றுவணங்கிவந்து மிககவேகததோடு எழுந்து பெரியநதியாய் ஆகாசத்தினின்று இறங்குபவள்போல வருகின்றாள்.—எ-று. (கஉ)

கலிவிருத்தம்.

திரைவளையணி கரமுடையவள செழுமணிநகை யுடையா
ளுரைவளைதுகி லுடையவள்கொடி நுணுகிடையவ ளறனீள்
விரைவளர்குழ லுடையவள்கயல விழியுடையவள் வருவாள்
வரைவளைசிலை யவன்முடிமட வரனதிவடி வினுமே.

இ-ள். மேருமலையை வளைந்தவில்லாகவுடைய சுந்தரபாண்டியராகிய சிவபிரானது சடைமுடியிலுள்ள கங்காதேவி, நதிரூபமாய் வரும்பொழுதும், அலைகளை வளையணிந்த கைகளாகவும், கொழுவிய முத்துகளைத் தந்த(பந்தி)களாகவும், நுரைகளைச் சூழ்ந்த ஆடையாகவும், பூங்கொடியைச் சிறுகிய இடையாகவும், கருமணலினொளிவை நீண்டமணங்கமழ்ந்து கடைவளைந்த அளகமாகவும், கயலைக் கண்களாகவு முடையவளாய் வருகின்றாள் —எ-று. அறல் - ஆகுபெயர். (௩௩)

விரைபடுமகி லரைபொரிதிமில் வெயில்விடுமணி வரையோ
டரைபடமுது சினையலறிட வடியொடுகடி தகழாக
குரைபடுகழ லிறவுளர்சிறு குடியடியொடு பறியாக்
கரைபடவெறி வதுவருவது கடுவிசைவளி யெனவே.

இ-ள். மணம்பொருந்திய அகிலும் பொருக்குப்பொருந்திய தூறுள்ள வேங்கையும் ஒளிவீசும் இரத்நங்களையுடைய மலைகளொடு (தாக்கி) அரைபடவும் (அம்மரப்) பெருங்கிளைகள் ஒலிக்கவும், (அம்மரங்களை) வேரொடு விரைவாகப்பறித்தும, ஒலிக்கின்ற வீரகண்டையுடைய குறிஞ்சிநிலமாக்களின் சிறுவீடுகளை அடியொடுபெயர்த்துங் கரைகளிற்செல்ல வீசுவதாகிய (அந்)நதி, மிக்கவேகத்தையுடைய சண்டமாருதம்போல வருகின்றது.—எ-று. (௩௪)

பிணையொடுகலை பிடியொடுகரி பிரிவிலவொடு பழுவப
பணையொடுகரு முசுவயிறணை பறழொடுதழு வியதன்
றுணையொடுகவி பயினமரினை தொகையொடுமிற வுளர்வெங்
கணையொடுசிலை யிதனொடுமெறி கவணொடுகொடு வருமால்.

இ-ள். நீங்காதனவாகிய பெணமானொடு ஆண்மானையும், பெண்யானையொடு ஆண்யானையையும், காட்டிலுள்ள ஒடுமரத்தைக்கிளைகளொடும், கரிய ஆண்முசுவை வயிற்றிலேபற்றிய குட்டியோடுதழுவிய அதன் பெண்முசுவொடும், குரங்குகள் உலாவு (மற்ற) மரங்களை வரிசையாகிய தொகுதியொடும, வேடர்களின் வில்லைக் கொடிய பாணங்களொடும் (தினைப்புனத்துப்) பரணொடும் (கல்லைவைத்து) வீசுங்கவணொடும் வாரிக்கொண்டுவரும் (அந்நதி) —எ-று. (௩௫)

அடியிறநெடு வரையுதைவன வகழ்வனவகழ் மடுவைத்
திடரிடுவன மழைசெருகிய சினைமரநிரை தலைகீழ்ப்
படவிடுகரை தொறுநடுவன படுகடலுடை முதுபார்
நெடுமுதுகிரு பிளவுறவரு நெடுநதியின வலையே.

இ-ள. (சகரரால்) உண்டாகிய சாகரத்தையுடைய பழையபூமியின் நெடிய முதுகு பிளவுபடவரும் பெரிய (அந்)நதியினது கூட்டமாகிய அலைகள், நெடியமலைகளின் அடிகெடமோதித் தோண்டுகின்றன. தோண்டியமடுக்களை மேடுசெய்கின்றன. மேகம்படிந்த கொம்புகளுடைய மரங்களை இடிந்தகரைகளில் வரிசைபெறத் தலைகீழாக நடுகின்றன.—எ-று. உதைவன - முற்றெச்சம். (௩௬)

பிளிறொலியின முதுமரமகழ் பெருவலியின வசையா
வெளிறடுவன வெறிமணியின விரைசெலவின மதமோ
டொளிறளியின நுரைமுகபட முடையனவென வரலாற்
களிறனையன மதுவிதழிகள் கவிழ்சடையணி குழகை.

இ-ள். (சுந்தரபாண்டியர்) தேனொழுகும் கொன்றைமலர்கள்தங்கிய சடையி லணிந்த (அக்) கங்காநதியின் அலைகள், ஒலிக்கும் பேரொலியுடையனவும் ஆலமரங் களைப்பறிக்கும் பெருவலியுடையனவும் அசையாத விளாமரங்களை முறிப்பனவும் வீசா நின்ற முத்துகளுடையனவும் விரைந்து செல்லுதலுடையனவும் (யானையின்) மதத் தோடுபொருந்திய ஒளிகொள்ளும் வண்டுகளுடையனவும் நுரையாகிய முதன்மையுள்ள ஆடையுடையனவுமாக வருதலால் (பேரொலியுடையனவும முதிர்ந்தமரங்களைப்பெயாக் கும் பெருவலியுடையனவும அசையாத கட்டுத்தறியை முறிப்பனவும் (இருபுறத்தும்) வீசாநின்ற மணிகளுடையனவும் விரைந்து செல்லுதலுடையனவும் மதத்தில் ஓடி (யுண்ணவிழுகின்ற) ஒள்ளியவண்டுகளுடையனவும நுரைபோலும் (வெள்ளிய) முக படாத்தையுடையனவும ஆகிய) யானைபோனறன.—எ-று. (கஎ)

நீடியபில முறுநிலையின திருமலன்மதி முடிமீ
தாடியசெய லினவெயிலுமி ழருமணிதலை யினநீள்
கோடியகதி யினநிரைநிரை குறுகியபல காலி
னோடியவலி யினவளையுட லுரகமுமென வருமால.

இ-ள், (அந்நதியின்அலைகள்) ஆழ்ந்த பாதலத்திற்பொருந்தும் தன்மையுடை யனவும் சிவபிரானது பிறையணிந்த திருமுடிமேல் ஆடுஞ்செயலுடையனவும் ஒளிவிடும் அரிய இரத்நங்களைத் தம்மிடத்துடையனவும மிகவளைந்த செலவுடையனவும்வரிசை வரிசையாக நெருங்கிய பலகால்களினோடிய வலியுடையனவுமாக வருதலால் (ஆழ்ந்த பிலத்துவாரத்திற்பொருந்தும் நிலையுடையனவும் சிவபிரானது பிறையணிந்த திருமுடி மேல் ஆடுஞ்செயலுடையனவும் ஒளிவீசும பெரியமாணிக்கங்களைச்சுடிகையிலுடையன வும் மிகவளைந்து செல்லுதலுடையனவும வரிசைவரிசையாக நெருங்கிய பலகால்களி னுல் விரைந்துசெல்லும் வலியுடையனவும் ஆகிய) வளைந்த வுடலுடைய பாம்பு போல்றன.—எ-து. (கஅ)

மண்ணகழ்தலின் வளையணிகரு மாவனையது மிசைபோய
விண்ணளவலி னவுணர்களிறை விடுபுனலொடு நெடுகு
மண்ணலையனை யதுசுவையிழு தளையளைவுறு செயலாற
கண்ணனையனை யதுநெடுகிய கடுகியகதி நதியே.

இ-ள். மிகவிரைந்துசெல்லும் பெரிய (அந்)நதி, பூமியைத்தோண்டிச்செல்லு தலின், பாஞ்சசன்னியத்தை ஏந்திய கரியவராகமூர்த்தியும், மேலேசென்று சுவர்க் கத்தைத்தொடுதலின், மகாபலிச்சக்கரவர்த்தி தாரைவார்த்த நீரொடு பேருருக்கொண்ட வாமனமூர்த்தியும், இனியவெண்ணெயும் தயிரும அளைந்துவருதலின், கிருஷ்ணமூர்த் தியும்போன்றது.—எ-று. (கக)

திகழ்தருகரி பரிகவரிகள செழுமணியொடு வருமா
றிகழதருகுட புலவரசாக ணெறிசெய்துகவா திருவோ
டகழ்தருபதி புகுமதிகுல வரசனையதை யலதேற
புகழ்தருதிறை யிடவருகுட புலவரசனு நிகரும்.

இ-ள். விளங்கும் யானை குதிரை சாமரை இரத்நம் இவைகளொடு (கீழைத் திசைநோக்கி) வரும் (அந்நதி,) பெருமைவிளங்கும் மேலைத்திசையரசனை (த்தமது) வழிப்படுத்தி அபகரித்த செல்வத்தொடு அகழிசூழ்ந்த மதுரைபபதிபுகும் சந்திர்குல

பாண்டியன் போன்றது அல்லதாயின் (மதுரைப்பதிக்குத்) திறைசெலுத்தவரும் புகழ்பொருந்திய மேலைத்திசை நாட்டரசன்போன்றது.—எ-று. ஐ சாரியை. (உ0)

ஆரொடுமெட லவிழ்பனையொடு மரங்கிரிலை நிம்பத்
தாரொடுபுலி யொடுசிலையொடு தருகயலொடு தழுவாப்
பாரொடுதிசை பரவியதமிழ் பயிலரசர்கள் குழுமிச்
சீரொடுபல திருவொடுவரு செயலனையத நதியே.

இ-ள். அந்நதி, ஆத்திப்பூமாலை இதழ்விரிந்த பனம்பூமாலை அரம்போலும் இலையுடைய வேப்பம்பூமாலை புலி வில்லு கயல் இவைகளொடுதழுவி (வருதலால) எங்கும் பரவிய (புகழுடைய) தமிழ்வழங்கும சோழ சேர பாண்டி நாட்டு மூவேந்தருங்கூடிச் சிறந்த பல செல்வங்களொடுவருஞ் செயலைபோன்றது —எ-று. (உக)

கலிநிலைத்துறை.

கல்லார் கவிபோற் கலங்கிக் கலைமாண்ட கேள்வி
வல்லார் கவிபோற் பலவான்றுறை தோன்ற வாய்த்துச்
செல்லாறு தோறும் பொருளாழ்ந்து தெளிந்து தேயத்
தெல்லாரும் வீழ்ந்து பயன்கொள்ள விருந்த தன்றே.

இ-ள். (நூல்களைக்) கல்லாதவர் (இயற்றிய) செய்யுள் (தெளிவுபடாமைபோல அந்நதி முதலிலே) தெளிவுபடாது, மாட்சிமைப்பட்ட நூற்கேள்வியின்வல்லார் (இயற்றிய) செய்யுள் (பலமேலாகிய அகப்புறத்துறைகள் விளங்கப்பெற்று, செல்லுந்துறைதோறும் நுண்ணியபொருளாய்த்தெளிந்து, அனைவரும்விரும்பி அறமுதலிய பயன்கொள்ளத்தங்கியது) போல (ப்பின்பு) உயர்ந்த பலநீர்த்துறைகள் தோன்றப்பெற்று, செல்லுந்துறைதோறும்மணிபொன்முதலியபொருள்களோடு ஆழியதாயத்தெளிந்து, அனைவரும் விரும்பிமூழ்கி (முறையே விளைவுமுதலியவும அறமுதலியவும ஆகிய) பயன்கொள்ளச்சேர்ந்தது —எ-று. வீழ்தல் - இரட்டுறமொழிதல். (உஉ)

வண்டோதை மாறா மலர்வேணியின் வந்த நீத்தங்
கண்டோத நஞ்சுண்டருள் கண்ணுதல் மூதத்தி பேழ்வாய்
விண்டோத ணியாதென் விடாயென வெம்பி வீழ்ந்த
குண்டோ தரனை விடுத்தானக் குடிஞை ஞாங்கர்.

இ-ள். கடல்விடமுண்டவராகிய சுந்தரபாண்டியர், வண்டொலிநீங்காத(கொன்றை) மலர்சூடிய (தமது) சடையினின்றுவந்த (அந்நதி) வெள்ளத்தை நோக்கி, பெரிய வாயைத்திறந்து எனது தாகம் நீங்கவில்லையென்று ஓலிட்டு வெம்பிவீழ்ந்த குண்டோதரபூதத்தை அந்நதியிடத்தே விடுத்தருளினார்.—எ-று (உங)

அடுத்தா னதியின் னிடைபுக் கிருந்தாற்ற லோடு
மெடுத்தான் குறுங்கை யிரண்டுங் கரையேற நீட்டித்
தடுத்தான் மலைபோ னிமிர்தண்புனல் வாயங் கார்த்து
மடுத்தான் விடாயுங் கடலுண்ணு மழையு நாண.

இ-ள். (அப்பூதம்) அடுத்து அந்நதியிடத்தே போயிருந்து வலிமையொடு குறிய கையிரண்டும்தூக்கிக் கடைவாயும் நீட்டிததடுத்துத் தாகமும் கடல்நீர்பருகும் மேகமும் நாணமஃபோலுயர்ந்தநீரை வாயைத்திறந்து குடித்தது.—எ-று. அடுத்தான் எடுத்தான் தடுத்தான், முற்றெச்சங்கள். தாகந்தீர்தலையும் மேகந்தோல்வியுறுதலையும் நாண வென்றார். (உச)

தீர்த்தன் சடைநின் றிழிதீர்த்த மருந்தி வாக்குக்
கூர்த்ததின் புகொண்டு குழகன் றிருமுன்ன ரெய்திப
பார்த்தன் பணிந்த பதமுன்பணிந் தாடிப பாடி
யார்த்தன் புருவாய்த் துதித்தா னளவாத கீதம.

இ-ள். அத்தீர்த்தத்தையுண்டு (கும்போதரமபெற்று) வாக்குமிகுந்து மகிழ்ந்து அந்தச் சுந்தரபாண்டியர் சந்நிதியை அடைந்து (சிவோகமபாவனையிற்சிறந்த) அாசசுநன் வழிப்பட்ட திருவடிகளில் அனபுருவாய்வணஙகிக கூததாடி அளவிலலாத கீதங களை முழக்கத்தோடு பாடிததுதிததது.—எ-று. (உரு)

பாட்டின் பொருளானவன் பாரிட வீரன் பாடல்
கேட்டின் பமெயதிக் கணங்கட்குக கிழமை நலகி
மோட்டின் புனன்மண முறைசெய் திருநதா னளகக்
காட்டின் புறமபோய் மடங்குங் கயறகண்ணி யோடும.

இ-ள். சொல்லினபொருளாகிய சுந்தரபாண்டியர் அப்பூதத்தின் பாடலைத் திருச்செவி சேர்த்தித் திருவுளமகிழ்ந்து பூதகணங்களுககு (தலைமையாகிய) உரிமை யருளிப் பெருமையினையுடைய கடலநீர் (சூழ்ந்த) பூமியிலே பிராட்டியாரோடும் செங் கோல்செலுததி வீற்றிருந்தார.—எ-று. பாட்டு, ஆகுபெயர். (உசு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தீர்த்த னிதழிச் சடைநின்று மிழிந்து வரலாற் சிவகங்கை
தீர்த்த னுருவாக தெளிவோர்க்கு ஞானந் தரலாற் சிவஞான
தீர்த்தங் காலிற் கடுகிவரு செய்தி யாலே வேகவதி
தீர்த்தங் கிருத மாலையென வைகை நாமஞ் செப்புவரால்.

இ-ள். சிவபிரானாகிய சுந்தரபாண்டியர் சடையினின்றும் வருதலாலே சிவ கங்கையும், அப்பிரானது அஷ்டமூர்த்தததில் ஒன்றாகத்தெளிபவர்ககு ஞானந்தருத லாலே சிவஞானதீர்த்தமும், காற்றுபபோல வேகமாக வருதலாலே வேகவதிதீர்த்த மும், (செயயப்பட்ட மாலைபோல மதுரைப்பதியைச சூழ்ந்துவருதலாலே) கிருதமாலையு மென்று வைகைநதிக்கு (ப்பெரியோர) பெயர்கூறுவர.—எ-று. (உஎ)

அன்னக்குழியும் வைகையுமழைத்தபடல முற்றியது.

ஆகச்செய்யுள் - அஎ௲.

ஒன்பதாவது

# எழுகடலழைத்தபடலம்.

கொச்சககலிப்பா.

முடங்கன்மதி முடிமறைத்த முடித்தென்னன் குறட்கன்னக்
கிடங்கரொடு நதியழைத்த கிளாகருணைத் திறனிதுமேன
மடங்கலவலி கவர்ந்தான்பொன் மாலைபடிந் தாடவெழு
தடங்கடலு மொருங்கழைத்த தன்மைநனைச் சாற்றுவாம.

இ-ள். வளைந்த பிறைமதியணிந்த சடைமுடியைமறைத்த மகுடத்தையுடைய சுந்தரபாண்டியர் குண்டோதரபூதத்துக்கு அன்னக்குழியும் வைகைநதியும் விளங்குகின்றகருணையால் அழைத்த திருவிளையாடல இது. இனி நரசிங்கத்தினதுவலியை ஒழித்த அச்சுந்தரேசா காஞ்சனமாலை ஸ்நாநஞ்செய்யப் பெரிய சப்தசாகரமுழுவதும ஏககாலததில் அழைதத திருவிளையாடலை (யாம) கூறுவாம.—எ-று. (க)

ஓதவரும பொருள்வழுதி யுருவாகி யுலகமெலாஞ்
சீதளவெண் குடைநிழற்றி யறச்செங்கோல் செலுத்துநாட்
போதவரும பொருளுணாநத விருடிகளும் புனிதமுனி
மாதவரும் வரன்முறையாற் சந்தித்து வருகின்றார்.

இ-ள. சொலலுதற்கரிய பரமபொருளாகிய சுந்தரேசர் பாண்டியர்வடிவங்கொண்டு அறநூல்வழியே செஙகோலசெலுததுங்காலததில் அரிய ஞானநூற்பொருளுணர்ந்த இருடிகளும் (ஏனைய) முனிவாகளும் வரன்முறைபபடி (அப்பாண்டியராஜனைச்)சந்தித்துவருகின்றவர்களாயினாகள்.—எ-று. அறம், போதம், ஆகுபெயாகள். மேகம் தனககு உரியகாலததில வருஷிததல், பூமி பயிர்களாலே விளங்கியிருத்தல், மனிதர் அனைவரும் பாவம் சிறிதும் இலலாதவரும் தருமததில் விருப்பமுடையவருமாயிருத்தல், பிராமணா வேதவேதாஙகங்களின் கரைகண்டவரும் தந்தருமத்தில் விருப்பமுடையவரும் சிவலிஙகபூஜையிற் கருததுடையவரும சிறந்தபத்தியுடையவரும் மகிழ்ச்சியைக்கொடுப்பவருமாகி வேள்விமுதலியனசெய்தல், மற்றும் அவர் காமமுதலிய பகைவரால வெல்லப்படாதவரும வெற்றிகொள்ளபபெற்ற இந்திரியங்களையுடையவருமாய்ச் சிவபிரானது சொரூபததை யறியும்பொருட்டு உபநிடதசிரவணமுதலியவற்றாலும் இயமமுதலிய அஷ்டாங்கயோகங்களாலும் முயற்சித்தல், க்ஷத்திரியர்முதலாயினரும் தத்தங்கருமஙகளிற் கருத்துடையவரும் மகிழ்ந்த மனமுடையவரும் எல்லாச்செல்வங்களுமுடையவருமாயிருத்தல், மழைமிகுதி மழையில்லாமை ஆதி வியாதி என்பனவின்மை, குழந்தையின்மரணமும் அவஙிருத்துவும் இல்லாமை, இறுதிக்காலத்தில் அனைவரும் சிவலோகம் அடைதல், எபபொழுதும் சிவபிரானுடைய சாந்நித்தியத்தாலே சிவலோகத்திற்கும் இத்திருவாலவாய்க்கும பேதமில்லாமை, இருநந்திதேவர்முதலிய அனைவரும் மாறுட வடிவுகொண்டு சுந்தரபாண்டியரது சேவையின்பொருட்டு மிக மகிழ்ந்தவராயிருததல், தடாதகைப்பிராட்டியார் கறபுநிலைமையிற்சிறந்து வீற்றிருத்தல்முதலியன வடமொழியிற்கூறியிருத்தலை,சீதளவெண்குடைநிழற்றியறச்செங்கோல் செலுத்து மென்பதிலடக்கிக்கூறினர். (உ)

வேதமுனி கோதமனுந் தலைப்பட்டு மீள்வானோர்
பேர்தளவிலை கற்புடைய பொன்மாலை மனைபுகுந்தான்
மாதவளும் வரவேற்று முகமனுரை வழங்கிப்பொன்
னாதனமிட் டஞ்சலிசெய் தரியதவத் திறங்கேட்பாள்.

இ-ள். (அவருள்ளே) கௌதமமுனிவருஞ் சந்தித்துத்திரும்புகின்றவர் ஒரு தினம் காஞ்சனமாலையின் அரமனைக்குப் போயினார், அவளும் (அம்முனிவரது) நல்வரவை எதிர்ந்து உபசாரவார்த்தைகூறி ஆசனம் இட்டு வணங்கித தவவேறுபாடுகளை வினவுகின்றாள்.—எ-று. (௩)

கள்ளவினைப் பொறிகடந்து கரைகடந்த மறைச்சென்னி
யுள்ளபொருள் பரசிவமென் றுணர்ந்தபெருந் தகையடிகே
டள்ளரிய பவமகற்றுந் தவமருள்செய் கெனக்கருணை
வெள்ளமென முகமலர்ந்து முனிவேந்தன் விளம்புமால்.

இ-ள். கள்ளமுடையகன்மம், இந்திரியமுதலிய தத்துவகாரணமாகிய மாயை; (மலம்) ஆகிய மூன்றுங்கடந்து வேதசிரசிலுள்ளபொருள் பரசிவமேயென்றுணர்ந்த பெருந்தன்மையுடைய சுவாமீ தள்ளக்கூடாத பிறவியைபபோக்குந தவ (வேறுபாடு) களை அருளுமென்றுகேட்க, அமமுனிவரர் அருளுகின்றார்.—எ-று.பொறி ஆகுபெயர். இனம்பற்றி ஏனையதத்துவமும மலமும் வருவிக்கப்பட்டன தேற்றேகாரந்தொகை.(௪)

தவவலியா னுலகீன்ற தடாதகைக்குத் தாயானாய்
சிவபெருமான மருகனெனுஞ் சீர்பெற்றாய் திறன்மலயத்
துவசனருங் கற்புடையாய நீயறியாத் தொல்விரத
மவனியிடத் தெவரறிவா ராயினு மியம்பக்கேள்.

இ-ள். வலிய மலயத்துவஜபாண்டியனுக்கு அரியகற்புடைய மனைவியே, தபோபலத்தினால் உலகமாதாவுக்கு மாதாவும் ஆனாய் சுந்தரேசனை மருகரென்றழைக் குஞ் சிறப்பும்பெற்றாய் (அத்தன்மையுடைய) நீ அறியாததவம் பூமியின்கண், யாவர் அறிவார் (அஙஙனம்) ஆயினும் (யாம்) கூறுவதுங் கேட்பாயாக.—எ-று. (௫)

மானதமே வாசிகமே காயிகமே யெனவகுத்த
வீனமில்சீர்த் தவமூன்று மிவற்றின்மா னதந்தரும
தானமிசை மதிவைத்த றயைபொறுமை மெய்சிவ்னை
மோனமுறத் தியானித்த லைந்தடக்கன் முதலனந்தம்.

இ-ள். மானதமும் வாசிகமும் காயிகமுமென்று (நூல்களால்) வகுக்கப்பட்ட புண்ணியங்கள் மூன்றும். இவற்றுள் மனத்தாற்செய்யப்படுவன-தருமதானங்கள் செய் வதிற் கருத்துவைத்தல், உயிர்களிடத்திரங்கல், பிறர்தீங்கு பொறுத்தல், பிறர்க்குத் தீமைதராதவைகூறல், பிறிதுசங்கற்பமின்றிச் சிவபிரானைச்சிந்தித்தல், ஐம்பொறியட க்கல்முதலிய பலவாம்.—எ-று. முதலியவென்றதனால் ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை மானசிக மாக எண்ணலுங்கொள்க. அதுஎவ்வகைப்புண்ணியங்களிலுஞ்சிறந்து சித்தசுத்திக்குக் காரணமாம். சித்தசுத்தியினாலே புத்திமுத்தி சித்திக்கும் என்று வடமொழிகூறும். (௬)

வாசிகமைந் தெழுத்தோதன் மனுபஞ்ச சாந்திமறை
பேசுசத வுருத்திரந்தோத் திரமுனைத்தல பெருந்தரும்ங்
காசகல வெடுத்தோதன் முதலனந்தங் காயிகங்க
ளீசனருச் சனைகோயில வலஞ்செய்கை யெதிர்வணங்கல.

இ-ள். வாக்காற்செய்யப்படுவன - திருவஞ்செழுத்தை மந்தம் உபாம்சுவாக ஜபி
த்தல், பஞ்சசாந்திமந்திரம் ஸ்ரீருத்ரசமகங்கள் (இவைகளை ஜபித்தல்,) பலவித துதிகள்
செய்தல், பெரும்புண்ணியங்களை எடுத்தோதல முதலிய அநேகமாம. (முதலனந்தமெ
ன்றதனால், தமுஷ்டிஃ மந்திரம் அமசமந்திரம் திரிசுபர்ணமந்திரம் பஞ்சபபிரமமந்தி
ரம் புருஷசூக்தமந்திரமுதலிய வைதிகமந்திரங்கள் சிவர்கமமந்திரங்கள் ஆகிய இவை
ஜபித்தலுங்கொள்க.) காயத்தாற் செய்யப்படுவன - சிவபூஜைசெய்தல், சிவாலயத்தை
வலம்வருதல், சிவசந்நிதியில் வணங்கல்.—எ-று. மந்தம் - தன்செவிக்கும், உபா - பிறர்
செவிக்குங்கேட்க ஜபித்தல். (எ)

திருத்தனுறை பதிபலபோயப பணிதலாணி நிறைவேற்ற
திருத்தன்முடி நதியாதி தீர்த்தயாத் திரைபோய்மெய
வருத்தமுற வாடலிவை முதற்பலவவ் வகைமூன்றிற்
பொருத்தமுறு காயிகங்கள சிறந்தனவிப புண்ணியத்துள்.

இ-ள். சிவக்ஷேத்திரங்கள் பலவற்றினும் போய்ப் பணிதல், சிவாலயப்பணி
முடித்தல, கங்கையாதி தீர்த்தயாத்திரைபோய் மூழ்குதல்முதலிய பலவாம் (முதற்பல
வென்றதனால், சிவாலயத்திலே திருவலகிடுதல, திருமெழுக்கிடுதல், திருநந்தவனம்
வைத்தல், சிவபிரானுக்குச சாத்துமபடி திருப்பள்ளித்தாமங் கொய்தல், அபிடேகத்துக்
குத திருமஞ்சனமெடுத்தல ஆகிய இவையுங்கொள்க.) அம் மூவகையுள்ளே (மனவாக்
குகளோடு கூடிக்) காயத்தாற்செய்யப்படுவன சிறந்தனவாம. இககாயிக புண்ணியங்
களிலே.—எ-று. (அ)

திருத்தயாத் திரையதிக மவற்றதிகஞ் சிவனுருவாந்
திருத்தமாங் கங்கைமுதற் றிருநதிக டனிதனிபோயத
திருத்தமா டுவதரிதத் திருநதிக ளவைவநது
திருத்தமாய் நிறைதலினு லவறறதிகந் திரைமூழ்கீ.

இ-ள். மேமபட்டன, தீர்த்தயாத்திரைகளாம். அவற்றின் மேமபட்டன, சிவபி
ரானுடைய அஷ்டமூர்த்தத்தில ஒன்றாகின்ற சுத்தமாகிய கஙகைமுதலிய நதிகளிலே
தனித்தனியே சென்று மூழ்குவனவாம். அரிதாகிய அக்கஙகைமுதலிய நதிகள்வந்து
செப்புமாய் நிறைதலினால் அந்நதிகளிலே மூழ்குவனவற்றின மேம்பட்டது கடலில்
மூழ்குதலாம்.—எ-று. அவை பகுதிப்பொருள் விகுதி. பெரியோரும் வருந்தி யடைத
ற்குரிய முத்திக்கு மூலகாரணம் தீர்த்தயாத்திரையென்று வடமொழிகூறும. (கூ)

என்றும்முனி விளம்பக்கேட் டிருந்தகாஞ் சனமாலை
துன்றுதிரைக் கடலாடத் துணிவுடைய விருப்பினளாய்த்
தன்றிருமா மகட்குரைத்தாள் சிறிதுள்ளந் தளாவெயதிச
சென்றிறைவற் குரைப்பலெனச் செழியர்தவக் கொழுந்தனையாள்.

இ-ள். என்று கௌதமமுனிவர் கூறக்கேட்ட காஞ்சனமாலை, கடலின் மூழ்
குந் துணிவுள்ள காதலுடையவளாய்த தன்னுடைய புத்திரியாகிய தடாதகைப்பிராட்

டியாருக்குக் கூறினள். (அதற்குப்) பிராட்டியார் (மாதாவின் பிரிவுக்குத்) திருவுள்ளஞ் சிறிது வருந்தி நாயகர்க்கு விண்ணப்பஞ் செய்வேனென்று கருதிப்போய்.—எ-று. (௧0)

தன்றன்னை யுடையபெருந் தகைவேந்தர் பெருமான்முன்
சென்றன்ன மெனநின்று செப்புவாள் குறள்வீரற்
கன்றன்னக் குழியினெடு மாறழைத்த வருட்கடலே
யின்றன்னை கடலாட வேண்டினு ளென்றிரந்தாள்.

இ-ள். தம்மைக் கிழத்தியாகவுடைய சுந்தரபாண்டிய ராஜர் சந்நிதிசேர்ந்து நின்று விஞ்ஞாபிக்கின்றவர், முன்னே குண்டோதரபூதத்திற்கு அந்நக்குழியும வைகை நதியும் வருவித்த கிருபாசமுத்திரமே, இப்பொழுது என்னுடைய மாதா சமுத்திரஸ்நாநஞ் செய்ய விரும்புகின்றுளென்று விண்ணப்பஞ் செய்தார்.—எ-று. (௧௧)

தேவிதிரு மொழிகேட்டுத் தென்னவராய் நிலம்புரகருங்
காவிதிகழ் மணிகண்டர் கடலொன்றோ வெழுகடலுங்
கூவிவர வழைத்துமென வுன்னினர் குணபாலோர
வாவியிடை யெழுவேறு வண்ணமொடும் வருவனவால்.

இ-ள். பிராட்டியாரது திருவார்த்தையைக் கேட்டுப் பாண்டியர் வேடம்பூண்டு பூமியைக் காக்கின்ற நீலமலர்போலும ஸ்ரீகண்ட சுந்தரேசர், (உன்னுடைய மாதா ஸ்நாநஞ்செய்ய விரும்புவது) ஒரு கடலோ எழுகடலையும் வருவிப்போமெனறு சங்கற்பித்தருளினர். (உடனே) எழுவேறுவகை நிறஙகளோடு (எழுகடலுந் தம்மிடம விட்டு) மதுரைப்பதியின் கீழ்பாலுளள ஓர் வாவியிடத்தே வாராநின்றன.—எ-று. (௧௨)

துண்டமதித் திரளனைய சுரிவளைவாய் விடவுதைத்து
வெண்டவள நுரைததும்பச் சுறுவேறு மிசைக்கொட்பத்
தண்டரள மணித்தொகுதி யெடுதெறியுந் தரங்கநிரை
யண்டநெடு முகடுரிஞ்ச வார்தெழுந்த கடலேழும்.

இ-ள். சந்திரதுண்டக் கூட்டம்போலுஞ் சுரிமுகச் சஙகுகள் ஒலிக்கும்படி தள்ளி மிகவெள்ளிய நுரைகள் ததும்பவும், ஆணசுறுமீன்கள் மேலே சுழலவும், தண்ணிய முத்துக்கூட்டங்களை எடுத்தெறிகின்ற திரைவரிசைகள் நெடிய ஆகாயமுகட்டைத் தடவவும் எழுகடல்களும் முழங்கி எழுந்து வந்தன.—எ-று. (௧௩)

காணுமா நகர்பனிப்பக் கலிமுடிவி னயன்படைப்புக்
கோணுமா றெழுந்ததெனக் கொதித்தெழுந்த கடலரவம்
பூணுநா யகனகில புவனமெலாங் கடந்ததிரு
வாணையா லவனடிசென் றடைந்தார்போ லடங்கியதால்.

இ-ள். (அவ்வரவைக்) காண்கின்ற (மதுரை)மாநகரத்தார் நடுங்கக் கலியுகமுடிவிலே பிரமனது சிருட்டிப்பொருள்கள் கெடும்படி யெழுதல்போலப் பொங்கியெழுந்த ஏழு கடல்களும் பாம்பணிபூண்ட வுலகநாயகரது எல்லாப புவனங்களையும் வசப்படுத்திய ஆஞ்ஞையினல் அப்பிரானரது திருவடிக்கீழ்சசென்று அடங்கினவரபோல (அவ்வாவியின்மாடடு) அடங்கின.—எ-று. (௧௪)

தன்வண்ண மெழுகடலின் றனிவண்ண மொடுகலந்து
பொன்வண்ண நறும்பொகுட்டுப் பூம்பொய்கை பொலிவெய்தி
மின்வண்ணச் சடைதாழ வெள்ளிமணி மன்றாடு
மன்வண்ண மெனவெட்டு வண்ணமொடும் வயங்கியதால்.

இ-ள். பொன்னிறம் பெற்ற நன்மணங்கமழும் பொகுட்டையுடைய அழகிய (அத்)தாமரை வாவியானது தனது நிறத்தொடு (தன் மாட்டடங்கிய) எழு கடல்களின் ஒப்பற்ற நிறங்களைக் கலந்து பொலிவுற்றுச் சிவபிரானது அஷ்டமூர்த்த வர்ணங்கள் போல எண்வகை நிறங்களோடு விளங்கியது.—எ-று. எழுகடற் றீர்த்தத்தின மூழ்கு வோர் பாவத்தினீங்கிப் பிறப்பிறப்புக கடலைக் கடப்பாரென்று வடமொழி கூறும். ()

எழுகடலழைததபடல முற்றியது.

ஆகச செய்யுள - அகூ0.

---

பத்தாவது

# மலயத்துவசனையழைத்தபடலம்.

கலிவிருத்தம்.

எழுகட லழைத்தவா றியம்பி னுமினிச்
செழுமதி மரபினேன் சேணி ழிந்துதன்
பழுதில்கற் பிலலொடும் பரவை தோய்ந்தரு
ளழகிய திருவுரு வடைந்த தோதுவாம்.

இ-ள். எழுகடலையும வருவித்த திருவிளையாடலைக் கூறினோம் இனி நிறைந்த சந்திரகுலத் துதித்த மலயத்துவஜ பாண்டியன் விண்ணுலகினின்றும் இறங்கித் தன்னுடைய குற்றமற்ற கற்புள்ள மனைவியொடு (அவ்வெழு) கடலின் மூழ்கிச் சிவபிரானது அழகிய சாரூப்பியம்பெற்ற திருவிளையாடலை (யாம) கூறுவாம்.—எ-று. (க)

புரவலன் றடாதகைப் பூவை யோடும்வந்
துரவுநீர்க் கடன்மருங் குடுத்த சந்தன
மரவமந் தாரமா வகுளம் பாடலம்
விரவுநந் தனத்தரி யணையின் மேவினான்.

இ-ள். சுந்தரபாண்டியர் தடாதகைப் பிராட்டியாரொடு போந்து உலாவு நீரையுடைய எழுகடற் றீர்த்தக்கரையிலேசூழ்ந்த திருநந்தவனத்திலே சிங்காசனத்திலே அமர்ந்தருளினார்.—எ-று. மரவம் - குங்குமமரம். வகுளம - மகிழமரம். நந்தவனம் இடைக் குறையாயிற்று. (உ)

தாதவிழ் மல்லிகை முல்லை சம்பகப்
போதுகொய் திளைஞருஞ் சேடிப் பொற்றொடி
மாதருங் கொடுத்திட வாங்கி மோந்துயிர்த்
தாதர மிரண்டற வமரு மெல்லையில்.

இ-ள். மகரந்தத்தொடு விரிந்த மல்லிகைமுதலிய மலர்களைக் கொய்து தோழி ரும் தோழியருங் கொடுக்கவாங்கி நன்முக மோகது அப்பாண்டிய ராஜரும் பிராட்டியா ரும் ஒற்றுமைப்பட்ட அன்பொடும் எழுந்தருளி யிருக்கும்போது.—எ-று. (௩)

தன்னமர் காதலி தன்னை நோக்கியே
மன்னவ னுன்பொருட் டேழு வாரியு
மிங்கக ரழைத்தன மீண்டுப் போங்தநின்
னன்னையை யாடுவா னழைத்தி யாலென.

இ-ள். சுந்தரபாண்டியர், தம்மால விரும்பப்பெற்ற தேவியாரை நோக்கி, உன் பொருட்டுச் சப்தசாகரங்களையும் இப்பதியில் வருவித்தோம் இததீர்த்தத்தில் வந்து உன்னுடைய மாதாவை ஸ்நாநஞ்செய்ய அழைப்பாயென்று அருள.—எ-று. (௪)

மடந்தையு மன்னையைக் கொணர்ந்து வாவிமா
டடைந்தன ளாகமற் றவள்பு ராணநூற
படர்ந்தகேள் வியர்தமை நோக்கிப் பௌவநீர்
குடைந்திடும் விதியெவன் கூறு மென்னவே.

இ-ள். தேவியாரும் தம்மாதாவை அழைத்துவந்து எழுகடற்றீர்த்தத்தின் அரு கே அடைய, அக்காஞ்சனமாலை பௌராணிகரை நோக்கிச் சமுத்திர ஸ்நாநஞ்செய்யும் விதியாது கூறுமென்று வினவ.—எ-று. நூற்படர்ந்த - நூலிற்சென்ற. (௫)

கோதறு கற்பினாய் கொழுநன் கைத்தலங்
காதலன் கைத்தல மன்றிக் கன்றின்வா
லாதலிம் மூன்றிலொன் றங்கை பற்றியே
யோதநீ ராடுதன் மரபென் றோதினார்.

இ-ள். (அதற்குப் பௌராணிகர்) குற்றமற்ற கற்புள்ள காஞ்சனமாலையே, தன்னுடைய நாயகன்கை, அல்லது தன்னுடைய புத்திரன்கை, அல்லது (பசுவினது ஆண) கன்றின்வால் ஆகிய இம்மூன்றில் ஒன்றையாதல தன்கையாற் பற்றிச் சமுத்திர தீர்த்தத்தில் ஸ்நாநஞ்செய்வது விதியென்று கூறினார்.—எ-று. (௬)

மறையவர் வாய்மைபொன் மாலை கேட்டுமேற்
குறைவறத் தவஞ்செயாக் கொடிய பாவியேற்
கிறைவனுஞ் சிறுவனு மிலலை யேயினிப்
பெறுவது கன்றலாற் பிறிதுண் டாகுமோ.

இ-ள். வெளி. வாய்மை - மெய்மொழி. மேல்-முற்பிறப்பு. இறைவன் - கண வன். (௭)

ஆதலாற் கன்றின்வால் பற்றி யாடுகோ
மாதரா யென்றுதன் மகட்குக் கூறலும்
வேதன்மால் பதவியும் வேண்டி னார்க்கரு
ளுதன் றுயிர்த்துணை யாய நாயகி.

இ-ள். ஆதலால், பெண்ணே கன்றின்வால்பற்றி ஸ்நானஞ்செய்வேனோ என்று (காஞ்சனமாலை) தன்னுடைய புத்திரியார்க்குக் கூறலும் (அதற்கு) விரும்பினவர்க்கு அரிபிரமேந்திராதி பதவிகளும் அருளுஞ் சுந்தரபாண்டியர்க்கு உயிர்த்துணையாகிய பிராட்டியார்.—எ-று. மாது-மாதர் எனப் போலியாய் நின்றது. (அ)

தன்னுயிராக கிழவனை யடைந்து தாழ்ந்துதன்
னன்னைதன் குறையுரை யாட வாண்டகை
மன்னவன லாரியோ டொருங்கு வைகிய
தென்னவன் மேன்மனஞ் செலுத்தி னைரோ.

இ-ள் தம்முயிர்க்கு உரிமைபூண்ட அப்பாண்டியராஜரை அடுத்து வணங்கித் தம்மாதாவின் குறையை விண்ணப்பஞ்செய்ய (அதற்கு)பேராற்றலுடைய சுந்தரபாண்டியர் இந்திரனோடுகூட (ஆசனத்தில) வசித்த மலயத்துவஜபாண்டியன்மீது திருவுளஞ் செலுத்தினர்.—எ-று. (கூ)

வேறு.

சிலையத் திரியார் திருவுள் ளமுணர்ந்
தலையத் திரியட் டவனு தனநீத்
துலையத் திரியொத் தவிமா னமொடு
மலயத் துவசச செழியன் வருமால.

இ-ள். (மேரு) மலையை வில்லாகவுடைய சுந்தரபாண்டியரது திருவுளப்பாங்கினை யுணர்ந்து, சஞ்சரிக்கின்ற மலைகளின் சிறைகளையரிந்த இந்திரனது ஆசனத்தினின்று நீங்கி அலைகின்ற மலைபோன்ற விமானத்தில் மலயத்துவஜபாண்டியன் வருகின்றான்.—எ-று. ஒடு-உருபுமயக்கம், ஆல்-அசை. (க0)

மண்பே றடைவான் வருமேழ் கடல்வா
யெண்பே றடையா வருளின் னமுதைப்
பெண்பே றதனாற் பெறுபே றிதெனக்
கண்பேற டைவா னெதிர்கண் டனனே.

இ-ள். மண்ணுலகத்தார் பயன அடையும் பொருட்டு வந்த எழுகடற்றீர்த்தக் கரையிலே அமர்ந்த அளவில்லாத இனிய அருளமிர்தமாகிய தன்மருகரைப் பிராட்டியாரைப் பெற்றதனால் அடையும்பேறு ஈதென்று கண்ணனது பயன்பெறும் பொருட்டு நேரே மலயத்துவஜபாண்டியன் கண்ணுற்றான்.—எ-று. (கக)

வந்தான் மருகன் சரணம பணிவான்
முந்தா முனமா மனெனும் முறையா
லந்தா மரையங் கையமைத் துமகட்
டந்தா னையெதிர்ந் துதழீஇ யினனால்.

இ-ள். (கண்ணுற்றுச் சமீபத்தில்) வந்த மலயத்துவஜபாண்டியன், மருகராகிய சுந்தரபாண்டியரது திருவடிகளை வணங்க முற்படுமுன் மாமனென்கிற முறையினால், கரகமலங்களாலே தடுத்துப் புத்திரியாகிய பிராட்டியாரைக் கொடுத்த, அம்மலயத்துவஜபாண்டியனைச் சுந்தரபாண்டியர் எதிர்ந்து தழுவினர்.—எ-று. (கஉ)

ஆத்தன் றிருவுள் ளமகிழ்ந் தருளாற்
பார்த்தனே புகிரம் பியபன் னியொடுந்
தீர்த்தம் புகுநதா டியுசெல கவெனப
பூத்தண பொருனைப் புனறு டவனும்.

இ - ள். (தழுவிய) பரமாப்தராகிய சுநதரபாணடியர் மகிழ்ந்து கருணையோடு (மலயத்துவஜனை) நோககி (உமமுடைய) பததினியாரொடு தீர்த்தததிலே ஸ்நாநஞ் செய்யக்கடவீரென்று அருள, அம்மலயத்துவஜன.—எ-று (கங)

முன்னைத் தவமெய் திமுயன் றுபெறு
மன்னப் பெடையன் னவளவந் தெதிரே
தனனைத் தழுவத தழுவிக் கிரிவேந
தென்னக் குறையா மகிழ்வெய தினனே.

இ - ள். (புததிரியாகிய) பிராட்டியாா எதிரிலவந்து (தன்னைததழுவ)த தானும் அப்பிராட்டியாரைத் தழுவி மலையரையன்போல மகிழ்ந்து.—எ - று. மகிழவெய்தினன - முற்றெச்சம். (கச)

தண்டே மொழிவேள் விதவக் குறையாற்
கண்டே னிலனென் றுகருந் தவல
முண்டே யஃதிவ் வுவகைக களிதேன்
வண்டே யெனவுண டுமறந் தனனால்.

இ - ள்- புத்திரியாரது திருமணக்கோலததைப் பூரணதவம புரியாமையாற் கண்டிலனென்று (தன்) மனத்தே கவலையுணடன்றே அதனை இநதச் (சுந்தரபாண்டியரோடு புத்திரியார் அமர்ந்துள்ள திருககோலததைக கணணுற்றமையால் ஆகிய) பெருமகிழ்ச்சியான தேனை வண்டுபோல் உண்டு மறந்தான்.—எ-று. தேமொழி - அனமொழிததொகை. (கரு)

சேணுற் றவனைச் சிலநாள் கழியக்
காணுற் றவள்போ னிறைகற் புடையாள்
பூணுற் றுமலர்ந் ததொாபொற் கொடிபோ
ஞணுற் றெதிர்நண ணியிறைஞ் சினளால்.

இ - ள். (பொருளீட்டல் முதலியனபற்றிப் பிரிந்து) தூரத்தே சென்ற தலைவனைச் சிலநாள் கழிந்தபின் வரககண்ட தலைவிபோலச் (சுந்தரேசரது திருவருளினாலே அமமலயத்துவஜன்)ʼ எதிரிலே காஞ்சனமாலை மங்கலசூத்திரமுதலிய அணிகள் அணிந்து (விளங்கி), அலர்ந்ததோர் அழகிய கொடிபோல நாணமுற்று வந்து வணங்கினாள்.—எ-று. (கசு)

மஞ்சோ தியகாஞ் சனமா லைகையிற்
பைஞ்சோ திவிளங் குபவித் திரையாய்ச்
செஞ்சோ திமுடிச் சிவநா மவெழுத்
தஞ்சோ திநெடுங் கடலா டுமரோ.

இ-ள். (பின்பு) மேகம்போலுங் கூந்தலுடைய காஞ்சனமாலை (தன்) கையமல பவித்திரணம விளங்கும் பவித்திரமுடையவளாய்ச் சிவந்த ஒளிவிடுஞ் சடைமுடியுள்ள சிவபிரானது திருநாமமாகிய திருவஞ்செழுத்தை யுச்சரித்து எழுகடற் றீர்த்தத்தில் மூழ்கத் தொடங்குவாள்.—எ-று. (கஎ)

துங்கக் கலைவே தியர்சொன் மறைநூற்
சங்கற் பவிதிப் படிதன் றுணைகை
யங்கைத் தளிரபற றியகத் துவகை
பொங்கப் புணரிப் புனலா டினளே.

இ-ள். (தொடங்கி) உயர்வுடைய புராணங்களையுணர்ந்த முனிவர் (கூறிய) வேதநூலின் சங்கற்பமுறைப்படி தன்றலைவனது கையைத் (தனது) கையாற் பற்றி மகிழ்ச்சிமிக அத்தீர்த்தத்தில் மூழ்கினாள்—எ-று. (கஅ)

குடைந்தார் கரையே றினர்கோன் றைமுடி
மிடைந்தார் கருணைக் கண்விழிக் கமல
முடைந்தா ரனைமா ருதரங் குறுகா
தடைந்தா ருமைபா கருட் படிவம்.

இ-ள். மூழ்கிக் கரையேறிய அவ்விருவரும், பாண்டியராகிய சுந்தரேசர் திருவருட் பார்வை செய்தலாலே பாசம் ஒழிந்தவராய் மாதாக்களின் கருப்பத்திற் புகாது சிவசாரூப்பியம் பெற்றனர்—எ-று. குடைந்தார் உடைந்தார் முற்றெச்சம். (கக)

ஒண்கொண் டன்மிடற் றொளியும் மொருநா
லெண்கொண் டபுயத் தெழிலும் மழல்சேர்
கண்கொண் டநுதற் கவினும் பொலியா
மண்கண் டுவியப் பவயங் கினரால.

இ-ள். (பெற்றவர்) மேகம்போலும் (விடமுடைய) மிடற்றொளியும் நாற்புயங்களின் எழுச்சியும் அக்கினிக்கண் பொருந்திய நெற்றியழகும் பொலிவுற்று மண்ணுலகத்தார் நோக்கி அதிசயிக்க விளங்கினார்.—எ-று. இவ்வவயங்களோடு காஞ்சனமாலை, உமாதேவியார் வடிவம் அடைந்தாளென்பது கருத்து, நதெய்வதருக்கரன் நயகையொடும் எறினனென்று மேற்கூறுவதால. (உ0)

விண்ணின் றுவழுக் கிவிழுங் கதிர்போற்
கண்ணின் றநுதற் கருணா கரன்வா
ழெண்ணின் றபுரத் தினிழிந் திமையா
மண்ணின் றதொர்தெய் வவிமா னமரோ.

இ-ள். ஆகாயத்தினின்று வழுக்கிப் பூமியின் விழும் ஆதித்தன்போலச் சிவபிரான் வாழ்தற்கிடமாகிய மதிக்கத்தக்க சிவலோகத்தினின்று ஒரு திவ்விய விமானம் இறங்கி நிலவுலகிலே விளங்கி நின்றது.—எ-று. (உக)

அத்தெய் வவிமா னமடுத் திடலு
முத்தெய் வதமுக் கணவன் பணியா
னத்தெய் வதருக் கரனங் கையொடு
மெத்தெய் வதமுந் தொழவே றினனல்.

இ-ள். அத்திவ்விய விமானம் சமீபிக்கவும், சோமசூரியாக்கினிகளாகிய மூன்று தெய்வங்களை மூன்று கண்களாகவுடைய சுந்தரபாண்டியர் ஆஞ்ஞையால், சிறந்த திவ்விய கற்பிதாருபேரின்ற (கொடைக்) கையுடைய மலயத்துவஜன், பத்தினியொடு தேவர் அனைவருந்தொழ (அவ்விமானத்தில்) ஏறினன்.—எ-று. நகரம் - சிறப்புப்பொருளில் வந்தது. (உஉ)

தேமா ரியெனும் படிசிந் தநறும்
பூமா ரிபொழிந் தனபொன் னுலகந்
தூமா மறையந் தரதுந் துபிகா
ராமா மெனவெங் குமதிர்ந் தனவால்.

இ-ள். (ஏறியவுடன் மண்ணுலகத்தார்) மழையென்று கூறத் தேனைச் சிந்தும் வண்ணம் விண்ணுலகத்தார் பூமழைபொழிந்தனர். வேதங்களும் தேவதுந்துபிகளும் மேகம்போல முழங்கின.—எ-று. (உரு)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

எழுந்தது விமான மவ்வா னெழுந்ததுந் துபியு நாணி
விழுந்தது போலு மென்ன வரவொலி யெங்கும் விம்மத்
தொழுந்தகை முனிவ ரேத்தச் சுராதிகள் பரவத் திங்கட்
கொழுந்தணி வேணிக் கூத்தர் கோநகர் குறித்துச் செல்வார்.

இ-ள். அத்திவ்விய விமானம் (மேலே) எழுந்தது. (அப்போது) ஆகாயத்தில் எழுந்த தேவவாத்தியங்கள் நாணித் தோற்றது போலுமென்று சொல்ல அரகரவென்னொலி எங்கும் நிரம்பவும், (யாவரும்) தொழுந்தன்மையுடைய முனிவர் வாழ்த்தவும், தேவர்முதலியோர் துதிக்கவும் (அவ்விருவரும்) சிவலோகம் நோக்கிச் செல்வாராயினர்.—எ-று. கோநகர் - சிறந்தநகரம். (உச)

முன்புதம் முருவாய வைய முறைபுரி கோல்கைக் கொண்டு
பின்புதம் முருவந் தந்த மருகனும் பெருகு கேண்மை
யன்புதந் தருகு நின்ற தடாதகை யணங்கு மீண்டு
பொன்புனை குடுமிக் கோயில் புகுந்துநன் கிருப்பக் கண்டார்.

இ-ள். (அங்ஙனஞ் செல்பவர்) முன்பு தம்முடைய பாண்டியராஜ ராணிவடிவங்கொண்டு செங்கோல் செலுத்திப் பின்பு தம்முடைய சாரூப்பியங் கொடுத்தருளிய சுந்தரபாண்டியராகிய மருகரும் பிராட்டியாராகிய புத்திரியாரும் திரும்பிச் சுவர்ணத்தால் அலங்கரிக்கப்பெற்ற சிகரமுடைய கோயிலிற்சென்று வீற்றிருக்கத் தரிசித்தார்.—எ-று. (உரு)

முன்னைவல் வினையால் யாக்கை முறைதடு மாறித் தோற்ற
மன்னிய மனிதர் போலப் பணைடைய வடிவ மாறி
யன்னையே மகளா யீன்ற வப்பனே மருக னாக
வென்னயா நோற்றே மியாக்கு மியற்றருந் தவந்தா னென்னா.

இ-ள். அநாதியாகிய வலியகன்ம பாசத்தாலே பிதா மாதா புத்திர புத்திரிக்கிரமம் தடுமாறித் தோன்றிய மானுடனைப்போலச், சர்வலோகத்திற்கும் மாதா பிதாக்களாகிய உமாதேவியாரும் சிவபிரானும் (எமக்குப்) புத்திரியாரும் மருகருமாகப் பழைய திருவுருமாறி வரும்படி யாவர்க்குஞ் செய்தற்கரிய தவங்களுள் எப்படிப்பட்ட தவத்தை யாஞ்செய்தோமோவென்று கருதி.—எ-று. (உசா)

கன்றகலா வாள்போலே யயன் கழல விடாது பற்றி
யொன்றிய வன்பு பின்னின் றீர்க்கமுன் னுள்ளந் தேரூர்ந்து
சென்றிரு கண்ணு முட்டி யடிக்கடி திரும்பி நோக்கிக்
குன்றுறழ் விமானந் தன்னை யஞ்சலி கூப்பிச் செல்வார்.

இ-ள். கன்றுநீங்கிய பசுப்போலச் சுந்தரேசரது திருவடியை விடாதுபற்றி ஒற்றுமைப்பட்ட அன்பு பின்புநின்று இழுக்கலால் மனதொடு இருகண்களும்போய் முட்டி அடிக்கடி திரும்பி நோக்கிச் சுவர்ணவிமானத்தை அஞ்சலிசெய்து செல்லாநின்றார்.—எ-று. (௨௭)

வேறு ஆசிரியவிருத்தம்

புவலோகங் கடந்துபோய்ப் புண்ணியருக் கெய்துகின்ற போக முற்றுஞ்
சுவலோகங் கடந்துபோய் மகலோகஞ் சனலோகங் கடந்து மேலைத்
தவலோகங் கடந்துபோய்ச் சத்தியலோ கங்கடந்து தண்டுழாயோன்
னவலோகங் கடந்துலக நாயகனாரு சிவலோகங் கண்ணினாரே.

இ-ள். (செல்லாநின்றவர்) புவலோகமுதலியவற்றைக் கடந்து சிவலோகத்தை அடைந்தனர்.—எ-று. (௨௮)

அறக்கொடியின் னிறைமகனை யடிபணிந்து தனையீன்றார்க் காதிவேத,
மறைப்பொருட்டன் வடிவளித்த வருளினைமனை நிறைமகிழ்ச்சி வாய்கொள்ளா
மற, புறப்படுவ தெனவிரண்டு திருச்செவிகளூடு செங்குமுதம் பொழிந்த தீந்
தே, னிறைப்பதெனப் பன்முறையாற் றுதிசெய்து தொழுதொன்று நிகழ்த்
தினாள்.

இ-ள். பிராட்டியார், பின்பு சுந்தரபாண்டியரது திருவடிகளை வணங்கித் தம்முடைய பிதாமாதாக்களுக்கு முதன்மைபெற்ற வேதப்பொருளாகிய அவர் தமது சாரூப்பியத்தைக் கொடுத்த கருணைபற்றி இருதயத்தினிறைந்த மகிழ்ச்சியடங்காது திருவாய் (வழியாக) வெளிப்படுவதுபோலவும் இருதிருச் செவியிலும் செங்குமுதமலரின்தேனை நிறைத்தல்போலவும் துதிசெய்து பணிந்து ஒரு விண்ணப்பஞ் செய்கின்றார்.—எ-று. செவிக்கும் உருபு மயக்கம் (௨௯)

எண்ணிறந்த தேவர்களும் யாவர்களும் பயன்சுரக்கு மிமையா நாட்
டப், புண்ணியவான் றன்புனிற்றுக் கன்றுக்குக் குறைவேதென் பொருட்டெ
ன் னீன்றா, ளெண்ணியது கடலொன்றே யெழுகடலு மீண்டழைத்தா யீன்
றாளோட, விண்ணிருந்த கணவனையும் விளித்தினருள் வடிவளித்தின் மேனா
டந்தாய்.

இ-ள். காமதேனுவின் கன்றுக்குக் குறைவுயாது (அதுபோலத் தேவரீரை அடுத்த எனக்கு ஒரு குறைவுமில்லை ஆதலால்) என்னுடைய மாதாவிரும்பியது ஒருகடலே (அங்ஙனமாகவும்) என்பொருட்டு ஏழுகடலும் அழைத்து அவளோடுகூட ஸ்நானஞ் செய்யும்படி அவளுடைய நாயகனையும் சுவர்க்கத்தினின்று அழைத்து (அவ்விருவருக்கும்) தேவரீருடைய சாரூப்பியமும் மேலுலகமும் அருளினீர்.—எ-று. (௩௰)

'தென்னர்மர பிறந்ததெனப் பம்பழியி லாழவருஞ் செவ்வி நோக்கிப்,
பொன்னவிர்தார் முடிபுனைந்து கோலோச்சி வருகின்றாய் போலு மேலு, மிந்
நிலைமைக் கிடையூறு மினியின்றே யெனத்தலைவி யியம்ப லோடுந், தன்னி
றைவி யுட்கோளை யகங்கொண்டு மகிழ்ந்திருந்தான் றமிழர் கோமான்.

இ-ள். பாண்டியர் மரபு ஒழிந்ததென்று சொல்லப்படும் பழியில் அழுந்தவரும் காலத்தைநோக்கித் தேவரீர் செங்கோல் செலுத்துகின்றீர்போலும் இனி இந்நிலைமைக்கும் இடையூறு இல்லையேயெனப் பிராட்டியார் விண்ணப்பஞ் செய்தவளவிலே (புத்திரப்பேற்றை விரும்பிய) தந்தேவியாரது உள்ளக்கிடையைச் சுந்தரபாண்டியர் திருவுளத்திற் கொண்டு மகிழ்ந்தருளினர்.—எ-று. (௬௧)

மலயத்துவசனையழைத்தபடல முற்றியது.

ஆகச்செய்யுள் - ௬௨௧.

பதினோராவது

# உக்கிரபாண்டியரது திருவவதாரப்படலம்.

கலிநிலைத்துறை.

மன்ன வன்குல சேகரன் றிருமகன் மனைவி
தன்னொ டெங்கட லாடிய தகுதியீ தநதத்
தென்ன வன்றனித் திருமக டிருவுளங் களிப்ப
வுன்ன ருந்திற லுக்கிர னுதித்தவா றுரைப்பாம்.

இ-ள். குலசேகரபாண்டியராஜனுடைய புத்திரனாகிய மலயத்துவஜபாண்டியன் தன்னுடைய பத்தினி காஞ்சனமாலையோடு எழுகடற் றீர்த்தத்தின் மூழ்கிய திருவிளையாடல் இதுவாம். (இனி) அம்மலயத்துவஜனுடைய புத்திரியாகிய பிராட்டியார் திருவுளமகிழும் வணணம் நினைத்தற்கரிய வெற்றிபெற்ற உக்கிரபாண்டியர் அவதரித்த திருவிளையாடலை (யாம்) கூறுவாம்.—எ-று. (க)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

தண்ணிலா மௌலி வேய்ந்த சுந்தர சாமி ஞாலத்
தெண்ணிலா வைக றன்ன றிணையடி நிழல்போல யார்க்குந
தெண்ணிலாக் கவிகை நீழல் செய்தருட் செங்கோ லோச்சி
யுண்ணிலா வுயிரதா னாகி முறைபுரிந தொழுகு நாளில்.

இ-ள். தண்ணிய பிறையணிந்த சடைமுடியுடைய சுந்தரபாண்டியர் பூமியில் அறுபத்தாறாயிரம் வருடம் தந்திருவடி நிழல்போலக் குடிகள் அனைவர்க்கும் தெளிய சந்திரன்போலும் வெண்கொற்றக் குடைநிழல் செய்து (இன்பம் அடைவித்துக்) கருணையொடு செங்கோல்செலுத்தி உடம்பினுள் விளங்கும் உயிர்போன்று (துன்பந்துடைத்து) முறைசெய்து வரும்பொழுது.—எ-று. (உ)

கரியவன் கமலச் செம்மன் மறைமுதற் கலைகள் காண்டற்
கரியவ னன்பர்க் கென்று மெளியவ னருமேன்மை
தெரியவன் பகன்ற சிந்தைத் தென்னவன் றனக்குங் கயற்
குரியவ டனக்குங் காதன் மகளென வுமையைத் தந்தான்.

இ-ள். அரிபிரமரும் வேதாதிநூல்களும் காணுதற்கு அரியவரும் அடியவர்க்கு எளியவருமாகிய தமது மகிமையை (அவைவரும்) உணரும்வண்ணம் போன்புள்ளே மலயத்துவஜ பாண்டியனுக்கும் காஞ்சனமாலைக்கும் மீநாட்சிதேவியாரைப் புத்திரியாராகக் கொடுத்து.—எ-று. தந்தான முற்றெச்சம். (௫)

மற்றதற் கிசையத் தானு மருமக னாகி வைய
முற்றுமவெண் குடைக்கீழ் வைக முறைசெய்தா னாக மூன்று
கொற்றவா தமமிற் றிங்கட் கோக்குடி விழுப்ப மெய்தப
பெற்றது போலு மினனும் பெறுவதோா குறைவு தீர்ப்பான்.

இ-ள். அங்ஙனங் கொடுத்ததற்கு இசையத் தாமும் மருகராகிச் செங்கோல் செலுத்தி வருதலால் மூவேந்தருள்ளே பாண்டியர்மரபு சிறப்படையப் பெற்றது. இன்னும் (அம்மரபு) பெறுவதோா குறைவு தீரப்பவராயினா—எ-று. போலும்-அசை. (௬)

ஒன்றினைச் செய்கை செய்யா தொழிகைவே றொன்று செய்கை
யென்றிவை யுடையோ னுதி யீறிலாப் பரம யோகி
கன்றுதீ திகழ்ச்சி வேட்கை நட்பிகல் விளக்கு மாயை
வென்றவன் செய்யு மாயை விருத்தியா ரளக்க வல்லார்.

இ-ள். கர்த்திருத்துவம் அகர்த்திருத்துவம் அந்நியதாகர்த்திருத்துவம் என்று கூறப்பட்ட பிரபுதத்துவ சாமர்த்திய குணங்களையுடையவரும் பிறப்பிறப்பில்லாத பரமயோகியும் மாயாதீதருமாகிய சுந்தரேசரது மாயாவிருத்தியை யாவர் அளக்கவல்லவர்.—எ-று. (௭)

இந்திர சால விச்சை காட்டுவா னென்னத் தன்பாற்
செந்தழ லுட்ட மீன்ற செல்வனைக் கருப்ப மெய்தா
தநதமி லுயிரு ஞால மனைத்தையு மீன்ற தாயாஞ்
சுந்தர வல்லி தனபாற் றோன்றுமா றுள்ளஞ் செய்தான்.

இ-ள். இந்திரஜாலவித்தை காட்டுவோன்போல(ச் சுந்தரேசர்) தம்மாட்டுள்ள அக்கினிக்கண்பெற்ற குமாரனைக் கருப்பத்தில் அடையாமல் உயிர்களையும் உலகங்களையும்பெற்ற பிராட்டியாரிடத்தே உதிக்கும்படி சங்கற்பித்தருளினர்.—எ-று.

அங்கவன் வரவுக் கேற்ப வாயமும் பிறருந் தாழ்ந்து
மங்கையின் வடிவுக் கேற்பக் கருவுரு வனப்புஞ் சீருந்
திங்கடோ றூற்று மன்றற் செவ்வியுங் காண வாசை
பொங்கிய தெங்கட் கென்றூர் புனிதையப் படிபோ லானள்.

இ-ள். அக்குமாரர் அவதரித்தற்கு இசைய, தோழியா முதலாயினர் வணங்கி, பிராட்டியாரே உம்முடைய திருவுருவத்திற் கேற்பக் கருப்பகுறியழகு முதலியவும் மாதந்தோறுஞ் செய்யுஞ் சடங்கினைபொலிவுந் தரிசிக்க அடியேங்களுக்கு ஆசை மிகுந்ததென்று விண்ணப்பஞ்செய்தார். பிராட்டியாரும் அங்ஙனம ஆயினர்.—எ-று. போல்-அசை. (எ)

கருமணிச் சிகரச் செமபொற் கனவரை யனைய காட்சித
திருமுலை யமுதம பெய்த செபபிரண் டனைய வாக
வருமுலை சுமந்து மாய்ந்த மருங்குலும் வந்து தோனற
வருள்கனிந் தனையா ணாவிற கினசுவை யாாவம பொங்க

இ-ள். கருமணியாகிய சிகரத்தையுடைய பெரிய செம்பொனமலைபோலுந் தோற்றமுள்ள இருதனங்களும அமிர்தம் பூரித்த இரணடு செப்புகள போனறனவாகத் தோன்றவும் காணப்படாத இடையும் தோன்றிய தனபாரங்களைத் தாங்கி(க் கணகளுக்கு)த் தோன்றவும அருள்பழுத்தாற்போனற பிராட்டியாா நாவினுக்கு இனிய சுவைமீது ஆசைதோன்றவும்.—எ-று. (அ)

என்னவு மெளிய வேனு மரியன வென்ன வேட்டா
லன்னவும் போக பூமி யருமபெற லுணவு நல்கிப
பன்னக ரமுதுந் திங்கட் படுசுவை யமுதுந் தெய்வப
பொன்னக ரமுது மாசை புதைபடக் கணங்க ணல்க.

இ-ள். மிகவும் எளிய பொருள்களாயிருப்பினும் (அவை) அரியபொருள்கள் போல விரும்புவாராயின் அவைகளையும் போகபூமியிலுள்ள பெறுதற்கரியவணவுகளையும் கொடுத்து (மற்றும்) நாகலோகத்துள்ள அமிர்தத்தையும் சந்திரமணடலத்துள்ள சுவை மிக்க அமிர்தத்தையும தேவலோகத்துளள அமிர்தத்தையும பிராட்டியார் விருப்பம் ஒழியும்படி சிவகணங்கள் கொடுக்கவும்—எ-று பன்னகா ஆகுபெயா. (கூ)

புண்ணிய முனிவர் வேத பண்டிதா போந்து வேந்தாக
கண்ணிய சடங்கு முறறா ருருவங்கூடி வெள்ளத தாழ
வெண்ணிய திங்க டோறு மியற்றவிக் கனித்த தேயம
பண்ணிய தருமச் சார்பாற் படுபயன றலைபபா டெய்த.

இ-ள். இருடிகளும் அந்தணர்களும் வந்து அரசாககு விதித்த (கருப்பாதானம், பும்சவனம, சீமந்தம ஆகிய) சடங்குகளைப் பழைய மநுவைப்பதியார் பெருமணப்பெருக்கில் மூழ்கும்படி வரையறுத்த மாசங்கள்தோறும் செயதுமுடிக்கவும இக்கனிநாடு செய்த தருமநெறியாலாகிய பயனை அடையவும்.—எ-று (௰)

மாசறத் துறந்தோ ருள்ள மானவான் களங்க நீங்க
வீசர்தங் கிழமை யென்னு மிந்துவா திரைநாள செய்த
பூசையின் பயன்று னெய்த வெரிபசும் பொற்கோள் வந்து
தேசொடு கேந்தி ரத்திற் சிறந்தநல லோரை வாய்பப.

இ-ள். துறந்தவர் திருவுள்ளம்போல ஆகாயம் நிருமலமாக விளங்கவும் சிவபிரானுக்குரிய சோமவாரமும் ஆர்த்திரா நக்ஷத்திரமும் செய்த ஆராதனையின்பயனை அடை

யவும் விளங்காநின்ற பசிய பிருகஸ்பதிவருது விளக்கத்தோடு கேந்திரத்தில் வறியமுகூர்த்தம்வாய்க்கவும்.—எ-று. தான் - அசை. (கக)

முந்தைநான் மறைக டாமே முழங்கமந் தார மாரி
சிந்தநாண் மலாபூத் தாடு மினனெனத் திசைக டோறு
மநதர மகளி ராடத் துநதுபி யைநது மார்பப
விநதையுந திருவும வெள்ளைக் கிழந்தியும வீறு வாயபப.

இ-ள். முதனமைபெற்ற வேதஙகள முழஙகவும (தேவர்கள்,)மந்தார மலர்மழை பொழியவும புதிய கமலமலர் முதலிய பூநதாடு மினனாறபொடிபோல எங்கும் தேவமகளிர் நடிககவும் பஞ்சவாத்தியஙகளும ஒலிககவும வீரமகளும திருமகளும கலைமகளும் செருக்கடையவும.—எ-று. (கஉ)

அநதணா மகிழ்ச்சி தூஙக வடுத்தவா வளாககு முனனா
மநதிர வேளவிச் செநதீ வலநதசுழிந தெழுநதாத் தாடச்
சிந்துர நுதன்மா வெட்டுஞ் சேடனும பொறையெய்ப பாற
விநதிரன மேருப் புதமேள் புணவிறைக் கிடந்தோ ளாட.

இ-ள். வெளி. உககிரபாணடியா, பூபாரத்தைச் சுமபபராதலால, அட்டகஜமும் ஆதிசேடனும் எய்ப்பாறவெனறும, இநதிரன முதலியோா செருககை ஒழிப்பாராதலால் இடத்தோ ளாடவென்றும் கூறினா. (கந)

ஆலத்தை யமுத மாககு மணணலு மணஙகுங் கொண்ட
கோலத்துக கேறபக காலைக குமுநனுநவெங் கதிாபோ லறறைக்
காலத்தி லுதிதத சேயபோற கண்மழை பிலிறறு கிமப
மாலைத்தோட் செழியன செல்வ மகளவயிற றேனறி னானே.

இ-ள். சுந்தரேசரும் மீனாட்சிதேவியாரும் கொணடருளிய திருக்கோலத்துக்கு இசைய, உதயகால இளஞசூரியனபோலவும முருகக்கடவுளபோலவும தடாதகைப் பிராட்டியாரிடததே (உக்கிரபாணடியா) அவதரிததாா.—எ-று அறுமுககடவுள ஒரு திருமுகத்தோடு உக்கிரபாணடியராக அவதரிததாரெனறு கூறியிருபபினும முருககடவுளின அம்சமாக அவதரித்தாரென்னுங கருததால அறறைககாலத் துதிதத சேயபோலென்றார். (கச)

எடுத்தனள் மோந்து புல்லி யேந்தினள் காந்தன் கையிற்
கொடுத்தனள் வாங்கி வீங்கு கொங்கையின் றிழிபால வெள்ளம்
விடுத்தனள குமுதப போதில வெணணிலா வெள்ளம போல்வாய்
மடுததன ளருத்தி நாடன மைந்தனை யெமபி ராட்டி.

இ-ள். எஙகள் பிராட்டியார் (அஙஙனம் அவதரித்த) தங்குமாரரை(த் திருக்கரத்தால்) எடுத்து (உச்சி) மோந்து தழுவி ஏந்தி(த தமமுடைய) தலைவா திருக்கையிற்கொடுத்து(த் திரும்பவும்) வாங்கித் தந்தனங்களினின்றும் ஒழுகும் பாற்பெருககைச் சொரிந்து ஆம்பல்மலரில் வெள்ளிய நிலவின் பெருக்குப்(படிதல)போலத திருவாயிற் புகட்டி உண்பித்தாா.—எ-று. எடுத்தனள் முதலியன முற்றெச்சங்கள் உணணுமுலையாரென்பது தொனிக்க, கொங்கையின் றிழிபால் வெள்ளம் விடுத்தனள் அருத்தினளென்றார்.()

சலத்தலைக் கிடக்கைப் புத்தே டருகிழல் வாழ்க்கைப் புத்தே
ளலர்த்தலை யிருக்கைப் புத்தே ளாதிப்புத் தேளிர் வேதப்
புலத்தலைக் கேள்வி சான்ற புண்ணிய முனிவ ரேனோர்
குலத்தலை மகளி ரோடுங் கோமகன் கோயில் புக்கார்.

இ-ள். அரிபிரமேந்திராதி தேவர்களும் வேததிதின்கண் மிக்ககேள்வியால் மாட்சிமைபெற்ற இருடிகளும் மற்றவர்களும் தலைமைபெற்ற குலமகளிரோடும் சுந்தரபாண்டியரது திருக்கோயிலிற் புகுந்தார்கள்.—எ-று. (கசு)

குடபுலத் தரசும் பொன்னிக் குளிர்புனற் கோழி வேந்தும்
வடபுலத் தரசா யாருங் குறுகில வாழ்க்கைச் செல்வத்
தடல்கெழு தொண்டைத் தண்டா ரரசொடு மனிகஞ் சூழக்
கடல்களுற் றிசையும் பொங்கி வருவபோற் கலிப்ப வந்தார்.

இ-ள். மேலைநாட்டுச் சேரராஜனும் காவிரியாற்றின்றண்ணீர் சூழ்ந்த உறையூரிலுள்ள சோழராஜனும் வடநாட்டின் கஜபதி முதலிய அரசர் அனைவரும் குறுநிலமன்னர் வாழ்க்கைச் செல்வத்தையுடைய வலிமைபெற்ற தண்ணியமாலை பூண்ட தொண்டைநாட்டு வேந்தரொடும் சேனைகள்சூழக் கடல்போல ஆரவாரிக்க வந்தார்கள்.—எ-று.

மன்னனைத் தேவி தன்னை முறையினால் வழுத்தி வாழ்த்தி
நன்னர்கோ ளாகி யோகை நவின்றுவெண் மழுமா னீத்த
தென்னவர் பெருமான் றேவி திருமுகக் கருணை பெற்றுப்
பொன்னடி பணிந்து தம்மூர் போகுவா ரினைய சொலவார்.

இ-ள். (வந்தவர்) சுந்தரபாண்டியனையும் பிராட்டியாரையும் துதித்து வாழ்த்தி (அவர்களால்) நன்றாக அங்கீகரிக்கப்பெற்றுச் சந்தோஷச் செய்தியை வினவி மழுமான்களை ஒழித்த அப்பாண்டியர் தேவியார் இவரது திருவருள்பெற்று வணங்கித் தங்களிடங்களுக்குப்போகின்றவர் இத்தன்மையுடைய வார்த்தைகளைக் கூறுகின்றவராயினர்.—எ-று.

வழுதியர் பெருமான் றன்பாற் கந்தனே வந்தா னென்பார்
பழுதறு கற்பி னுடன் பாக்கிய மிதுவே யென்பா
ரழகினுன் மதனும் பெண்மை யவாவுறு மிவன்கோ லாணை
யெழுகட லுலகோ வைய மேழையுங் காக்கு மென்பார்.

இ-ள். வெளி. (கஅ)

மனிதர்வான் றவமோ வென்பார் வைகுவோர் தவமோ வானப்
புனிதர்வான் றவமோ வேள்விப் பூசுரர் தவமோ கேள்வி
முனிவர்வான் றவமோ வீறு முதலிலா முதல்வ னுள்ளக்
கனிதரு கருணை போலிக் காதலன் றோற்ற மென்பார்.

இ-ள். வெளி. ஆதியந்தமில்லாத முதல்வராகிய சுந்தரபாண்டியர் கருணைபோல் இவ்வுக்கிரபாண்டியர் அவதாரம் என்பதை முதலிற் கூறிக்கொள்க. (உ0)

தருமமா தவத்தின் பேறோ வருத்தமா தவத்தின் பேறோ
பெருமைசால் காம நோற்ற பெருந்தவப் பேறோ வெய்தற்
கருமையாம் வீடு நோற்ற வருந்தவப் பேறோ விந்தத்
திருமக னென்று தம்மில் வினய்மகிழ் சிறபபச் சென்றார்.

இ-ள். இவ்வுக்கிரபாண்டியா (அவதாரம்) அறம் பொருள், இன்பம் வீடு பேறு இவைகள் செய்த பெருந்தவபபயனோ வெனறு தம்முள் வினவி மகிழ்ச்சி மிகச சென றனா.—எ-று. (உக)

அவ்வவர் மனைக டோறு மங்கல வணிக ளாகக்
கௌவைமங் கலங்க ளார்ப்பக் கடிநக ரெங்கும பொங்க
நெய்விழா வெடுபபக் கேள்வி நிரமபிய மறையோர்க் கீந்த
தெய்வமா தான நீத்தந் திரைக்கடன மடுத்த தமமா.

இ-ள். அவரவர் கிருகஙகளதோறும அலஙகாரங்களுடைய சுபங்களாகக் கொண்டு மங்கலவாத்தியங்கள் மிகமுழஙகவும் காவலுள்ள மதுரைநகரமுற்றும் பெரிதும் எண்ணெய்விழாக் கொள்ளவும் அநதணர் பொருட்டுப் (பொருள்களொடு)கொடுத்த தான நீர்வெள்ளம கடலிறபுகுந்தது.—எ-று. (உஉ)

சுண்ணமும் பொரியுந் தூவெள் ளரிசியுந் தூர்வைக் காடுந்
தணணறுஞ் சிவிறி வீசு தண்பனி நீருஞ் சாந்து
மெண்ணெயு நானச் சேறும பசையற வெடுத்து வாரிக்
கண்ணக னகர மெங்குங் கழுவின தான வெள்ளம்.

இ-ள். அத்தானநீர் வெள்ளம் (மகிழ்ச்சியாலே சிந்திய) பொற்சுண்ணமுதலிய வற்றை வாரியெடுத்து இடமகன்ற மதுரைநகர முற்றும் சுத்திசெய்து சென்றது.—எ-று. தூர்வை - அறுகு. சிவிறி - துருத்தி. கழுவினது என்னுந் துவ்வீறு தொகை. ()

செம்பொன்செய துருத்தி தூம்பு செய்குழல வட்ட மாக
வம்பொன்செய் சிவிறி வெண்பொ னணைடைகொண் டாரந் தூங்கும்
வம்பஞ்சு முலையி னாரு மைந்தரு மாறி யாட
வைம்பஞ்சு மாறி மாறி யநங்கனு மாடல செய்தான.

இ-ள். தொங்கும் முத்துமாலையும் அஞ்சும் கச்சுமுள்ள தனங்களுடைய மடவாரும் ஆடவரும் துருததி முதலியவற்றைககொண்டு மாறி (மாறி)நீர்தூவி விளையாட (அவர்களுக்கு மோகமுண்டாமபடி அவா மீது) பஞ்சபாணங்களையும் மாறி மாறி மன்மதனும் பிரயோகித்தான்.—எ-று. (உ௪)

இன்னணங் களிப்ப மூதூ ரிந்துவா திரைநன் னாளிற்
பொன்னவன் கேந்தி ரிதத புனிதலக கினத்திற் போநத
தென்னவர் பெருமான் சேய்க்குச் சாதகச் செய்தி யாதி
மன்னவர்க் கியன்ற வேத மரபினால் வயங்க வாற்றி.

இ-ள். இங்ஙனம் முதியமதுரைப்பதி மகிழ்ச்சியின் மூழ்க, சுந்தரபாண்டியர், சோமவாரத்தோடு கூடிய திருவாதிரை நட்சத்திரத்திலே, பிருகஸ்பதி உச்சமான லக்கினத்திலே, அவதரித்த தம்முடைய புத்திரருக்குச் சாதகன்ம வுத்தாபனங்களை

க்ஷத்திரிய் வருணத்திற்கு இசைய வேதமுறையினால் விளங்கச்செய்து.—எ-று. சாத கன்மம் - ஜாதகக்கிரியை. உத்தாபனம் - சுத்தமான உயர்ந்த இடத்திலே குழந்தையைச் சேர்க்குங்கிரியை. (உரு)

கரியவெண் டிரைநீர்ச் செல்வன் கல்சிற கரிந்த வென்றித்
தெரியலை னுலகந் தாங்கு நெயவத வரைகளோ னதித்
தரியலர் வீரஞ் சிந்தத் தக்ககா ரணமே யன்றி
யுரியதன் பெயரா குமேற்ப வுக்கிர வரும னென்றான.

இ-ள். வருணன், இந்திரன், மேருமலைக நிபனமுதலிய பகைவர்களது வலிமையைக் கெடுத்தற்கு ஏதுவேயன்றித் தமக்குரிய நாமமாகுணமாகவும் உக்கிரவருமனென்று நாமகரணஞ் செய்தார்.—எ-று தெரியல்-மாலை. வருமன்-க்ஷத்திரியன். (உசு)

நாலாகு மதியிற சந்தி மிதிப்பது நடாததி யாரும்
பாலாகு மதியி லன்ன மங்கலம் பயிற்றி யாண்டின்
மேலாகு மதியிற் கேச வினைமுடித் தைந்நா மாண்டி
னூலாறு தெரிநது பூண நூற்கடி முடித்துப பின்னா.

இ-ள். வெளி. சந்திமிதித்தல - பிரவேசம. அன்னமங்கலம் - அன்னப்பிராசனம். கேசவினை - சௌளம. பூணநூற்கடி - உபநயனம. (உஎ)

பதக்கிரம பாழி சாகை யாரணம் பணைத்த வேத
முதனிரைக் கலையும வெனறி மூரிவிற் கலையும வாரு
மதக்கிரை யொழுகு மையன் மாக்கிரை வையம் பாய்மா
விதக்கிரை யேற்ற மறறு முணர்த்தினான் வியாழப புத்தேள்.

இ-ள். பதக்கிரமம் சடை சாகை ஆரணம் இவைநிரம்பிய வேதமுதலிய வரிசையாகிய வித்தைகளையும், வெற்றியும வலியும்பெற்ற தநுர்வித்தையையும், ஆயுதவித்தையையும், வரிசையாக மதநீர் ஒழுகப்பெற்ற மயக்கமுடைய யானை வரிசையாகிய தேர் பலவித வரிசையாகிய குதிரை இவைகளின் ஏற்றஙகளையும், மற்றுள்ளனவற்றையும் தேவகுரு உணர்த்தினார்—எ-று. (உஅ)

குருமுகத் தறிய வேண்டு மென்பதோர் கொள்கை யாலே
யொருமுறை கேட்டாங் கெணணெண கலைகளு மொருங்கு தேறி
யரனல தொருவ ராலுந் தேறறுவ தருமை யாலப
பரனிடைத் தெளிந்தான் பாசு பதாத்திரப படையு மன்னோ.

இ-ள். வெளி. (உகூ)

எல்லையில் கலைக ளெல்லா மகவைநா லிரண்டின் முற்றத்
தொல்லறி வுடையா னாகிக் குரவரைத் தொழுது போற்ற
வல்லவ னாகி யன்னார் மகிழ்ச்சிகொள் கலனாய் வென்றிச்
செலவவேற் றிளைஞ ரோடுந் திருவிளை யாடல் செய்வான்.

இ-ள். (உக்கிரபாண்டியர்) கலைகள் அனைத்தும் எட்டுவயசில் நிரம்பப்பெற்றுப் பழைய வுணர்வுடையவரும் மாதாபிதாக்களாகிய இருமுதுகுரவரை வணங்கி வாழ்த்த வல்லவரும் அவ்விருவரும் மகிழத்தக்க பாத்திரமுமாகி ஆண்சிங்கம் போன்ற வெற்றிச்செல்வ இளைஞரோடும திருவிளையாடல் செய்துவருவார்.—எறு. (௩௦)

புகர்மத வேழ மூட்டிப் போர்விளை யாடி வென்றுந்
தகரொடு தகரைத் தாக்கித் தருக்கம ராடி யென்றும்
வகிர்படு குருதிச் சூட்டு வாரண மாடி வென்று
நகைமணிப பலகை செமபொ னுன்குறுப் பாடி வென்றும்.

இ-ள். வெளி வகிரபடு குருதிச்சூட்டு வாரணம் - பிளவுப்பட்ட வுதிரம்போலும் சூட்டையுடைய சேவல் பலகை-பலகைவரையிலுள்ள. நான்கு உறுப்பு-இரதம், கஜம், துரகம், காலாள். (௩௧)

காற்றினுங் கடிய மாவிற காவதம் பலபோய் மீண்டுங்
கூற்றினுங் கொடிய சீறறக் குஞ்சர முகைததும வைகை
யாறறினுய யானத தாவி யகததினு ளின்பந் துயத்தும்
வேறறிறன் மைந்த ரோடு மலலமா விளைத்து வென்றும.

இ-ள். வெளி. உய்யானம - பூநதோடடம ஆவி - தடாகம். வைகைநதிதடாகஙகளில் நீராவிளையாடி. பூநதோட்டததில பூககொயது. வேற்றிறல - வேறபடையுடைய வலிய. (௩௨)

சந்தவெற் படைநது வேடடஞ் செய்துமச் சைல வாழ்கதை
யநதண ராசி கூற வவாதொழில வினையு மன்னா
கநதமென் கனிவி ருந்தூண் கைதழீஇக் களிதது மீண்டு
மிந்தவா றைமமூ வாணடு கழியமே லெய்து மாண்டில்.

இ-ள். வெளி. சந்தவெற்பு - சந்தனமரஙகள் நெருஙகிய பொதியமலை. வேட்டம் - வேட்டை. ஆசி - ஆசீரவாதம்- தொழில் - தவம். கந்தம - கிழஙகு. விருந்து - வலித்தல விகாரம். (௩௩)

சூர்முத றடிநத தங்க டோன்றலே யிவனென் றெணணிக்
கார்முக மயிலும் வேலுங் கைவிடா காக்கு மாபோல்
வார்முக முலையி னுரும வடிக்கணு மருங்கு மொயப்பக்
கூர்முக வேலா னினண கொள்கைய னுகத் தாதை.

இ-ள். சூரபத்மனுகிய மாமரத்தின்வேரை அறுத்த முருககடவுளே இவரொன்று கருதிக் கரியமுகமுளள மயிலும் வேற்படையும விடாதுகாக்குந தன்மைபோலக் கச்சிலடங்கிய தனஙகளையுடைய மடவாரும் (அவரது) மாவடுவின் பிளவுபோன்ற கணகளும் (தம்) பக்கங்களிலே நெருஙகக கூரிய நுனியுள்ள வேற்படையேந்திய வககிரபாண்டியா இக்காளைப்பருவ முடையராக (உடனே) பிதாவாகிய சுந்தரபாணடியா. எ-று.

பங்கயச் செவவித் தாகிக கண்மனம் பருகு காந்தி
யங்கழற் காலுஞ் சொனன வடைவினிற் றிரணடு நீணட
சங்கையும வட்டந் தோன்றுச் செழுமுழந் தாளு நாலவாய்த்
துங்கவீர்ங் கவுணமால் யானைத் துதிககைபோற் றிரள்க வானும்.

இ-ள். (புதிய) கமலமலர்போலும் அழகினதாய்க் (கணடவர்) கண்ணையு மனத்தையும் அபகரிககினற ஒளியும் அழகும்பெற்ற வீரகண்டையணிந்த பாதத்தையும்,

(சாமுத்திரிகை நூலிற்) கூறிய முறையினாலே திரண்டுநீண்ட கணைக்காலையும், (அதன் பின்)வட்டவடிவு தோன்றாது தசைசந்த முழங்காலையும், யானைத் துதிக்கைபோலத் திரண்ட தொடையையும்.—எ-று. நான்றவாயும் உயர்ந்த குளிர்ந்த மதநீருள்ளதுபோலவும் மயக்கமுமுடைய யானையென்க. (௬௫)

சிறுகிய வயிறாந் தாழ்ந்த நாபியுஞ் செவ்வி நோக்கு
மறுவில்கண் ணடியி னன்ன கடியகல வரைகொண் மார்பு
மெறியிசை வீணைத் தண்டி னிணைந்துநீண் டிழிந்த கையும்
வெறியதார் கிடந்த மேரு வெற்பிரண் டனைய தோளும்.

இ-ள். சிறுகிய வயிற்றையும், ஆழிய நாபியையும், அழகைப் பார்த்தற்குக் கருவியாகிய குற்றமற்ற கண்ணாடிபோல விளக்கமும் மலைபோல அகலமும் பொருந்திய மார்பையும், வருடுதலால் இசையெழும் (நரம்புடைய) யாழின் கோல்போலச் சமமொத்து நீண்டு (முழந்தாள் வரை) தாழ்ந்த கைகளையும், மணமுள்ள மலர்மாலை பொருந்திய இரண்டு மேருமலைபோன்ற புயங்களையும்.—எ-று. (௬௬)

வலம்புரி யென்ன வாய்ந்த கண்டமு மலராண் மன்னும்
பொலம்புரி கமல மன்ன வதனமும் பொதுவா னோக்கி
நிலம்புரி தவப்பே றன்னான் வடிவெலா நின்று நின்று
நலம்புரி நூலா னோக்கிச் சோதிப்பா னடிக்க வல்லான்.

இ-ள். வலம்புரிச் சங்குபோன்ற கழுத்தையும், திருமகள் தங்கும் பொற்றாமரை மலர்போன்ற முகத்தையும் பொதுவகையால் நோக்கியருளி(ப் பின்னும்) அவ்வுக்கிரபாண்டியரது அவயவங்கள் அனைத்தையும் (வெள்ளியம்பலத்திலே) நடிக்கவல்ல அந்தச் சுந்தரபாண்டியர் சாமுத்திரிகை நூலிற்கூறிய சிறப்புவகையால் உற்றுநோக்கிச் சோதிக்கத் தொடங்கினார்.—எ-று. (௬௭)

உன்னத மாறு நீண்ட வுறுப்பைந்து சூக்க மானு
மன்னது குறுக்க நான்கா மகலுறுப் பிரண்டே ழாகச்
சொன்னது சிவப்பு மூன்று கம்பீரந் தொகுத்த வாறே
யின்னவை விரிக்கி னெண்ணான் கிலக்கண வுறுப்பா மென்ப.

இ-ள். உயர்ந்தவுறுப்புகள் ஆறும் நீண்டவுறுப்புகள் ஐந்தும் சிறுகிய வுறுப்புகள் ஐந்தும் குறுகியவுறுப்புகள் நான்கும் அகன்றவுறுப்புகள் இரண்டும் சிவந்தவுறுப்புகள் ஏழும் ஆழ்ந்தவுறுப்புகள் மூன்றும் ஆகமுப்பத்திரண்டு உறுப்புகள் இலக்கணமுடையன வென்று கூறுவர் (இங்ஙனம்) தொகுத்துக்கூறிய முறையே இவைகளை விரித்துக்கூறின்.—எ-று. (௬௮)

வயிறுதோ ணெற்றி நாசி மார்புகை யடியிவ் வாறு
முயரிலவான செல்வ னாகு மொளிகவர் கண்க போலம்
புயல்புரை வள்ளற செங்கை புதுமணங் கவருந் துண்டம
வியன்முலை நடுமார் பைந்து நீண்டவேல விளக்கு நன்மை.

இ-ள். வயிறு, தோள், நெற்றி, நாசி, மார்பு, கையடி என்னும் இவ்வுறுப்புகள் ஆறும் உயரில் மேம்பட்ட செல்வமுடையவனாவான். ஒளியைக் கிருகிக்கின்ற கண்,

கண்ணும், மேகம்போலுங் கொடையுடைய சிவந்தகை, புதியமணத்தைக் கிருகிக்கின்ற மூக்கு, முலைகளின் மத்தியமாகிய விரிந்தமார்பு என்னும் இவ்வுறுப்புகள் ஐந்தும் நீண்டனவாயின் (அவை) நன்மையைத் தரும்.—எ-று. (௩௯)

நறியபூங் குஞ்சி தொக்கு விரற்கணு நகம்பல் லைந்துஞ்
சிறியவே லாயுள் கோசஞ் சங்கைகா முதுகிந நான்குங்
குறியவேற் பாக்கி யப்பே றுஞ்சிரங் குளமென் றுய்நதோ
ரறியுமிவ் வுறுப்பி ரண்டு மகன்றவே லதுவு நன்றாம.

இ-ள். நன்மணங்கமழும மலரணிந்த சிகை, தோல், விரலின்கணு, நகம், பல் என்னும் இவ்வுறுப்புகள் ஐந்தும் சூக்குமமாயின் ஆயுள் (பெருகும்). கோசம், கணைக்கால், நா, முதுகு என்னும் இவ்வுறுப்புகள நான்கும் குறியனவாயின் செல்வப்பயனும். தெளிந்தோர உணர்கின்ற தலை, நெற்றி என்று சொல்லப்பட்ட இவ்வுறுப்புகள் இரண்டும் அகன்றனவாயின் அவ்வகறசி நன்மையாம.—எ-று. உம்-அசை. (௪0)

அகவடி யங்கை நாட்டக் கடையித ழண்ணா நாககு
நகமிவை யேழுஞ் சேநத நன்மையாற பெறுமா வின்ப
மிகலவலி யோசை நாபி யெனுமிவை மூன்று மாழ்நத
தகைமையா லெவர்க்கு மேலா நன்மைசா றகவோ னென்னு.

இ-ள். உள்ளங்கால், உள்ளங்கை, கடைக்கண், அதரம், மேல்வாய், நாக்கு, நகம் என்னும் இவ்வுறுப்புகள் ஏழும் நன்றாகச் சிவந்திருந்தால் மிக்க இன்பம் பெறுவான். மிக்கவலிமை, ஓசை, நாபி என்று சொல்லப்பட்ட இவ்வுறுப்புகள் மூன்றும் ஆழமுடைய தன்மையால யாவர்க்கும் மேலாகிய நன்மை மிககோனுவன். என்று கருதி.—எ-று. (௪௧)

எல்லையின் மூர்த்தி மைநத னிலக்கண நிறைவி னேடு
நல்லவாங குணனு நோக்கிப பொதுவற ஞாலங் காக்க
வலலவ னுகி வாழ்நா ணனிபெற வலல னென்னு
வலலணி மிடற்றுன் பின்னு மனத்தினு லளநது சூழும்.

இ-ள். பிரமாணுதீதரும நீலகண்டருமாகிய அச்சுந்தரபாணடியர் தம்புத்திரருடைய (அவயவங்கள் முப்பததிரண்டின்) இலக்கண நிறைவொடு நல்லனவாகிய குணங்களையும் ஆராயந்துணாநது உலகம் தனக்கே யுரிமையாம்படி காக்கவும் பெரிதும் நீட்டித்த ஆயுள்பெறவும் வல்லவனென்று பின்னும் திருவுளத்தால் அளவிட்டு ஆலோசிக்கின்றார்.—எ-று (௪௨)

இத்தகு பண்பு சான்ற சீர்மையா லிசைமை நீதி
வித்தக நல்ல வுள்ள முடைமைமெய் வீறு தெய்வ
பத்திமை யுலகுக் கெல்லா மகிழ்ச்சிசெய் பண்பு சாந்த
சித்தமெவ் வுயிர்க்கு மன்பு செய்கைநல் லீகை கல்வி.

இ-ள். தக்க இக்குணங்கள் அமைந்த தன்மையால், புகழ், நீதி, சதுரப்பாடு, நன்மனம், மெய்மை, பெருமை, பரசிவபத்தி, உலக மனைதது மகிழ்வித்தல், சித்தசாந்தி, சீவகாருணணியம, நறகொடை, கல்வி.—எ-று. (௪௩)

வெல்லுதற் கரியார் தம்மை வெல்லுத றேவு ராலுஞ்
செல்லுதற் கரிய தேத்துஞ் சென்றிடு திறையுங் கோடல்
புல்லுதற் கரிய ஞால மாலைபோற் புயத்தி லேந்திச்
சொலலுதற் கரிய வீர முலகெலாஞ் சுமப்ப வைத்தல்.

இ-ள். எவரையும் வெல்லுதல், எவ்விடத்துஞ்சென்று திறைகொள்ளல், பூபா ரத்தைப் பூமாலைபோற் புயத்திலேந்திப் பிரதாபத்தை உலகம் சுமக்கவைத்தல்.—எ-று.

என்றிவை யாதி யாய வியற்குண முடைய னாகி
நன்றிசெய் துலகுக் கெல்லா நாயக னொருவ னாகி
நின்றிடு மிவற்குப் பின்னர் நீண்முடி கவித்து முன்னர்
மன்றலசெய கென்று சூழ்ந்து மநிஞரோ டொசாவி னானே.

இ-ள். என்று சொல்லப்பட்ட இவை முதலியவற்றை இயற்கைக்குணங்களாக வுடையவனாகி உலகமனைத்திற்கும் உபகாரஞ்செய்து ஏகநாயகனாகி நிற்பான் (அப்படிப் பட்ட) இவனுக்குப் பின்பு மகுடஞ்சூட்டுவோம். முன்பு விவாகஞ் செயவோமென்று ஆலோசித்து அமைச்சரோடு ஆராய்ந்தார்.—எ-று. (சரு)

உக்கிரபாண்டியர் திருவவதாரப்படல முற்றியது.

ஆகச் செய்யுள் - ௲௲௲

பன்னிரண்டாவது

உக்கிரபாண்டியருக்கு

# வேல்வளை செண்டுகொடுத்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

உருக்குந் திறலுக் கிரவழுதி யுதய மிதுவான் மதியுநதிப
பெருக்குங் கரந்த சடைக்கறையைப பெருந்தோச் செழியர் பிரானவற்குச
செருக்குஞ்செலவமணமுடித்துச் செவ்வேல வளைசெண்டளித்துள்ளந்
தருக்கு முடிதந் தரசுரிமை தந்த செயலுஞ் சாற்றுவாம்.

இ-ள். (பகைவரைக்) கெடுக்கும் வலியுடைய உக்கிரபாண்டியர் அவதரித்த திருவிளையாடல் இதுவாம். பிறைமதியும் கங்கைநதிவெள்ளமும் திரண்ட சடையு மறைத்த மகாரத்தநையுடைய சுந்தரபாண்டியர் அவ்வுக்கிரபாண்டியருக்குச் செல்வத் தாற் களிக்கும் திருமணமுடித்து உதிரந்தோய்ந்த வேல், வளை, செண்டு ஆகிய படை களைக் கொடுத்து மனங்களித்தற் கேதுவாகிய முடிசூட்டி(த் தமது) அரசுரிமையுங் கொடுத்தருளிய திருவிளையாடலை (இனியாம்) கூறுவாம். (க)

வையைக் கிழவன் றன்னருமைக் குமரன் றனக்கு மணம்புணர்ச்சி
செய்யக் கருதுந் திறனோக்கி யறிஞ ரோடுந் திரண்டமைச்சர்
மையற் றழியா நிலத்திருவு மரபுங் குடியும புகழ்மையுநம்
மையற் கிசையத் தக்கதெதச்சா யாரொன் றளக்கினுற்றார்.

இ-ள். சுந்தரபாண்டியர் தம்முடைய புத்திரருக்குத் திருமணஞ்செய்யக் கருதும் தன்மையை நோக்கிப் பூமிச்செல்வ முதலியவற்றோடு தம்முடைய சுந்தரபாண்டிய ராஜருக்கு ஒப்பத் தக்ககுலத்தையுடைய அரசா யாவரென்று அமைச்சர் அறிஞரோடுகூடி அளவிடத் தொடங்கினர்.—எ-று. ஒவ்வை வையையென மரீஇயிற்று. (௨)

தீந்தண் புனல்சூழ் வடபுலத்து மணவூ ரென்னுந் திருநகர்க்கு
வேந்தன் பரிதி திருமரபின் விளங்குஞ் சோம சேகரனென்
றோய்ந்த கேள்வி யவனிடத்துத் திருமா தென்ன வவதரித்த
காந்தி மதியை மணம்பேச விருந்தா ரந்நாட் கங்குல்வாய்.

இ-ள். (அளவிட்டவழி எல்லாவற்றினும் சமானவன்) வடநாட்டிலே கலியாணபுரத்துக்கு அரசனாகிய சூரியன் மரபிலே விளங்குகின்ற சோமசேகரனென்று கருதிச் சிறந்த கேள்வியுடைய அவனிடத்தில் அவதரித்த காந்திமதிதேவியைத் திருமணம்பேச எண்ணியிருந்தார் அந்நாள் நெருங்கிய இருளையுடைய இரவிலே எ-று.

வெள்ளைக் களிற்றின் பிடர்சுமந்த குடுமிக் கோயின் மேயவிளம்
பிள்ளைக் கதிர்வெண் மதிமௌலிப் பெருமா னிரவி மருமானும்
வள்ளற் கரத்தா னனவிலெழுந் தருளி வானோர் நனவிறக்குங்
கள்ளத் துருவாந் திருமேனி காட்டி யிதனை விளம்புவார்.

இ-ள். அஷ்டகஜங்கள் தாங்கும் சிகரமுள்ள சுவர்ணவிமானத்தில் அமர்ந்தருளும் பிறைமதிசூடிய முடியுடைய சுந்தரேசர், ஆதித்தனது மரபினனாகிய கொடைக் கையுடைய அச்சோமசேகரன் சொப்பனத்தில் எழுந்தருளித் தேவர்களது ஜாக்கிரத்திற்கும் மறைந்த வடிவமாகிய தந்திருவுருவைக்காட்டி இதனை அருளுகின்றார் —எ-று.

அன்ன மிறைகொள் வயன்மதுரைச் சிவன்யா மரச நீயீன்ற
பொன்னை யனையா டனைமதுரா புரியிற் கொடுபோய் மறுபுலத்து
மன்னர் மகுட மணியிடற மழுங்குங் கழற்கார் சுந்தரனாந்
தென்னர் பெருமான் குமரனுக்குக் கொடுத்தி யென்று செப்புதலும்.

இ-ள். மதுரைப்பதியில் வதியும் சிவபிரான் யாம், அரசனே நீ பெற்ற இலக்குமிபோன்ற புத்திரியை மதுரைமாநகரிற் கொண்டுபோய்ச் சுந்தரபாண்டியராஜா புத்திரனுக்குக் கொடுப்பாயென்று அருளுதலும்.—எ-று. இறை-தங்குதல் (௫)

உள்ளக் கமல முகக்கமல முடனே மலர விருந்தடங்க
ணள்ளற் கமல மலர்ந்துதன தங்கைக் கமல முகிழ்த்தெழுந்து
வள்ளற் பரமன் கருணையெளி வந்த செயலை நினைந்தன்பின்
வெள்ளத் தழுந்தி யெழுந்திரவி வேலை முளைக்கும் வேலையினில்.

இ-ள். உடனே அகக்கமலமும் முகக்கமலமும் விகசிக்கும்படி சேற்றிலுண்டாகிய கமலமலர்போலுங் கண்களை விழித்துத் தனது கரகமலங்களைக்கூப்பி எழுந்து கருணையினாலே சிவபெருமான் எளிதாக எழுந்தருளிய தன்மையைச் சிந்தித்து அன்புப் பெருக்கின் மூழ்கி எழுந்து சூரியன் கடலிலே தோன்றும்போது.—எ-று. (௬)

நித்த நியமக் கடனிரப்பி நிருப னமைச்ச ரொடுநான்கு
பைத்த கருவிப் படையினொடு பலவே றியமுங் கலிப்பத்தன்
பொய்த்த மருங்குற் றிருமகளைப் பொன்ன னாரோ டிரதமிசை
வைத்து மணஞ்சேர் திருவினொடு மதுரை நோக்கி வழிக்கொண்டான்.

இ-ள். அச்சோமசேகரன் நித்தியகர்மங்களை முடித்து அமைச்சரோடும் நால்வகைச் சருவியாகிய பரந்தசேனைகளோடும் பலவாத்தியங்கள் முழங்கத் தன்னுடைய புத்திரியைத் தோழிமாரோடும் இரதத்தில் ஏற்றித் திருமணச் செல்வக் கோலத்தோடு மதுரைப்பதி நோக்கி வழிக்கொண்டான்.—எ-று. (எ)

நென்ன லெல்லை மணம்பேச நினைந்த வாறே யமைச்சர்மதி
மன்னர் பெருமா னமரோடு மணவூர் நோக்கி வழிவருவா
ரன்ன வேந்தன் றனைக்கண்டா ரடல்வேள் குமர னனையானெந்
தென்னர் பெருமான் குமரனுக்குன் றிருவைத்தருதியெனவனையான்.

இ-ள். நேற்றைத்தினம் திருமணம் பேச எண்ணிய வண்ணம் சுந்தரபாண்டியர் சுற்றத்தாரொடு கலியாணபுரத்தை நோக்கி வருகின்றவராகிய மந்திரிமார் அச்சோமசேகரராஜனைக் கண்டு குமாரக்கடவுள் போன்றவரும் சுந்தரபாண்டியருடைய குமாரருமாகிய உக்கிரபாண்டியருக்கு உம்முடைய புத்திரியைத் தருவீரொன்று வினவ (அதற்கு) அச்சோமசேகரன்.—எ-று. கண்டார-முற்றெச்சம். (அ)

குலனுங் குடியுங் கனவில்கட் கொன்றை முடியார் வந்துரைத்த
நலனுங் கூறி மணநேர்ந்து நயப்ப வதனை நன்முதியோர் [திவரு
புலனென் றுழையா தமைவிடுத்துப் பொருநைத் துறைவற் குணர்த்
வலனுந் தயிலவேன் மன்னனொடு மதுரை மூதூர் வந்தணைந்தார்.

இ-ள். (நேற்றிரவிலே) சொப்பனத்திலே சுந்தரேசர் எழுந்தருளிவந்து கூறிய குலமும் குடிப்பிறப்பும் மேம்பாடும் கூறி (வினவிய) மணத்திற்குச் சம்மதித்து விரும்ப, அச்செய்தியை முதியோரானவர் அறிவுள்ள தூதரை அனுப்பிச் சுந்தரபாண்டியருக்கு விண்ணப்பஞ்செய்து தம்மோடுவரும் வெற்றிபெற்ற கூரிய வேற்படையுடைய சோமசேகரனொடு மதுரைப்பதி வந்துசேர்ந்தார்.—எ-று (கூ)

இரவி மருமான் மதிமருமா னெதிரோ பணியத் தழீஇமுகமன்
பரவி யிருக்கை செலவுய்த்துப் பாண்டி வேந்த னிருந்தான்மேல்
விரவி யமைச்சர் திருமுகங்கள் வேந்தர் யார்க்கும் விடுத்துநகர்
வரைவு நாள்செய் தணிசெய்ய மன்றன் முரச மறைவித்தார்.

இ-ள். சோமசேகரன் சுந்தரபாண்டியரை வணங்க அப்பாண்டியர் (அச்சோம சேகரனைத்) தழுவி உபசாரம்சொல்லி இருப்பிடத்துக்குச் செல்ல அனுப்பிவிட்டு இருந்தருளினர். பின்பு அமைச்சர் திருமணமுகூர்த்ததினம் நிச்சயித்து அரசர் அனைவர்க்கும் திருமுகங்கள் அனுப்பி மதுரைநகரத்தை அலங்கரிக்கும்படி மணமுரசு அறைவித்தார்.—எ-று. (க0)

மாடம் புதுக்கிப் பூகதமுங் கதலிக் காடு மறுகெங்கு
நீட நிரைத்துப் பாலிகையு நிறைபொற் குடமு முறைநிறுத்தி
யாடு கொடியுந் தோரணமும் புனைவித் தழகுக் கழகாகக்
கூட நெருங்கு நகரைமணக் கோலம் பெருகக் கொளுத்தினார்.

இ-ள். வெளி. நீடநிரைத்து-மிகவரிசையாகக்கட்டி. கொளுத்தல்- அலங்கரித்தல். (கக)

தென்ற னுடன் றிருமகளைத் தேவர் பெருமான் மணம்புரிய
மன்ற லழகா லொருநகரொப் பதிக மின்றி மதுரைநக
ரன்று தானே தனக்கொப்ப தாகும வண்ண மணியமைத்தா
ரின்று தானே தனக்கதிக மென்னும வண்ண மெழிலமைத்தார்.

இ-ள் மலயத்துவஜபாண்டியனுடைய புத்திரியாரைச் சுந்தரபாண்டியர் திருமணம் புரிய, அத்திருமணவழகால மற்றொருநகரம் ஒப்பும் உயர்வுமின்றி மதுரைநகரம் அந்நாளிலே தனக்குத்தானே ஒப்பாம் வண்ணம் அலங்கரித்தார். இந்நாளிலே தனக்குத்தானே உயர்வென்னும் வண்ணம் அலங்கரித்தார்.—எ-று. (கஉ)

கலிவிருத்தம்.

முன்னர் மாலை முடியணி சுந்தரத
தென்னன் ரேற்றின திருமுகங் கண்டுதாழ்ந
தன்ன வாசக முடகொண் டயறபுல
மன்னர் மாதவா யாரும் வருவரால.

இ-ள். சிறந்த சுந்தரபாண்டியரது ஸ்ரீமுகத்தை முன்னமே தரிசித்து வணங்கி அதில் வரைந்தருளிய வாக்கியங்களை மனத்திற்கொண்டு அயல்நாட்டு அரசர் முநிவர் அனைவரும் வருகின்றார்—எ-று (கந)

புரவி வெள்ளமும் போர்க்கரி வெள்ளமும்
வரைவில் காலவலி மள்ளரின் வெள்ளமும
விரவி யாழிய வெள்ளமு முள்ளுற
விரவி தன்வழித் தோன்றல்வந் தெய்தினன்.

இ-ள். குதிரை, யானை, அளவில்லாத கால்வலியுடைய வீரப்படை இவைகளின் பெருக்கத்திற் கலந்து இரதப்பெருக்கம் உள்ளே பொருந்தச் சூரியன் மரபிற்றோன்றிய சோழராஜன்வந்து சேர்ந்தான்.—எ-று. (கச)

கோடு வில்லொடு மேகக் குழாங்கணமின்
னீடு வாளொடு நேர்ந்தென மாபுதாழ்
தாடு குண்டலக் காதுடை யாடவர்
சேட னீகத்துச் சேரன்வந் தீண்டினன்.

இ-ள். மேகக்கூட்டங்கள் மிகமின்னும் ஒளியொடு வந்தாற்போலக் குண்டலச் செவியுடைய வளைந்தவில்லேந்திய வீரர்களாகிய பெரியசேனைகளொடு சேரராஜன்வந்து சேர்ந்தான்.—எ-று. (கரு)

கடலு முள்ளமுங் காற்றும்பல் வண்ணமு
முடலுங் கொண்டன வுந்துறு வாம்பரிப்
படைக டற்குட் பரிதியிற் றோன்றின
னடுப ரிப்பதி யாகிய வேந்தனே.

இ-ள். கடல், மனம், காற்று இம்மூன்றும் பலநிறமும பலசரீரமுங்கொண்டாற்போன்று விரைந்து தாவும் குதிரைப்படைக்கடலின் இடையே சூரியன்போலத் தோன்றித் துரகபதியரசன் (வந்துசேர்ந்தான்).—எ-று. தோன்றினன்-முற்றெச்சம். (கசு)

அலகி லாவுத யங்தொறு மாதவ
ரலகி லாருதித் தென்னபொன் னோடைச்சே
ரலகி லானைய னீகமொ டெய்தினா
னலகி லாற்றற கயபதி யண்ணலே.

இ-ள். அளவில்லாத உதயகிரிதோறும் அளவில்லாத ஆதித்தர் உதயமானாற்போலப் பொன்னாலாகிய நெற்றிப்பட்டம பூண்ட அளவில்லாத யானைச் சேனையோடு அளவில்லாத வலியுடைய கஜபதிராஜன வந்துசேர்ந்தான்.—எ-று. (கஎ)

தொக்க மள்ள ரடிபபடு தூளிபோய்த்
திக்க டஙக விழுஙகித் திரைக்கட
லெக்கர் செய்ய வெழுந்தியங் கலலென
நக்க வேற்கை நரபதி நண்ணினான்.

இ-ள். வீரர்குழாததின பாததூளிசென்று திக்குகளை விழுஙகிக கடலைத திடர் செய்யவும் வாத்தியங்கள் எழுந்து கலலென்று ஒலிககவும் விளஙகிய வேற்படை யேந்திய கையையுடைய நரபதியரசன வந்து சேர்ந்தான —எ-று. (கஅ)

மீன வேலையிற் கந்துக மேற்கொடு
கூனல வாசிலே வஞ்சக கொடுஞ்சமாக்
கான வாழ்க்கை யரட்டக் கரும்படை
மான வேறகுறு மனனவா நண்ணினா.

இ-ள். கடல்போலுங் குதிரை மேற்கொணடு வளைந்து ஈீண்டவில்லாற் கொடியவஞ்சப்போர்செய்தலொடு காட்டில் வாழ்தலுற்ற குறுமபராகிய கரும்படைகளொடு வலிய வேற்படையுடைய குறுநில மனனா வந்துசோந்தா.—எ-று. (கசு)

சீனா சோனகா சிங்களா கொங்கணா
மான வேலவல மாளவா சாளுவர்
தான மாஙிரைச சாவக ராதியா
மேனை நாட்டுள மனனரு மீண்டினா்.

இ-ள். வெளி - தானமா - மதயானை. (உ0)

நூலொ டுந்துவக் குணடு நுடங்குமான்
றோலர் தூஙகு சுருக்குடைத் தானையர்
கோல முஞ்சியா கிஞ்சுகக் கோலினர்
நாலு நூலபயி லுவினா நண்ணினா.

இ-ள. பூணூலொடு கட்டுண்டு துவளுமமான்றோலினரும், (முன்னே) தொங்குஞ் சொருககுள்ள ஆடையினரும் அழகிய முஞ்சிப்புல்லாலாகிய அரைநாணினரும் முள்முருக்கங் கோலினருமநான்கு வேதங்களையுமஓதும் நாவினருமாகிய பிரமசாரியர் வந்து சேர்ந்தார்.—எ-று. (உக)

வட்ட நீர்க்கலக் கையினர் வார்நது தோள்
விட்ட குண்டலக காதினர் வேட்டதீத்
தொட்ட கோலினா வேள்வியிற் சுட்டநீ
றிட்ட நெற்றிய ரில்லொடு நண்ணினர்.

இ - ள். வட்டமாகிய உறியிற் பொதிந்த நீரையுடைய கமண்டலமேந்திய கையினரும் நீண்டு தோள்வரை தொங்கவிட்ட குண்டலத்தையுடைய செவியினரும் யாகஞ்செய்தற்குக் கருவியாகிய தீககடைகோலினரும் யாகாக்கினியிலே தங்கிய விபூதியணிந்த நெற்றியினருமாகிய வானப்பிரஸ்தர் வந்து சேர்ந்தார்.—எ-று. (௨௨)

பூண்ட நெறறியர் வெண்ணிற மூரலர்
குண்டி கைக்கையா கோவண மீககிய
தண்டு கையர்சற றுன்னயா மெயயினைக்
கணடு பொயயினைக காயந்தவா நண்ணினா.

இ - ள். விபூதியணிந்த நெற்றியினரும் வெள்ளிய பல்லினரும் கரகக்கையினரும் கௌபீனங்கட்டிய கோலேந்திய கரத்தினரும் காஷாய வஸ்திரந்தரித்த மேனியரும நித்தியப் பொருளாகிய பரசிவத்தையுணர்ந்து அநித்தியபபொருளாகிய வுலகத்தை வெறுத்தவருமாகிய வைதிகசந்நியாசிகள வந்து சேர்ந்தார்கள் —எ-று. (௨௩)

நீந்தண பாறகடல செந்துகிற காட்டொடும்
போநத போனமெயிற் புணணியப பூச்சினா
சேநத வேணியா வேத சிரபபொரு
ளாயநத கேளவி யருநதவ ரெயதினர்.

இ - ள். இனிய தணணிய பாறகடல செமபவளக் காட்டொடு வந்தாற்போலத் திருமேனியிலே திருநீறறை யணிநதவரும் சிவநத சடையினரும் உபநிடதப் பொருளாகிய சிவபிரானை ஆராயதற கேதுவாகிய சிவாகம சிரவணமுடையவருமாகிய சைவசந்நியாசிகள வநது சேர்நதார்கள் —எ-று. (௨௪)

ஆதி சைவா முதற்சைவ ராவருங்
கோதி லாவகச சைவக குழாஙகளும
பூதி மேனியா புணணிய வைந்தெழுத
தோது நாவின ரொல்லைவந் தெய்தினா.

இ - ள வெளி. ஆதிசைவர்முதற் சைவராவர் - அநாதிசைவராகிய சதாசிவமூர்த்தியின பஞ்சமுகத்திற் றோன்றிய பஞ்சருஷி கோத்திரத்தில் உதித்த அபிஷிக்தராகிய சிவப்பிராமணா ஆதிசைவா, பிரமாவின் முகத்திற்றோன்றி ஆதிசைவரிடத்தே சிவதீக்ஷைபெற்ற வைதிகப் பிராமணர் மகாசைவா, சிவதீக்ஷைபெற்ற க்ஷத்திரியரும் வைசியரும அநுசைவர், சிவதீக்ஷைபெற்ற சற்சூத்திரராகிய வேளாளர் அவாந்தரசைவர், சிவதீக்ஷைபெற்ற அநுலோமர் பிரவரசைவா என்று கொள்க. அகச்சைவம், சைவம் - பாசுபதம் - மாவிரதம - காளாமுகம் - வாமம் - வைரவம் என்றுகொளக. (௨௫)

வெணக ளிற்றவன் வேரியந் தாமரைப்
பெண்க ளிப்புறு மார்பன் பிரமனே
டொண்க ளிப்புற வும்பர் முதற்பதி
னெண்க ணத்தவா யாவரு மீணடினா.

இ - ள். இந்திரன், விஷ்ணுமூர்த்தி, பிரமா, தேவர்முதலிய பதினெண்கணத்தோர்அனைவரும்வந்து சேர்ந்தார்.—எ-று. (௨௬)

அணைந்து கோயி லடைந்தரிச் சேக்கைமேற்
குணங்க டந்தவன் கோமள வல்லியோ
டிணங்கி வைகு மிருக்கைகண் டேத்தினா
வணங்கி னாவணங் கும்முறை வாழ்த்தினா.

இ-ள். வந்து திருக்கோயில சேர்ந்து சிங்காசனத்தின மீது சததுவம் இராஜசு தமசு என்னு மாயாகுணஙகளைக கடந்த சுந்தரபாண்டியா தடாதகைப் பிராட்டியாரொ டும் எழுந்தருளியிருததலைத் தரிசிததுத துதிதது வணஙகி வாழ்த்தினா.—எ-று. (உஎ)

விரைசெய் தாாமுடிச சுநதா மீனவன்
சுரர்கண மாதவா வேநதாக்குத தொன்முறை
வரிசை நலகி யிருநதனன் மனனவன
றிரும கன்மணஞ் செயதிறஞ செபபுவாம.

இ-ள். சுந்தரபாண்டியா, அனைவாககும் சம்மானஞசெயது வீறறிருநதருளி னார். (இனி) அப்பாண்டிய ராஜருடைய புததிரா திருமணம்புரியுந தன்மையைக கூறு வாம்.—எ-று. (உஅ)

சோம சேகரன றோகை வனபபெலாங
கோம கன்கண் டுவபபவக கொள்கைகண
டேம மேனிய னூலவழி யார்க்குமத
தேமன் கோதை யுறுபபிய றேறறுவான்.

இ-ள். சோமசேகரராஜனுடைய புததிரியாரது அழகுமுழுவதும் சுந்தரபாண டியர் நோக்கித திருவுளமகிழுமபடி பிருகஸ்பதி (அவயவ விலககணததை அறிவிப்பா யாகவென்னும்) அததிருக்குறிப்பை யுணாந்து சாமுததிரிகைநூலினமுறையே அனை வர்க்கும அககாநதிமதிதேவியாரது அவயவவிலக்கணததைத தெளிவிககினறார் -எ-று.

எழுசீரடியாசிரியவிருததம.

பெருகநீண் டறவுங் குறுகிடா தாகிப பிளந்திடாக கடையதாய்த் தழைந்து
கருவிவான் வண்டின் கணமெனக் கறுத்துககடைகுழனறியன்மணஙகான்று
புனையறச செறிநது நெறிததுமெல லெனறு புன்மைய தாகிநெய்த் திருண்ட
மருமலர்க் குழலா டன்பதிக கினிய மல்லலவான் செலவமுண டாகும்.

இ-ள. மிகநீளாமலும் குறுகாமலும் நுனி பிளவுபடாமலும் பொலிவுறறு, கூட் டமாகிய மேகமும் வண்டும்போலக கறுதது, நுனியிலே குழைநது, இயல்பாக மணம் வீசி, குற்றமற நெருஙகி, நெளிவுடைததாகி, மிருதுவுடையதாகி, சூக்குமமுடைய தாகி, நெய்ப்பசையுடைததாகி, இருள்போலும நிறமவாய்நத மணமகமழும மலர்மாலை யணிந்த அளகமுடையாளின் கணவனுககு மிகமேம்பட்ட நல்ல செல்வமுணடா கும்.—எ-று. (௩0)

திண்மத வேழ மத்தகம் போலத் திரண்டுயா சென்னியா ளவட
னுண்மகிழ் கணவ னாயுணீண் டகில வுலகா சுரியனா மெட்டாந்
தண்மதி போன்று மயிாநரம் பகன்று தசைந்துமே விரலிடை யகன்ற
வெண்மதி நுதறன் பதிக்குநற் றிருவோ டலப்பிலா ரோககிய முண்டாம்.

இ - ள். யானைமத்தகம்போலத் திரண்டு உயர்ந்த தலையுடையாளின் மனமகிழ்கின்ற தலைவன் ஆயுள்மிகுந்து அனைத்துலகையும் ஆளுந்தகுதியவனாவான். அர்த்தசந்திரன்போன்று மயிர் நாமபுகளின்றித தசையுடையதாகி மூன்று விரலளவு இடையே விரிந்த ஒள்ளிய சந்திரன்போலுந் திலகமுள்ள நெற்றியுடையாளின் கணவனுக்கு நல்ல செல்வமும் ஆரோக்கியமு முண்டாகும.—எ-று. அவள பகுதிப்பொருள்விகுதி. உலப்பில - கெடுதலில்லாத. (சுக)

கண்கடை சிவந்தான பாலென வெளுத்தது நடுவிழி கழியவுங் கரிதா
யெண்கவி னடைந்து கோமள மாகி யிமைகரு மயிர்த்தெனி னினிய
தொணகரும் புருவங் குனிசிலை யொத்த தததமி லொத்திரு தொளையும்
பண்கொள வுருணடு துண்டமெட் போது பதுமமேற பூத்தது போலும்.

இ - ள. (கண்ணானது,) கடைக்கண்சிவந்து பசுப்பால்போல வெளுத்து இடைக்கண் பெரிதுங கரியதாகி மதிககததகக அழகுபெறறு (நோககுவோாககு)ப் பொலிவாய் இமைமயிா கரியதாயின நல்லதாம: ஒளளியகரிபபுருவஙகள், வளைநத தநுசுபோன்றன (வாயின் நலலனவாம.) நாசி, இரண்டுதொளையும தம்முளேசமமாய் அலங்காரம்பெற உருணடு எளளினமலா தாமரைமலாமேற் பூததததுபோலும (முகத்தில் விளங்குமாயின் நல்லதாம).—எ-று. (சுஉ)

வள்ளைபோல் வாரநது தாழ்ந்திரு செவியு மடற்சுழி நலலவாய் முன்னர்த்
தள்ளிய காது மனேகர மாகுந் தன்மையா னன்மையே தழைக்கு [போற்
மொள்ளிய கபோலம் வட்டமாய்த் தசைநதிட் டுயாந்துகண் ணாடிமண்டலம்
றெள்ளிய வூற்ற மினியது நன்றென் றோதினா னிசைகடற் செல்வன்.

இ - ள். இரண்டு செவிகளும், வளளையிலைபோலவாரநது தாழ்ந்து மடலின் சுழிகள் நல்லனவாய் முன்னே தள்ளியன (வாயின் அச்) செவிகள் அழகியனவாந் தன்மை பற்றி நன்மையே பெருக்கும். ஒள்ளிய கபோலம், வட்டமாய்த் தசையுடையதாய் உயர்ந்து கண்ணாடிமணடலம்போலத தெளிவுடைய பரிசம் சருச்சரை அகன்றதாயின் வருணன் நனமையென்று கூறினான்.—எ-று. (சுங)

கொவ்வைவா யதரந திரண்டிரு புடையுங் குவிந்துசேந் திரேகைநேர்கிடந்தா
லவ்வணி யிழைதன் னன்பனுக் கென்று நண்புரு வாகுமெண் ணான்கு
வல்லவா ளெயிறு மிடைவெளி யின்றி வார்ந்துமேல் கீழிரண் டொழுங்குஞ்
செவ்வனோத தாவின் பாலென வெள்கிச் சிறிதுயர்ந் திருப்பினன் கென்பர்.

இ-ள். கொவ்வைக்கனிபோலும் வாயினை இதழ், திரண்டு இருபக்கமுங் குவிந்து சிவந்து நேரில் இரேகையிருக்குமாயின் அப்பெண் தன்னாயகனுக்கு எந்நாளும் நண்பினளாயிருப்பாள். வலிய ஒளியுளள முப்பத்திரண்டு பற்களும், இடைவெளியின்றி ஒழுங்கினவாகி மேல்கீழ் இருவரிசைகளும் செவ்விதாகத் தம்முளொத்துப் பசுப்பால்போல வெள்ளியனவாய்ச் சிறிதுயர்ந்திருந்தால் நன்றென்று கூறுவர்.—எ-று. (சுச)

மெல்லிதாய்ச் சிவந்து கோமள மான நாவினுள் வேட்டவேட் டாங்கே
வல்லவந் தெய்த நுகர்ந்திடுந் தசைந்து வட்டமா யங்குல மிரண்டி
னெல்லைய தாகி மஞ்சுள மாகி யிருப்பது சிபுகநன் றென்ப
ரல்லியங் கமலம் போன்மணந் திருடீர்ந் தவிர்மதி போல்வது முகமே.

இ - ள். மென்மையுடையதாய்ச் சிவந்து மூதிராத நாவினள், விரும்பியன விரும்பியபடி விரைந்துவீர அநுபவிப்பாள். சிபுகம், தசையுடையதாய் வட்டமாய் இரண்டங்குல வளவினதாய் அழகியதாய் இருத்தல் நன்மையென்று கூறுவர். முகம், அகவிதழுடைய அழகிய கமலமலர்போல் மணங்கமழ்ந்து களங்கமின்றி விளங்கும் மதிபோல (த் தண்ணொளியுடை)யது (நன்மையென்று கூறுவர்).—எ-று. (கடு)

திரைவளைக் கழுத்துத் தசைந்துநால்விரலினளவதாய்த்திரண்டுமூன்றிரேகை
வரைபடிற் கொழுந னிலமன் னவனு மார்பகந் தசைந்துமூ வாறு
விரலள வகன்று மயிர்நரம் பகன்று மிதந்ததேல் விழுமிதாம வேய்த்தோள்
புரையறத் தசைநது மயிரகன் றென்பு புலப்படா மொழியகோ மளமாம்.

இ - ள். அலையெறியுஞ் சங்கம்போன்ற கழுதது, தசையுடையதாய் நாலங்குல வளவினதாய உருட்சியாய் மூன்றிரேகையாகிய வரையுளதாயின் (அப்பெண்ணின) கணவன் உலக மனனவனுவான. மார்பிடம், தசையுடையதாய்ப் பனனிரண்டங்குல வளவு பரந்து மயிர் நரம்புகளின்றி உயர்ந்திருக்குமானல் நன்மையுடையதாம். மூங்கில் போன்ற தோள்கள், குற்றமறத் தசையுடையனவாய மயிரின்றி எலும்பு புலப்படாத மொழிகளையுடையன (வாயின) மகிழ்ச்சியாம்.—எ-று. (கசு)

செங்கையங் குலிநீண டுருண்டுகண் மரீஇநேர் சிறுததிடிற் செல்வமோ டின்பந, தங்குமவள் ளுகிர்சேந் துருண்டுகண ணுள்ளங் கவர்வதாய்ச் சாசரப் பகன்று, லஙகவை நல்ல வகங்கைமெல் லெனச்சேந் திடைவெளி யகன்றிடை யுயர்ந்து, மங்கல மாய்ச்சில் வரைகளி னல்ல விலக்கண வரையுள மாதோ.

இ - ள். சிவந்த கைவிரல்கள், நீண்டு திரண்டு கணுககள்பொருந்தி முறையே சிறுத்துளவாயின் ஐசுவரியமும் மகிழ்ச்சியும் தங்கும். கூரியநகஙகள், சிவநது திரண்டு கண்மனங்களை அபகரிப்பனவாய்ச் சாச்சரை ஒழிந்துளவாயின் அவை நன்மையுடையனவாம் உள்ளங்கைகள், மெல்லியனவென்று சொலலச் சிவந்து இடைவெளியின்றி இடையில் உயர்ந்து மங்களமாய்ச் சிலஇரேகைகளில் நல்ல இலக்கண வரைகள் உள்ளன (வாயின் நன்மையுடையனவாம்).—எ-று அங்கு - அசை. (கஎ)

முத்தணி தனங்கள் கடினமாய்த் தசைந்து வட்டமாய் முகிழ்த்திரு கடநே
ரொத்திறு மாந்நீர்க் கிடையற நெருங்கி யுள்ளன மெலிந்தமர்ந் துரோம
பத்திபெற் றயலே மயிர்நரம பகன்ற பண்டியா ளுண்டிவேட் டாங்கே
துய்த்திடு நாபி வலஞ்சுழித் தாழ்ந்தாற் றொலைவிலாத் திருவளம் பெருகும்,

இ - ள். முத்துமாலைபூண்ட தனங்கள், இறுகியனவாய்த் தசையுடையனவாய் வட்டமாய் அரும்பி இரண்டு கடங்கள்போன்று இறுமாத்தலுற்று ஈர்க்கு இடையே புகாமல் நெருங்கியிருப்பன(வாயின் நன்மை யுடையனவாம்.) குழைவுடையதாய்ப் பொருந்தி (மத்தியிலே) உரோம வரிசைபெற்று அதன் பக்கத்தே மயிர் நரம்புகள் நீங்கிய வயிறுடையவள், விரும்பியபடி நுகர்வாள். நாபி, வலஞ்சுழித்து ஆழமுடையதாயின் நீங்காத செல்வம் பெருகும்.—எ-று. (கஅ)

இடைமயிர் நரம்பற் றிருபதோ டொருநான் கெழில்விர லளவொடு வட்ட
வடிவதாயச் சிறுகி மெலிவது நிதம்ப மத்தகம் யாமையின் புறமபோற்
படிவமே யொத்த னன்றிரு குறங்கும் படுமயி ரென்பகன் றியானைத்
தடவுடைக் கையுங் கரபமுங் கதலித் தண்டுமொத் திருக்கினன் றென்ப.

இ-ள். மருங்குல், மயிர் நரம்புகளின்றி இருபத்துநாலங்குல வளவொடு வட்டமாய்ச் சிறுத்துத தளர்வ (தாயின் நன்மை) யாம். நிதம்பங்கள், யானையின் மத்தகமும் யாமையின் முதுகும்போல வடிவங்கள் நேரே சமமாயிருத்தல் நன்றாம். இரண்டு தொடையும், உரோமம் எலும்புகள் ஒழிந்து யானைத்துதிக்கையும் கையடியும் வாழைத்தண்டும் போன்றிருந்தால் நன்மையென்று கூறுவர்.—எ-று. நிதம்பம் - பின்புறச்சகனம். ()

அங்கமுண் மறைந்து வட்டமாய்த் தசைவ தணிமுழந் தாண்மயிர் நரம்பு
நீங்கிடா தடைவே யுருட்சியாய்ச சிறத்துச் சமவடி வாயழ கடைந்த [கு
சங்கையாஞ் சிரையென் பறத்தசைந தியாமை முதுகெனத் திரண்டுயர்ந் தழ
மங்கலம் பொலிந்த புறவடி மடநதை மன்னவன் பன்னியா மன்னே.

இ-ள். அழகிய முழங்கால், எலும்பு தோன்றாமல் வட்டமாய்த் தசைந்திருந்தால் (நன்றாம்.) கணைககாலகள், மயிர் நரம்புகளின்றித திரண்டு முறையே சிறத்துச் சமவடிவாய அழகியன(வாயிருந்தால் நன்மை)யாம். நரம்பும் எலும்பும் ஒழியத் தசைந்து யாமைமுதுகுபோலத திரண்டு உயர்ந்து அழகு பொலிவுகளால் விளங்கிய புறவடியுள்ள பெண் அரசன் மனைவியாவள.—எ-று. பரடுகள் மறைந்து நரமபின்றியிருந்தாற் சுபம் என்று வடமொழியிற் கூறியிருத்தலை இந்நூலார் புறவடியில் அடக்கிக் கூறினார்.

அல்லியங் கமலக் காலவிர லுயர்ந்து தூயவா யழகவாய்க் கழுநீர்
மெல்லிதழ் நிரைத்தாங் கொழுங்குறத் திரண்டு வாலுகிர் வெணமதிப் பிளவு
புல்லிய போனறு மெலலிய வாகிப் புகரறத் தசைந்தன வகத்தாள
சொல்லிய தசைவு மென்மையுஞ் சமமுந் துகளிலா வழகுமே யன்றி.

இ-ள். கால்விரலகள், உயர்ந்து தூய்மையினவாய அழகினவாய்ச் செங்கழுநீர் மலரின் மெலலிய விதழ்களை வரிசையாக வைத்தாற்போல ஒழுங்குபெறத் திரண்டு, வெள்ளிய நகஙகள், வெள்ளிய பாதிமதிகள் (அவவிரல்களைப்) பற்றியனபோன்று மென்மையுடையனவாயக் குற்றமறத் தசையுடையன(வாயின் நன்மையாம்.) உள்ளங்கால், நூலிற்கூறிய தசைதல் மிருதுபளளமின்மை அழகு இவைகளல்லாமல.—எ-று. (சுக)

உண்ணமுஞ் சிவப்பு முள்ளதாய் வேர்வை யொழிந்ததேற் செல்வமா மாகம்
வண்ணமாா பொன்போ னன்னிறம் வாய்தல் வண்மணம பாடலங் குவளை
தண்ணறு முளரி மல்லிகை நறுநதண் சம்பகம் போல்வது நன்றாம்
பண்ணவாங் கிளவி குயில்கிளி யாழிற் படின்வரும் பாக்கிய மென்ன.

இ-ள். உஷ்ணம் செம்மைகள் உள்ளதாய் வியர்வை யில்லதாயின் ஐசுவரியமுண்டாம். சரீரம், நிறம்பொருந்திய பொன்போல நல்லநிறம் அடைதலும் பாதிரிமுதலிய மலர்கள்போல நறுமணங் கமழ்தலும் நன்மையாம். இசையும் விரும்புகின்ற மொழி, குயில் கிளிகளின் குரலும் யாழின் இசையும் போல்வதாயிற் செல்வமுண்டாமென்று சொல்லி.—எ-று. பண்ணுமென்னுஞ் சிறப்பும்மை தொகை. (சுஉ)

கருங்குழற் கற்றை தொட்டுச் செம்மலர்க் காலி னெல்லை
மருங்குனல் கூர்ந்த கன்னி வடிவெலாம் வாக்கின் செல்வ
னொருங்குநூ லுணர்வாற் றெள்ளி யிம்பரின் றும்பர்த் தேத்து
மிரங்குமிக் குயிலன் னாண்மெய் யிலக்கண மரிய தென்றான்.

இ - ள். கேசாதி பாதாந்தம் (மேற்கூறியவாறே அமைந்த) இடை சிறுத்த காந்திமதி தேவியார் அவயவங்களைத் தேவகுரு சாமுத்திரிகைநூலுணர்ச்சியால் முற்றும் ஆராய்ந்து, கூவுங் குயில்மொழிபோலும் மொழியுடைய இத்தேவியார் அவயவ விலக்கணம் பூவுலகத்தும் தேவுலகத்தும் இல்லையென்றார்.—எ-று. (௬௩)

அங்கது கேட்டோர் யாரு மகங்களி தூங்ப விப்பாற்
கொங்கலா நறுந்தார்க் குஞ்சி யுக்கிர வழுதி போந்து
மங்கல வரிசை மாண மத்தமான் சுமந்த வைகைச
சங்கெறி துறைநீ ராடித் தருங்கடி வனப்புக் கொள்வான்.

இ-ள். சுந்தரபாண்டியர் சந்நிதியிலே அத்தேவகுரு மொழியைக் கேட்டவர் அனைவரும் மனமகிழ்ச்சி மிகுந்திருக்க, பின்பு உக்கிரபாண்டியர் (அவ்விடத்தினின்றும்) எழுந்து அஷ்டமங்கல வரிசைசிறக்க யானை சுமந்துவந்த வைகைநதியின் தீர்த்தத்திலே ஸ்நானஞ்செய்து சிறந்த திருமணக்கோலங்கொள்ளத் தொடங்கினார்.—எ-று. (௬௪)

கட்டவிழ் கண்ணி வேய்ந்து மான்மதக் கலவைச் சாந்த
மட்டனஞ் செய்து முத்தாள் மாண்கலன் முழுதுந் தாங்கி
விட்டவிர் கலைவான் றிங்கள் வெண்கதிர்ச் செலவன் போல்வந்
திட்டபூந் தவிசின் மேற்கொண் டிருந்தனன் சங்க மேங்க.

இ - ள். (தொடங்கி) முறுக்கவிழ்ந்த மலர்மாலை சூடிக் கஸ்தூரிகலந்த சந்தனக் குழம்பை அப்பி முத்துகளாலாகிய மாட்சிமைப்பட்ட அணிகளைத் திருமேனிமுற்றும் பூண்டு விட்டு (விட்டு) விளங்கும் கிரணங்களையுடைய ஆகாசவாசியாகிய பூரணசந்திரன்போல (அலங்கார மண்டபத்தினின்று) வந்து சங்கமுதலிய வாத்தியங்கள் முழங்கும்படி (திருக்கலியாண மண்டபத்தில்) இட்ட அழகிய ஆசனத்தின்மேல் வீற்றிருந்தார்.—எ-று. சங்கம் - உபலக்கணம் (௬௫)

அந்நிலை மணநீ ராட்டி யருங்கலப் போர்வை போர்த்த
கன்னியைக் கொணர்ந்து நம்பி வலவயிற் கவின வைத்தார்
பன்னியோ டெழுந்து சோம சேகரன் பானும பங்கின்
மன்னிய வுமையு மாக மதித்துநீர்ச் சிரகந் தாங்கி.

இ - ள். அப்பொழுது வாசனைதீர்த்தத்தில் மூழ்குவித்துச் சிறந்த ஆபரணங்களாகிய போர்வையாற் போர்க்கப்பெற்ற காந்திமதிதேவியாரைக் கொண்டுவந்து உக்கிரபாண்டியரது வலப்பாகத்திலே அழகுபெற வைத்தனர்; (பின்பு அவ்விருவரையும்) சோமசேகரராஜன் தன்பத்தினியோடு எழுந்து பரமசிவனும் அவரது பாகத்தில் நிலைபெற்ற பார்ப்பதிதேவியாருமாகப் பாவித்து நீர்நிறைந்த கரகத்தைக் கையிலே தாங்கி.—எ-று. (௬௬)

மங்கல நீரா னம்பி மலரடி விளக்கி வாசக்
கொங்கலர் மாலை சூட்டிக் குளிர்மது பருக்க மூட்டி
நங்கைதன் கையைப் பற்றி நம்பிதன் கையிலேற்றிப்
புங்கவ ரறிய நன்னீர் மந்திரம் புகன்று பெய்வான்.

இ-ள். மங்கலகரமான அக்கரகஜலத்தினால் உக்கிரபாண்டியரது பாததாமரைக
ளைச் சுத்திசெய்து மிக்க மணமலர்மாலை அணிந்து குளிர்ந்த மதுபர்க்கத்தை யுண்பித்
துக் காந்திமதிதேவியாரது திருக்கையைப் பற்றி உக்கிரபாண்டியரது திருக்கையில்
வைத்துத் தேவர்முதலிய யாவரும் உணரும்படி மந்திரம் உச்சரித்து நல்ல தாரைநீர்
வார்ப்பவன்.—எ-று. புங்கவர் உபலக்கணம் (சுஎ)

இரவிதன் மருமான் சோம சேகர னென்போன் றிங்கண்
மரபினை விளக்க வந்த சுந்தர மாறனை மைந்த
னுரவுநீர் ஞால நாங்கு முக்கிர வருமற கின்றென்
குரவலர்க் கோதை மாதைக் கொடுத்தன னெனநீர் வார்த்தான்.

இ-ள். சந்திரனது மரபினை விளக்கவந்த சுந்தரபாண்டியருடைய புத்திரரா
கிய உக்கிரவருமருக்கு இன்று சூரியன மரபினனாகிய சோமசேகரனென்னும் யான் என்
னுடைய புத்திரி காந்திமதிதேவியைக் கொடுத்தேன் என்று தாரைவார்த்தான்.—
எ-று. உரவு - உலாவு (சுஅ)

மைந்துறு மடங்கற் றிண்கா னணிவட வயிர வூச
லைந்துடன் பதஞ்செய பஞ்சி யணையினோ டன்னத் தூவிப்
பைந்துகி லணையி னைந்து பவளவாய்ப் பசும்பொன் மேனி
யிந்திர மணிக்கட் பாவை விளக்குநான் கிரட்டி யென்ப.

இ-ள். வலிமைமிக்க சிங்கத்தின் திணிணிய காலபோன்ற காலுள்ள முத்துவ
டம் பூட்டிய வயிரத்தாலாகிய ஊசல் ஐந்தும் பதஞ்செய்த பஞ்சுநிறைத்த மெத்தை(பத்
தும்) அன்னத்தின் தூவிநிறைத்த மெலலிய வஸ்திரத்தால் அமைந்த மெத்தைபத்தும்
பவளம் வாயும் பசியபொனமேனியும் நீலமணி கண்ணுமாகவுள்ள பிரதிமைவிளக்கு எட்
டும்.—எ-று. தூவி-சிறையடியின் மெல்லிய மயிர். எனப - அசை. (சுகூ)

அட்டில்வா யடுக்குஞ் செம்பொற் கலங்களு றம்பொன்வாக்கி
யிட்டிழை மணிக்க ளாஞ்சி யேழுபொற் கவரி யெட்டு
விட்டொளிர் பசும்பொற் கிணணப் பந்திசூழ் விளங்க நாப்ப
ணட்டபொற் காலினோடு நகைமணிக் கலநூ றென்ப.

இ-ள். அடுக்களையில் அடுக்கும் சுவர்ணபாத்திரங்கள் நூறும் சுவர்ணத்தால்
வார்த்து மணிகள் அழுத்திய படிக்கம் ஏழும் பொற்காம்புள்ள சாமரை எட்டும் சுவர்ணக்
கிண்ணவரிசை சூழ்ந்து விளங்க நடுவே நாட்டிய பொற்காலினோடு விளங்கும் இரத்தின
பாத்திரங்கள் நூறும்.—எ-று. என்ப - அசை. (எ0)

பெருவிலை யாரப் பேழை யாயிரம் பெற்ற நூண்டே
சருவிலைப் பட்டு வெவ்வே றமைத்தன பேழை மூந்நூ
றுருவமு றெழுதிச் செய்த வோவியப் பாவை யன்னார்
திருமணிக் கலனோ டேவற் சேடிய ரெழுநூற் றைவர்.

இ-ள். மிக்கவிலையுள்ள முத்துமாலைப்பெட்டி (முந்நூறும்) அளவற்ற விலையுடைய நுண்ணிய பருத்தியும் பட்டுமாயுள்ள ஆடைகள் வேறுவேறாகவமைத்த பெட்டி மூந்நூறும் இரத்திநாபரணங்களோடு அமிழ்திலே (தோய்த்து) உருவம் வரைந்த பிரதிமைபோன்ற வேலைசெய்யுந் தோழியர் எழுநூற்றைவரும் — எ-று. (௫௧)

விளைவொடு மூன்று மூதூர் மின்னுவிட் டெறியுஞ் செம்பொ
னளவிரு கோடி யின்ன வருமபெறன் மகட்குச் செல்வ
வளமுற வரிசை யாக வழங்கினன் முழுங்கி வண்டு
திளைமதுக் கண்ணிச் சோம சேகர மன்னன் மாதோ.

இ-ள். விளைவோடுகூடிய மூன்று பெரிய கிராமங்களும் இரண்டுகோடி செம்பொன்னும் பெறுதற்கரிய புத்திரியார்க்குச் சோமசேகரராஜன் பெருஞ்செல்வ வரிசையாகக் கொடுத்தான்.—எ-று. (௫௨)

ஆர்த்தன வியங்க ளெல்லா மமரர்மந் தார மாரி
தூர்த்தன வேள்விச் செந்தீச் சுழித்தது வலமாய்த் துள்ளி
வார்த்தன மடவார் நாவின் முளைத்தன வாழ்த்து மன்றல்
பார்த்தனர் கண்க ளெல்லாம பெற்றன படைத்த பேறு.

இ-ள். வெளி. (௫௩)

பொதியவிற் கடப்பந் தண்டார்ப் புயத்திளங் காளை யன்னான்
முதியவர் செந்தீ யோமப வின்னிய முழங்கக் காந்தி
மதியைமங் கலநாண் பூட்டி வரிவளைச் செங்கை பற்றி
விதிவழி யேனை மன்றல வினையெலா நிரம்பச் செய்தான்.

இ-ள். கடப்பமாலையணிந்த புயங்களையுடைய முருகக்கடவுள்போன்ற உக்கிரபாண்டியர், மகாமுனிவர் ஓமம்வளர்க்கவும் வாத்தியங்கள் முழங்கவும் காந்திமதிதேவியாரை மங்கலசூத்திரம் அணிந்து கைப்பற்றி மற்றைவிவாகக் கிரியைகளையும் நிறைவேற்றினார்.—எ-று. (௫௪)

வேறு.

எண்ணி லாத வளத்தினொடு மிரவி மருமான் மடப்பிடியைப்
பண்ணி லாவு மறையொழுக்கம் பப்ப வேள்வி வினைமுடித்துத்
தண்ணி லாவெண் கலைமதியுந் தாரா கணமுந் தவழ்ந்துழல
விண்ணி லாவு மணிமாட வீதி வலமாய் வருமெல்லை.

இ-ள். அங்ஙனம் நிறைவேற்றிச சந்திரனும் நக்ஷத்திரங்களும் தவழ்ந்து சுழலும்படி ஆகாயத்தில் (உயர்ந்து) விளங்கும் மாடமுடைய வீதியிலே பிரதக்ஷிணமாக வரும்பொழுது.—எ-று. எண்ணிலாத - முடித்து என்பது அநுவாதம். (௫௫)

பின்னேர் பொன்னந் தொடியினரு மென்செம் பஞ்சி யடியினரும்
பொன்னேர் மணிப்பூண் முலையினரும் புலமபு மணிமே கலையினரு
மன்னே ரோதித் தாரினரு மாகிக் கண்ணு மனமுமவன்
முன்னே தூது நடப்பதென நடப்ப நடந்தார் முகிழ்முலையார்.

இ-ள். வெளி. தொடி - வளையல். பொன் ஏர் - பொன்னாலாகிய அழகு. அல் நேர் - இருள்போன்ற. (௫௬)

கருங்கு மிடையார் தன்பவனி தொழுது வருவார் தமக்கிரங்கி [மே
மருங்குற் பாரங் கழிப்பான்போற் கலையைக் கவர்ந்தும் வளைந்தோள்
லொருங்கு பாரங் கழிப்பான்போல் வளையைக் கவர்ந்து முள்ளத்து
ளொருங்கு பாரங் கழிப்பான்போ னிறையைக்கவர்ந்து நெறிச்செல்வ...

இ-ள். உக்கிரபாண்டியர், தமது திருவுலாவைத் தரிசிக்கும்படி வருவாராகிய மடவார்பொருட்டுச் சித்தமிரங்கி இடையின் பாரத்தை ஒழிப்பவர்போல மேகலையையும் தோளின் பாரத்தை ஒழிப்பவர்போல வளையலையும் மனத்தின் பாரத்தை ஒழிப்பவர் போலக் கற்பினையும் அபகரித்து வீதியிற் செல்வார்.—எ-று. தொழுது என்னும் பொருவினை தொழவென்றாய்த் தரிசித்தலின் மேலாய்நின்றது. (௫௭)

வான மதிசேர் முடிமறைத்த வழுதி மகனே யிவனென்று
லானை யெருத்திற் சிங்கவிள வடலே றென்ன வயல்வேந்தர்
சேனை தழுவ வரும்பவனிக் கொப்பே தொப்பூர் செப்புங்கால்
யானை மகளை மணந்துவரு மிளையோன் பவனிச் செல்வமே.

இ-ள். இவ்வுக்கிரபாண்டியர், பிறையணிந்த சடைமுடியைமறைத்த சுந்தரபாண்டியருடைய திருக்குமாரரேயானால் யானையின பிடரிலே வலிய இளைய ஆண்சிங்கம்போல அயலரசர் சேனைசூழ வரும்(அவரது) திருவுலாவுக்கு ஒப்பில்லை. (ஒருமுறை) ஒப்புமை கூறும்போது தெய்வயானையம்மையாரைத் திருமணஞ்செய்து வருகின்ற முருகக்கடவுளின் செல்வத்திருவுலா (ஒப்பாகும்).—எ-று. (௫௮)

இம்மை தனிலு நன்மைதரு மீசன் றனையும் வாசவற்கு
வெம்மை தருவன் பழிதவிர்த்த விமலன் றனையு மங்கயற்க
ணம்மை தனையும் பணிந்துமீண் டரசன கோயி லடைந்தீன்றோர்
தம்மை முறையா லடிக்கமலந் தலையிற் பணிந்தான் றனிக்குமரன்.

இ-ள். இகாமீஷ்டப் பிரதேசுவரரையும் இந்திரனுக்குக் கொடியவலிய பழிதீர்த்த சொக்கலிங்கப்பெருமானையும் அங்கயற்கணம்மையாரையும் உக்கிரபாண்டியர், வணங்கித் திரும்பிச் சிறந்த இராஜகிருகத்திற் சேர்ந்து பிதாமாதாக்களையும் பணித்தார்.—எ-று. (௫௯)

ஆறு வாறு சுவையடிசி லயில்வோர் தம்மை யயில்வித்து
நாறு வரிசை வரன்முறையா னல்கி விடையு நல்கிப்பின்
வானு டவர்க்கும் விடைகொடுத்து மதிக்கோ னெழுகி வைகுநாட்
டேனார் கண்ணித் திருமகனுக் கிதனைச் செப்பி யிதுசெய்வான்.

இ-ள். சுந்தரபாண்டியர், நீங்காத ஆறுகிய சுவையுள்ள கறிகளோடு கூடிய அன்னத்தை உண்போரையுண்பித்துச் சம்மானஞ்செய்து விடைகொடுத்துத் தேவர்க்கும் விடையருளிச் செங்கோல் செலுத்தியமருங்கால், தம்முடைய புத்திரருக்கு இதனைக் கூறி இது செய்வார்.—எ-று. ஆறுசுவை - அன்மொழித்தொகை. (௬௦)

மைந்த கேட்டி யிந்திரனுங் கடலு முனக்கு வான்பகையாஞ்
சிந்த மேருத் தருக்கடையுஞ் சதவேள் விக்கோன் முடிசிதற
விந்த வளைகொண் டெறிகடலை யிவ்வேல் விடுதி யிச்செண்டா
லந்தமேரு தனைப் புடையென் றெடுத்துக் கொடுத்தா னவ்மூன்றும.

இ - ள். புத்திரனே கேளாய், இந்திரனும் வருணனும் உனக்குப் பெரிய பகைவராவர். மேருமலைக்கதிபன் செருக்கடைவான். இந்திரன் முடி உடைய இவ்வலயாயுதங்கொண்டு செலுத்துவாயாக, (வருணன்விட்ட) கடலிலே இவ் வேற்படைகொண்டு பிரயோகிப்பாயாக, அம்மேருமலையை இச்சண்டாயுதங்கொண்டு தாக்குவாயாக. என்று அம்மூன்று படைக்கலங்களையும் கொடுத்தருளினர்.—எ-று. வலயாயுதம், திவ்வியமும் சுவர்ணத்தாலாகியதும் மேம்பட்ட காந்தியுடையதும் சித்திரப்பணியுடையதும் பதினாயிரஞ் சூரியர்போன்றதும் இரத்தினங்களால் அலங்கரிக்கப்பெற்றதுமாயுள்ளது என்றும், வேலாயுதம், பிரகாசிக்கின்ற சுவாலைகளுடையதும் அக்கினிபோன்ற நிறமுடையதும் கூரியதும் ஒப்பற்றதுமாகிய நுனியோடு கூடியதும் மந்திரக்கூட்டங்களால் அதிஷ்டிக்கப்பெற்றதுமாயுள்ளது என்றும், சண்டாயுதம, பயஞ்செய்வதும் வணங்கிய முகமுடையதும் காந்தியால் விளங்கியதும் திணணியதும் ஆச்சரியஞ் செய்வதும் அவயவங்கள் அனைத்தும் நீண்டதும் பகைவராற் பாரகக்கூடாததுமாயுள்ளது என்றும் வடநூல் கூறும். (கூ௰)

அன்ன மூன்று படைக்கலமுந் தொழுது வாங்கி யடலேறு
தன்னே ரோரா யெதிர்நிற்குந் தனயன் றனையுக் கிரவழுதி
யென்ன வாதி மறைமுழங்க வியங்க ளேங்க முடிகவித்துத்
தன்ன தாணை யரசுரிமைத் தனிசசெங் கோலுந் தானல்கா.

இ - ள். அப்படைக்கலங்கள் மூன்றையும் வணங்கி வாங்கி ஆண்சிங்கம்போலத் (தஞ்)சந்நிதியிலே நிற்கும் புத்திரனை உக்கிரபாண்டியனே என்றழைத்து வேதமுதலியன முழங்க மகுடஞ்சூட்டித் தமதாஞ்ஞாசத்தியையும அரசாட்சிக்குரிய செங்கோலையுங் கொடுத்தருளி.—எ-று. (கூ௧)

சூட்சி வினையிற் பொன்னனைய சுமதி தன்னைத் தொன்னூலின்
மாட்சி யறிஞர் தமைநோக்கி வம்பி னிவனைக் கணணிமைபோற்
காட்சி பயக்குங் கல்வியுமபோற் காபபீ ரிதுநுங் கடனிம்ம
ணாட்சி யிவன தெனவிளைய வரியே றனையான றனைநல்கா.

இ - ள். ஆலோசனையிலே பிருகஸ்பதிபோன்ற சுமதியையும் பழையநூலாராய்ச்சியிலே மாட்சிமைபெற்ற அறிஞரையும் பாரதது வாருங்கள், இவ்வுக்கிரபாண்டியனைக் கண்ணிமையும் அறிவைத்தருங் கல்வியுமபோல (நீங்கள்) காக்கக்கடவீர் இது உங்களுக்கு முறைமையாம் இப்பூமியைக் காத்தல் இவனுக் குரிமையாமென்று அருளி இளைய ஆண்சிங்கம்போன்ற அவ்வுக்கிரபாண்டியனை (அவர்களிடத்தே) கொடுதது.—எ-று. இடையூறு வருமுன் காக்கவேண்டுதல்பற்றி, கண்ணிமைபோலென்றும், தளர்ந்தவழி உதவவேண்டுதல்பற்றி, கல்விபோலென்றுங கூறினர். (கூ௨)

வேறு.

வெய்யவேற் காளை யன்னான் றன்னையும் வேறு நோக்கி
யையவிவ் வையந் தாங்கி யளித்தன நெடுநா ளிந்த
மெய்யறு மனத்தார் சொல்லும் வாய்மையா றொழுகி நீயுஞ்
செய்யகோன் முறைசெய் தாண்டு திருவொடும் பொலிக வென்றான்.

இ - ள். உக்கிரபாண்டியனையும் தனியே நோக்கி ஐயனே இவ்வுலகத்தை யாம் தாங்கி, நெடுங்காலம் காத்தோம். இசசுமதிமுதலியோர் கூறுகின்ற உண்மை வழி

யொழுகி நீயுஞ் செங்கோல்செலுத்தி ஆண்டு செல்வத்தோடும் விளங்கக்கடவாயெ ன்று ஆசீர்வதித்தருளினர்.—எ-று. (சுச)

பன்னருங் கணங்க ளெல்லாம் பண்டைய வடிவ மாகத்
தன்னருட் டுணையாய் வந்த தடாதகைப் பிராட்டி யோடும்
பொன்னெடுங் கோயில் புக்குப் பொலிந்தன னிச்சை தன்னு
லின்னருட் படிவங் கொள்ளு மீறிலா வின்ப மூர்த்தி.

இ-ள். சிவகணங்களெல்லாம் பழைய வுருக்கொள்ளத் தடாதகைப்பிராட்டியா ரோடும், தமதிச்சைமாத்திரத்தால் அருளுருக்கொள்ளும் நித்தியானந்த சுந்தரபாண்டி யர் சுவர்ணவிமானத்தில் (அமர்ந்த சொக்கலிங்கமூர்த்தியை) அதிஷ்டித்து விளங் கினர்.—எ-று. (சுரு)

கலிவிருத்தம்.

பினை ருக்கிர பெயர் தரித்தவத
தெனனா கோமகன றெய்வ நான்மறை
மன்னு நல்லறம வளர வையகந்
தன்ன தாணையாற் றாங்கி வைகினன்.

இ-ள். பின்பு உக்கிரபாண்டியர் வேதசிவாகமங்களிலே நிலைபெற்ற சிவபுண் ணியங்கள் தழைத்தோங்கும்படி உலகத்தைத் தமதாணைவழியொழுகக் காத்துச் செங் கோல் செலுத்திக்கொண்டிருந்தார்.—எ-று. (சுசு)

உக்கிரபாணடியருக்குவேல்வளைசெண்டுகொடுத்தபடலமுற்றியது.

ஆகச்செய்யுள் - ௧0௬௨.

---

பதின்மூன்றுவது

# கடல்சுவறவேல்விட்டபடலம்.

---

கலிவிருத்தம்.

வளையொடு செண்டுவேன் மைந்தற் கருளும்
பளையவேம் பணிந்தகோ னளித்த வாறிதத்
தளையவிழ் தாரினன் றனயன் வேலைமே
விளையவ னென்னவே லெறிந்த தோதுவாம்.

இ-ள். அழகிய வண்டுகள் மொய்க்கும்படி வேப்பமலர்மாலைபூண்ட சுந்தரபாண் டியர், புத்திரராகிய உக்கிரபாண்டியருக்கு வேல்வளைசெண்டுகொடுத்த திருவிளையாடல் இதுவாம். அவ்வுக்கிரபாண்டியர் (வருணன்விட்ட) கடலின்மேல் முருகக்கடவுள்போல வேற்படையைச் செலுத்திய திருவிளையாடலை (இனியாம்) கூறுவாம்.—எ-று. (க)

திங்களி னுக்கிரச் செழியன் வெண்குடை
யெங்கணு நிழற்றவீற் றிருக்கு நாள்வயிற்
சங்கையில் லாதமா தரும வேள்விகள்
புங்கவர் புடைதழீஇப் போற்ற வாற்றுநாள்.

இ-ள். உக்கிரபாண்டியர், சந்திரன்போல உலகமுற்றும் வெண்கொற்றக்குடை நிழல்செய்யும்படி வீற்றிருக்கும்வழி அளவற்ற பெருந்தருமங்களையும் யாகங்களையும் தேவர்கள் புறம்பேசூழ்ந்து துதிக்கச் செய்கின்ற பொழுது.—எ-று. (௨)

அரும்பரி மகந்தொணூற் றாறு செய்துழிச்
சுரும்பரி னிசைத்தருத் தோன்ற றண்ணுறு
விரும்பரி முரன்றுசூழ் வேம்பி னங்குழைப
பொரும்பரி வீரன்மேற் பொருது பொங்கினான்.

இ-ள். அரிய பரிமேதவேள்வி தொண்ணூற்றாறு செய்தவழி வண்டுகளின் இசையுள்ள பஞ்சதாருக்களின் நிழலில் அமரும் இந்திரன் தண்ணியதேனை விரும்பும் வண்டுகள் ஒலித்துச் சூழ்கின்ற வேம்பின் பூங்கொத்தையும் பொருகின்ற குதிரைப்படையையுமுடைய உக்கிரபாண்டியர்மீது பொறாமையாற் கோபங்கொண்டான்.—எ-று. பரிமேதவேள்வி நூறும் முற்றினால, தனதுபட்டம் விட்டொழியு மென்பதுபற்றி, தோன்றல்பொருதுபொங்கினானென்றார். (௩)

மன்னிய நாடெலாம வளஞ்சு ரந்துவான்
பொன்னிய னாடுபோற் பொலித லாலிந்த
மின்னிய வேலினான் வேள்வி செய்வதென்
றுன்னிய மனத்தனோ சூழ்ச்சி யுன்னினான்.

இ-ள். (கோபங்கொண்ட இந்திரன்) பூவுலகமுழுவதும் தேவுலகம்போலச் செல்வம்பெருகி விளங்குதலாலன்றே இவ்வுக்கிரபாண்டியன் வேள்விசெய்வதென்று கருதிய இருதயமுடையவனாகி ஒரு ஆலோசனை செய்தான்.—எ-று. (௪)

பொருங்கடல் வேந்தனைக் கூவிப் பொள்ளென
விருங்கட லுடுத்தபா ரேழு மூழிநா
ளொருங்கடு வெள்ளமொத் துருத்துப் போய்வளைந்
தருங்கடி மதுரையை யழித்தி யாலென்றான்.

இ-ள். (ஆலோசனைசெய்த இந்திரன் கடையொடு) மோதுங்கடலரசனை அழைத்து, சப்ததீவுகளையுடைய பூலோகமுழுவதும் அழிக் (கள)ழும் ஊழிக்காலப் பெருவெள்ளம்போலக் கோபித்து விரைவாகப்போய்ச் சூழ்ந்து காவலுள்ள மதுரைமாநகரத்தை அழிப்பாயென்று கூறினான்.—எ-று. (௫)

விளைவது தெரிகிலன் வேலை வேந்தனும்
வளவயன் மதுரையை வளைந்திட் டிம்மெனக்
களைவது கருதினான் பேயுங் கண்படை
கொளவரு நனந்தலைக் குருட்டுக் கங்குல்வாய்.

இ-ள். சமுத்திரராஜன் (பின்) வருவதை ஆராயாதவனாகி மதுரைப்பதியைச் சூழ்ந்து விரைவாக அழிக்க நினைத்துப் பேயும் உறங்கும்படி (ஒளியுடைய விழிக்கும்) குருட்டுத்தன்மை யடையவரும் (இருட்டுள்ள) அர்த்தராத்திரியிலே.—எ-று. தெரிகிலன் கருதினன் முற்றெச்சங்கள். (௬)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

கொதித்த லைக்க ரங்க ளண்ட கூட மெங்கு மூடுபோ
யதிர்த்த லைக்க வூழி காலி லார்த்த லைக்கு நீத்தமாய்
மதித்த லத்தை யெட்டி முட்டி வருமொ ரஞ்ச னப்பொருப்
புதித்த லொத்து மண்ணும் விண்ணு முட்க வந்த துததியே.

இ-ள். கடலானது, கோபித்துத் திரைகளாகிய கரங்கள் அண்டகூடங்களை ஊடுருவிச்சென்று முழங்கி அலைக்க, ஊழிக்காலத்தில் முழங்கி அலைக்கின்ற பெருவெள்ளமாய்ச் சந்திரமண்டலத்தை எட்டித் தடவிவரும் ஒரு கரியமலை தோன்றுவதுபோன்று பூவுலகத்தாரும் தேவுலகத்தாரும் அஞ்சும்படி வந்தது.—எ-று. (௭)

வங்க வேலை வெள்ள மாட மதுரை மீது வருசெயல்
கங்குல் வாய திங்கண் மீது காரி வாய காருடல
வெங்கண் வாள ராவி ழுங்க வீழ்வ தொக்கு மலதுகா
ரங்கண் மூட வருவ தொக்கு மலல தேது சொல்வதே.

இ-ள். மரக்கலஞ் (செல்லும்) கடல்வெள்ளம மதுரைப்பதிமேல் வருகை, இரவி(ல் விளங்குத)லுடைய சந்திரன்மேல் விடம்பொருந்திய வாயும் கரியவுடலும் வெவ்விய கண்ணும் உள்ள ஒள்ளியஇராகு விழுங்கும்படி வேகமாய் வருதல்போலாம், அன்றி மேகங்கள் அம்மதுரைநகரை மறைக்கவருதல்போலாம் (இங்ஙனம்)அன்றி யாது கூறுவது.—எ-று. (௮)

வட்ட யாமை பலகை வீசு வாளை வாள்கண் மகரமே
பட்ட யானை பாய்தி ரைப் பரப்பு வாம்ப ரித்திரள்
விட்ட தோணி யிரத மின்ன விரவு தானை யொடுகட
லட்ட மாக வழுதி மேல மர்க்கெ ழுந்த தொக்குமே.

இ-ள். (அன்றி) வட்டமாகிய யாமைகள் கேடகங்களும் எறிகின்ற வாளைமீன்கள் வாள்களும் மகரமீன்கள் நெற்றிப்பட்டமுடைய யானைகளும் வீசும் அலைப்பரப்புகள் தாவுங் குதிரைக்கூட்டங்களும் (செல்ல) விட்ட தோணிகள் இரதங்களுமாகக் கலந்த இப்படிப்பட்ட சேனையொடு கடலானது நேராக உக்கிரபாண்டியர்மீது போர்க்கெழுந்ததுபோலாம்.—எ-று. (௯)

இன்ன வாறெ ழுந்த வேலை மஞ்சு றங்கு மிஞ்சிசூழ்
நன்ன கர்க்கு ணக்கின் வந்து நணுகு மெல்லை யரையிரா
மன்ன வன்க னவின் வெள்ளி மன்ற வாணர் சித்தராய்
முன்னர் வந்தி ருந்த ரும்பு முறுவ ரோன்ற மொழிகுவார்.

இ-ள். இங்ஙனம் எழுந்தகடல், மேகம்படிந்த அரண்சூழ்ந்த மதுரைப்பதியின் கீழ்பால் வந்துசேரும் அர்த்தராத்திரியில், உக்கிரபாண்டியரது சொப்பனத்திலே

வெள்ளியம்பலவாணர். சித்தமூர்த்தியாய் (அப்பாண்டியர்) முன்னே அமர்ந்தருளித் திருப்புன்முறுவல் தோன்ற அருளுவார்.—எ-று. (௧0)

வழுதி யுன்ற னகர ழிக்க வருவ் தாழி வல்லைநீ
யெழுதி போதி வென்றி வேலெ றிந்து வாகை பெறுகெனத்
தொழுத செங்க ரத்தினன் றுதிகரு நாவி னனெழீஇக்
கழுது றங்கு கங்கு லிற்க னவு ணர்ந்து காவலான்.

இ-ள். பாண்டியனே, உனதுநகரத்தை அழிக்கும்பொருட்டுக் கடலானது வருதலால் விரைவாக நீ எழுந்துபோய் வேற்படையைச் செலுத்தி வெற்றிபெறக்கடவாயென்று அருள (உடனே) பாண்டியர் குவித்தகையும் துதித்த நாவுமுடையராய் எழுந்து பேயும் உறங்கும் அர்த்தராத்திரியிலே சொப்பனம ஒழிந்து—எ-று. (௧௧)

கண்ணி றைந்த வமளி யிற்க ழிந்து வாயில பலகடந்
துண்ணி றைந்த மதிய மைச்ச ருடன்வி ரைந்து குறுகியே
மண்ணி றந்த தெனமு ழங்கி வருத ரங்க வாரிகண்
டெண்ணி றந்த வதிச யத்த னாகி நிற்கு மெல்லைவாய.

இ-ள். புஷ்ப சயனத்தினின்றும நீங்கி (அரமனையின்) பலவாயில்களையுங் கடந்து உள்ளத்தில் நிறைந்த அறிவுடைய அமைச்சருடன் விரைவாகப் (புறமபே) போய் உலகம் அழிந்ததென்று சொல்லும்படி முழங்கிவருங் கடலைநோககி ஆச்சரியமுடையவராய் நிற்கின்ற சமயத்தில.—எ-று. (௧௨)

கனவில் வந்த சித்த வேடர் நனவில வந்து காவலோ
னினைவு கண்டு பொழுது தாழ நிற்ப தென்கொ லப்பனே
சினவி வேலை போல வந்த தெவ்வை மான வலிகெட
முனைய வேலெ றிந்து ஞால முடிவு தீர்த்தி யாலென.

இ-ள். சொப்பனத்தில் வந்தருளிய சித்தவேடங்கொண்ட சுந்தரேசர் ஜாக்கிரத்திலும் எழுந்தருளிப் பாண்டியரது கருத்தையுணர்ந்து, ஐயனே நீ காலந்தாழ்க்க நிற்பது என்னை, கோபித்துக் கடல்வடிவமாக வந்த பகையை (அதன்) பெருவலி ஒழியும்படி கூரிய வேற்படையைச் செலுத்தி (வென்று) உலகத்திற்கு வருங்கேட்டை ஒழிப்பாயென்று அருள. எ-று.—கொல் - அசை. (௧௩)

எடுத்த வேல்வ லந்தி ரித்தெ றிந்த வேலை வேன்முனை
மடுத்த வேலை சுஃறெ னவ றந்து மான வலிகெட
வடுத்து வேரி வாகை யின்றி யடிவ ணங்கு தெவ்வராக்
கடுத்த வேல்வ லான்கணைக் காலின் மட்ட தானதே.

இ-ள். (உடனே முன்பு சுந்தரபாண்டியர் கொடுத்தருளிய) அவ்வேற்படையை(க்கையால்) எடுத்து வலமாகச் சுழற்றி வீசியபொழுது (அவ்) வேற்படையினது நுனி தோய்ந்த வளவிலே (கடல்) சுஃறெனவறண்டு, மிககவலிமை கெட்ட வழிச் சமீபித்து வாசமுள்ள வெற்றிமாலையை இழந்து அடிவணங்கும் பகைவர்போன்று, அவ்வேற்படையுடைய உக்கிரபாண்டியரது கணைக்காலின் அளவுடைத்தாகியது.—எ-று. வறண்டு காலின் அளவுடைத்தாகியது என்க. (௧௪)

சந்த வேத வேள்வி யைத்த டுப்ப தன்றி யுலகெலாஞ்
சிந்த வேறு சூழ்ச்சி செய்த தேவர் கோவி னேவலால்
வந்த வேலை வலிய ழிந்த வஞ்ச கர்க்கு நன்றிசெய்
திந்த வேலை வலியி ழப்ப தென்று முள்ள தாதலால்.

இ-ள். பண்ணுடைய வேதவிதிப்படி செய்யும பரிமேதவேள்வி (தனதுபட்டத்துக்கு இடையூறயின அவ்வேள்வி) யைத் தடைசெய்வதன்றி உலகமுற்றும் கெடும்வண்ணம பிறிது ஆலோசனைசெய்த இந்திரனது எவலால் வந்த கடல் வலியிழந்தது (சூரபன்மன் விருத்திரன முதலிய) வஞ்சகராகிய அசுரர்க்கு உதவிசெய்து இந்தக்கடல் எக்காலும் வலிமையை இழததலுடையதாதலால்.—எ-று அழிந்தது என்னுந் நவ்வீறு தொகை (௧௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

புண்ணுடை வேலோ யாதித் தமிழ்ச்சங்கம் புணரி கொள்ள
மண்ணிடைச் சங்க மின்று வைத்தன மகடைச்சங் கந்தான்
கண்ணிடைக் காணக் கங்கைக் கரையினு மென்று சித்தர்
விண்ணிடை யணங்கி னோடு விடையிடை விளங்கி நின்றார்.

இ-ள். வேற்படையுடைய பாண்டியனே, தமிழின்றலைச்சங்கத்தைக் கடல் கொண்டமையால இவ்விடத்தே இப்பொழுது இடைச்சங்கத்தை நிறுத்தினேம் கடைச்சங்கமானது (யாவராலும்) கட்புலனாம்படி (இனிய) கங்காதீரத்தினின்று உண்டாமென்று அருளிச்செய்து சித்தமூர்த்தி ஆகாயத்தின்கண்ணே உமாதேவிசமேதராக இடபத்தின்மீது விளங்கினின்றார்.—எ-று.

இக்கருத்தை வடநூல பதினேழாமத்தியாயம், "ஸங்கஞ்சவிதாஸ்யாமத்ர ஸகலயதீச்வராஃ ॥ யோஸ்யாஸ்ஸங்ஸ்திதஸ்ஸங்கஃ ஸமுத்ரேணஸமாஹ்ருதஃ ॥ ஸ்வயம் ஸங்கஸ்த்ருதீயஸ்து கங்காதீரே பவிஷ்யதி ॥" என்னுஞ் சுலோகங்களிற்காண்க.

இறையனாரகப்பொருள் முதலாவது சூத்திரவுரையில், "தலைச்சங்கம் இடைச்சங்கம் கடைச்சங்கமென மூன்றுசங்கம இரீஇயினார் பாண்டியர்கள், அவருள், தலைச்சங்கமிருந்தார் திரிபுரமெரித்த விரிசடைக்கடவுளும குன்றமெறிந்த முருகவேளும அகத்தியனாரும முரஞ்சியூர்முடிநாகராயரும நிதியின்கிழவனுமென இத்தொடக்கத்தார் நானூற்று நாற்பத்தொன்பதின்மர் என்பது. அவர் நாலாயிரத்து நானூற்று நாற்பதிற்றியாண்டு சங்கமிருந்தாரென்பது. அவர்களைச் சங்கமிரீஇயினார் காய்சினவழுதிமுதலாகக் கடுங்கோனீறாக எண்பத்தொன்பதின்மரென்ப, அவருட் கவியரங்கேறினார் எழுவர் பாண்டியரென்ப, அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கடல்கொள்ளப்பட்ட மதுரையென்ப, அவர்க்குநூல் அகத்தியமென்ப.

இனி இடைச்சங்கமிருந்தார் அகத்தியனாரும தொல்காப்பியனாரும் இருந்தையூர்க் கருங்கோழிமோசியும் வெள்ளூர்க்காப்பியனும் சிறுபாண்டரங்கனும் மதுரையாசிரியன் மாறனும துவரைக்கோமானும் கீரந்தையுமென இத்தொடக்கத்தார் ஐம்பத்தொன்பதின்மரென்ப. அவர்க்குநூல் அகத்தியமும தொல்காப்பியமும மாபுராணமும இசைநுணுக்கமும் பூதபுராணமுமென இவை, அவர் மூவாயிரத் தெழுநூற்றியாண்டு சங்கமிருந்தாரென்ப. அவரைச் சங்கமிரீஇயினார் வெண்டேர்ச்செழியன் முதலாக முடத்திருமாற

னீறாக ஐம்பத்தொன்பதின்மரென்ப; அவருட் கவியரங்கேறினார் ஐவர் பாண்டியரெ ன்ப; அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது கபாடபுரத்தென்பது. அக்காலத்துப்போலும் பாண்டியநாட்டைக் கடல்கொண்டது.

இனிக் கடைச்சங்கமிருந்து தமிழாராய்ந்தார் சிறுமேதாவியாரும் சேந்தம்பூதனாரும் அறிவுடையரனாரும் பெருங்குன்றூர்கிழாரும் இளந்திருமாறனும் மதுரையாசிரியர் நல்லந்துவனாரும் மதுரைக்கணக்காயனார் மகனார் நக்கீரருமென இத்தொடக்கத்தார் நாற்பத்தொன்பதின்மரென்ப. அவர்க்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமுமென்ப; அவர் சங்க மிருந்து தமிழாராய்ந்தது ஆயிரத் தெண்ணூற்றைம்பதிற் றியாண்டென்ப; அவர்களைச்சங்கமிரீஇயினார் கடல்கொள்ளப் பட்டுப் போந்திருந்த முடத்திருமாறன்முதலாக உக்கிரப்பெருவழுதியீறாக நாற்பத்தொன்பதின்மரென்ப, அவர் சங்கமிருந்து தமிழாராய்ந்தது உத்தரமதுரையென்ப; அவருட் கவியரங்கேறினார் மூவர் பாண்டியரென்ப'' என்று கூறியிருப்பதுகாண்க.

கடைச்சங்கந்தான் கங்கைக்கரையினுமென்பது ஐம்பத்தோராவது சங்கப்பலகை தந்த படலத்திற் காண்க. (கசு)

முக்கணும் புயங்க ளொன்கு முளைமதிக் கண்ணி வேய்ந்த
செக்கரஞ் சடையுங் காள கண்டமுந் தெரிந்து தென்னன்
பக்கமே பணிந்தெ ழுந்து பரந்தபே ரன்புந் தானுந்
தக்கவஞ் சலிசெய் தேத்தித் தரைமிசை நடந்து செல்வான்.

இ-ள். (நின்ற சுந்தரேசரது) திரிநேத்திர முதலியவற்றை உக்கிரபாண்டியர் தரிசித்து வணங்கித் துதித்துச் சமீபமாகப் பூமியிலே நடந்து செல்கின்றார்.—எ-று. கண்ணி - அரும்பு. (௧௭)

துந்துபி யைந்து மார்ப்பப் பாரிடந் தொழுது போர்ப்பத்
தந்திர வேத கீதந் ததும்பியெண் டிசையுந் தாக்க
வந்தர நாட ரேத்த வகல்விசும் பாற தாக
வந்துதன் கோயில் புக்கான் வரவுபோக் கிறந்த வள்ளல்.

இ-ள். பிறப்பிறப்பில்லாத சுந்தரேசர் வாத்தியங்கள் முழங்கவும் பூதக்கணம் தொழுது சூழவும் கீதத்தோடுகூடிய வேதங்களும் சிவாகமங்களும் நிறைந்து திக்குகளெங்கும் ஒலிக்கவும் தேவர்கள் துதிக்கவும் ஆகாயவழியாகவந்து தமது திருக்கோயிலிற் புகுந்தருளினார்.—எ-று. (கஅ)

அஞ்சலி முகிழ்த்துச் சேவித் தருகுற வந்த வேந்த
னிஞ்சிசூழ் கோயி லெய்தி யிறைஞ்சினன் விடைகொண் டேகிப்
பஞ்சின்மெல் லடியா ரட்ட மங்கலம் பரிப்ப நோக்கி
மஞ்சிவர் குடுமி மாட மாளிகை புகுந்தான் மன்னோ.

இ-ள். அஞ்சலி குவித்துத் தரிசித்துச் சமீபமாகவந்த உக்கிரபாண்டியர் திருமதில்சூழ்ந்த திருக்கோயிலைச் சேர்ந்து வணங்கி (ச் சுந்தரேசர்மாட்டு) விடைபெற்றுத (திரும்பிச்) சென்று மகளிர் அட்டமங்கலந் தாங்கிவரக் கண்டு மாடமுள்ள அரமனையை அடைந்தனர்.—எ-று. (கக)

வளையெயின் மதுரை மூதூர் மறிகட லிவற்றி னுப்பண்
விளைவய னகர மெல்லாம் வெள்ளியம பலத்து ளாடுந்
தளையவிழ் கொன்றை வேணித் தம்பிரான் றனக்கே சேர்த்துக்
களைகணு யுலகுக் கெல்லா மிருந்தனன் காவல் வேந்தன்.

இ-ள். (அடைந்து) மதுரைப்பதியும் கடலுமாகிய இரண்டின் இடையேயுள்ள கழனிகளுடைய கிராமங்களைச் சுந்தரேசருக்கே சேர்த்து உலகங்களுக்கு ஆதாரமாக(ச் செங்கோல்செலுத்தி அவ்)வுக்கிரபாண்டியர் வீற்றிருந்தார்.—எ-று. (உ0)

கடல்சுவறவேலவிட்டபடலமுற்றியது.

ஆகச்செய்யுள் - கரு௲உ.

---

பதினாலாவது

# இந்திரன்முடிமேல்வளையெறிந்தபடலம்.

---

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மின்னவிர் மணிப்பூண் மார்பன் வேலையை வேலால் வென்று
பொன்னவிர் வாகை வேய்ந்த புகழுரை செய்தே மாக
நன்னக ராளி செம்பொ னகைமுடி சிதற வந்த
மன்னவன் வளைகொண் டோச்சி வென்றதும் வகுத்துச் சொல்வாம்

இ-ள். உக்கிரபாண்டியர் (வருணன்விட்ட) கடலை வேற்படையினால் வென்று பொன்போலவிளங்கும் வாகைமாலைபூணட திருவிளையாடலைக் கூறினோம். அழகிய பொன்னுலகையாளும இந்திரனது விளங்குஞ் செம்பொன்முடி சிதறும்படி அவ்வுக்கிர பாண்டியா சக்கரப்படையைச் செலுத்திவென்ற திருவிளையாடலை (இனியாம்)வகுத்துக் கூறுவாம்.—எ-று. கொண்டு உருபுமயக்கம். (க)

கோமக னிகழு நாளிற் கோணிலை பிழைத்துக் கொண்மூ
மாமழை மறுப்பப் பைங்கூழ் வறந்துபுற் றலைக டீந்து
காமரு நாடு மூன்றுங் கையற வெய்த மன்னர்
தீமது தீரவு நோக்கித் தமிழ்முனி யிருக்கை சார்ந்தார்.

இ-ள். (இங்ஙனம்) உக்கிரபாண்டியர் செங்கோல்செலுத்தியிருக்குங்கால், நவக் கோள்களும் தத்தநிலை தடுமாறுதலால், கரியமேகங்கள் மழைபெய்யாதொழிய அழகிய தமிழ்நாடுமூன்றும் பயிர்கள் தீந்து புல்லின் தலைகளுங்கருகி வறுமைமிக அந்நாட்டு மூவேந்தரும் அவ்வறுமை யொழிதலைக்கருதிப் பொதியமலையை அடைந்தார்.—எ-று. ()

முனிவனை யடைந்து வேந்தர் மூவருந் தங்க ணாட்டிற்
பனிவரு மாரி யின்றி வறந்தமை பகர மேருக்
குனிவரு சிலையார்க் கன்பன் கோணிலை குறித்து நோக்கி
யினிவரு மாரி யில்லை யாதினு லென்று கேண்மின்.

இ-ள். (அடைந்த) மூவேந்தரும் அகஸ்தியமகாமுனிவரைச்சார்ந்து (வணங்கித்) தங்கள் நாட்டிலே மழையின்மையால் வறுமைமிக்கதைச்சொல்ல அம்மகாமுனிவர் இடங்களின் நிலைமையை உற்றுநோக்கி இனி மழைபெய்தல் இல்லை யாதுகாரணத்தாலென்னில் கேளுங்கள்.—எ-று. (ங)

காய்சின வெய்யோன் செய்யோன் முன்செலக் கதிர்கால் வெள்ளித்
தேசிகன் பின்பு சென்று நடக்குமிச் செயலான முந்நீர்த்
தூசின வுலகிற பன்னீ ராண்டுவான் சுருங்கு மென்று
பேசின நூல்கண் மாரி பெய்விப்போற் சென்று கேண்மின்.

இ-ள். மிக்ககோபமுள்ள ஆதித்தன் அங்காரகன் முன்னேசெல்லக் கிரணம் வீசும் சுக்கிரன் அவைகளுக்குப்பின்னே செல்லுதலாலே கடலை ஆடையாகவுடைய உலகத்திலே பன்னிரண்டுவருடம மழையில்லையென்று சோதிடநூலகள் ஓதின (ஆதலால்) மழை பெய்விக்கும் இந்திரனிடததிற்போய்க கேளுஙகள.—எ-று. (ச)

என்றவ னெதிர்யா மெவ்வா றேகுது மென்று ரைந்தும்
வென்றவன் சோம வார விரதநீர் நோற்று வெள்ளி
மன்றவ னருளைப பெறறு வான்வழிச் சென்மி னென்றக்
குன்றவன் சிலையா னேன்பின் விதியினைக் கூறு கின்றான்.

இ-ள். என்று கூறிய முனிவாமுன்னே யாங்கள் எப்படிச்செல்வோம் என்று வினவினார் (அதற்குப்) பஞ்சேந்திரிய நிக்கிரகமுடைய முனிவா நீங்கள் சோமவாரவிரதத்தை அநுட்டித்துத் திருவருள்பெற்று ஆகாயததின்வழியாகச் செல்லுஙகளென்று அச்சிவவிரத விதியைக் கூறத்தொடஙகினார் —எ-று. (ரு)

உத்தம வானோர் தம்மு ளுத்தம னுரு மீச
னுத்தம சத்தி மாரு ளுத்தமி யுருததி ராணி
யுத்தம விரதந் தமமு ளுத்தமந் திங்க ளேன்பெ
னுத்தம மறைநூ லாதி யுரைககுமிச் சோம வாரம்.

இ-ள். உத்தமத்தன்மையுடைய அரிபிரமேந்திராதி தேவாகளுளளே சிவபிரானும் சத்திமார்களுள் உமாதேவியாரும் உததமராவர். விரதங்களுள்ளே சோமவாரவிரதம உத்தமமென்று நூல்கள்கூறும். இச்சோமவாரவிரதம்.—எ-று. (சு)

மந்தரங் காசி யாதிப பதிகளில வதிநது நோற்கத்
தந்திடும் பயனிற் கோடி தழைததிடு மதுரை தன்னி
லந்தநல் விரத நோற்போர்க் கதிகம்பா தென்னிற் சோம
சுந்தர னுரிய வார மாதலாற் சோம வாரம்.

இ-ள். மந்தரமலைமுதலிய க்ஷேத்திரங்களிலே தங்கி அநுட்டிக்கத் தரும் பயனிலும் மதுரைப்பதியில் இவ்விரதத்தை அநுட்டிப்போர்க்குக் கோடிகூறு பயன்பெருகும் (அங்ஙனம்) பெருகுதற்குக்காரணம் யாதெனில், சோமசுந்தரக்கடவுளுக்கு உரியவாரமானது சோமவாரமாதலால்.—எ-று. (எ)

அங்கதி னதிகப் பேறுண டருக்கனின் மதிதோய்க் தொன்றித்
தங்கிய திங்க ளென்பு தகுதியி னேற்க வல்லார்க்
கிங்கதி னதிக நீதி யீட்டிய பொருள்கொண் டாற்று
மங்கல விரதப் பேறென் றனந்தமாய் வளரு மன்றே.

இ-ள். அமைதுறைப்பதியில் அமாவாசியை சமபந்தமாகவந்த சோமவாரத்தில் நியமப்படி விரதம் அநுட்டிக்கததககவாக்கு அச்சாதாரண சோமவாரவிரதத்தினும் அதிகப்பயன் உண்டாம். இப்பதியில நீதிவழியே தேடியபொருளினால் இயற்றும் சுப விரதப்பயன் அவ்வமாவாசியை சம்பந்த சோமவாரவிரதத்தினும அதிகமுடையதாய் ஒன்று பலவாகப்பெருகும்.—எ-று. அன்றே - அசை. (அ)

நலமலி விரத நோற்கத் தொடங்குநா ணவிலவாந் தேளிற்
சிலையினி லாத லன்றி யிரட்டிய நெறிசமுந் தோந்த
மலமதி முதனீத் தேனை மதியிலு முதனைப் பக்கத்
தலாகநி வாரத் தலனு ணயின்றிடா வயலிற றுஞ்சா.

இ-ள் இனி அச்சிவவிரதம் அநுட்டிக்கத்தொடங்குந்தினம் கூறுவாம். விருச்சிகமாசத்திலாவது தநுர்மாசத்திலாவது அன்றி இரண்டு அமாவாசியைவந்த மலமாச முதலிய (குற்றமுள்ளமாசங்களை) ஒழித்து மற்றையமாசங்களிலாவது பூருவபட்சத்திலே ஆதிதநியவாரத்திலே இரவிலே போசனஞ்செய்யாமல் (மனைவிசம்பந்தமின்றி) அயலிடத்து நித்திரைசெய்து —எ-று முதல என்றதனால், குரு, சுக்கிர அஸ்தமயங்களுங்கொள்க. சாந்திரமானமாசத்தில் எந்தமாசமோ அந்தமாசமுதலாவது சோமவாரத்தில் விரதம் அநுட்டிக்கததொடங்கவேண்டும். சிவராத்திரிவிரதம் சௌரமானமாசத்தில் அநுட்டிக்கவேண்டும். இஙஙனம் வடமொழிகூறும். உம்-அசை. செய்யாவென்னும் வாய்பாடுகளில் முன்னது எதிர்மறை பின்னது உடம்பாடு. என்பது "வ்ருச்சிகே தநுஷிவா..." என்னுஞ் சுலோகத்தாலுணர்க. (கூ)

வைகறை யெழுந்து சேற்கண் மணாளனை யுள்கி யற்றைச்
செய்கட னிறீஇக்கா மாதி சிந்தைநீத் தலாபொற் கஞ்சப்
பொய்கையை யடைந்து கையிற் பவித்திரம புனைந்து வாக்கு
மெய்கருத் தொருப்பா டெய்தச் சங்கற்பம விதந்து கூறி.

இ-ள். விடிய ஐந்துநாழிகையிருக்கும்பொழுது (நித்திரைநீங்கி) எழுந்து சோம சுந்தரேசரைத தியானித்து நித்தியகன்மஙகளை நிறைவேற்றிக் காமமுதலியவற்றைக் கருதாது பொற்றாமரைவாவியை அடைந்து கையிலே பவித்திரந்தரித்து முக்கரணங்களும் ஒற்றுமைப்படும்படி சங்கற்பஞ் சிறப்பித்துச்சொல்லி.—எ-று. (௧௦)

கடம்படி முளைத்த முக்கட் கரும்பினை நினைந்து ஞாலத்
திடமபடு தீர்த்த மெலலா மாடிய பயனை யீண்டுத
திடம்படத் தருதி யென்னுத் திரைத்தடம் படிந்து வெண்ணீ
றுடம்பணிந் தக்க மாலை யொளிபெற விதியாற் றாங்கி.

இ-ள். கடம்பவனேசுரரைக்கருதி (விபூதி, வில்வமரத்தடிமண், கோமயம், எள்ளு, தருப்பை இவைகளைத்துஞ் சிரசில்வைத்துக் கேசங்களில் மேகங்களும் சர்வாங்

கங்களிலும் நதிகளும் வயிற்றிலே சப்தசாகரங்களுமுடைய ஜலவடிவ வருணன் பொருட்டு வந்தனம் என்று வைதிகமந்திரங்களை உச்சரித்து)த்தீர்த்தங்கள் அனைத்தினும் மூழ்கிய பயனை இங்கே நிச்சயமாகத் தரக்கடவதென்று அத்தீர்த்தத்திலே ஸ்நானஞ் செய்து விபூதிருத்ராக்ஷங்களை விதிப்படிதரித்து.—எ-று. சிவதீக்ஷைபெற்றவர் சிவாகமமந்திரங்களை உச்சரிக்கக்கடவர். வருவித்தல் வடமொழிநோக்கி. (கக)

வெள்ளைமந் தார முல்லை மல்லிகை வெடிவாய்ச் சாதி
கள்ளவிழ் மயிலையாதி வெண்மலர் கவர்ந்து வேழப்
பிள்ளையை முந்தப் பூசித் திரந்துசங் கற்பம் பேசி
யுள்ளணைந் துச்சி மேற்பன் னிருவிர லுயர்ச்சிக் கும்பர்.

இ-ள். மந்தாரமலர்முதலிய வெண்மலர்கள்கொய்து சித்திவிநாயகமூர்த்தியை முதலிலேபூசித்துப் பிரார்த்தித்து (விரதம் இனிது முடியவேண்டுமென்னுஞ்) சங்கற்பங்களைச்சொலலித் திருக்கோயிலினுள்ளே சென்று உசசிக்குமேலுள்ள துவாதசாந்த ஸ்தானத்துக்குமேலே.—எ-று. மயிலை - இருவாட்சி. (கஉ)

சத்திய ஞான னந்த தத்துவந் தன்னை யுள்கி
வைத்ததன் வடிவங் கொண்டு மண்முதற் சிவமீ றான
வத்துவ விலிங்கந் தன்னை யாசன மூர்த்தி மூல
வித்தைமற் றாலு நூலின் விதியினாற பூசை செய்க.

இ-ள். சச்சிதாநந்தப் பிழம்பாகிய சிவபெருமானைத் தியாநித்து அகப்பூஜை செய்து அச்சிவரூபமாயிருந்துகொண்டு பிருதிவிமுதல் நாதமீறாகிய தத்துவாத்துவாவின் வடிவமான சொக்கலிங்கப்பெருமானை ஆசனமூர்த்தி மூலமுதலிய மந்திரங்களாலே சிவாகமவிதிப்படி புறப்பூஜை செய்யக்கடவர்.—எ-று. பஞ்சசுத்தி சிவபூஜைக்கு அங்கமாதலின், அகப்பூஜையாகிய ஆன்மசுத்திக்குமுன் தானசுத்தி திரவியசுத்தி கொள்க; சிவரூபமாயிருத்தல் மந்திரசுத்தியாம். பின்பு இலிங்கசுத்திசெய்து பீடத்திலே சிவாசனம்பூசித்து அதன்மேல் இலிங்கத்திலே வித்தியாதேகமாகிய மூர்த்தியை நியாசஞ் செய்து சிவபிரானாகிய மூர்த்திமானைச் சிவமூலத்தால் அவ்வித்தியாதேகத்தில ஆவாகித்து முறையே புறப்பூசைசெய்வதாம. சிவலிங்கம் தத்துவரூபமானது வேதத்துக்குப் பொருளருளிச்செய்தபடலம் ௬உஞ்செய்யுளிற் காணக. (கங)

ஐந்தமு தாவி னைந்து நறுங்கனி யைந்து செந்தேன்
சந்தன தோயம் புட்பத் தண்புனன் மணிநீ ராட்டிச்
சுந்தர வெணபட் டாடை கருப்புரச் சுணணஞ் சாந்தங்
கந்தமல் லிகைமுன் னான வெண்மலர்க் கணணி சாத்தி.

இ-ள். பஞ்சகவ்வியம் பஞ்சாமிர்தம் ஐங்கனி தேன் சந்தனக்குழம்பு மலர் பெய்த தண்ணியநீர் சுத்தஜலம் இவைகள் அபிடேகித்து (த்திருவொற்றாடைசாத்தி) வெள்ளியபட்டுப்பரிவட்டம் பச்சைக்கர்ப்பூரச்சுண்ணம் சந்தனம் மல்லிகைமுதலிய வெண்மலர்களாலாகிய இண்டைமுதலியனவுஞ் சாத்தி.—எ-று. (கச)

காசணி பொலம்பூண் சாத்திக் கனைகழ லர்தி யங்க
பூசனை செய்து சேறகட் பூரண பனாயை யவ்வா
றீசனைந் தெழுத்தைப் பெண்பாற் கிசையவுச் சரித்துப் பூசித்
தாசறு சுரபித் தீம்பா லட்டவின் னமுதி னோடும்.

இ - ள். இரத்தினம் அழுத்திய பொன்னணிசாத்தி ஒலிக்கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிமுதலாகிய அவயவங்களிலே பூசித்து, கயலைபோலுங் கண்ணுடைய சிவ சத்தியையும் அவ்வாறே சிவபிரானுக்குரிய திருவைந்தெழுத்தை அச்சிவசத்திக்கு இணங்க உச்சரித்துப் பூசித்துப் பசுப்பாலொடு கலந்துசமைத்ததிருவமுதோடும்.—எ-று. சிவசத்திபூசையை முதலிற் செய்யும்படி வடமொழிகூறும், சத்திப்பிரதானஸ்தல மாதலின். (கரு)

பண்ணிய வகைபா னீய நிவேதனம் பண்ணி வாச
நண்ணிய வடைக்காய நலகி நறுவிரைத தூபம் தீப
மெண்ணிய வகையாற் கோட்டிக் கண்ணடி யேனை மற்றும்
புண்ணியன் றிருமுன் காட்டி வில்வத்தாற் பூசை செய்தல.

இ - ள். பலகாரவகைகளும் ஜலமும் மணமுள்ள தாம்பூலமும நிவேதித்து, தூப தீபங்கள வளைத்துக் கண்ணடிமுதலியனவுங் காட்டி வில்வததாற் பூசைசெயக.—எ-று.)

புரகர னிச்சா ஞானக் கிரியையாய்ப போந்த வில்வ
மரமுத லடைந்து மூன்று வைகலூ ணுறககமின்றி
யரகர முழக்கஞ் செய்வோ ரைமபெரும் பாதகங்கள்
விரகில்செய் கொலைக ளறு மாதலால் விசேடம் வில்வம்.

இ - ள். முப்புரதகனரது இச்சாஞானக்கிரியாரூபமாயுள்ள வில்வவிருட்ச மூலத்தைச்சார்ந்து மூன்றுதினம் உண்ணுதல உறக்குதலின்றி அரகரவென்று முழக்கஞ் செய்வோர் (புததி பூரவமாகச்செயத) பஞ்சமகாபாதகஙகளும் அபுத்திபூர்வமாகச் செய்த கொலைப்பாவஙகளும் ஒழியுமாதலால் வில்வஞ் சிறப்புடையதாம்.—எ-று. (கஎ)

மடங்கிதழ் கருங்கல வாடி யுலர்நதது மயிர்ச்சிக் குண்டன்
முடங்குகாற் சிலமபிக் கூடு புழுக்கடி முதல வான
வடங்கலுங் குற்ற மேயா முத்தம மாகும் வில்வந
தடங்கைகொண் டீச ஞம மாயிரஞ் சாறறிச் சாத்தல்.

இ - ள். இதழ் மடங்கிச்சுருஙகுதல் முதலாயின வனைத்துங் குற்றமேயாம் (ஆதலால்) குற்றமற்ற வில்வதளததைச சிவசகஸ்ரநாமங்களை யுச்சரித்துக் கைகளால் அருச்சிக்கக்கடவர்.—எ-று. உலர்த்தியதும் பழையதுமான வில்வதளங் குற்றமற்ற தாயின் அர்ச்சிக்கலாமென்றும், மரணகாலத்தில் வில்வமரததடிமண்ணை உடலமுற்றும் பூசிக்கொண்டு மரிப்பவர் முததியடைவாரெனறும், சிவநிர்மாலியந்தரிப்பவர் இராஜசூய யாகஞ்செய்த பலனும் சிவஞானமும் புத்திமுத்திகளும் அடைவாரென்றும், சிவாபிடேக தீர்த்தம் பருகினல் மகாபாவங்கள் நீங்குமென்றும் வடமொழிகூறும். (கஅ)

அடியனேன் செய்யுங் குற்ற மன்றைக்கன் றநந்த மாகுங்
கொடியனஞ் சமுதாக் கொண்டாய் குற்றமுங் குணமாக் கொண்டு
படியெழு தரிய மங்கை பங்கனே காத்தி யென்று
முடியுற வடியில் வீழ்ந்து மும்முறை வலஞ்செய் தேத்தி.

இ - ள். வெளி. படி - ஒப்பு. (கக)

வன்மனங் கரைய நின்று வேண்டிய வரங்கள் வேண்ட
நன்மனைப் பேறு மக்கட் பேறுநல் வாக்குக் கலவி
பொன்மனக் கினிய போகந் தெவ்வரைப் புறகு காண்ட
லிம்மையி லரசு மற்று மெண்ணியாங் கெய்து மன்றே

இ-ள். வெளி. மனத்துக்கினிய, அத்துசசாரியை தொகை-தெவ்வர், பகைவர்.()

ஆதியிவ் விலிங்கந் தீண்டற் கருகரல லாத வேத
வோதியா முதலோ ரிட்ட விலிங்கத்திவ் விதியா லர்ச்சித்
தோதிய விரத நோற்க வர்ச்சனைக் குரிய ரலலாச்
சாதியா விரத நோற்கத் தக்கவ ரலல ரன்றே

இ-ள். முதன்மைபெற்ற (பரார்த்த மூர்த்தியாகிய) இச்சோமசுலிங்கப்பெருமானைப் பரிசித்தற்கு உரியரல்லாத வைதிகபிராமணர் முதலாகிய வருணத்தவா ஆன்மார்த்தலிங்கத்தில இவ்விதிப்படி பூஜித்து இந்தச்சோமவாரவிரதம் அநுட்டிக்கக்கடவா. ஆன்மார்த்தபூஜைக்கு உரியரல்லாதசாதியர் சிவவிரதம் அநுட்டிக்கத் தகுதியுடையவரல்லர்.—எ-று. (உக)

எழுசீரடியாசிரியவிருத்தம்

பொருவிலிவ் விரத மைவகைத் தசிப போதிலூ ணிரவிலூ ணிரண்டு
மொருவுத லுறங்கா திருத்தலர்ச் சனைநால யாமமு முஞற்றுத லென்னக்
கருதினிவ் வைந்து மொன்றனுக் கொன்று கழியவு மதிகமா நோற்கும்
வருடமொன் றிரண்டு மூன்றுபன னிரண்டு வருடமவாழ் நாளள விவற்றுள்.

இ-ள். ஒப்பற்ற இவ்விரதம் உச்சிக்காலத்தில உண்ணுதல, இராக்காலத்தில் உண்ணுதல், உபவாசமாயிருத்தல், உறங்காதிருத்தல, நான்குயாமமுஞ் சிவபூசைசெய்தல் என ஐவகையுடையது ; இவ்வைந்தும் ஒன்றினுக்கு ஒன்று உயரும்; விரதம் அநுட்டிக்கும் வருடம் ஒன்றுமுதல் உடலுள்ள வளவுமாம். இவைகளுள்.—எ-று. (உஉ)

உடலள வெண்ணி நோற்பவர்க் குத்தி யாபன மிலைமுத்தி யுறுவர்
கடமையவ் வருடக் கட்டளைக் கிறுதி கழிப்பதுத் தாபன விதிதான்
மடலவிழ் மாலை மண்டபங் குண்ட மண்டலம வகுத்துமா பதியைப்
படரொளி வெள்ளி முப்பது கழஞ்சிற் படிமையா னிருமிதஞ் செய்து.

இ-ள். உடலுளளவரை விரதம் அநுட்டிப்பவர்க்கு உத்தியாபனம் இல்லையாம் (அது நிட்காமியமாதலால்) முத்தியடைவர். வருடத்தின் அளவாக விரதம் அநுட்டிப்பவர்க்கு முடிவிலே உத்தியாபனஞ்செய்வது முறைமையாம (அது சகாமியமாதலால் எண்ணியபோகங்கள் அடைவா) அவ்வுத்தியாபன விதியாவது, மண்டபமுதலியன வகுத்துச் சிவபிரான் (சிவசத்தி) திருவுருவை முப்பதுகழஞ்சு அளவின் வெள்ளியால் நிருமித்து.—எ-று.

மண்டபம் ஒன்பதுமுழ அகல நீளங்களுடையதும் பதினறுகாலுடையதும் நான்குவாயிலுடையதுமாக அமைத்து, மத்தியில் ஒரு வேதிகைபோட்டு விதானமுதலியவற்றால அலங்கரித்து அம்மண்டபத்தின் கிழக்குத்திசையிலாவது ஈசான்திசையிலாவது ஓமகுண்டம் வட்டமாகவாதல் சதுரமாகவாதல் மூன்று மேகலையோடு கூடின

தாகச் செய்கவென்றும், சுவாமிதிருவுரு, சந்திரன்றரித்தமுடியும், முக்கண்களும், மான்மழு அபயவரதங்களுடைய நாற்கரங்களும் உடையதாகவும், இடப்பாகத்தில் அம்மைதிருவுரு, செங்கழுநீர்மலரேந்தியகரமும் விரித்தகரமுமாக இரண்டுடையதாகவும், ஓராசனத்தில் அவ்விருதிருவுருவம் அமைக்கவேண்டுமென்றும், முப்பதுகழஞ்சு உத்தமம், இருபதுகழஞ்சு மத்திமம், பத்துக்கழஞ்சு அதமமென்றும், அவ்வேதிகையில் நெல், அரிசி, உளுந்து, எள் இவைகளைப்பரப்பிக் கங்காஜலம் பூரித்த கும்பமும் சுவாமி அம்மை திருவுருவம் வைத்துப் பூசிக்கவென்றும் வடநூல்கூறும். (உங)

காலையி லாசார செபவழி நிகழ்த்துக் கடன்முடித் தருச்சித்தொட் டந்தி
மாலையி னளவும் புராணநூல் கேட்டு மாலைநெட் டியாமமோர் நான்கும்
சேலன கண்ணாள் பங்கனைப் பூசை செய்யவப் பூசனை முடிவில்
மூலமந் திரநூற் றெட்டுறா மாறு முறையினா லாகுதி முடித்தல்.

இ-ள். வெளி. முதலாவது யாமத்தில் பொங்கல், இரண்டாவது யாமத்திற் சர்க்கரையும், மூன்றாவது யாமத்தில் எள்ளோரையும், நாலாவது யாமத்திற் பாயசமும், காலையில் நெய்யொடு அன்னமும் ஆகுதிசெய்கவென்றும், சப்தகோடி மகாமந்திரங்களும் மூலமந்திரமாகிய பஞ்சாக்கரத்தினைப் பதினாறில் ஒருகலையினும் சமத்துவம் அடையமாட்டாவென்றும் வடநூல்கூறும். (உச)

வில்லமா யிரங்கொண் டாயிர நாமம் விளம்பிநால் யாமமுஞ் சாத்த
னல்லவைந் தெழுத்தா லெழுத்துருவி லுத்தனுக் கருக்கியங் கொடுத்த
லெல்லையின் மூல மந்திரத் தாலு மேனைமந் திரங்களி னாலும்
வில்லழ லோம்பிப் பூரணா குதிசெய் திறுவாய் வேள்வியை முடித்தல்.

இ-ள். வெளி. ஏனைமந்திரங்கள்-திரியம்பகமந்திரம் கௌரிமந்திரமுதலியன. வில்அழல் - விளங்கும் அக்கினி. (உரு)

புலர்ந்தபின் னித்த வினைமுடித் தாமமைப் பொதுளுமப் பிலேபத்தின் மூன்றி
னலந்தரு தூவெள் ளரிசிபெய் தினிய நறியநாய் கறியொடு பரப்பி
யலந்தர வான்பா னிறைகுடம் பதின்மூன் றரிசிமேல் வைத்தர னடியிற்
கலந்தவன் பினராய்ச் சிவார்ச்சனைக் குரிய கடவுளவே தியர்களை வரித்து.

இ-ள். வெளி. புலர்தல்-விடிதல். பொதுளல்-நெருங்கல். அலம்தர - அமைவுபெற. வரித்தல்-நியமித்தல். (உசு)

காதணி கலனுங் கையணி கலனுங் கவின்பெற வளித்தா ளுக
வாதரம் பெருக நினைந்தருச் சனைசெய் தரியதக் கிணையொடும் பாதப்
போதணி காப்பு விசிறிதண் கவிகை பூந்துகின் முதற்பல வுடனே
மேதகு தானஞ் செய்துபின் குருவைக் கற்புடை மின்னிடை யோடும்

இ-ள். வெளி. காதணிகலன்-செவியிலணிகின்ற குண்டலம். கையணிகலன்-கையிலணிகின்ற காப்பு. ஆதரம்-அன்பு. அரிய-பெரிய. பாதப்போதணி காப்பு-பாதுகை. பலவுடன்-பலவற்றோடு. (உஎ)

ஆசனத் திருத்திப் பொலந்துகில் காதுக் கணிகள்கைக் கணிகளு மணிந்து
வாசகன் மலரிட் டருச்சனை செய்து மலைமக டலைவனை வரைந்து
பூசனை செய்த படிமையோ டம்பொன் பூதலம் பதாதிகள் பிறவுந்
தூசலர் மாலை கோட்டணி புனைந்த சுரபிமா தானமுஞ் செய்து.

இ-ள். வெளி. பொலந்துகில்-பீதாம்பரம். பதாதிகள். ஏவலாளர்கள. சுரபி-பசு.

இனையவா றுத்தா பனமுடித் தாசா னேவலாற சிவனடிக் கன்பர்
தனயரோ டொக்க லுடனமு தருந்த றகுதியிவ் விரதமுன் கண்ண
ணனையதா மனையோ னிந்திரன் முதல்வா னுடவர் மூவரு கணத்தோ
ரனைவரு நோற்றார் மனிதரு மனுட்டித் தருமபெறற் போகம்வீ டடைந்தார்.

இ-ள். வெளி. ஒக்கல்-சுற்றம். நனைய-தேனையுடைய. உததியாபனம பொரு ணிலைக்கேற்பவும், விரதம் யாக்கைநிலைக்கேற்பவுஞ் செயகவென வடநூல்கூறும். (உகூ)

ஈதுநோற் பவர்வெம் பகைமனத் துயர்தீர்ந் தாயிரம் பிறவியி லியற்றுந்
தீதுசேர் வினைதீர்ந் தெடுத்தயாக் கையினிற் சிவகதி யடைவரிவ் விரத
மோதினோர் கேட்டோர் மனைவியர் மகக ளொக்கலோ டினிதுவாழ்ந தும்பர்
மேதகு பதினு லிந்திரன் பதத்தில் வீற்றினி திருபபரென் றறவோன்.

இ-ள். வெளி. உபலக்கணத்தால் நோய், அவமிருத்து, ஆபத்துமுதலியன தீர்ந் தென்பதுங்கொள்க. அறவோன் - அகஸ்தியமகாமுநிவர். (௬0)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

சொல்லிய நெறியாற் சோம சுந்தரன் விரத நோற்பான்
வில்லிடு மணிப்பூண் வேந்நர் முனிவனை விடைகொண் டேகி
யல்லியங் கனக கஞ்சத் தாடியங கயற்கண் வல்லி
புல்லிய பாகன் றன்னை வழிபடீஇப் போற்றி நோற்றார்.

இ-ள். கூறியமுறையால் அம்மூவேந்தரும் அச்சிவவிரதத்தை அநுட்ட பொருட்டு அம்முநிவரர்மாட்டு விடைபெற்றுச்சென்று (மதுரைப்பதிசேர்ந்து) சுவர்ண புஷ்கரணியிலே ஸ்நானஞ்செய்து (மீனாக்ஷிதேவியாரையும்) சுந்தரேசுவரரையும் வணங் கித்துதித்து (விரதத்தை) அநுட்டித்தார்.—எ-று. (௬௧)

சுந்தரன் றன்னைப் பூசைத் தொழில்செய்து வரம்பெற் றேகி
யந்தரத் தாறு செல்வா ரஃதறிந் தமரர் வேந்தன்
வந்தவ ரிருக்க வேறு மடங்கன்மான் றவிசு மூன்று
தந்திடப் பணித்தா னிட்டார் றனதரி யணையிற் றாழ.

இ-ள். (பின்பு அவ்வேந்தர்மூவரும் ஆலயமுற்றும் சுவர்ணவிமானமுஞ் சுத் தப்படுத்திச்) சிறப்பாகப் பூஜைநடாத்திச் சுந்தரேசரை (ப்பிரார்த்தித்துநின்றபொழுது அசரீரிவாக்கால்) விடைபெற்றுச்சென்று ஆகாயவழியாகச் சுவர்க்கத்திற்குச் செல்லு வாராயினர். அதனையுணர்ந்த தேவேந்திரன், அவ்வரசர் மூவரும்வந்து இருக்கும்படி தனது சிங்காசனத்திற்குத்தாழ வேறு மூன்று சிங்காசனம் இடும்படி அநுமதிசெய்தான் ஏவலாளர் அங்ஙனம்) இட்டார்.—எ-று. அணையில் உருபுமயக்கம். (௬உ)

மன்வழி வந்த மூன்று மன்னரும் பொன்னா டெய்தி
மீன்வழி குலிச வைவே லும்பர்கோன் மருங்கிற் புக்கார்
தேன்வழி போந்தின் கண்ணிச் சேரனு மார்த்தார் வேந்துங்
கான்வழி தாரு நாடன் காட்டிய தவிசின் வைக.

இ-ள். அம்மூவேந்தரும் விண்ணுலகுசேர்ந்து இந்திரன் அருகே சார்ந்தார் பனம்பூமாலைபூண்ட சேரனும் ஆத்திமாலைபூண்ட சோழனும் இந்திரன் சுட்டிக் காட்டிய ஆசனத்தில் இருக்க—எ-று. குலிசம்-வச்சிரம். கான்வழிதாரு - வாசம்வீசுங் கற்பதரு. (கங)

பைங்கடல் வறப்ப வென்ற வாகைவேற் செழியன் மோலிச்
செக்கர்மா மணிவிற் காலத் தேவர்கோ னரிவி ணேறி
யொக்கவீற் றிருந்தா னாக வும்பர்கோ னழுக்கா றெய்திப்
பக்கமே யிருந்த வேனைப் பார்த்திவர் முகத்தைப் பாரா.

இ-ள். கடலைவற்ற வேலைவிட்ட உக்கிரபாண்டியர் மகுடமணி பிரகாசிக்கும் வண்ணம் இந்திரனது ஆசனத்திலே ஏறி (அவனோடு) சமமாகவிருந்தார். (உடனே) இந்திரன் பொறாமைகொண்டு மற்றைய அரசர்கள் முகத்தைநோக்கி.—எ-று. (கச)

முகமனன் கியம்பி நீவிர் வந்ததென் மொழிமி னென்ன
மகபதி யெங்க ணாட்டின் மழைமறுத் ததனை நந்தே மென்றா
ரகமலர்ந் தனையர் நாட்டி னளவுற வான்சு ரக்க நல்கி
நகைமணிக் கலன்பொன் னாடை நல்கிநீர் போமி னென்றான்.

இ-ள். உபசாரவார்த்தைமிகக்கூறி நீங்கள் வந்தகாரணம்யாது கூறுமினென்று கேட்க (அதற்கு அவ்வரசர்கள்) தேவராஜாவே எமகள் தேசங்களிலே மழையின்மையால் வந்தோமென்றார்கள். (அதற்கு இந்திரன்) மகிழ்ந்து அச்சேரசோழர் நாடுகளின்மாத்திரம் மழைபெய்யும்படி அநுமதிசெய்து (அவ்வரசர்களுக்கு) சம்மானங்கொடுத்து நீங்கள் செல்லுங்களென்றான்.—எ-று. (கரு)

அன்னவ ரகன்ற பின்னை யமரர்கோன் கன்னி நாடன்
றன்னரி யணைமே லொக்கத் தருக்கினோ டிருக்கு மாறும்
பின்னரு மாரி வேண்டாப் பெருமித வீறு நோக்கி
யின்னது புலப்ப டாமை யினையதோர் வினைய முன்னா.

இ-ள். அவ்வரசர் நீங்கியபின் இந்திரன், தனதாசனத்திலே தன்னோடு உக்கிர பாண்டியர் தருக்கோடு இருக்குமாறும் பின்பும் (தன்நாட்டுக்கு) மழையை வேண்டாம லிருக்கும் மிக்கசெருக்கும்நோக்கிச் செய்யத்தக்கது இதுவென்று வெளியாகாமல் இப் படிப்பட்டதோர் ஆலோசனைசெய்து.—எ-று. (கசு)

பொற்புற வரிசை செய்வான் போலள விறந்தோர் தாங்கி
வெற்புறழ் திணிதோ ளாற்றன் மெலிவதோ ராரந் தன்னை
யிற்புற வளித்தான் வாங்கி யலமருந் தார்போ லீசன்
கற்புடை யுமையாண் மைந்தன் கந்தரமெனக் கழுத்தி லிட்டான்.

இ-ள். அழகுபெறச் சம்மானஞ்செய்பவனைபோல அநேகர் தாங்கி (வந்த) மலை போலுந் திண்ணிய புயவலிகெடுதற்கு ஏதுவாகிய ஒரு முத்துமாலையை விருப்பமுற்றுக் கொடுத்தான் உக்கிரபாண்டியர் (அதனை) வாங்கி மலர்மாலைபோல விரைவாகக் கழுத்திலே அணிந்துகொண்டார்.—எ-று. (கூஎ)

கண்டனன் கடவு ளுதன் கழியவு மிறும்பூ துள்ளங்
கொண்டன னின்று தொட்டுக் குரையளி துழாவு நிம்பத்
தண்டமை மார்ப வார தாங்குபாண் டியனென் றுனை
மண்டல மதிக்க வென்றான் வானநா டுடைய மன்னன்

இ-ள். (அணிந்ததை) இந்திரன்கண்டு மிக்க அதிசயமடைந்து உக்கிரபாண்டியரே இன்றுமுதல ஆரந்தாங்குபாண்டியரென்று உம்மை உலகமதிக்கத்தக்கதென்றான்.—எ-று. கடவுளுதன மன்னனெனக்கூட்டுக. குரைத்தல் - ஒலித்தல். (கூஅ)

அஃ தது சிறிது மெண்ணா தங்குநின் றிழிந்து தென்னன்
றன்னக ரடைந்தா னிப்பாற் சதமக னாணை யாலம்
மன்னவ ரிருவர் நாடு மழைவளம் பெருகப் பெய்த
தென்னவ னாடு பண்டைச் செயலதா யிருந்த தன்றே.

இ-ள். உக்கிரபாண்டியர் அப்புகழ்ச்சியைச் சிறிதுமகருதாது அவ்வாசனத்தினின்றும் இறங்கித் தமது மதுரைப்பதியை அடைந்தார். மேல் இந்திரனது ஆஞ்ஞையால அச்சேரசோழர் நாடுகளிலே வளம்பெருகும்படி மழைகள்பொழிந்தன. பாண்டிநாடு பழையபடி மழையொழிந்திருந்தது.—எ-று. (கூகூ)

ஆயதோர் வைகல் வேட்டை யாடுவா னண்ணல விண்ணந்
தாயதோர் பொதியக் குன்றிற் சந்தனச் சார னண்ணி
மேயதோ லரிமா னேனம் வேங்கையெண் கிரலை யினன்
றீயதோர் விலங்கு வேட்டஞ் செய்துயிர் செகுக்கு மெல்லை.

இ-ள். அங்ஙனம் மழையொழிந்திருக்குங்கால் உக்கிரபாண்டியர் வேட்டையாடும் பொருட்டு மலயாசலத்திலே சந்தனமரச்சாரலைச்சார்ந்து (அங்கே) பொருந்திய யானை சிங்கம் பன்றி புலி கரடி மான்முதலிய கொடிய மிருகங்களின் வேட்டையாடி அவற்றினுயிர்களைக் கொல்லுங்கால்.—எ-று. (சo)

பொன்றரத்து மருவிக் குன்றிற் புட்கலா வருத்த மாதி
மின்றரத்து மேக நான்கும வீழ்ந்தன மேயக் கண்டு
குன்றத்தி னெடிய திண்டோட் கொற்றவ னவற்றைப் பற்றிக்
கன்றத்தின களிறு போலக் கடுந்தளை சிக்க யாத்தான்.

இ-ள். பொன்னை (வாரிக்கொண்டு) தாவும் அருவிகளுடைய அம்மலையிலே புட்கலாவர்த்தமுதலிய மினவீசும் மேகங்கள் நான்கும படிந்து மேயப்பார்த்து உக்கிரபாண்டியர் அவைகளைப்பிடித்து வருந்தும்படி யானைபோலக் கொடியவிலங்கில அகப்படக் கட்டி —எ-று. புட்கலாவருத்தமாதி - புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி என்பன; இவைமுறையே பொன், பூ, மண், கல் என்பவை பொழிவன. யாத்தான் முற்றெச்சம். (சக)

வேட்டத்திற் பட்ட செங்கண் வேழம்போற் கொண்டு போகிக்
கோட்டத்தி லிட்டா னாகக் குன்றிற கரிந்த வென்றி
நாட்டத்துப் படிவத் தண்டன் நாடன்மற் றதனைக் கேட்டுக்
காட்டத்துக் கனலபோற் சீறிக் கடுஞ்சமர் குறித்துச் செல்வான்.

இ-ள். வேட்டையில் அகப்பட்ட யானைபோலக் கொண்டுசென்று சிறைக்களத்தில் இட, இந்திரன் அச்செய்தியைக்கேள்வியுற்று விறகிற்பற்றிய நெருப்புப்போற் கோபித்துக் கொடியபோர்செய்யக்கருதிச் செல்கின்றான்.—எ-று. வென்றியையும் உடலத்திற் கண்களையுமுடைய தேவநாடனென்க. (சஉ)

வாங்குநீர் வறப்ப வேலை விடுத்ததும் வலிய வாரந்
தாங்கிய செருக்குங் காரைத் தளையிடு தருக்கு நோக்கி
யீங்கொரு மனித யாக்கைக் கித்துணை வலியா தென்று
வீங்கிய மான மூக்க மீனவன் மதுரை சூழ்ந்தான்.

இ-ள். கடல்நீர்சுவற வேற்படைவிடுத்ததும் வலிய முத்துமாலைதாங்கிய தருக்கும் மேகங்களை விலங்கிலிட்டசெருக்கும் நோக்கி இப்பூமியில் ஒரு மாநுடசரீரத்திற்கு இவ்வளவுவலிமையாதென்று மிக்கமானஞ்செலுத்த உக்கிரபாண்டியரது மதுரைப்பதியை வளைந்தான்.—எ-று. (சங)

கலிவிருத்தம்.

ஓடின ரொற்றர் போயச் செழிய னொண்கழல்
சூடினா நகர்ப்புறஞ் சுரர்கள் சேனைமண
மூடின வென்னலு முனிவு மானமு
நீடின னரியணை யிருந்து நீங்குவான்.

இ-ள். (சூழ்ந்தவுடன்) தூதர் ஓடிப்போய் உக்கிரபாண்டியரது திருவடியை (முடியிற்)சூடித் தேவசேனை (நமது) நகரப்புறத்தை வளைந்ததென்றுகூறக் கோபமும் மானமுமிகுந்து சிங்காசனத்தினின்று (போர்புரிய) நீங்கும் அப்பாண்டியர்.—எ-று. ஓடினர் சூடினர் நீடினன முற்றெச்சங்கள். (சச)

பண்ணுக தேர்பரி பகடு வீரர்முன்
னண்ணுக கடிதென நடாத்தி யாவரென
றெண்ணலன் மதமலை யெருத்த மேல்கொடு
கண்ணகன் கடிநகர்க் காப்பு நீங்குமுன்.

இ-ள். இரதம் குதிரை யானைகளை அலங்கரிக்கக்கடவீர் எனவும் வீரர்கள் விரைந்துசெல்லக்கடவர் எனவுங்கூறி (அவரை) முன்னே நடாத்தி(ப்போர்புரிதற்குவந்தவர்) யாவரென்று கருதாது யானையேறிக்கொண்டு இடமகன்றவிளக்கமுள்ள நகரத்தின் காவலாகிய அரணைக்கடக்குமுன்.—எ-று. (சரு)

அடுத்தனர் வானவ ராத்துப் பல்படை
யெடுத்தனர் வீசினர் சிலையி லெய்கணை
தொடுத்தன ரிறுதிநாட் சொரியு மாரிபோல்
விடுத்தனர் மதிக்குல வீரன் சேனைமேல்.

இ-ள். தேவர் அடுத்துமுழங்கிப் பலபடைகளை எடுத்துவீசி வில்லிலே அம்புகளைப்பூட்டி உக்கிரபாண்டியரது சேனைமீது ஊழிக்காலத்துப் பொழியு மழைபோல செலுத்தினர்.—எ-று. (சுசு)

ஆர்த்தனர் மலயவெற் பரையன் சேனையோர்
பார்த்தனா வேறுபல் படைக்க லக்குவை
தூர்த்தனர் குனிசிலை தொடுத்த வாளியாற்
போர்த்தன ரமரர்மெய் புதைதத வென்பவே.

இ-ள். மலயாசலமன்னரின்வீரா முழங்கிப்பார்ததுப்பலவேறுபடைக்கலங்களை வீசி வில்லிலேபூட்டி அம்புகளால்மூடினா (அவ்வம்புகள்) தேவர்கள்சரீரத்திலே அழுந்தின.—எ-று. என்ப அசை. (சுஎ)

தறிந்தன தாள்சிரந் தகர்ந்த தோள்கரம்
பறிந்தன குருதிநீர் கடலிற் பாய்ந்தன
செறிந்தன பாரிடஞ் சேனங் கூளிகண
முறிந்தன வானவர் முதல்வன் சேனையே.

இ-ள். (சிலர்க்கும்) கால்கள் ஒடிந்தன. தலைகள் உடைந்தன. புயங்களும் கைகளும் குறைபட்டன. உதிரநீர் கடலில் ஓடிப்பாய்ந்தன. பூதம் கழுகு பிசாசு இவைகள் நெருங்கின. இந்திரன்படைகள் ஓடின.—எ-று. (சுஅ)

ஆடின குறைத்தலை யவிந்த போர்க்களம்
பாடின பாரிடம் விநதைப பாவைதாள்
சூடின கூளிகள் சோரி சோரப்பார்
மூடின பிணக்குவை யண்ட முட்டவே.

இ-ள். மரித்த போர்க்களத்திலே குறைத்தலைகள் ஆடின. பூதங்கள்பாடின. பிசாசுகள வீரலட்சுமியின் அடிகளை (முடியிற்)சூடின, பிணக்குவியல் உதிரம ஒழுகவும் ஆகாயததை அளாவவும் பூமியைமூடின.—எ-று. (சுகூ)

வெஞ்சின வலாரிதன் வீரச சேனைக
டுஞ்சின கண்டெரி சொரியுங் கண்ணனாய்ப்
பஞ்சின்முன் னெரியெனப் பதைத்துத் தெய்வத
வஞ்சினப் படைகளான் மலைவ துன்னினான்.

இ-ள். இந்திரன், தன்படைகள் மரித்தனவற்றைநோக்கி நெருப்புமிழுங்கண்ணனாய் முற்பட்டபஞ்சிலே நெருப்பு (விரைந்து பற்றுதல்)போல(சகோபமூண்டு)பதைத்துத் தன்னைப்புகழ்தலொடு திவ்வியாஸ்திரங்களாலே போர்புரியக்கருதினான்.—எ-று. ()

அறுசீரடியாசிரியவிருத்தம்.

வெங்கதிர்ப் படைவிட் டார்த்தான் விண்ணவ னதனைத் திங்கட்
பைங்கதிர்ப் படைதொட் டோச்சி யவித்தனன் பாராள் வேந்தன்
சிங்கவெம் படைவிட் டார்த்தான் றேவர்கோ னதனைச் சிம்புட்
புங்கவன் படைதொட் டோச்சி யடக்கினான் புணரி வென்றோன்.

இ-ள். இந்திரன், சூரியாஸ்திரஞ்செலுத்தி வீரகோஷஞ்செய்தான. அதனை உக்கிரபாண்டியர், சந்திராஸ்திரஞ்செலுத்திக் கெடுத்தார். இந்திரன், நாரசிங்காஸ்திரஞ் செலுத்தி ஆரவாரித்தான். அதனை உக்கிரபாண்டியர், சரபாஸ்திரஞ்செலுத்திக் கெடுத்தார்.—எ-று. (௰௧)

தானவர் பகைவன் மோக சரந்தொடுத் தெறிந்தா னாக
மீனவ னதனை ஞான வாளியால விளித்து மாயந்து
போனபின் மற்போ ராற்றப் புக்கனர் புக்கார் தம்மில்
வானவன் மன்னி னுன்மேல் வயிரம் வீசி யார்த்தான்.

இ-ள். இந்திரன், மோகாஸ்திரஞ்செலுத்தினன். அதனை உக்கிரபாண்டியர், ஞானாஸ்திரஞ்செலுத்திக் கெடுத்தபின் (இருவரும்) மற்போர்செய்யப்புகுந்தனர் புகுந்தவரில் இந்திரன் உக்கிரபாண்டியர்மீது, வச்சிரப்படையைச்செலுத்தி ஆரவாரித்தான்.—எ-று. விளித்து - விளிக்க. (௰௨)

காய்சின மடங்க லன்னான் கைவளை சுழற்றி வலலே
வீசினன் குலிசந் தன்னை வீழ்த்தது விடுத்தான் சென்னித்
தேசினன் மகுடந் தள்ளிச் சிதைந்தது சிதைந்த லோடுங்
கூசின னஞ்சிப் போனான் குன்றிற கரிந்த வீரன்.

இ-ள். சிங்கம்போன்ற உக்கிரபாண்டியர் கையிலுள்ள வளையாயுதத்தைச்சுழற்றி விரையவீசினர் (அது) வச்சிரப்படையைத்தாழ்த்தி அவ்வச்சிரப்படையை வீசினவிந்திரன ஒள்ளியமகுடத்தைத் தள்ளித் தகர்த்தது. உடனே அவ்விந்திரன நாணி அச்சமுற்றோடினன்.—எ-று. (௰௩)

இந்திரன் டனைய கூர்ம்பல் லிருள்வரை நெஞ்சு போழ்ந்த
மைந்தனில் வலிய காளை வளைதெறி நேமி சென்னி
சிந்திடா தாகி நம்பொன் மணிமுடி சிதறச் சோம
சுந்தர நாதன் பூசைத் தொழிற்பய னளித்த தென்னா.

இ-ள். இரண்டுபிறைமதிபோன்ற கூரியபல்லையும் கரியமலைவடிவையுமுடைய அசுரனது மார்பைப்பிளந்த முருகக்கடவுள்போல வலிய உக்கிரபாண்டியர் கைக்கொண்டு வீசிய சக்கரப்படை சிரத்தைச்சேதிக்காது மகுடத்தைத்தகாக்கும்படி சோமசுந்தரேசர் திருவடிப்பூசனையின்பயன் காத்ததென்று.—எ-று. (௰௪)

போரினுக் காற்று தோடிப் பொன்னகர்ப் புகுந்த வென்றித
தாரினுக் கிசைந்த கூர்வேற் சதமகன் பின்பு தன்னாட்
டேரினுக் கெல்லா மாரி யுதவுமே வினிகள நீக்கிக்
காரினைத் தருக வென்னாக் கவுரியற் கோலை விட்டான்.

இ-ள். ஓடிப் பொன்னுலகத்திற்புகுந்த வெற்றிமாலையைச்சூடிய கூரியபடையுடைய இந்திரன பின்பு உம்முடைய நாடுமுழுவதுக்கும் மழைபொழியச்செய்வேன் விலங்கினின்றும்நீக்கி மேகங்களை விடக்கடவீரென்று உக்கிரபாண்டியருக்குத் திருமுகம் அனுப்பினன்.—எ-று. தாரினுக்கு உருபுமயக்கம். தன், வழுவமைதி. (௰௫)

முடங்கல்கொண டணைந்த தூதன் முடிகெழு வேந்தன் பாதத்
தொடங்கிநின் றோலை நீட்ட வுழையுளா னொருவன் வாங்கி
மடங்கலே றனையான் முன்னா வாசித்துக் காட்டக் கேட்டு
விடங்கலுழ் வேலான் விண்ணோர் வேந்துரை தேறா னாகி.

இ-ள். திருமுகங்கொண்டுவந்த தேவதூதன் உக்கிரபாண்டியரது சமூகத்தில் வணங்கிநின்று அத்திருமுகத்தைக்கொடுக்க, அருகேநின்ற ஒருவன் (அதனை)வாங்கி அப்பாண்டியர் சமூகத்திலேபடிக்க, அவர்கேட்டு இந்திரனது மொழியைநம்பாமல்.—எ-று. (௫௬)

இட்டவன் சிறையை நீக்கி யெழிலியை விடாது மாறு
பட்டசிந் தையனே யாகப் பாகசா தனனுக் கென்று
நட்டவ னொருவே ளாள னுன்பிணை யென்று தாழ்ந்தான்
மட்டவிழ்ந் தொழுகு நிம்ப மாலிகை மாரி னானும்.

இ-ள். சிறைக்களத்தைவிட்டு மேகங்களைவிடாமல் விரோதக்கருத்துடையவராக வேயிருக்க (அப்பொழுது) இந்திரனுக்கு எப்பொழுதும் நணபினனும் (சப்தகிராமாதிபதிகளுள் ஒருவனும் ஏகவீரனென்னும் பெயருடையவனும் சம்புபக்தனுமாகிய) ஒரு வேளாளன் (மழைபொழிதற்பொருட்டு) நான பிணையென்று வணங்கினான். (அதற்கு) உக்கிரபாண்டியரும —எ-று., "வ(ணை—நூ) ஷ—ப" என்று வடநூலார் கூறியிருத்தலால், இந்நூலார் வேளாளனென்று சிவதீக்ஷைக்குரியவனைக் கூறினார். பிணை-உத்தரவாதி.'()

இடுக்கண்வந் துயிர்க்கு மூற்ற மெய்தினும் வாய்மை காத்து
வடுக்களைந் தொழுகு நாலா மரபினு னுரையை யாத்த
நெடுத்துரை மறைபோற் சூழ்ந்து சிறைக்களத் திட்ட யாப்பு
விடுத்தனன் பகடு போல மீண்டன மேக மெல்லாம்.

இ-ள். வறுமைவருதலால் (உடம்பிற்கன்றி) உயிருக்கும இடையூறுவந்தாலும் மெய்மொழியைப் பாதுகாத்துக் குற்றம்நீங்கி ஒழுகும் சதுர்த்தவருணத்தனாகிய சற்சூத்திரன்மொழியைப் பரமபதராகிய சிவபிரான் அருளிய வேதவாக்கியம்போல் மதித்துச் சிறைக்களத்திலிட்ட விலங்கை வெட்டிவிட்டார் நான்குமேகங்களும் யானைகள்போல (அங்குநின்று) திரும்பிப்போயின.—எ-று. (௫௮)

தேவர்கோ னேவ லாலே திங்கண்மும மாரி பெய்து
வாவியுங் குளனும யாறு மடுக்களு மடுத்துக் கள்வாய்க்
காவிசூழ் வயலுஞ் செய்யுஞ் செந்நெலுங் கன்னற் காடும்
பூவிரி பொழிலுங் காவும் பொலிந்தது கன்னி நாடு.

இ-ள். வெளி. பெய்து-பெய்ய. மடுத்து-நிறைதலால். காவி-குவளை. (௫௯)

இந்திரன்முடிமேல்வளையெறிந்தபடலமுற்றியது.

ஆகச்செய்யுள் - ௧௧௧௧.

யானைமுதலிய ஏற்றங்களினும் ஆயுதவித்தையினும் பயில்வித்தலால் அப்புத்திரன் விளங்க(க்கண்டு) மனமகிழ்ந்திருக்குங்கால்.—எ-று. பயில்வித்து என்பது விவ்விகுதி தொகை. (ச)

மல்கு மாறில் கோடி ரிந்து மழைசு ருங்கி நதியுநீ
ரொல்கு மாறு பருவ மாறி யுணவு மாறி யுயிரெலா
மெல்கு மாறு பசியு ழந்து வேந்த னுக்கு விளைபொரு
ணல்கு மாறி லாமை யின்ன னலிய வந்த நாடெலாம்.

இ-ள். (உலகம்) பெருகும்விதமின்றிக் கோள்கள் அனைத்தும் தத்தநிலைகளில் மாறுதலால், மழைவளஞ்சுருங்கி நதியும் நீரவறப்பக் கார்ப்பருவமாறி உணவுகளுமாறி உயிர்களெல்லாம் மெலியும்படி பசியாலவருந்தி அரசனுக்கு விளைபொருள்கொடுக்கவும் இல்லாமல நாடுகள் அனைத்திலும் வறுமைகள வருத்துமபடிவந்தன.—எ-று. (ரு)

மழைவ றந்த தென்கொ லென்று வழுதி கூற முழுதுணர்ந்
தழிவி லாத பிரம கற்ப மளவு மெல்லை கண்டநூ
லுழவர் கோள்க ளிரவி தன்னை யுற்று நோக்கி நிற்றலாற்
றழையு மாரி வருடி யாதொர் வருட மென்று சாற்றினார்.

இ-ள். மழையில்லாமைக்குக் காரணம் யாதென்று உக்கிரபாண்டியர் வினவ (அதற்கு)ச் சோதிடநூலவல்லவர் ஏனையகிரகங்கள் சூரியனைநோக்கி நிற்றலால் ஒரு வருடமவரை மழைபெய்யாதென்று கூறினார்.—எ-று. (சா)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

மகவுறு நோயை நோக்கி வருந்துறு தாய்போன் மன்னன்
பகவுறு மதியஞ் சூடும் பரஞ்சுடர் முன்போய்த் தாழ்ந்து
மிகவுறு பசியால் வைய மெலிவதை யைய வென்னாத்
தகவுற விரங்கிக் கண்ணீர் ததும்பிநின் றிரந்து வேண்ட.

இ-ள். பிள்ளையுற்ற பிணியைநோக்கி மனம்வருந்தும மாதாபோல உக்கிர பாண்டியர், சுந்தரேசரது சந்நிதியை அடைந்துவணங்கி ஐயனே மிக்கபசியால் உயிர்கள் வருந்துவதெனறு மிகவிரங்கி அழுது மிகப்பிரார்த்திக்க.—எ-று. ஐ - சாரியை. (எ)

திரைக்கடல் விடஞ்சேர் கண்டர் காலத்தின் செவ்வி நோக்கி
யிரக்கமில் லவர்போல் வாளா விருத்தலு மருத்தார் மார்பன்
கரைக்கரி தாய துன்பக் கடலில்வீழ்ந் திருக்கை புக்கா
னரக்காபோக் கடலி னீந்தி யருக்கனீர்க் கடலில் வீழ்ந்தான்

இ-ள். சுந்தரேசா காலத்தின் சமயம்நோக்கிக் கருணையில்லாதவாபோலச் சும்மாவிருத்தலும் உக்கிரபாணடியர், கரைக்கு அடங்காத துன்பக்கடலில் வீழ்ந்து தம்மாளிகையை யடைந்தார். சூரியன் அஸ்தமயமானான்.—எ-று. (அ)

வள்ளறன் குடைக்கீழ்த் தங்கு முயிர்ப்பசி வருத்த மெல்லாங்
கொள்ளைகொண டிருந்த நெஞ்சிற் குளிர்முகச் செவ்வி குன்றத்
தள்ளருந் துயரின் மூழ்கித் தரையிடைத் துயின்றானாக
வெள்ளிமன் றுடையார் சித்த வேடராய்க் கனவில வந்தார்.

இ-ள். (அடைந்த) வுக்கிரபாண்டியர் உயிர்களின் வருத்தமனைத்தும் இருக்கின்ற உள்ளமனம்போல முகமலர்ச்சிகுறையத் துன்பத்தோடு துயிலிலே நித்திரைசெய்ய அச்சொப்பனத்தில வெள்ளியம்பலவாணர் சித்தராக எழுந்தருளினர்.—எ-று. (கo)

அடற்கதிர் வேலோய் மாரி யரிதிப்போ ததனை வேண்டி
யிடர்ப்படல் வரைகளு வேந்தா யிருக்கின்ற வெரிபொன் மேருத்
தடப்பெரு வரையின் மாடோர் தனிப்பெரு முழையி விடுக்
கிடப்பதோ ரளவை யில்லாக் கேடிலாச் சேம வைப்பு.

கிடைத்துமற் றனைய மேரு கிரிசெருக் கடங்கச் செண்டாற்
புடைத்துகின் ஞணைத தாக்கிப் பொன்னறை பொதிந்த பாறை
துடைத்துநீ வேண்டுங் காறுந் தொட்டெடுத் ததனை மீள
வடைத்துகின் குறியிட டைய வருதியென றடிகள் கூற.

இ-ள். (எழுந்தருளிய) சித்தசுவாமிகள் உக்கிரபாண்டியனே மழை இப்போது இல்லை அதைவிரும்பி வருந்தற்க மேருமலையின்பக்கத்தில ஒருகுகையில் அளவற்ற சேம நிதி வைக்கப்பட்டுள்ளது. (அங்கே)சென்று அம்மேருமலை செருக்குடையதாதலால் அது நீங்கும்படி செண்டாயுதத்தால அடித்து நின்னாணைவழியதாக்கி அச்சேமநிதியின அறைமூடியபாறையை எழுப்பி நீ வேண்டுமளவும் (அதிலேபொன்)அள்ளியெடுத்துப் பின்பு அவ்வறையை அடைந்து நினது இலச்சினையிட்டு வருவாயென்று அருள.—எ-று. அடிகள் அடற்கதிர்வேலோய் என்றுவென்று அந்துவயஞ்செய்க. (கக)

விழித்தன னெழுமான் றேரோன் விழிக்குமுன் கடன்க ளெல்லாங்
கழித்தன்ன மீன நோக்கி கணவனை வலமாப் போந்து
சுழித்தெறி கடல னீகத் தொகைபுறஞ் சூழக் கொண்டல்
கிழித்தெழு வாயி னீங்கிக் கீழ்திசை நோக்கிச் செல்வான்.

இ-ள். (உடனே உக்கிரபாண்டியா) விழித்துச சூரியோதயத்திற்குமுன் நித்திய கர்மங்களை முடித்துச சோமசுந்தரேசனை (வணங்கி)ப் பிரதக்ஷிணஞ் செய்துகொண்டு சேனைக்கடல புறத்தே சூழ்ந்துவரக் கோட்டைவாயிலி னீங்கிக் கிழக்குதிசை நோக்கிச செல்வாராயினர்.—எ-று (கஉ)

அதிர்ந்தன முரசஞ் சங்க மதிர்ந்தன வியங்க ளண்டம்
பிதிர்ந்தன வென்ன வாரப்பப பெயர்ந்துவெண் கவரி துள்ள
முதிர்ந்தநான் மறையோ ராசி மொழியநா வல்லோ ரேத்தப்
புதிந்துபார் கிழியத் திண்டேோ பாகுமுன் செலுத்த வூர்ந்தான்.

இ-ள். வெளி. பிதிர்தல் - பிளவுபடல. (கங)

பவளக்கால் பிச்சம் பொற்காற் பனமணிக் கவிகை முத்தத்
தவளக்கால் பதாகைக் காடு தானவா னருவி தூங்குங்
கவளக்காற் பொருப்பும் பாய்மாக் கடலுமண் மடந்தை யாகந்
துவளக்கால் வயவர் மான்றேர்த் தொகுதியுஞ் சூழல்போக.

இ-ள். பீலிக்குடை இரத்தினக்குடை வெள்ளிய முத்துக்கள்கோத்த காலையு டைய விருதுக்கொடிக்காடு மதமாகிய பெரிய அருவியொழுகுங் காலையுடைய கவள

மூண்ணும் மலைபோன்ற யானை (வெள்ளம்) குதிரைவெள்ளம் வீரர் (கூட்டம்) குதிரை பூட்டிய தேர்க்கூட்டம்" இவைகள் பூதேவி உடல்வருந்தச் சூழ்ந்துவரவும்.—எ-று.

கோழிணர் ஞாழ லன்ன கோட்டுகிர்ப் புலவுப் பேழ்வாய்த்
தாழ்சின வுழுவை யொற்றைத் தனிப்பெருங் கொடியுங் கூனற்
காழ்சிலைக் கொடியுஞ் சூழக் கயற்கொடி நிலந்து ழாங்கை
யேழுயர் வரைமேற் றோன்றி யிருவிசும் பகடு கீற.

இ-ள். கொழுவிய பூங்கொத்துள்ள குங்குமமா அரும்புபோன்ற வளைவுடைய நகமும் புலால்நாற்றமுள்ள பிளந்த வாயும் மிககோபமுமுடைய புலிக்கொடியும் வளைந்த வலிய விற்கொடியும் (தன்னைச்) சூழ்ந்துவா மீனககொடியானது பூமியைத் தீண்டுந் துதிக்கையுள்ள ஏழுமுழ முயாந்த யானைமேற் றோன்றி ஆகாயத்தின் வயிற்றைக் கிழித்துச் செல்லவும்.—எ-று. (௧௫)

தென்கடல் வடபா லேக்கிச் செல்வது போலத் தென்னன்
றன்கட லனிகங் கன்னித் தண்டமிழ நாடு நீந்தி
வன்கட நெறிக்கொண் டேகி வளவாகோ னெதிாகொண டாற்று
நன்கடன் முகம னேற்று நளிாபுன னாடு நீந்தி.

இ-ள் வெளி. தண்டமிழ் (வழங்கும்) கன்னிநாடென்க. கடம் - காடு. நன் கடன் முகமன் - நல்லமுறையாகிய உபசாரம். (௧௬)

தண்டக நாடு தள்ளித் தெலுங்கநா டகன்று சாய்தாட்
கண்டகக் கைதை வேலிக் கருநடங் கடந்து காடுந்
தொண்டகந் துவைக்குங் குன்று நதிகளுந துறநது கள்வாய்
வண்டக மலர்க்கா வேலி மாளவ தேச நணணி.

இ-ள். வெளி. சாய்ந்த பாததகையும் முள்ளையுமுடையகைதை - தொண்டகம் - குறிஞ்சிநிலப்பறை. கள்வாய்ந்து வணடுகளைத தம்மிடததுடைய மலாகளின்கா.

அங்குநின் றெழுந்து தீவா யருஞ்சுர நெறிப்பட் டேகி
மங்குனின் றதிருஞ் செமபொன் மாடநீள் விராட நண்ணிக்
கொங்குநின் றவிழுங் கானங் குன்றுாீஇ வானை பாயத்
தெஙகுநின் றிளநீா சிந்து மத்திய தேயத தெய்தி.

இ-ள். வெளி. தீவாய் அருஞ்சுரம் - தீவாய்ந்த செல்லுதற்கரிய பாலைநிலம். கொங்கு நின்று அவிழுங் கானம - மகரநதம் (பரவ) நினறு மலரும் மலர்களுடைய முல்லை நிலம். (௧௮)

அங்நெடு நாடு நீங்கி யாடலே றுயர்த்த தோன்றல்
பொன்னெடுஞ் சடையிற் றாழ்ந்து புனிதமாந் தீர்த்தக் காசி
நன்னெடு நகர மெய்தி நளிாபுனற் கங்கை நீநதிக்
கன்னெடு நெறிய நேக காவதங் கடநத பின்னர்.

இ-ள். வெளி. ஆடல் ஏறு உயர்த்த தோன்றல் - வெற்றியுடைய இடபக்கொடி ஏந்திய சிவபிரான். தாழ்ந்து - தங்கி. (௧௯)

மடங்கன்மா நாகம் யாளி வழங்கலான் மனிதா செலலா
விடங்கடந தாக வஞ்ஞூற நிரட்டியோ சனைத்தா மெல்லைக்
கடங்கெழு குமரி கண்டங் கடநதுமற் றதுபோ லெட்டுத்
தடங்கெழு கண்டங் கொணட பாரத வருடங் தளளி.

இ-ள். சிங்கம் பெரியயானை யாளி இவைகள் சரிததலால் மாநுடர் செல்லக் கூடாத இடஙகளைக் கடநது ஆக ஆயிரம்யோசனையளவுடையதாகிய அருநெறிகள் பொருந்திய குமரிகண்டங கடநது அதுபோல விரிந்த எட்டுக்கணடங்கொண்ட பாரத வருடஙகடந்து—எ-று. (உ0)

யாவையு மீன்ற டன்னை யீன்றபொன் னிமயங் தனனைத்
தாவியப புறமபோயப போகங் நத்ம்புகிம புருடகண்ட
மேவியங கதுநீத தேம வெறபனைங் தததுபினறுக
வோவியப புறததுத் தோன்று மரிவரு டத்தை யுற்று.

இ-ள். உமாதேவியாரைப் பெற்ற பொன்களுள்ள இமயமலையைக கடநது அப் பாற்செனறு போகங்கள் மிகக கிம்புருட கணடததையடெதது அதனைக்கடந்து எமவெற் பினைச் சாரந்து அது பிற்படககழிதது அப்பாற் றோன்றும அரிவருட கணடததை யடைந்து.—எ-று. (உக)

உற்றது கழிந்தப பாற்போய் நிசதவெற் பொழிந்து சமபுப
பொற்றருக் கனிகால யாறு போகிளா விருத கணடத்
துறறனன கண்டான மூன்றா ரொருங்கடு ஞான்று கூனி
வெற்றிவெஞ் சிலையாய நினற வெறபினை மலய வெற்பன்.

இ-ள். அடைந்த அவ்வரிவருட கண்டத்தைக் கடந்து அப்பாற்சென்று நிசத வெற்பினைக கடந்து பொன்மயமாகிய நாவல்மரக் கனி சிந்துஞ் சாறுகிய யாறுசெல் லும் இளாவிருத கண்டத்தை அடைந்து முப்புரத்தையும ஒருஙகே கெடுக்குங்காலத்து வளைந்து வெற்றிபெற்ற தநுசாய்நின்ற மேருமலையை உககிரபாண்டியா கண்டாா.—எ-று. உற்றனன் - முற்றெச்சம். (உஉ)

வெம்படை மறவர் சேனை வெள்ளநீத் தேகித் தென்பாற்
சம்புவின் கனியின் சாறு வலம்படத் தழுவி யோடு
மம்பொனீ ராறு மாற்றி னருகுபொன் மயமாய் நிற்கும்
பைம்புனங் கானு நோக்கி வளைந்துதென் பாலவந் தெய்தா.

இ-ள். வெவ்விய படைகள் எந்திய வீரர்சேனைவெள்ளத்தினீங்கித் (தனியே) போய்த் தென்பாலுள்ள நாவற்கனியின்சாறு வலமாகத் தழுவியோடும் அழகிய பொன் மயமாகிய நீருள்ள சாம்பூநதமும் அந்நதியினருகே சுவர்ணமயமாயிருக்கும் பசிய கொ ல்லைகளையும் காடுகளையும் நோக்கிச் சுற்றி அந்நாவல் நின்ற தென்பக்கம் வந்துசேர் ந்து.—எ-று. (உ௩)

அவ்வரை யரசை நோக்கி வரைகளுக் கரசே யெந்தை
கைவரி சிலையே பாரின் களைகணே யளவில் வானந்
தைவரு சுடருங் கோளு நாள்களுந் தழுவிச் சூழுந்
தெய்வத வரையே மேலைத் தேவரா லயமே யென்று.

இ-ள். அம்மேருமலைக் கதிபதியை நோக்கி, மலைகளனைத்திற்கும் இராஜாவே என்றதையாகிய சிவபிரானது திருக்கையிலுள்ள வரிந்துகட்டிய தநுவே பூமிக்காதாரமே ஆகாயத்தை யளாவிவருஞ் சூரிய சந்திரருங் கோள்களும் நக்ஷத்திரங்களும் பொருந்திச் சூழும் தேவகிரியே மேம்பட்ட தேவராலயமே என்று.—எ-று. (உ௪)

மாணிக்க மிமைக்கும் பூணான் விளித்தலும் வரைக்கு வேந்தன்
பாணித்து வரவு தாழ்ப்பப் பாகசா தனனை வென்றோ
ஞணித்தன் சினமு மேரு நகைவரைச் செருக்கு மாறச்
சேணுற்ற சிகரந் தன்னிற் செண்டினா லடித்து நின்றான்.

இ-ள். உக்கிரபாண்டியர் அழைத்தலும் அம்மலைக்கதிபன் வருகைமிகத் தாமசிக்கவும் அவ்வுக்கிரபாண்டியா நாணமுற்றுத் தங்கோபமும விளங்கும அம்மலைக்கையன்றருக்கும ஒழியும்படி முடியிலே சண்டாயுதத்தால் அடித்தார்.—எ-று. (உ௫)

அடித்தலு மசையா மேரு வசைந்துபொற் பந்து போலத்
துடித்தது சிகர பந்தி சுரர்பயின் மாட பந்தி
வெடித்தன தருண பானு மணடலம விண்டு தூளாயப்
படித்தலை தெறித்தா லென்னப பன்மணி யுதிர்ந்த வன்றே.

இ-ள். வெளி. (உ௬)

புடைவரைக் குலங்க ளெட்டும் புறந்தழீஇக் கிடக்குஞ் செம்பொ
னடைகலோர் நான்கு நான்கு கிடங்கரு மலர்ந்த நான்கு
தடமலர்ப் பொழிலு நான்கு தருக்களுஞ் சலித்த வம்மா
வுடையவ னிடையூ றாற்றா லடுத்தவா குலகை யுண்டோ.

இ-ள் வெளி. அஷ்டகுல பர்வதங்கள், தெற்கில நிசதகிரி - ஏமகூடகிரி - இமயகிரி. வடக்கில் நீலகிரி - சுவேதகிரி - சிருங்ககிரி. மேற்கில கந்தமாதனகிரி. கிழக்கில் மாலியவான்கிரி. அடைகலோர் நான்கு, கீழ்திசையில் மந்தரபர்வதம். தென்றிசையில் கந்தமாதனபாவதம். மேலதிசையில விபுலபாவதம். வடதிசையில் பார்சுவத்திரி பர்வதம். நான்கு கிடங்கர், கிழககில் சயிததிரக்காநடுவில் தாமரை நிறைந்த நாகமென்னும் ஓடை. தெற்கில விசிததிரைக்காநடுவில குமுதோற்பலங்கள் நிறைநத மானஸசரசென்னும் ஓடை. மேற்கில் வைப்பிரசநடுவில செந்தாமரை நிறைந்த விமலோதகமென்னும் ஓடை. வடககில் திருதாக்கியநடுவில் நீலோற்பல நிறைந்த மனோரதமென்னும் ஓடை. நான்கு பொழில், கிழக்கில் சயித்திரம். தெற்கில் விசித்திரை. மேற்கில் வைப்பிரசம். வடககில் திருதாக்கியம். நான்கு தருக்கள், கிழக்கில் கடம்பு. தெற்கில் நாவல். மேற்கில் அரசு, வடக்கில் ஆல் (உ௭)

புடைத்தபின் மேருத் தெய்வம் புடைக்குல வரையெட் டென்னப்
படைத்தவெண் டோளு நான்கு முடியுமேற படுவெண் சோதி
யுடைத்தனிக் குடையுங் கொணட வுருவினோ டெழுந்து நாணிக்
கிடைத்தது கருணை வேந்தன் கிளாசினந் தணிந்து நோக்கா.

இ-ள். அடித்த பின்பு மேருதேவதை அஷ்டபுயங்களும் நான்கு சிரங்களும் மேற்கவித்த குடையுங் கொண்டவடிவத்தோடு எழுந்து நாணமுற்று எதிர்ப்பட்டது உககிரபாண்டியா மிககோபந் தணிந்து கருணையோடு பாாதது.—எ-று. (உ௮)

இத்தனை வரவு தாழ்த்த தென்னென மேருத் தெய்வம்
வித்தக நம்பி கேட்டி மீனெடுங் கண்ணி யோடும்
பைத்தலை யரவம் பூண்ட பரனையிப் படிவங் கொண்டு
நித்தலும் போகிப் போகி வழிபடு நியமம் பூண்டேன்.

இ-ள். வருகை இவ்வளவுகாலந் தாமதித்தது யாதுகாரணமென வினவ (அதற்கு) மேருதேவதை சதுரப்பாடுடைய பாண்டியரே கேட்பீர் மீனாட்சிதேவியாரையும் சுந்தரேசரையும் இவ்வடிவங்கொண்டு நாடோறும் போய்ப்போய் வழிபடுகிற நியமங் கொண்டிருந்தேன்.—எ-று. (௨௯)

இன்றுகேட் டிலையோ வையா வொருத்திமேற் பொருந்தி காமந்
துன்றுமா கடலின் மோகச் சுழித்தலைப் பட்டு வெள்ளி
மன்றுளா டியபொற் பாதம் வழிபடன் மறந்து தாழ்த்து
நின்றனே னினைய தீங்கி னிமித்தமிவ் வடியும் பட்டேன்.

இ-ள். ஐயரே இன்று நிகழ்ந்த செய்தியைக் கேட்கவில்லையா? ஒரு பெண்ணினது மிக்க காமக்கடலின் மோகச்சுழியில் அகப்பட்டுச் சுந்தரேசரை வழிபடுதலையும் மறந்து வாதத்தாமதித்தேன் இதற்குச் செய்தகாரணத்தினால் (உம்மால்) அடியும் பெற்றேன்.—எ-று. (௩௰)

திருவடி பிழைத்த தீங்கு தீர்த்தனை யிதனி லையநீ
றருவதோ ருதவி தானுந் தக்கதோர் கைம்மா றென்னால்
வருவது முண்டோ கொல்லோ மற்றது நிற்க மன்னா
பருவரை மார்ப வந்த பரிசென்கொல் பகர்தியென்ன.

இ-ள். சுந்தரேசரது திருவடிக்கு (யான்) தவறிய குற்றத்தை (நீரே அடிக்கது)த் தீர்த்தீர் ஐயரே இதற்குப்பகரமாக நீர் செய்வதோர் நன்மையும் (அதற்குத்)தக்கதோர் பிரதியுபகாரம் என்னாற் செய்வதுமுண்டோ அது நிற்க. பாண்டியராஜரே நீர்வந்த காரியம் யாது கூறுவீரென்று கேட்க —எ-று. கொல் - மற்று - அசைகள். (௩௧)

மன்னவன் வெறுக்கை வேண்டி வந்தன னென்றா னைய
வுன்னது புலத்தோர்க் கேற்ப வுறைபடு மாற்ற தாய
பொன்னவிர் தேமா நீழற் புதைபடக் கிடக்கு செம்பொ
னென்னவங் கையாற் சுட்டிக் காட்டிய தெரிபொற் குன்றம்.

இ-ள். (அதற்கு) உக்கிரபாண்டியர் திரவியத்தை விரும்பி வந்தோமென்றார். ஐயரே உம்முடைய நாட்டார்க்கு இசைய உரைக்கப்படும் மாற்றுள்ள செம்பொன் மாமரத்தினிழலிலே சேமித்துக்கிடக்கிறதென்று மேருதேவதை கைவிரலாற் சுட்டிக்காட்டியது.—எ-று. (௩௨)

மின்னகு வேலோன் மூந்நீர் வேலையை வணக்கங் கண்டோன்
பொன்னறை மருங்கிற் போகிப் பொத்திய பாறை நீக்கித்
தன்னவா வளவிற் றூய தபனிய முகந்து மூடிப்
பின்னதுந் தன்ன தாகப் பெயரிலச் சினையுந் திட்டா.

இ-ள். (காட்டியவுடன்) உக்கிரபாண்டியர் அப்பொன்னறையின் அருகேபோய் மூடிய பாறையை எழுப்பித் தம்மிச்சையளவினதாய திரவியமெடுத்து மூடிச் சேடித் துள்ள பொருளும் தமதாகத் தம்பெயர் முத்திரையும (அப்பாறைமேல்)எழுதி.—எ-று.

மின்றிகழ் மணிப்பூண் மார்பன் மீண்டுதன் றுனை யோடுந்
தென்றிசை நோக்கிப் பாகன் செலுத்தமான் றடந்தே ரூர்ந்து
பொன்றிகழ் வரையும் போக பூமியும் பிறவு நீத்து
நன்றிகொண் மனிதர் வைப்பி னண்ணுவா னண்ணு மெல்லை.

இ-ள். (பின்பு) அவ்வுக்கிரபாண்டியர் திரும்பித் தஞ்சேனையுடன் தெற்குத் திசைநோக்கித் தேர்செலுத்தி மலைமுதலியவற்றைக் கடந்து மானுடர் வதியும் நாடுகளில் வருவாராயினர் வருமிடத்து.—எ-று (௬௪)

மாத்திமர் விராட மன்னர் மாளவர் தெலுங்க தேயப்
பார்த்திவர் பிறரு நத்தம் பதிதொறும் வரவு நோக்கித்
தேர்த்திக ழுனிகத் தோடுஞ் சென்றெதிர் முகமன் செய்யத்
தார்த்திரு மார்பன் கன்னித் தண்டமிழ் நாடு சார்ந்தான்.

இ-ள். மாத்திமர்முதலிய அரசராதியோர் தத்தநகரங்கள்தோறும் தமது நல்வரவைநோக்கிச் சேனையோடு எதிர்சென்று உபசாரஞ்செய்ய உக்கிரபாண்டியர் (அங்கீகரித்துத்) தம்பாண்டிநாட்டை அடைந்தார்.—எ-று.— (௬௫)

கன்னிப்பொன் னெயில்சூழ் செம்பொற் கடிநகர்க் கணிய னாகிப்
பொன்னிற்செய் திழைத்த நீள்கோ புரத்தினைக் கண்டு தாழ
வுன்னித்தே ரிழிந்தெட் டோடைந் துறுப்பினும் பணிந்தெ ழுந்து
வன்னிச்செஞ் சுடர்க்க ணெற்றி மன்னவன் மதுரை சார்ந்தான்.

இ-ள். (பின்பு) மதுரைப்பதிக்குச் சமீபித்தவராய்க் கோபுரத்தைத் தரிசித்து வணங்கக் கருதி இரதத்தினின்றும் இறங்கி வணங்கி யெழுந்து நெற்றியில் அக்கினியாகிய சிவந்த சோதிக்கண்ணுள்ள சிவபிரானது மதுரைநகரை அடைந்தார்.—எ-று. கன்னி - அழியாமை. (௬௬)

அறத்துறை யந்தணாளர் துறந்தவ ரரன்றாள் பற்றிப
புறத்துறை யகன்ற சைவ பூதியர் புனிதன் கோயிற்
றிறத்துறை யகத்துத் தொண்டர் திரண்டெதிர் கொள்ள முத்தி
னிறத்துறை வைகை நீத்து நெடுமதில் வாயில் புக்கான்.

இ-ள். அறவழியொழுகும் பிராமணர் துறவிகள் சிவபிரான்றிருவடியைப் பற்றிப் புறச்சமயங்களாகிய களையைகளைந்த சைவச்செல்வர்கள் சுந்தரேசர்திருவாலய நித்திய நைமித்திகங்களை நடாத்தும் அகத்தொண்டர்களாகிய ஆதிசைவர்கள் அனைவரும் திரண்டு எதிர்கொள்ள விளக்கமாகிய முத்தினையுடைய வேகவதி நதியைக்கடந்து கோட்டைவாயிலிற் புகுந்தார்.—எ-று. (௬௭)

கொங்கலர் கோதை மாதர் குங்குமம் பணிப்பச் சிந்து
மங்கல மறுகி னேகி மறைகள்சூழ் கோயி லெய்தித்
தங்கண யகனைச் சூழ்ந்து தாழ்ந்தெழுந் தேத்திப் போந்து
திங்களூர் குடுமிச் செல்வத் திருமணிக் கோயில் புக்கான்.

இ-ள். பெண்கள் குளிருமபடி குங்குமநீர் தெளிக்கின்ற சபம் (விளங்கும்)வீதி வழியேபோய்த் திருவாலயஞ்சேர்ந்து தம்முடைய சுந்தரேசனைப் பிரதக்ஷிணஞ்செய்து வணங்கி எழுந்து துதித்துச் சென்று தந்திருக்கோயிலை யடைந்தார்.—எ-று. (௩௮)

பொன்மலைக் கடவு ளீந்த புண்ணிய நிதியை யந்த
நனமலை மானக் கூப்பி நல்கிப்பல குடியு மோமபித்
தென்மலைக் கிழவன் றெய்வந் தெனபுல வாண ரொக்க
றன்மனை விருந்து காததுந் தருக்கினு னிருக்கு நாளில்.

இ-ள். (பின்பு) உக்கிரபாண்டியர், மேருமலைக்கடவுள் கொடுத்த திரவியத்தை அம்மேருமலைபோலக் குவித்துப் பலகுடிகளுக்குங் கொடுத்துப் பாதுகாததுத் தேவர்முதலாயினுரையுங் காத்துக் களிப்போடிருககுங் காலததில்.—எ-று. (௩௯)

ஐவினை நடாதது மீச னுணையா னடக்குங் கோளுரு
செய்வினைத் திரிவு மாறத் தென்னனு டெங்கு மாரி
பெய்வினை யுடைய தாகிப பெருவளம பகிாந்து நலக
வுய்வினை யுடைய வாகி யுயிரெலாந் தழைந்த வன்றே.

இ-ள். பஞ்சகிருத்தியஞ் செய்யுஞ் சுந்தரேசரது ஆஞ்ஞையால் நடக்கும் நவக்கோள்களும் (மழையில்லாமைக கேதுவாகிய) நிலமாறுதற் றொழிலி னீங்குதலால், பாண்டிநாடு முழுதும் மழைபொழியுந் தொழிலுடையதாகி மிககவளங்களைப் பங்கிட்டுக் கொடுககவெல்லாவுயிர்களும (பசிநோய்நீங்கிப்) பிழைககுஞ் செயலுடையனவாய்ப் பெருகின—எ-று. (௪௦)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

புவனியிம் முறையாற் புரந்தளித் தாரம் பூணபாண் டியன்றிரு மகனுக்
கவனியே ழறிய வீரபாண் டியனென றணிமுடி கவித்தர சளித்து
நவநிர திசய பூரண வின்ப ஞானநோக கருளிய மதுரைச்
சிவனடி நிழலிற பிளப்பறப பழைய தேசொடு நிறைந்துவீற் றிருந்தான்.

இ-ள் உக்கிரபாண்டியர் இப்பூமியை நீதியால் நன்ருகக் காத்து, வீரபாண்டியனேயென்று அழைததுத் தம்முடைய புத்திரனுககு மகுடஞ்சூட்டி அரசாட்சியைக் கொடுத்து(ப் பின்பு) புதுமையாகிய மிகவுயர்ந்த பூரணுநந்த ஞானநோக்கததை(ப் பரிபக்குவாக்கு) அருளும்பொருட்டு மதுரைபபதியில எழுந்தருளியிருக்கின்ற சுந்தரேசரது திருவடி நிழலின்கண் இரண்டறப் பழைய ஒளியொடு வியாப்பியமா யமர்ந்தார்.—எ-று. (௪௧)

மேருவைச்செண்டாலடித்தபடலமுற்றியது.

ஆகச்செய்யுள் - ௧௧௫௨.

## பதினாறுவது

# வேதத்துக்குப்பொருளருளிச்செய்தபடலம்.

எழுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

உலம்பொரு தடந்தோ ளுக்கிரச் செழிய னுயரிய மேருமால் வரையைப், பொலம்புரி செண்டாற் புடைத்துவைப் பெடுத்துப் போந்தரு ளடைந்தவா புகன்றும், வலம்படு திணிதோள் வீரபாண் டியன்கோல் வழங்குநாண் மது ரையெம் பெருமான, புலம்பொரு முனிவர் தேறநால் வேதப் பொருளுணர்த் தியதிறம் புகல்வாம்.

இ-ள். திரண்ட கலலுப்போலும் பெரிய புயங்களுடைய உக்கிரபாண்டியர் உயர்ந்த மகாமேருமலையைப் பொன்னுலாகிய சண்டாயுதத்தினாலே தாக்கித் திரவிய மெடுத்து வந்து சுந்தரேசரது திருவருளையடைந்த திருவிளையாடலைக் கூறினோம். வெற்றிபெற்ற திண்ணிய தோளையுடைய வீரபாண்டியன் செஙகோல் செலுததும் போது சுந்தரேசா இந்திரிய நிககிரகஞ்செயத முனிவாகள் தெளியும்படி நானகு வேதங் களின் பொருளையுணாததிய திருவிளையாடலை (இனியாம்) கூறுவாம்.—எ-று. (க)

ஐம்பெரும் பூத நிலைதிரிந் தோ முடுககிய வுலகொடு மயன்மா, லும்பர் வான் பதமு முதித்தவா றொடுங்க வுருததேநா ரூழிவந் தெய்தச், செம்பொ ருண் மறையு மொடுங்கிய வழிநாட் செஞ்சுடாக் கடவுண்முன் மலரும், வம பவிழ் கமல மெனவரன் றிருமுன் மலாந்ததா லகிலமு மாதோ.

இ-ள். பஞ்சமகாபூதங்களும் தத்தநிலை மாறுபட்டு உலகமுதலியன தோன்றி யவாறே ஒடுங்கும்படி கோபததோடு ஒரூழிககாலம்வர மெய்பபொருளுடைய வேதங்க ளும் ஒடுங்கின. பின்பு கிருதயுகததிலே சூரியன்முனபு மணஙகமழ்நது விரியும் புதிய கமலமலர்போலச் சிவபிரானது சததிசஙகற்பரூபசநநிதியில (ஒடுஙகியமுறையே) யா வுந் தோன்றின.—எ-று. இஙஙனம பொதுவகையாற் சிருட்டிகூறி இனிச் சிறப்புவ கையாற் கூறுகின்றாா. (உ)

பண்டுபோற் பின்னு முததொழி னடாத்தப பராபரஞ் சுடாதிரு வுள்ளங்
கொண்டுபோாத் திகிரி வலவனைத் தரவிக் குரிசிறன் றபிமுண டகத்தில்
வண்டுபோற பிரம னுதிததுமு வுலகும் வரன்முறை படைக்குநா ணஞ்ச
முண்டுபோற் றியவா னவாகதயி ரளித்த வும்பர்நா யகன்றிரு வாக்கில்.

இ-ள். முன்புபோலப் பின்பும் படைப்பாதி முததொழிலும் நடாத்தியருளச சிவபிரான் திருவுளங்கொணடு முதலிலே விஷ்ணுவைப் படைககப் பினனர் அவ்விஷ் ணுவினது உநதியஙகமலததிலே பிரமாதோனறி உலகஙகளை முறையே படைக்கும் போது சிவபிரானது திருவாககிலே.—எ-று. (ங)

பிரணவ முதித்த ததனிடை வேதம் பிறந்தன நைமிசா ரணியத்
தருணிறை முனிவர் கண்ணுவர் கருக்க ராதியோ ரோதலுற் றவற்றின்
பொருணிலை தெரியா துள்ளமு முகமும புலர்ந்தன ரிருபபவப் போதத்
திருணமல வலிவென் றவனா பத்த னென்றொரு வேதியன் வந்தான்.

இ-ள். பிரணவமும் (அதிலே வியாகிருதியும்) அதிலே வேதங்களும் தோன்றின. நைமிசாரணிய வாசிகளாகிய கண்ணுவராதி முநிவர் அவ்வேதங்களை அத்தியயனஞ்செய்து அவற்றின உண்மைப்பொருள் தெளியாமல் அகமும் முகமும் வாடியிருக்க, அப்பொழுது நிருமலராகிய அரபத்தரென்னும் ஒரு முநிவர் வந்தார்.—எ-று. மலவலி - ஆணவசத்தி. (௬)

வந்தவே தியனை யிருந்தவே தியர்கள் வரவெதிர் நிறைஞ்சிவே றிருக்கை
தந்தவே லையிலம் மறையவன் முனிவர் தமைமுக நோக்கியீ துரைப்பான்
பந்தவே தனைசா லவாவெறுப் பகன்ற பண்பின ராயினீர் நீவிர்
சிந்தைவேம் முகி முகம்புலாந் திருந்குஞ் செய்தியா தெனவவர் சொலவார்.

இ-ள். வந்தமுநிவரை இருந்தமுநிவர்கள் வரவுநோக்கி எதிர்கொண்டு வணங்கி வேறோராசனம் இட்டபொழுது (அங்கிருந்த) அவ்வரபத்தமுநிவர் மற்றைய முநிவர்களைநோக்கி இங்ஙனங் கூறுகின்றார் (முநிவர்களே) நீங்கள் மிக்க பந்தவேதனையும் விருப்புவெறுப்புகளும் நீங்கியவர்களாயிருந்தும் அகம் வேறுபட்டு முகம்வாடியிருக்குஞ் செய்தியாதென்று வினவ (அதற்கு) அம்முநிவர்கள் கூறுகின்றார்கள்.—எ-று. (௭)

மருட்படு மாயை கழிந்தவன் மொழிந்த மறையின் றுணைசெய்தே சிகனற்
றிருட்படு மனத்தே மிருந்துமா லைய யாதுரூ பிதற்கெனக் கேட்ட
தெருட்படு மனத்தோன செப்புவான் வேதஞ் செப்பிய சிவபரஞ் சுடரோ
யுருட்படி வெடுத்துப் பொருளையு முணர்த்து மல்லது சூழ்ச்சியா தறைவீர்.

இ-ள். ஐயரோ மயக்கத்திற்கேதுவாகிய மாயையைக்கடந்த சிவபிரானருளிய வேதங்களை ஓதி அவற்றின உண்மைப்பொருளை யுணர்த்தும் ஆசாரியரின்றி அஞ்ஞான நிறைந்த மனத்தை யுடையோமாக விருக்கின்றோம் (ஆதலால்) இதற்கு ஆலோசனை யாதென்று வினவ (அதனை)க் கேட்ட அரபத்தமுநிவர் கூறுகின்றார். வேதங்களை அருளிய சிவபிரானே அருளினாலே திருவுருக்கொண்டு அவற்றின் பொருளையும் அறிவுறுத்துவார். இஃதன்றிப் பிறிது ஆலோசனையாது கூறுங்கள் (என்றுசொல்லி)—எ-று. இருத்தும் வலித்தல் விகாரம். (௮)

பண்ணிய தவத்தா லன்றியா தானும் படுபொருள் பிறிதிலை தவமும்
புண்ணிய தலத்தி னலலது பலியா புண்ணிய தலத்தினும் விழுப்ப
நண்ணிய சைவ தலத்தினி லியற்றி னலகுமச் சிவதலங் களினு
மெண்ணிய வதிக தலத்தினி லியற்றி னிருந்தவ மெளிதுடன் பயக்கும்.

இ-ள். தவங்களினாலன்றிப் பிறிதொன்றினாலும் கைகூடும் பொருளில்லை. தவங்களும் புண்ணியக்ஷேத்திரத்தினன்றிக் கைகூடமாட்டா. புண்ணிய க்ஷேத்திரங்களினும் சிறந்த சிவக்ஷேத்திரங்களிலே தவஞ்செய்தால் அது (எளிதிற்)கைகூடும். அச்சிவக்ஷேத்திரங்களினும் மதிக்கத்தக்க உயர்ந்த சிவக்ஷேத்திரத்திலே தவஞ்செய்தால் மிக வெளிதாக விரைந்து கைகூடும்.—எ-று. (௯)

அத்தகு தலமற் றியாதெனி னுலக மகிலமுந் தன்னுடம் பான
வித்தகன் சென்னிப் பன்னிரு விரனமேல விளங்கிய தலமது சீவன்
முத்தரா யெண்ணில் வானவர் முனிவோர் முயன்றுமா தவப்பய னடைந்து
சித்தமா சகனறு வறிவதென் றறநூல் செப்பிய மதுரையாந நகரில.

இ-ள். அவ்வுயர்ந்த சிவக்ஷேத்திரம் யாதெனில் விராட்புருடனது சிரசின் பன்னிரண்டங்குலத்துக்கு மேலாகக் கொள்ளப்பெற்றதும் தேவர்முனிவர் ஜீவன்முத்தராய்ச் சித்தமாசுதீர்ந்து வசிக்கப்பெற்றது மாகிய மதுரைப்பதியாம் அப்பதியிலே—எ-று.(அ)

தெளிதரு விசும்பி னிழிந்ததோர் விமான சிகாமணி யருகுதென் மருங்கின்
முளிதரு பராரை வடநிழ லிரியா முழுமுதல் வழிபடு மறவோர்க்
களிதரு கருணை முகமலர்ந் தளவா வருங்கலை யனைத்தையுந் தெளிவித்
தொளிதரு மனைய மூர்த்தியே நுங்கட் கோதிய மறைப்பொரு ளுணர்த்தும்.

இ-ள். (திருக்கோயிலின்கண்) சிறந்த இந்திரவிமானத்துக்குத் தென்புறத்தில் உலர்ந்த (பொருக்குள்ள) பருத்த அரையுடைய கல்லாலின்நீழலில் அமர்ந்த முழுமுதற் கடவுளாகிய, வழிபட்ட சநகராதிமுனிவர்க்கு எல்லாநூலையும் விளக்கி விளங்கும் உயர்ந்த தக்ஷிணாமூர்த்தியே நாமருளிய வேதங்களின் பொருளை உங்களுக்கு உணர்த்துவார்—எ-று. அளிதரு கருணை - அன்புபெற்ற அருள். (௯)

அங்கவன் றிருமு னருந்தவ விருந்த மாற்றுவா னசெல்லுமி னெனவப்
புங்கவ னருள்போல் வந்தமா தவனடிப் புனிதமா முனிவரு மங்கை
பங்கவன் மதுரைப் பதிபுகுந் தம்பொற் பணிமணிக் கோயில்புக் காழிச்
சங்கவன் கைபோல் வளைசெறி செழும்பொற் றாமரைத் தடாகநீ ராடி.

இ-ள். அவ்வுயர்ந்த தக்ஷிணாமூர்த்திசந்நிதியிலே தவஞ்செய்யச் செல்லுங்களென்றுகூற, அக்குருமூர்த்தியின் அருள்போலவந்த அவ்வரபத்தமுனிவர்பின்னே ஏனையமுனிவர்கள் மதுரைப்பதி சேர்ந்து பொற்றாமரை வாவியில் மூழ்கி—எ-று. (௧௦)

கரைகடந் துள்ளங் கடந்தவன் புந்தக் கடிதுபோய் நானகிரு வெள்ளி
வரைகடம் பிடரிற் கிடந்ததோர் மேரு வரைபுரை விமானமேற் காணு
வுரைகடம் பொருளைக் கண்களாற் கண்டாங் குமைபாகப் பிரானைநோக் கண்டு
திரைகடந் திடும்பே ரின்பவா ரியிலுஞ் சேணிலத் திலும்விழுந் தெழுந்தார்.

இ-ள். எல்லையின்றி யுள்ளத்தை விழுங்கியெழுந்த அன்புசெலுத்தச்சென்று சுவர்ணவிமானத்தில் அமர்ந்த, அகக்கண்ணால் காணக்கூடாத வேதங்களினர்த்தத்தை முகக்கண்ணாற் கண்டாற்போலச் சொக்கலிங்கப் பெருமானைத் தரிசித்து அலையற்ற பேரின்பக் கடலினும் தூரத்தே பூமியினும் விழுந்து (பின்பு) எழுந்தார்கள்.—எ-று. உரைகள் இலக்கணையால் வேதங்களை யுணர்த்தியது (௧௧)

கைதலை முகிழ்த்துக் கரசர ணங்கள் கம்பிதஞ் செயக்கண ணருவி
பெய்தலை வெள்ளத் தாழ்ந்துவாய் குழறிய பிரமன்மா லினனமுந் தேரு
மைதழை கண்ட வெள்ளிமன் றுடைய வானவர் நாயக வானோ
ருய்தர விடமுண் டமுதருள் புரிந்த வுத்தம போற்றியென் றேத்தா.

இ-ள் கரங்களைச் சிரமேற்கூப்பி நடுங்கி (மனமுருகி)க் கண்ணீர்பொழிந்து அலைகின்ற வெள்ளத்தில் (உடல்) மூழ்கி நாத்தமோறி நீலகண்டரோ, தேவநாயகரோ, விடத்தை யருந்தி அமிர்தத்தை யருளியவுத்தமரோ காத்தருளுகவென்று துதித்தது.—எ-று. ()

மறைபொருள் காணா துள்ளமா லுழந்து வாடிய வெமக்குநீ யேயந்
நிறைபொரு ளாகி நின்றனை யதற்கு நீயலாற் பொருள்பிறி தியாதென்
றிறைவனை யிறைவன் பங்கிலங் கயற்க ணிறைவியை யம்முறை யேத்தி
முறைவலஞ் செய்து வடநிழ லமர்ந்த மூர்த்திமுன் னெய்தினர் முனிவோர்.

இ-ள். (வேதங்களின்) மந்தணப்பொருளைக் காணாமல் மயங்கி வாடிய அடியேங்களுக்குத் தேவரீரே அம் மறைகளினிறைந்த பொருளாய்நின்றீர் அம்மறைகளுக்குத் தேவரீரன்றிப் பிறிதுபொருளில்லையென்று அப்பெருமானை (ஸ்துதித்து) அங்கயற்கண்ணி யம்மையாரையும் அங்ஙனம் (வணங்கி) ஸ்துதித்துப் பிரதக்ஷிணஞ்செய்து தக்ஷிணாமூர்த்தி சந்நிதியை அம்முனிவர்கள் அடைந்தார்கள்.—எ-று. (௧௩)

சீதளப் பளிக்கு மேனியும் பளிக்குச் செழுமலை பதித்ததுப் பன்ன
பாதமுஞ் செவ்வாய் மலருமுக் கணணும் பங்கயச் செங்கர நான்கும்
வேதபுத் தகமு மமுதகும் பமுநன் விழிமணி வடமுமெய்ஞ் ஞான
போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப்போதன்முன் றொழுதெழுந் தேத்தா.

இ-ள். (அடைந்து) குளிர்ந்த பளிக்கு (மலைபோல வெள்ளிய) திருமேனியும் அழகிய அம்மலையிற் பதித்த பவளம்போலும் பாதங்களும் செங்கமல மலர்போலுந் திருவாயும் மூன்று கண்களும் செந்தாமரைமலர்போலும் நான்கு திருக்கரங்களும் (முறையே வலமிடமாகிய மேற்றிருக்கரங்களிலே) உருத்திராக்கமணிமாலையும் அமிர்தகலசமும் (கீழ்த்திருக்கரங்களிலே) சின்முத்திரையும் சிவஞானபோத புஸ்தகமும் தரித்த ஒப்பற்ற தக்ஷிணாமூர்த்தி சந்நிதியிலே வணங்கி எழுந்து துதித்து.—எ-று. வேதம்-ஞானம்.

ஆணவ கன்ம மாயைகளாகிய மும்மலமு நீங்கி ஆன்மாச் சிவவியாபகத்தில் வியாப்பியமாய் இரண்டற நிற்கவேண்டுமென்ன உபதேசித்தருளினமை தோன்றக் கனிட்டை அநாமிகை மத்திமை மூவிரல்களு நீங்கித் தர்ச்சனி அங்குட்டத்தோடு இரண்டற அடங்கிநிற்குஞ் சின்முத்திரை ஒருகரமும், உபதேசப்பொருளைச் சிந்திக்கவேண்டுமென்பது தோன்ற வேதத்தை மூலமாகவுடைய சிவாகமசாரபூதமான சிவஞானபோதம் ஒருகரமும், சிந்தித்தபின் தெளிந்து நிட்டையாகிய ஞானத்தினிற்கவேண்டு மென்பது தோன்ற ஞானாமிர்த கும்பம் ஒருகரமும், வாசனாமல நீக்கத்தின்பொருட்டு முத்திபஞ்சாக்கர ஜபம் பண்ணவேண்டுமென்பது தோன்றச் செபவடம் ஒருகரமும் உடையவராயினா ரென்பார், பங்கயச் செங்கர நான்கும் வேதபுத்தகமு மமுதகும் பமுநன் விழிமணி வடமு மெய்ஞ் ஞான போதமுத் திரையுந் தரித்ததோர் தனிமைப் போதன என்றார்.

"மும்மலம் வேறுபட் டொழிய மொய்த்துயி
ரம்மலர்த் தாணிழ லடங்கு முண்மையைக்
கைம்மலர்க் காட்சியிற் கருதுவ நல்கிய
செம்மலை யலதுளஞ் சிந்தி யாதரோ"

எனத் திருவானைக்காப் புராணநூலுடையார் கூறியவாற்றால், சின்முத்திரை கொண்டமை உணர்க. (௧௪)

வடநிழ லமர்ந்த மறைமுதன் மேதா மனுவெழுத் திருபது மிரண்டுந்
திடமுற வரபத் தன்றனை றெளிந்து தேணிறை மதிமுத லடைவிற்
படுமதி யளவுந் தருப்பண மோமம் பார்ப்பன வூண்டிமுப் போது
மடைவுற நுவன்று நோற்குமா தவர்முன் னருமறைப் பொருள்வெளி வருமால்.

இ-ள். கல்லானிழலில் எழுந்தருளிய மேதாதக்ஷிணாமூர்த்தி மந்திராக்ஷரம் இருபத்திரண்டும் அரபத்தமுனிவருபதேசத்தால் உறுதிப்படத் தெளிந்து கார்த்திகைமாசம் பூரணைமுதல் முறையினால்வரும கார்த்திகைமாசம் (பூரணை) வரையும் மூன்றுகாலமும் விதிப்படி ஜபித்துத் தர்ப்பணம் ஓமம் பிராமணபோசனம் இவைகள் செய்து தவம்புரியும் அம்முனிவர்கள் முன்பு தக்ஷிணாமூர்த்தி வெளிப்பட்டு வந்தருளுகின்றார்:—எ-று. பதினருமுறை ஜபித்தால் ஒருதர்ப்பணமும் நூறுமுறை ஜபித்தால் ஒரு ஓமமும் ஆயிரமுறை ஜபித்தால ஒரு பிராமணபோஜனமும செய்கவெனபது விதி. (௧௫)

கலிவிருத்தம்.

மானமுனி வோரதி சயிப்பவட நீழன்
மோனவடி வாகிய முதற்குரவ னெண்ணான்
கூனமி லிலக்கண வுறுப்பக்வை நாலுன்
கானவொரு காளைமறை யோன்வடிவ மாகி.

இ-ள். அம்முனிவர்கள் அதிசயிக்க, மௌனரூப முதலாசிரியராகிய தக்ஷிணாமூர்த்தி குற்றமற்ற முப்பத்திரண்டிலக்கணமுடைய அவயவங்களும பதினறு வயசுமுள்ள ஒப்பற்ற காளைப்பருவத்தோடுகூடிய பிராமணவேடம் பூண்டு.—எ-று. (௧௬)

நீண்டதிரி முண்டமழ னெற்றிவிழி பொத்தக்
காண்டகைய கண்டிகை வளைந்தொழுகு காதிற்
பூண்டகுழை கௌவிய பொலனசெய்பல காசு
சேண்டவ ழிளங்கதிர் சிரித்திருள் சிதைப்ப.

இ-ள். நீண்ட திரிபுண்டரவிபூதி நெற்றியின் கண்ணதாகிய அக்கினிக்கணணை மறைக்கவும் காணத்தக்க அழகினையுடைய (கழுத்திலிட்ட) கண்டிகையொடு வளைந்து நீண்ட திருச்செவியில் அணிந்த குண்டலத்தில அழுத்திய அழகிய இரத்தினங்கள் ஆகாயத்திலே தவழும் இளஞ்சூரியனிலும் ஒளிவீசி இருளைப் போக்கவும்.—எ-று. (௧௭)

உத்தரிய வெண்படம் வலமபட வொதுங்க
முத்தவள நூலினெடு முத்தமிடை யிட்டு
வைத்தணியு மக்கவட மாலையெறி வாளாற்
பத்தரா மறைத்தமல பங்கவிருள் சிந்த.

இ-ள். வெள்ளிய வத்தரியமாகிய வஸ்திரம் வலப்புறம் ஒதுங்கவும் வெள்ளிய வுபவீதத்தொடு முத்துகள் இடையிட்டுக் கோவைசெய்தணிந்த உருத்திராக்கமணிமாலை வீசும் ஒளியால் முனிவர்களை மறைத்த ஆணவபாசவிருள் சிதறவும்.—எ-று. (௧௮)

கண்டிகை தொடுத்திரு கரத்தினெடு வாகு
தண்டினிடு மாலைவிட வாளரவு தள்ள
வெண்டுகிலி னைவிரி கோவண மருங்கிற்
றண்டரிய பட்டிகை வளைநதொளி தழைப்ப.

இ-ள். உருத்திராக்ஷங்கள் கோத்து இரண்டு கைகளிலும் புயங்களிலும் அணிந்த மாலைகள் பாம்பணிகளை ஒழிக்கவும் வெள்ளிய வஸ்திரத்திறைற் போக்கிய கோவணத்தின் பக்கத்தில நீங்காத பட்டிகைசூழ்ந்து விளங்கவும்.—எ-று. (க௯)

வண்டுவரி பாடுவன போலமலர் பாத
புண்டரிக மேலுழல் சிலம்புகள் புலம்பத்
தொண்டரக மாசிரு ணிதத்துமுடி சூட்டு
முண்டக மலர்ப்புறம விறறகழன் முழங்க.

இ-ள். வண்டுகள் இசைபாடுதல்போல மலர்ந்த பாததாமரைகளின்மீது சூழ்ந்த சிலம்புகள் ஒலிக்கவும் அடியார்களது அகக்குற்றமாகிய மலவிருளைப்போக்கி அவர்கள் முடியிற் சூட்டும் செங்கமல மலர்போலும் (வலத்) திருவடியினகண் வீரக்கண்டை முழங்கவும்.—எ-று. (உ௦)

ஏதமில பவித்திரம வலக்கர மிமைப்பப
போதமவரை புத்தக மிடக்கையது பொற்ப
வோதியுண ராதறி யோலமிடும வேதம
பாதுகைக ளாகியிரு பாதமலா சூட

இ-ள். குற்றமற்ற பவித்திரம் வலத்திருக்கரத்தில விளங்கவும் சிவஞானபோதம் எழுதிய புஸ்தகம் இடத்திருக்கரத்தில அழகுபெறவும் வேதங்கள் பாதுகைகளாய்த் திருவடிக் கமலங்களைச் சூடவும்.—எ-று. சிவஞானபோதம், போதமெனத்தலைக்குறையாயிற்று. (உக)

திருக்கைலாச மலையிலே, அருள்வடிவாகிய கல்லாலமர நிழலிலே, தக்ஷிணாமூர்த்தியாய் எழுந்தருளியிருந்து, திருநந்திதேவருக்குக் காமிகாதி எல்லா ஆகமங்களின் ஞானபாதப்பொருள் முற்றும் மாறுகோளின்றி இனிது விளக்குமாறு திருவுளங்கொண்டு அத் திவ்வியாகமங்களுள்ளே பதினோராவது ஆகமமாகிய ரௌரவாகமத்துச் சிவஞானபோதபடலப் பன்னிரண்டு சூத்திரமும் உபதேசித்தருளினமையால, நைமிசவனமுனிவர்கள்பொருட்டுக் குருமூர்த்தங்கொண்டருளியபோது அந்தச் சிவஞானபோத புஸ்தகத்தோடு வந்தருளினரென்பார், போதம்வரை புத்தக மிடக்கையது பொற்பவென்றார்.

திருநந்திதேவர் பின் சிவஞானபோதத்தினைச் சனற்குமாரமுனிவருக்கு அருளிச்செய்தார். அவர் சத்தியஞானதரிசனிகளுக்கு அருளிச்செய்தார். அவர் பரஞ்சோதிமுனிவருக்கு அருளிச்செய்தார். பின்பு அப்பரஞ்சோதிமுனிவர் திருக்கைலாசமலையினின்று நீங்கி மெய்யுணர்வின் முற்றுப்பேறுடையராய்த் திருவெண்ணெய் நல்லூரில அமர்ந்த மெய்கண்டதேசிகருக்கு அச்சிவஞானபோதத்தினை நல்கி இதனைத் தமிழ்நாட்டார் உணர்ந்துய்தற்பொருட்டு மொழிபெயர்த்து வார்த்திகப்பொழிப்புரைக்குமாறு அருளிச்செய்ய அவ்வாறே மெய்கண்டதேசிகர் தமிழில் மொழிபெயர்த்துத் திருத்துறையூர் அருணந்திசிவாசாரியர் முதலாயினாருக்கு உபதேசித்தருளினார். அருணந்திசிவாசாரியர் முதனூலாகிய திரமிட சிவஞானபோதத்திற்கு வழிநூலாகச் சிவஞானசித்தியார் அருளிச்செய்து திருப்பெண்ணாகடத்து மறைஞானசம்பந்தசிவாசாரியருக்கு முதனூல் வழிநூல்களை உபதேசித்தருளினார். அவர் அந்நூல்களைக் கொற்றவன்குடி உமாபதிசிவா

சாரியருக்கு உபதேசித்தருளினர். அவர் புடைநூலாகிய சிவப்பிரகாசம் அருளிச்செய்து, மூன்று நூலையும் அருணமச்சிவாயதேசிகர் முதலாயினருக்கு உபதேசித்தருளினர். அருணமச்சிவாயதேசிகர் திருவாவடுதுறைச் சித்தர்சிவப்பிரகாசதேசிகருக்கு உபதேசித்தருளினர். அவர் நமச்சிவாயமூர்த்திகளுக்கு உபதேசித்து அத்தேசிகரை ஆதின முதற்குரவராக நிறுத்தியருளினர். அந்த நமச்சிவாயதேசிகர்மரபில் அநுக்கிரகம்பெற்றவரும் அகஸ்தியமகாமுநிவர வரததால உதித்தவருமாகிய சிவஞானயோகிகள் திராவிட சிவஞானபோததிற்கு மகாபாஷ்யஞ் செய்தருளினர். கந்தகுருபரம்பரைச் சூரியனார் கோயில் ஆதீன முதற்குரவராகிய சிவாக்கிரயோகிகள் வடமொழிச் சிவஞானபோதத்திற்குப் பாஷ்யம் இயற்றியருளினர்.

வடமொழிச் சிவஞான போதத்திறுதிப பாயிரத்திலே:—

ஸௌரவாவுா மஹெளெஸைவவிஜ்ஞா நம்ஸஹமெ நாதிதஃ।
ஸிவஜ்ஞாநெசுவாணாம்ஸத்ஜோயெவ நதிமெநை॥ எனவும்,

தெனமொழிச சிவஞானபோதத திறுதிப் பாயிரததிலே ;—

"எந்தை சநற்குமர னேத்தித தொழவியலபாய
நந்தி யுணாந்தருளு ஞானநூல—சிந்தைசெய்து
தானுணாததான மெய்கணடான றரணியோா தாமுணர
வேதுதிருட் டாந்ததா லின்று." எனவும்,

உமாபதிசிவாசாரியா அருளிய புடைநூலாகிய சிவப்பிரகாசத்திலே:—

"தேவாபிரான் வளாகயிலை காவல் பூண்ட திருநந்தி யவாகணத்தோர் செல்வர் பாரிற், பாவியசத் தியஞான தரிசநிக ளடிசேர் பாஞசோதி மாமுநிகள பதியாம்வெண்ணெ; மேவியசீா மெய்கணட திறலார் மாறு விரவுபுக ழருணந்தி விறலார செல்வத், தாவிலருண மறைஞான சம்பந்த ரிவரிச சநதானத் தெமையாளுந் தனமையோரே."
எனவும,

திராவிட மாபாஷ்யகாரா மொழிபெயாதத காஞசிப்புராணததிலே:—

"கயிலாய பரமபரையிற் சிவஞான போதநெறி காட்டும் வெணணெ
பயிலவாய்மை மெய்கணடான சநததிகோா மெய்ஞ்ஞான பாநு வாகிக்
குயிலாரும் பொழிற்றிருவா வடுதுறைவாழ குருநமச்சி வாய தேவன்
சயிலாதி மரபுடையோன றிருமரபு நீடூழி தழைக மாதோ." எனவும்

கூறியவாறாறல், திருககயிலாச பரமபரையிற் சிவஞானபோதநூல் தென்னாடு உய்யும்வண்ணம வந்தமை சிததிததது. சயிலாதிமரபு - திருநந்தி தேவாமரபு. (௨௧)

கள்ளமுள ரிக்குண்முரல் காலையறு கால
புள்ளொலியி னுவுமித ழுமபுடை பெயாந்து
துள்ளவெழு வேதவொலி தொண்டர்செவி யாற்று
னுள்ளவயல் புக்குவகை யொண்பயிர் வளர்ப்ப.

இ - ள்.- தேனையுடைய கமலமலரினுள்ளேமுழங்கும் ஆறுகால்களையுடைய ஆண் வண்டின ஒலிபோல நாவும் இதழும் எழுந்து துள்ளத்தோன்றும் வேதவொலி, முனிவர்களின் செவியாகிய காலவழியால உளமாகிய கழனியிற் பாயந்து மகிழ்ச்சியாகிய ஒள்ளிய பயிரை வளர்க்கவும்.—எ-று. (௨௨)

சீதமணி மூரல்திரு வாய்சிறி தரும்ப
மாதவர்கள் காணவெளி வந்துவெளி நின்ரு
ணாதமுடி வாயளவி ஞன்மறையி னெந்த
போதவடி வாகிநிறை பூரண புராணன்.

இ-ள். திருவாயிலே குளிர்ச்சியும் அழகுமுள்ள நகை சிறிதுதோன்றவும் நாதத்தத்துவத்தின் முடிவும் வேதங்களின் முடிவாகிய ஞானவடிவுமாய் நிறைந்த பூரணமான பழையோராகிய தக்ஷிணாமூர்த்தி அம்முனிவர்கள் தரிசிக்கும்படி எளிதாக வெளிவந்து நின்றருளினர்—எ-று. (உரு)

அறுசீரடியாசிரியவிருத்தம்

வட்டவான் மதிகண் டார்க்கு மாக்கடன் மான மாண்ட ள
சிட்டரா முனிவர் காணாத் திருவுருவ வடிவை நோக்கி
யொட்டரு முவகை வெள்ள மேற்கொள வுந்து கூற்றை
யட்டதா மரைதஞ் சென்னிக் கணிமல ராகத் தாழ்ந்தார்.

இ-ள். சந்திரதரிசனத்தால் முழங்கும் கடல்போல மாட்சிமையுள்ள பெரியராகிய முனிவர்கள் தக்ஷிணாமூர்த்தி திருவுருவைத் தரிசித்து வற்றுதலற்ற மகிழ்ச்சிப் பெருக்கு மேற்பட்டுக் கோபித்த கூற்றுவனைக்கொன்ற திருவடிக்கமலம் தங்கள் முடிக்குச் சூடு மலராக வணங்கினார்கள்.—எ-று வால. வெண்மை உவா நிறைவு. (உச)

அளவறு கலைகட் கெல்லா முறைவிட மாகி வேத
விளைபொரு ளாகி நின்ற வேதிய ராண மென்ற
வளைவுறு மனத்தி னோர்த் தேசிக வள்ள னோக்கிப
பளகறு தவத்தீர் வேட்கை யாதெனப் பணிந்து சொல்வார்.

இ-ள். கலைகள் அனைத்திற்கும் இருப்பிடமும் வேதங்களில் விளைகின்ற பொருளுமாய் நின்ற வேதியரே அடைக்கலமென்று குழைந்த உளத்தையுடைய முனிவர்களை அருட்கொடையினராகிய தேசிகமூர்த்தி திருக்கண் சாத்தியருளிக் குற்றமற்ற தவத்தையுடைய முனிவர்களே உங்கள் விருப்பம் யாதென்று வினவியருள (அதற்கு முனிவர்கள்) வணங்கி விண்ணப்பஞ்செய்வார்கள்.—எ-று. சொல்வடிவந் தமது சத்தியும் பொருள்வடிவந் தாமுமாதலால், கலைகட்கெல்லா முறைவிடமாகி வேதவிளைபொருளாகி நின்ற வேதியவென்றார்.

சாமவேதத்திலே பிரபத மந்திரத்திலே (சிவபிரானைநோக்கி) "நீர் தேவர்களுள்ளே பிராமணராயிருக்கிறீர், யான் மானுடருள்ளே பிராமணன், பிராமணன் பிராமணருடைய பாதத்தில் விழவேண்டும்" என்றும்,

சாந்தோக்கியோபநிடதத்திலே:—"சிவபிரான் தேவர்கள் அனைவர்க்கும் பிராமணர் விஷ்ணு க்ஷத்திரியர் பிரமா வைசியர்" என்றும்,

பராசரோப புராணத்திலே :—(பிராமணன் உருத்திரன், க்ஷத்திரியன் விஷ்ணு, பிரமா வைசியன், இந்திரன் சூத்திரன், ஏனையதேவர்கள் சங்கரஜாதிகள் எனனும் பொருளுடைய) ப்ராஹ்மணோ ஹரவாந் ருத்ர: க்ஷத்ரியோ விஷ்ணுர்வைச்யோ ப்ரஹ்மா வைச்ய: இந்த்ரோ ஜ்ஞாத்வா சூத்ர: ஸங்கராஸ்து தேவா: என்றும்,

ஆநந்தகிரி என்பவராலே செய்யப்பட்ட சங்கரவிஜயத்திலே:—(பிராமணருக்குத் தெய்வம் சம்பு, க்ஷத்திரியருக்குத் தெய்வம் விஷ்ணு, வைசியருக்குத் தெய்வம் பிரமா; சூத்திரருக்குத் தெய்வம் இந்திரன் என்னும் பொருளுடைய) விப்ராணாம் தைவதம் ஶம்பு: க்ஷத்ரியாணாந்து மாதவ: வைஶ்யாநாந்து பவேத்ப்ரஹ்மா ஶூத்ராணாம் மகநாயக:, என்றுங் கூறியிருத்தலாலே சிவபிரான் வேதியரென்பது கண்டுகொள்க.

இக்கருத்து நோக்கியன்றே, பேருபாகிய மேலைச்சிதம்பர புராணநூலுடையார் :— "திருமார்பன் முதலான தேவருக்கெல் லாமறையோன் சிவனே யாமென், றொருவாய்மை மறைகளோந்த துண்மையெனத் தெளிந்துலக முய்ய முத்தீ, மருவாருங் குழலுமைபத் தினிவளர்ப்ப விடக்கரத்து வயங்கவேந்திப், பெருவாழ்வு தரவரசம் பலத்தாடுமே பேரொளியைப் பேணி வாழ்வாம்" என்று கூறினர். (உ௫)

அடியரோ முய்யு மாறு முலகெலா மளிக்கு மாறும்
படியிலா வரத்த வேதப் பயனருள் செய்தி யென்னக்
கொடியமா பாசந் தீர்ப்பான் குரவனம் முநிவ ரோடு
முடிவிலா விலிங்க முன்போய் மறைப் பொருள் மொழிவதானன்.

இ-ள். அடியேங்கள் பிழைக்கும் வண்ணமும் உலகமுற்றும் பாதுகாக்கும் வண்ணமும் ஒப்பற்ற சிறப்புடைய வேதங்களின் பொருளை உபதேசித்தருளுமென்று விண்ணப்பஞ்செய்ய (அதற்கு அம்முநிவர்களின்) மிகக்கொடிய பாசங்களை ஒழித்தற்பொருட்டுக் குருமூர்த்தியாக எழுந்தருளிய சிவபிரான் அம் முநிவர்களோடும் சுயம்புமூர்த்தியாகிய சொக்கலிங்கப்பெருமான் சந்நிதிசேர்ந்து வேதங்களின் பொருளை அருளுவாராயினா—எ-று. (உ௬)

அந்தணிர் கேண்மின் சால வருமறைப் பொருள்க ளெல்லா
மந்தண மாகு மிந்த மறைப்பொருள் கேட்ட லாலே
நந்திடு துக்க மெல்லா நண்ணுறு தகலும் பாச
பந்தனை கழிக்கும் வீட்டின் பயனுக்குங் கருவி யாகும்.

இ-ள். முநிவர்களே கேளுங்கள் அரிய வேதங்களின் அருத்தமுழுவதும் பெரிதும் இரகசியமாகும் இதனைக் கேட்டலாலே விருத்தியாகின்ற துன்பமுற்றும் நீங்கும் (அன்றி அக்கேட்டலானது) பாசபந்தத்தை ஒழிக்கின்ற வீடுபேற்றின் பயனுக்குஞ் சாதனமாகும்.—எ-று. (உ௭)

உத்தம சயம்புக் குள்ளு முத்தம தரமாய் மேலாந்
தத்துவ மாகு மிந்தச் சுந்தர சயம்பு லிங்க
நித்தமாய் மறைகட் கெல்லா நிதானம தாகி நீங்காச்
சத்தியப் பொருளு மாகித் தயங்குறு மென்பர் நூலோர்.

இ-ள். உத்தம சயம்புலிங்கங்களில் மேம்பட்ட உத்தம சயம்புமூர்த்தியாய் மேலான தத்துவாத்துவின் வடிவாகிய இச் சொக்கலிங்கசயம்புமூர்த்தி நித்தியமாய் வேதங்களுக்கெல்லாம் ஆதிகாரணமாய் நீங்காத மெய்ப்பொருளுமாய் விளங்குமென்பர் நூலாசிரியர் (அனைவரும்).—எ-று. (உ௮)

நிறைபராற் பரம்விஞ் ஞாந நிகழுமெய் ஞாந மின்ப
மிறைபரம பிரம மென்று மேகமே வாத்வி தீய
முறைபரஞ் சோதி யென்று மொழிவில்ல விலிங்கந் தன்னை
மறைமுடி வான வெல்லா மளமபட வுரைக்கு மாலோ.

இ-ள். வேதாந்தங்களெல்லாம நித்தமாகிய இந்தச் சுந்தரலிங்கமூர்த்தியை மேலானதற்கு மேலானது விஞ்ஞாநம சச்சிதாநந்தம் பரம்பிரமம ஏகமே வாத்விதீயம பரஞ்சோதியென்று செவ்விதாகக்கூறும்.—எ-று. ஏகமெனறதனல்,—சஜாதீயரகிதமும், ஏவகாரததினல,—விஜாதீயரகிதமும, அதவிதீயமென்றதனல்-சுவகதபேத ரகிதததுவமும பெறப்படும். (உகூ)

ஆகையான் மறையு மொன்றே யருமறைப பொருளு மொன்றே
சாகையா லநந்த மாகுந் தகுமவன் மாயை யானே
யோகையா லயனை யாக்கி யுலகமும மையும்வே தத்தின்
பாகையா மறிவு சாரப பணமறை பிரமற் கீந்தான.

இ-ள். ஆதலால் வேதமும ஒன்றே வேதார்த்தமும் ஒன்றே அந்தச் சுந்தரேசரது மாயையினலே அவ்வேதம சாகாபேதப்பற்றி அநந்தமாம் (அங்ஙனமே வேதப்பொருளும் அநந்தமாம. உணமையால அநந்தமிலலை) மகிழ்ச்சியினலே (சுநதரேசா முதலிலே) பிரமாவைப் படைதது மூவுலகததாரும (அபபிரமாவினல்) வேதத்தின் பகுதத நிவை அடையுமவணணம பணணுடைய வேதஙகளைப பிரமாவுக்குக் கொடுத்தருளினர்.—எ-று. (௩0)

மலர்மக ஞகி மூனறு வையமும படைத்து மாலா
யலவற நிறுதத முக்க ணுதியா யழிததம் மூவர்
தலைவனுய்ப பரமா காச சரீரியாய் முதலீ றின்றித்
தொலைவருஞ் சோதி யாமிச் சுநதர விலிங்கந் தன்னில்.

இ-ள். பிரமாவை அதிஷ்டிததுநின்று உலகங்களைப் படைத்து, விஷ்ணுவை அதிஷ்டிததுநின்று காதது, உருத்திரமூர்த்தியை அதிஷ்டித்துநின்று அழித்து, இந்த மும்மூர்த்திகட்கு தலைவராயப் பரமாகாச சரீரமுடையவராய் ஆதியந்தமின்றி நித்திய சோதிரூபராகிய இநதச் சொக்கலிங்க மூர்த்தியிடத்தில்.—எ-று. (௩க)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

ஆதியி லான்ம தத்துவ மான வலர்மகன் பாகமு நடுவி
னீதியில் விச்சா தத்துவ மான நெடியவன் பாகமு முடியி
லோதிய சிவதத் துவமென லான வுருத்திர பாகமு முள்ள
சோதியின் பாக சர்வதத் துவமுந் தோற்றிடு மிவைகளின் முறையால்.

இ-ள். முறையினல் அடியிலே பிரமபாகமாகிய ஆன்மதத்துவமும் நடுவிலே விஷ்ணுபாகமாகிய வித்தியாதத்துவமும் முடியிலே உருத்திரபாகமாகிய சிவதத்துவமும் உள்ளன. இவைகளிலே ஈசபாகமாகிய சர்வதத்துவங்களுந் தோற்றும் (பின்பு)கிரமமாக.—எ-று. (௩உ)

ஓதரு மகார முகாரமே மகார முதித்தபின் விந்துவி னேடு
நாதமு முதிக்கு மிவைபிர ணவமா நவியத்த தாரக மதனிற்
பேதவி யாகிருதியுமே சமத்த பிரணவந் தன்னிலே சமத்தக்
கோதிலா வியாகி ருதியுமே யுதிக்குங் கொள்வியா கிருதிக ளிரண்டின்.

இ-ள். சொல்லுதற்கு அரிய அகார உகார மகாரங்கள் தோன்றியபின் விந்து நாதங்கள் தோன்றும் இவ்வைந்துங்கூடிப் பிரணவமாம வியஷ்டிப் பிரணவத்திலே வியஷ்டி வியாகிருதியும் சமஷ்டிப் பிரணவத்திலே சமஷ்டி வியாகிருதியும தோன்றும். கொள்ளத்தக்க அவ்வியாகிருதிகளிரண்டில.—எ-று. சமஸ்தம - தருமி. சமஷ்டி - தருமம். நகாரம் - சிறப்புப்பொருளில் வந்தது.

சூக்கும பஞசாக்கரமென்னும் சமஷ்டிப் பிரணவமாகிய ஓங்காரத்துககுச் சிவ பெருமானே பொருளாம். வியஷ்டிப பிரணவமாகிய அகாராதிகட்கு முறையே பிரமா விஷ்ணு உருததிரன மகேசுரன் சதாசிவன பொருளாம் என்பது வடநூல் ஆலாசிய மா ன்மியம் பததா மத்தியாயததிற் காணக.

சிவபிரான் அமாந்தருளும் பீடமும், மற்றைததேவர்கள அனைவர்க்கும் பிறப் பிடமும, சமஸ்தமநதிரங்களுக்கும் வேதங்களுக்கும மூலமும், காசியிலே மரிப்பவரு கககு எம்பெருமான் உபதேசித்தருளும் தாரகப்பிரமமும் ஆதலால், பிரணவத்தைத தாரக மெனறார். (கூகூ)

பாதமூன் றுளகா யத்திரி யிரண்டுற் பவிக்குநன் முறையினு லிதனில்
வேதமோ நானகும் பிறந்திடும் பின்னர் விளங்குதா ரகமுதன் மநுக்கள்
கோதறு மகார மாதியக் கரங்கள் கொன்சிவ ஞானவுற் பவத்திற்
கேதுவாயப பயிலகா மிகமுத லாகமங்க ளிவ்வர னடுமுகத் துதித்த.

இ-ள். நல்ல முறையினுல் மூனறு பாதங்களுடைய வியஷ்டி காய்த்திரியும் சமஷ்டிகாயத்திரியுந் தோன்றும் இக்காயத்திரியில் நான்கு வேதங்களும் தோன்றும். பின்பு பிரணவததை முதலிலுடைய மந்திரஙகளும் அகாரமுதலிய அககரங்களும் மகிமையுள்ள சிவஞானேற்பத்திக்கு ஏதுவாகப பொருநதிய காமிகாதி யிருபத்தெட்டுத திவ்வியாகமங்களும இந்தச் சிவபிரானது ஈசானமுகத்தில் உற்பவித்தன.—எ-று.

"காயததிரிமந்திரப்பொருள் சிவபிரானே சவிதாவன்று என்னை? அங்கு ணிடத்துள்ள பர்ககசப்தம் சிவபிரானுககே இடுகுறியாதலானும, அவரே அறிவைப் பிரேரிப்பவ ராதலானுமென்பது. அபபர்க்க சப்தம் அகாராந்தமன்று ஸகாராந்தமெ னின் ;—அதனகத்துள்ள யதசப்தமும தத்சப்தமும் முறையே புலலிங்கமும் நபும்ஸக லிங்கமு மாகலிற் றமமுள் அந்வயமுறா. ஆகவே, அந்வயமாதற்குரிய அபின்னலிங்கத் தை அவாய் நிற்கும. அதனுல், ஸகாராநதமெனறல் பொருந்தாதெனை மறுக்க. வியாகரணநூலார் அஸுன் பிரத்தியயமாக கஞ்னுப்பிரத்தியயமாக ஈற்றிலவந்த பதங்களுக்கு ஆதியில் உதாத்தசுரம வருமென்றலின. மைததிராயண சுருதியில் அகாராந்தமாகக் காணப்படுதலின், திரிந்த காரகமாகிய கஞநதமேயென்க இந்த மைத்திராயண சுருதி 'பர்க்கா தியாணிக்கற்பாலர்' எனறும், 'பாக்கப்பெயருடையான் உருத்திரன' என் னுங் கூறுமுகத்தானே அது ஸகாராந்தமென்றலை நிராகரிததது. காயததிரியின் முதற் பாதத்தைக கடாவிடைகளாற் கூறி, இரண்டாம் பாதம் 'பர்க்கமயம்' என்ற தலவகாரிப் பிராம்ஹமணமும் ஸகாராந்தமென்றற் கிடந்தராது.

அற்றேல், 'எந்தப்பர்க்கன் எமது புத்தியைப் பிரேரிக்கின்றான் அதனைத் தியானிக்கின்றேம்' என்று லிங்கபேதமபோதர அந்வயித்தல் நமக்குரு சாலாதெனின்;—காயத்திரிக்குரிய பொருளாகிய சிவபிரானது பெயராகிய பர்க்கசப்தம் அவரின் வேறாகாத ஒளிக்கு முணமையின், 'அதனைத் தியானிக்கின்றேம்' என்பது அந்தப் பர்க்கனுடையவுடைத்தாய வொளியைத் தியானிக்கின்றேமென்று பொருள்படுதலின், எமக்கது சாலாமை யாண்டையதென்க. இது சாயபமிருதி நூற்றுணிபென்க. 'அதுவே யக்கரம்' என்றும், 'அது சவிதாவினுன வரிக்கப்படும்பொருள்' என்றும், 'அதனினின்றும் அறிவங்குரித்தது' என்றுஞ் சுவேதாசுவதரோபநிடதங் கூறுதலினுனும் காயத்திரிக்குரிய பொருள் சிவபிரானேயென்பது தெற்றெனவுணர்க இக்காயத்திரிமந்திரம் பர்க்கராகிய சிவபிரானையே யுணர்த்துவதாயினும், சவிதாவென்னுஞ் சப்தமாத்திரைபற்றி ஆதித்தன்மேலுஞ் செல்லும். பிறவெம் ஒரு கடவுளையுணர்த்து மந்திரம் சப்தவொப்புமையாற பிறகடவுண்மேலுஞ் செலலுமென முனிவர் கூறுவர்; அது அருக்கனைத் தெய்வமாகவுடைய இருக்கு விசுவதேவசப்த வொப்புமையாற் பிதிராமேலும், புஷ்யசப்த வொப்புமையாற பூடண தேவாமேலுஞ் செல்லுமாற்றானுணர்க. பிறவுமன்ன. இனியிவ்வாறன்றி, கிரகபூஜாவிதியில் 'சம' என்று தொடங்கிய மந்திரத்தாற் சனிபூஜையும், 'உதபுதத்யசுவ' என்றதனுற பூதபூஜையுங் கூறுதலுங்காண்க இருக்கு யசுர் சாமமெனனும் வேதமூன்றையு நனகுணாநத பிரமன் அவற்றின சாரமாகிய மூன்றுபாததை யுடைததாய இக்காயத்திரியைக் கண்டான்'' என்று மநுவாற கூறப்பட்டது என்னும் பொருளைச சதுர்வேததாற்பரியசங்கிரகம். அறுபதாஞ் சுலோக முதற பதினொரு சுலோகங்களாற் காணக

பிரணவமும் காயத்திரியுஞ் சிவபிரானையே பொருளாகவுடையன வெனவே இடையிலுள்ள வியாகிருதியுஞ் சிவபிரானையே பொருளாகவுடைததாய்க் காயத்திரியின் அநதாக்கதமாயிருத்தல கணடுகொளக. (௬௪)

கீட்டிசை முகத்தோன் றடுத்தநா லைந்திற் கிளைத்ததா லிருக்கது தெனபா
லீட்டிய விரண்டாம் வேதநூற் றென்றே டெழுநதது வடதிசை முகத்தி
னீட்டிய சாம மாயிர முகததா னிமிர்ந்தது குடதிசை முகத்தி
னூட்டிய வொன்ப தாருவொடு கிளைத்து நடநதது நானகதா மறையே

இ-ள் தற்புருட முகததிலே இருபததொரு சாகையுடைய இருக்குவேதமும், அகோரமுகத்திலே நூற்றொரு சாகையுடைய யசுர்வேதமும் வாமதேவமுகததிலே ஆயிரஞ் சாகையுடைய சாமவேதமும் சத்தியோசாதமுகத்திலே ஒன்பது சாகையுடைய அதர்வவேதமும் உதித்தன —எ-று.

வேத சிவாகமங்களுக்குத் தோற்றம் இன்னும் பலவாகக் கூறுதல் சிருட்டிபேதமாம்.

வேதம் இங்ஙனம் உதித்ததேல, வேதம நித்தியமென்னுஞ் சுருதிகளோடு முரணும் பிறவெனின் முரணாது: நித்தனாகிய பரமசிவனாற் செய்யப்பட்டமையானும் இறுதிக்காலத்தும் பரமசிவனிடத தொடுங்கிய வேதம் படைப்புககாலத்து முன்போலவே தோன்றுதலானும் நித்தமென் றுபசரிததுக் கூறப்படுமாகலின். சிவாகமங்களை நித்தமென்பதும் இககருத்தே பற்றியென்க. அங்ஙன மல்லாக்கால் 'வேதம் பரமசிவனாற் செய்யப்பட்டது' என்னுஞ் சுருதிகளோடும் 'அட்டாதச வித்தைக்கு முதற்கருத்தாவாகிய இச்

சூலபாணி' என்றற்றொடக்கத்துப் புராண வசனங்களோடு முரணுமாறறிக. 'வேதம் அறிதற்கருவி.

சிவபிரான் யாதும் பிரயத்தனமில்லாமலும் ஆயாசமில்லாமலும் வேதத்தை அருளிச்செய்தார் என்பது தோன்ற, பிரகதாரணியோபநிடதம் இருக்காதிகளைப்,பிரமத்தினது சுவாசம் என்று கூறிற்று.

யசுர்வேதத்திலே முப்பத்தோராம் அத்தியாயத்திலே ஏழாமந்திரத்திலே;—'பரம பிரமத்தினின்றும் இருக்கு யசுர் சாமம் அதர்வம் தோன்றிப் பிரகாசிக்கின்றன' என்று கூறியிருக்கின்றது.

யசுர்வேதத்திலே:—'யஜ்ஞகர்த்தாவாகிய ஈசுவரனிடத்தினின்றும் இருக்குகளும சாமங்களும் சந்தசுகளும் உண்டாயின. அவரிடத்தினின்றும் யஜுசும் உண்டாயிற்று அவரிடத்தினின்றும் குதிரைகள் பசுக்கள் உண்டாயின' என்னுஞ் சுருதிகளையுங் காண்க.

சைவபுராணத்திலே வாயவ்விய சங்கிதையிலே :—

"அங்காநி வேதாஶ்சத்வார: மீமாம்ஸா ந்யாயவிஸ்தர: | புராணம்
தர்மஶாஸ்த்ரஞ்ச வித்யா ஹ்யேதாஶ்சதுர்தஶ || ஆயுர்வேதோ தநுர்வே
தோ காந்தர்வஶ்சேதி தே த்ரய: | அர்த்தஶாஸ்த்ரம் சதுர்த்தந்து வித்யா ஹ்ய
ஷ்டாதஶைவ தா: || அஷ்டாதஶாநாமேதாஸாம் வித்யாநாம் பிந்நவர்த்ம
நாம் | ஆதிகர்த்தா கவி: ஸாக்ஷாத் ஶூலபாணிரிதி ஶ்ருதி:." என்னுஞ்சுலோகங்களாலே 'பதினெட்டு வித்தைகளுக்குங் கர்த்தா சூலபாணி' என்பது காண்க.

வித்தைபதினெட்டாவன;—இருக்குமுதலிய வேதநான்கும், சிக்கை கற்பசூத்திரம் வியாகரணம் நிருத்தம் சந்தோவிசிதி சோதிடமென்னும் அங்கமாறும், புராணம் நியாயநூல் மீமாஞ்சை மிருதியென்னும் உபாங்கநான்கும், ஆயுள்வேதம் வில்வேதம் காந்தருவவேதம் அருத்தநூலென்னும் இருக்கு முதலியவற்றிற்கு உபவேத நான்கும் என இவை.

இவற்றுள் வேதநான்கும் பிரமகாண்டமும், பிரமஞானத்திற்கு நிமித்தமான கருமகாண்டமும் உணர்த்துவனவாம்; சிவாகமங்களும் பிரமகாண்டமாயடங்குமென்பர்.

வேதங்களை எடுத்தல் படுத்தல்முதலிய இசை வேறுபாட்டான உச்சரிக்குமாறு உணர்த்துவது சிக்கை, வேதங்களிற்கூறுங் கருமங்களை அநுட்டிக்கு முறைமை உணர்த்துவது கற்பசூத்திரம், வேதங்களின் எழுத்துச்சொற்பொருளியல்பு உணர்த்துவது வியாகரணம், வேதங்களின் சொற்பொருள் உணர்விப்பது நிருத்தம், வேதமந்திரங்களிற் காயத்திரிமுதலிய சந்தங்களின் பெயரும் அவற்றிற்கு எழுத்து இனைத்தென்றலும் உணர்த்துவது சந்தோவிசிதி, வேதத்திற் கூறுங் கருமங்கள் செய்தற்குரிய கால விசேடங்களை உணர்த்துவது சோதிடம்; இங்ஙனமாகலின் இவையாறும் வேதத்திற்கு அங்கமெனப்பட்டன.

பரமசிவன் உலகத்தைப் படைக்குமாறு முதலாயின கூறும் வேதவாக்கியப் பொருள்களை வலியுறுத்து விரித்துணர்த்துவது புராணம், இதிகாசமும் ஈண்டடங்கும்.

*வேதப்பொருளை நிச்சயித்தற் கநுகூலமான பிரமாண முதலியவற்றை உணர்த்துவது நியாயநூல்.

* வேதப்பொருளின் றாற்பரிய முணர்தற்கு அநுகூலமான நியாயங்களை ஆராய்ச்சிசெய் துணர்த்துவது மீமாஞ்சை; அது பூருவமீமாஞ்சை உத்தரமீமாஞ்சையென வும் வேதமெனவும் பின்னையது வேதாந்தமெனவும் வழங்கப்படும்.

வேதமெனப்படும் பூருவமீமாஞ்சை பன்னிரண் டத்தியாயமாகச் சைமினிமுனிவராற் செய்யப்பட்டது. வேதாந்தமெனப்படும் உத்தரமீமாஞ்சை நான்கு அத்தியாயங்களையும் பதினாறுபாதங்களையும் நூற்றைம்பத்தாறு அதிகரணங்களையும் ஐந்நூற்றைம்பத்தைந்து சூத்திரங்களையும் உடையது; இந்த வேதாந்தசூத்திரம் வியாசமுனிவராலே துவைதவாக்கியரூபமாகச் செய்யப்பட்டது; என்னை? 'வேதத்தை மூலமாகவுடைய சிவாகம சாரபூதமான பன்னிரண்டு சூத்திரங்களையுடைய சிவஞானபோத சாஸ்திரத்தைத் திருநந்திதேவர் அடைந்ததுபோல மந்வந்தரங்களிலே யுகந்தோறும் உண்டான வியாசமுனிவர்கள் பரமசிவஞான சித்தியின்பொருட்டு விபூதி ருத்திராக்ஷங்களை உடல்முழுவதும் அணிந்தவர்களாகித் திருக்கைலாசமலையையடைந்து சிவபிரான் றிருவடித் தியானத்தினாலே அப்பெருமானிடத்தினின்று சூத்திரங்களை அடைந்து பிராமாணிய வாதங்களைச் செய்கின்றார்கள்' என்றும், 'இவ்விடத்திலே சூத்திரங்களென்பது சிவஞானபோதசாஸ்திர துவாதச சூத்திரங்களே' 'பாணினிமுனிவர் அகஸ்தியமகாமுனிவர் முதலியோர்களால் அடையப்பட்ட மாகேசுவரசூத்திரந் திராவிடசூத்திர முதலியவைகளால் உபநிடத சித்தாந்தத்தை அறிதற்குக் கூடாமையால்' என்றும் மணியசிவனார் இயற்றிய வித்தியாவிருத்தியிலே கூறப்பட்டமையால்.

துவைதவாக்கியரூப வேதாந்தசூத்திரத்துக்கு அவ்வாறே ஸ்ரீகண்டசிவாசாரியர் பதிபசுபாசமென்னு முப்பொருளு முத்திநிலையினு முண்மைவிளங்க முதலிலே பாஷ்யஞ்செய்தார்.

சங்கராசாரியர் சைவசித்தாந்தத்தில் உண்மைக் கருத்துடையராயினும் மாயாவாதிகள் வேண்டுகோளுக்கு இசையத் தமது வித்தியாசாமர்த்தியம் விளங்கக் கேவலாத்துவிதபரமாகப் பாஷ்யஞ்செய்தார்.

சூதசங்கிதையிலே:—"[illegible] ।
[illegible] ॥" என்பதனாலும்,

மநுஸ்மிருதியிலே:—"[illegible] ।
[illegible] ॥" என்பதனாலும்,

மகாபாரதத்திலே,— "[illegible] ।
[illegible] ॥" என்பதனாலும் சிவாகமம் பிரமாணமென்பது சித்தித்தது.

சிவபிரான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய பரமேதிகாசமாகிய சிவரகசியத்தில், ஆறாவது அம்சத்தில் சூத்திரவிதிக்கிரமத்தில்: — "[illegible] ।
[illegible]

ஜாண ஸ்வாஜா நஸ்ஹொஊ தி॥'' என்பதனால் 'வியாசமுநிவர்கள் சிவஞானசித்தியின் பொருட்டுச் சிவபிரானிடத்தினின்றும் சிவாகமசாரபூத சிவஞானபோத சாஸ்திர 'துவா' தச சூத்திரங்களை அடைந்து பிராமாணியவாத வேதாந்தசூத்திரங்களைச் செய்கின்றார்கள்' என்பது சித்தித்தது.

சிவரகசியத்திற், நவமாம்சத்தில்:— ''வ்யாஸொவஷிஷ வஹு ஸூத்ராணாம ஹெ்வதவாஷ்யாதூ நாமஸிவெஸஹெ்வ தஜெவஸு ஸூத்ராய்ஹமஸங்கரஸ்ஹெ ஷஹி தி॥'' என்பதனால் 'வியாசமுநிவர் அருளியபடி ஸ்ரீகண்டசிவாசாரியர்மூத்தியினு முப்பொருளும் விளங்குமுறையாகப் பாஷ்யஞ் செய்தமையும், சங்கராசாரியர் அத்து விதபரமாகப் பாஷ்யஞ் செய்தமையுஞ் சித்தித்தது.

அவ்வவ்வருணங்கட்கும் நிலைகளுக்குமுரிய தருமங்களை உணாத்துவது மிருதிநூல். புராணமுதலியநான்கும் வேதத்திற்கு உபாங்கமெனப்படும்.

எல்லாம் அநுட்டித்தற்குச் சாதனமான யாக்கையை நோயின்றி நிலைபெறச் செய்வது ஆயுள்வேதம். பகைவரால் நலிவின்றி உலகங்காத்தற்கு வேண்டப்படும் படைக்கலம்பயிறலை உணாத்துவது வில்வேதம். எல்லாக்கடவுளர்க்கும் உவகையாச் செயயும் இசைமுதலியவற்றை உணர்விப்பது காந்தருவவேதம. இம்மைக்கும் மறுமைக்கும் எதுவாகியபொருள்களை ஈட்டுமுபாயம உணர்விப்பது அருததநூல்.

வேதங்கள் வன்சொற்களினலே புணர்க்கப்பட்டுக் கன்மாநுசாரமாகப் பலர்க்கும் பலபொருள கொள்ளும்படி சூததிரம்போன்று தற்புருஷமாதிய நான்கு கீழ்முகத்திலே தோன்றினமையால், பொதுவாகவும், காமிகாதி ஆகமங்கள மென்சொற்களினலே புணர்க்கப்பட்டுச் சததிநிபாதமுடையார்கு அசசூததிரத்தைத் தெளித்துரைக்கும் பாஷ்யம்போன்று ஈசாநமாகிய மேனமுகத்திலே தோன்றினமையால், சிறப்பாகவும் கொளளற்பாலன.

காமிகாதி ஆகமங்களாவன:—காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகச்சிரம், அஞ்சுமான், சுப்பிரபேதம, விசயம், நிச்சுவாசம், சுவாயமபுவம், ஆக்கிநேயம், வீரம், ரௌரவம், மகுடம, விமலம், சந்திரஞானம், முகவிம்பம், புரோற்கீதம், லளிதம, சித்தம், சந்தானம, சர்வோக்தம், பாரமேசுரம, கிரணம், வாதுளம் என இருபத்தெட்டாம். இவ்வாகமங்கள் மாந்திரம் எனவும், தந்திரம் எனவும் சித்தாந்தம் எனவும் பெயாபெறும. இவ்விருபத்தெட்டுச் சிவாகமங்களுக்கும ஒவ்வொன்றுக்குக் கோடிகிரந்தமாக இருபத்தெட்டுக்கோடி கிரந்தங்களாம். இவை ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம், எனறு தனித்தனி நான்குபாதங்கள் உடையனவாயிருக்கும். இவற்றுள் ஞானபாதம் பதி பசு பாசமென்னும் திரிபதார்த்தங்களின் ஸ்வரூபத்தையும், யோகபாதம பிராணாயாமமுதலிய அங்கங்களோடுங்கூடிய சிவயோகத்தையும், கிரியாபாதம் மநதிரங்களின உத்தாரம், சந்தியாவந்தனம், பூஜை, செபம், ஓமம் என்பனவற்றையும் சமய விசேஷ நிருவாண ஆசாரியாபிஷேகங்களையும் சரியாபாதம் சமயாசாரங்களையும் உபதேசிக்கும். ஆகமம் எனபது (பரமாப்தரினின்றும்) வந்தது எனபபொருள்படும். இன்னும் ஆ என்பது பாசம் எனவும், க என்பது பசு எனவும், ம என்பது பதி எனவும பொருள் படுதலால், ஆகமம் என்பதற்குத் திரிபதார்த்த லக்ஷணத்தை உணாத்தும் நூல் என்பதே சிறந்தபொருளெனக. ஆ என்பது சிவஞாநமும், க என்பது மோக்ஷமும், ம என்பது மலநாசமுமாம் ஆதலால், ஆன்மாக்களுக்கு

மலத்தை நாசம்பண்ணிச், சிவஞானத்தை உதிப்பித்து, மோக்ஷத்தைக் கொடுத்தல்பற்றி, ஆகமமெனப்பெயராயிற்றென்று கூறலுமாம்.

ஆகமமென்பது ஆப்தவாக்கியம் ஆகமங்கள் லௌகிகம், வைதிகம், அத்தியான்மிகம், அதிமார்க்கம், மாந்திரம என ஐவகைப்படும். தற்காலத்திற் பயனற்றுவது லௌகிகம, காலாந்தரத்திற் பயன்றருவது வைதிகம, ஆத்துமவிசார வியற்கையது அத்தியான்மகம், யோகவியற்கையது அதிமார்க்கம், சிவஞானவியற்கையது மாந்திரம் எனப்படும். அவற்றுள், மாந்திரம, பிறநூலகளைப், பூருவபக்ஷமாகக் கீழ்ப்படுத்தி, மேற்பட்டு விளங்கும காமிகமுதலிய சைவாகமங்கள. ஆகமாந்தம் எனனும் ஞானப்பகுதி யோகரூடிநாமமாகிய சித்தாந்தம எனனும பெயரையுடையது. அது இரத்தினத்திரயத்திலே:— 'சித்தாந்தமே சித்தாந்தம்; அவைகளு வேறுனவை பூருவபக்ஷங்கள்' என்றும், காந்தத்திலே:— 'இந்த எல்லையில்லாத சிவபிரான் வெள்ளிமலையாகிய கைலாசத்திலே சநகர்முதலிய முனீந்திரர்களுக்குத் திரிபதார்த்தார்த்தங்களினுலே சம்மிதமாகியும் இரகசியமாகியும் ஆகமாந்தம என்னும பெயாததாகியும் உள்ள சித்தாந்தத்தைச் சொல்லிக்கொண்டிருந்தார' என்றும், சைவம் வேதப்பொருளோடு ஒற்றுமையாயிருத்தலால், வைதிகம் என்றும் வேதசாரம் என்றும கூறப்படும். சிவப்பிரகாசகமாகிய சிவஞானம் பரஞானமாம்; பசுபாசபதார்த்த போதகமாகிய வேதமுதலியன அபரஞானமாம். இராத்திரியில் மனிதர் துகண்ணும் பூனையின்கணணும் விலக்ஷணமாயிருப்பதுபோல இந்தப் பரஞானமும் அபரஞானமும் விலக்ஷணமாயிருக்கும். என்றும், கூறுமாற்றால் அறிக. லௌகிகமுதலிய ஐந்துசாஸ்திரங்களும் முறையே ஒன்றற்கொன்று ஏற்றமுடையன. காமிகத்திலே, சித்தாந்தம் மந்திரதந்திரமாகும் அதிமார்க்கம் அதனிற்றாழ்ந்தது. அத்தியான்மகம் அதிலும்தாழ்ந்தது. அதிலும தாழ்ந்தது வைதிகம் வைதிகத்திலும் தாழ்ந்தது லௌகிகம்'' என்று சொல்லப்பட்டது.

சைவாகமங்கள் வைதிகவாகியமாதலில் அபபிரமாணங்களென்று சிலமூடர் கூறுவா. 'வேதாந்த நிஷ்டைபெற்றுக் களங்கமற்றஞானிகளும், எனது சிவாகமத்திலே தற்பரர்களாகி ஞானபாதத்திலே நிலைநினறோருமாகிய இருவகையோரும் பெறற்கரிய சாயுச்சியம்பெறுவர்கள. கருமத்தையும பிரமத்தையும உணர்த்தும் வேதாகமம் என்று பிரசித்தம்பெற்ற இரண்டுமார்க்கங்களிலும நில்லாத பாவிகள் சாத்திரத்திற்கூறிய நால்வகைத் தண்டங்களாலும் தணடிக்கப்பாலாகள்' எனனும காந்தசம்பவ சிதம்பரமான்மியத்திலே சிவபிரான அருளிய பொருளையுடைய வியாசவாக்கியத்தினலே அது பேதைமையாம் எனமறுக்க.

வேதநெறிவழுவிய மாந்தாக்கே தந்திரங்கள் கூறப்பட்டன எனச் சிலநூல்களிற் கூறியதென்னையெனின்; ஆண்டுக்கூறியது வாமசோமலாகுளபைரவமுதலிய தந்திரங்களையன்றிச் சிவசித்தாந்தத்தை அன்றென்க. அது அப்பதீக்ஷிதர் இயற்றிய சிவதத்துவவிவேகவிருத்தியிலே பலபிரமாணங்கொண்டு சாதிக்கப்பட்டது.

பிரமமீமாஞ்சைக்கு நீலகண்டசிவாசாரியா இயற்றிய பாஷ்யத்திலே:—'வேதசிவாகமங்களுக்குப் பேதங்காண்கின்றிலம் வேதமே சிவாகமம்.' எனறு கூறப்பட்டது. சிவாகமம் தனது பொருட்டன்மையால், மகாமாயையும் அதனிற்றோன்றிய சிவமுதற் சுத்தவித்தையீறுகிய காரியங்களும், மலமாயாகாமங்களும், கலைமுதற் பிருதிவியீறுயுள்ள காரியங்களுமாகிய அமிதார்த்தங்களை விளக்கலால், வியாபகமாம். வேதமுதலியன தம்பொருட்டன்மையால, பிரகிருதிமுதல் பிருதிவியீறுயுள்ள காரியங்கள்மாத்திரமாகிய மிதார்த்தங்களை விளக்கலால் வியாப்பியங்களாம் என்பது மிருகேந்திரத்திலே

"மிதார்த்தத்திலும் அமிதார்த்தத்துக்கு மேன்மை (உண்டென்பர் புலவோர்கள்) என்று, கூறியவாற்றாலுணர்க.

சிவதீக்ஷைபெற்ற பிராமணர்முதலிய நான்குவருணத்தாருமே சைவாகமத்துக்கு அதிகாரிகளென்று சிவாகமம் செப்புதலாலும், சைவபுராணத்திலே பசுசாத்திரங்களைப் பற்றுதுவிட்டுச் சிவசாத்திரத்தைப்பற்றிப் பயிலும் பிராமணர்முதலிய நான்குவருணத்தாருமே ஆசாரியராவரென்று புகழப்படுவர். சிவாகமத்திற் கூறப்பட்டஞான மேஞானமென்று சொல்லப்படும் அதுவே சிவபிரானைப்பற்றின பெரியோருக்கு முத்திசாதனம் என்று கூறுதலாலும், சுவேதர் உபமன்னியு கிருஷ்ணர் அருச்சுநர்முதலியோர் சிவசித்தாந்தமார்க்க சிரவணாசரணஞ் செய்தமையாலும், தில்லைவாழந்தணர்களாகிய வைதிகப்பிராமணர்கள் சமயதீக்ஷை விசேஷதீக்ஷை நிருவாணதீக்ஷை ஆசாரியாபிஷேகம் என்னும் நான்கும்பெற்றோர்கள் எனவும், மூலாகமங்களையும் உபாகமங்களையும் ஓதி உணர்ந்தோர்கள் எனவும் சிவரகசியத்து நவமாம்சத்தில இருபத்தைந்தாம அத்தியாயத்திலும சிதம்பரமான்மியத்திலும் கூறப்படுதலாலும், சிவாகமத்திற்கூறிய தீக்ஷையின உயர்ச்சி, வாயவ்வியசங்கிதையிலே 'சைவநூலிற் கூறப்பட்டதும் பாசமூன்றையுந் தவிர்ப்பதும் மேலானதுமாகிய தீக்ஷையைத்தவிர வேறுயாதொரு ஆச்சிரமமும் இவ்வுலகத்திலே மாந்தருக்கு மேன்மையன்று; ஆதலால், தீக்ஷையினாற்றான் மோக்ஷம்: ஆச்சிரமங்களினாலும மற்றைக் கருமங்களினாலும் மோக்ஷம் இல்லை. அத்துவசுத்தியையின்றி முத்தியை விரும்பும மனிதர் கோலின்றி நடக்கத்தொடங்கிய குருடர்போலவர்; தோணியின்றிக் கடலைக்கடக்க விரும்பினவர் போலவர்'. என்று கூறுமாற்றாலும் விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்தும், விஷ்ணுமுதலிய பசுக்களைப் பசுபதியாகிய சிவபிரானொடு சமமெனக் கொள்வோராகிய புலலறிவாளர், தீக்ஷையை இகழுங்கூற்றுத் தூரம்போய்த் துச்சமாய்விடும்.

சங்கராசாரியர் இயற்றிய பிரபஞ்சசாரத்தில், பஞ்சாக்ஷரஜபவிதானப் பிரகரணத்தில்: — 'சிவாகமோக்த சிவசம்ஸ்காரரூப சடத்துவசோதந மென்னும் நிருவாணதீக்ஷையைச் செய்துகொண்டவர்களே பஞ்சாக்ஷர ஜபத்துக்கும் சிவபூஜைக்கும் அதிகாரிகள்' என்றும், இந்தத் தீக்ஷை 'ஞாநவதி கிரியாவதி என இரண்டு பேதம்' என்றும், 'தேசகாலாதிகார சம்பத்துகளுக்கு ஏற்ப இந்த அநுட்டானஞ் செய்துகொள்ளல் வேண்டும்' என்றும் சொல்லியிருக்கின்றன.

சூதசங்கிதையில், யஜ்ஞவைபவ காண்டத்தில், முப்பத்தைந்தாவது அத்தியாயத்தில்:—'பின்பு ஆகையால், சம்பிரதாய சமந்வயஞ் சொல்லப்போகிறோம' என்று தொடங்கிக்கொண்டு 'சடத்துவ சோதநாரூபமான கிரியாவதி தீக்ஷை' சொல்லப்பட்டிருக்கிறது.

சூதசங்கிதைக்கு வியாக்கியாதாவும் சதுர்வேதபாஷ்யகர்த்தாவுமாகிய வித்தியாரண்ணியர் என்று பிரசித்திபெற்ற மாதவாசாரியர் சூதசங்கிதை முப்பத்தைந்தாவது அத்தியாய வியாக்கியாநத்தில்:—"[illegible]" என்னும வாக்கியத்துக்குச் சங்கராசாரியர் பிரபஞ்சசாரத்திற் சொல்லியபடி தீக்ஷைசெய்துகொள்ள வேண்டுமென்று வியாக்கியானஞ் செய்திருக்கிறார்.

அந்த அத்தியாயத்திற்றானே:—"[illegible]" என்னும் வாக்கிய வியாக்கியாநத்தில், கூறப்பட்டிருக்கிறதல்லவா 'ஆகமிகர்களால் நிருவாணதீக்ஷையை உத்தேசித்து' என்று கூறி அந்த முறையும் எழுதியிருக்கிறார்.

கௌடப்பிரமாநந்தீயம் என்னும் உயர்ந்த அத்துவிதநூல் இயற்றியவராகிய ஸ்ரீமர்நந்தரால் செய்யப்பட்ட புருஷார்த்தப்பிரபோத சாஸ்திரத்தில்:—

"தீக்ஷாஹாவொமெவெஷிகாநா ஃவிஃஹவஃஷ்கஷீத꞉ । ஃகுஷீமெவெ ஷிக நிஷாநாஃவிஃஷாவிமோவிநிகெமொரஷிதெதாவ்நீயெ· வெஷாம் தெஷுவமெஷவா ஃக்ஷாமெளதீதாராகாயஃாம மெதாவிரூகி வஃதா꞉।" என்னுஞ் சுலோகங்களால் :—'வைதிகப் பிராமணர்களுக்குத்தீக்ஷை இல்லையென்று கற்பித்தது மூர்க்கருடைய ஏற்பாடு; வைதிகநிஷ்டருக்குங்கூட பாசவிமோசநஞ் செய்யத்தக்க தீக்ஷை உண்டு. கேநோபநிஷத்திலும் தாபநீயோபநிஷத்திலும் ஏனைய வுபநிடதங்களிலும் ஸௌதகிரி என்ற கிரியாவதிக்கு இதரமான ஞானவதிதீக்ஷை கூறப்பட்டிருக்கிறது. அநதஞானவதி தீக்ஷாவிஷயங்கள் எல்லாம் வேதங்களுக்குஞ் சம்மதமே; ஆகையால், வைதிகர்களாலும் தீக்ஷைகள் செய்துகொள்ளத் தக்கதே' என்பதுகாணக. (கூ)

அருமறை நாலவே ருகையால் வருண மாச்சிர மங்களு நான்காந்
தருமம்யா காதி கருமமு மறையின் றகைமையிற றோன்றின மறையுங்
கருமநன் ஞான.காண்டமென் றிரண்டாங் கருமநூ லிவனருச் சனைக்கு
வரும்வினை யுணர்த்து ஞானநூ லிவன்றன் வடிவிலா வடிவினை யுணர்த்தும்.

இ-ள். வேதங்கள் நான்கு பகுதியாதலால் பிரம க்ஷத்திரிய வைசிய சூத்திரர் என்னும் வருணங்களும் நான்கே பிரமசரிய கிருகஸ்த வானப்பிரஸ்த சந்நியாசங்கள் என்னும் ஆசிரமங்களும் நான்கே. தருமங்களும் யாகாதி கருமங்களும் வேதங்களின் வழியிலே தோன்றின. வேதங்களும் கருமகாண்டம் என்றும், நல்ல ஞானகாண்டம் என்றும இருவகைப்படும். கருமகாண்டம் இச்சுந்தரேசரது பூசைக்குரிய கிரியைகளைக கூறும் ஞானகாண்டம் இவரது சச்சிதாநந்த சொரூபத்தைக்கூறும்.—எ-று.

முதனுகா நீராற் சினைகுழைத் தாங்கிம் முழுமுதற் கருத்துநல் லவியின்
பதமிவன வடிவப பண்ணவர் பிறர்க்குந் திருத்தியாப பலன்றரு மிவனே
யிதபரி மேத விறுதிவேள் விகளு மெழின்மறை விரதமு நித்த
முதலிய மும்மை வினைகளு மிவன்றன் முன்செய்பூ சனைகளே யாகும்.

இ-ள். வேர்நுகரும் நீரினாலே கிளைகள் தளிர்த்தாற்போல இச்சொக்கலிங்கப் பெருமானுக்கு ஊட்டும் நல்ல இனிய அவியுணவு இப்பெருமானது அம்சபூதராகிய விஷ்ணுவாதி தேவர்களுக்கும் பிறருக்கும் திருத்தியாகக் கொண்டருளி இச்சிவபிரானே பயனை அருளுவார். (அக்கினிஷ்டோமமுதல) அசுவமேதம் வரையுள்ள யாகங்களும் வேதத்திற்கூறிய விரதங்களும் நித்திய நைமித்திக காமிய பூசனைகளும் இச்சிவபெருமான் திருமுன்பு செய்யும் அர்ச்சனைகளேயாம.—எ-று.

வேள்வி முதலிய வைதிககருமங்கள் சுவர்க்காதிலோக போகம் தருகின்ற பசுபுண்ணியங்களாயினும், பசுபதியாகிய சிவபிரானைநோக்கிச் சிறப்புவகையாக நிஷ்காமிய முறையாற் செய்யப்படிற் சிவபுண்ணியமாமென்பார் நித்தியபூசை முதலிய சிவபுண்ணியங்களோடு கூட்டி "இதபரி மேத விறுதிவேள் விகளு மெழின்மறை விரதமு நித்த முதலிய மும்மை வினைகளு மிவன்றன் முன்செய்பூ சனைகளே யாகும்" என்றார். இதனால், பசுபுண்ணிய சிவபுண்ணியங்கள் வேதசம்மத மென்பது பெறப்பட்டது:

பெறவே, பாஷ்யம்போன்று, வேதப்பொருளை விளக்குஞ் சிவாகமங்கள் பசுபுண்ணிய சிவபுண்ணியங்களைச் செப்புதல் பரமப்பிரமாணமென்பது காண்க. (கூ௪)

மறைபல முகங்கொண் டலறிவா யிளைத்து மயங்கவே நகண்டபூ ரணமா
யுறைபரம் பிரம மாகுமிக் குறியை யுறுகன்ம நெறிவழாப் பூசை
முறையினு ஞான நெறியினிப் பொருளை யருளினுன் முயக்கற முயங்கு
மறிவினுந் தெளிவ துமக்குநா முரைத்த வருமறைப் பொருள்பிறர்க் கரிதால்.

இ-ள் வேதங்கள் அநேகசாகைகளாய்த் (தேடியுமுணராது,) கதறி வாய் சோர்ந்து மயங்க (அவற்றிற்கு) விலக்ஷணமாய் அகண்டபூரணமாய் அமர்ந்த சொரூப சிவம் அதிஷ்டிதநுள்ள இந்தச் சொக்கலிங்கப்பெருமானைக் கருமகாண்டத்திற் கூறிய விதிப்படி வழுவாத பூசைமுறையினுலும், இச்சிவபிரானை (அவரது) திருவருளினல் ஞானகாண்டத்திற் கூறியபடி இரண்டறவியாபகவியாப்பியமாய்நிற்கும் உணர்வினுலும் தெளிதல் (முறையாம். முனிவர்களே) யாம் உங்களுக்கு உரைத்த (இவ்) வேதார்த்தங்கள் (அபக்குவாகளாகிய) பிறர்க்கு (உணாதல) அரியதாம். எ-று.

சொக்கலிங்கப்பெருமானை 'உபநிடதங்கள் ஏகமும் அத்துவிதீயமும் உண்மையறிவாநந்த ரூபமும பிரமமும் நிட்களமும் நிர்மலமும் சுத்தமும் சூக்குமமும் நிரஞ்சனமும் சிவமும் வேதங்களுக்கு ஆதியும் உருத்திரரும் விசுவாதிகரும் பிரபுவும் சாவஞ்ஞரும் சாவகர்த்தாவும் சாவகாரணமும் ஈசுவரரும் ஆதியந்தமற்றவஸ்துவும பராபரவிதீனரும் பரமாணுரூபரும் பரஞ்சோதிசொரூபரும் பராற்பரரும் அபபிரமேயமும் ஒப்பற்றவரும் தததுவமசியாதிவாக்கியங்களுக்கு வாச்சியருமாகச் சொல்லுகின்றன'.என்று வடநூலகூறுதலையும் உபலக்ஷணததாற்கொள்க. (கூஅ)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

கருமத்தாற் சித்த சுத்தி கரையுமச் சித்த சுத்தித்
தருமத்தான் ஞானு கங்கள் சமபவித திடுமெவ் வங்க
மருமைத்தாந தருமஞ் சாந்தி யறைதரு தாந்தி யாதி
பெருமைத்தா மியம முனுப் பிறங்குமட் டாங்க யோகம்.

இ-ள். நித்தியகருமத்தினுற் சித்தசுததியும் கூறுகின்ற அச்சித்தசுதகித்தன்மையினுல ஞானத்திறகு ஏதுவாகிய அங்கஙகளும் உண்டாகும். அவ்வங்கஙகள் தருமமும், சாந்தியும், தாந்தியாதியும், இயமம் நியமம் ஆசனம் பிராணுயாமம் பிரத்தியாகாரம் தாரணை தியானம சமாதியாகிய அட்டாஙகயோகமும ஆம்.—எ-று.

தருமம், கொல்லாமை - பொறுமை - உணமைகூறல் - பழிபாவங்களுக்கு அஞ்சுதல் - புணணியவிருப்பம - மனமுதலியனவொடுக்கல் - கொடை - சிவார்ச்சனை - தவம் - சதாசிவாதிமூர்த்தங்களைத தியாநித்தல் எனப்பத்தாம்.

சாந்தி - அகக்காரணதண்டம். தாந்தி - புறக்காரணதண்டம். ஆதியென்றதனுல் திதீக்ஷைமுதலியவுஙகொள்க; திதீக்ஷை - காமாதிகளைத் தணித்தல்.

இயமம், கொல்லாமை - வாய்மை - கள்ளாமை - பிறர்மனைவியரையும் பொதுமகளிரையும் விரும்பாமை - இரக்கம் - வஞ்சனையின்மை - பொறையுடைமை - மனங்கலங்காமை - அற்பாகாரம் - சுசியுடைமை எனப்பததாம்.

நியமம், தவம் - மகிழ்ச்சி - விசுவாசம் - தானம் - ஈசுவரபூசை - சித்தாந்தசிரவணம் - வைதிகமார்க்க லௌகிகமார்க்கங்களுக்கு விரோதவழியில் நாணுதல் - தக்கனதகாதன பகுத்தறிதல் - ஜபம் - விரதம் எனப்பத்தாம்.

. ஆசனம், சுவத்திகம் - கோமுகம் - பதுமம் - வீரம் - சிங்கம் - பத்திரம் - முத்திம் - மயூரம் - சுகம் என ஒன்பதாம்.

பிராணாயாமம், இரேசக பூரக கும்பகமாகிய இம்மூன்றும் அகார வுகார மகார சொரூபமாம்: இவைபுணரின் பிரணவம்: பிராணாயாமம் அதனது சொரூபம். ஆதலாலே பிராணவாயுவை இடையினாலே ஆகருஷணஞ்செய்து பதினாறுமாத்திரை பூரித்து அகார தியானஞ்செய்து பூரித்தவாயுவை அறுபத்துநான்குமாத்திரை கும்பித்து உத்தியாபனஞ்செய்தல்.

பிரத்தியாகாரம், விடயநுகாசயியிலே செல்லும் இந்திரியங்களை அறிவாற்றலாலே தன்வசமாக்குதல்.

தாரணை, ஐம்புலன்களையும் மனசினுள் திருகித்து, இருதயமுதலிய ஸ்தானங்களில் ஒன்றிலே தக்ஷிணாமூர்த்தியைத் தியானித்து அவர் திருவடியிலே வைத்தல்.

தியானம், நிருமலமான ஆகாயத்திலே விளக்கமுங் குளிர்ச்சியும்பெற்ற சந்திர மண்டலத்தைத் தியானித்து அதன்மத்தியிலே பேரானந்தரூபராய உமாதேவியை ஒரு பாகத்திலுடையராய்ச் சுத்தப்படிகசங்காசவடிவினராய்ப் பிறைமதியணிந்த சடாமுடியினராய் நீலகண்டராய் முக்கண்ணராய் நாற்றோளினராய ஆதிமத்தியாந்தராகிதராய் உள்ள சிவபிரானைச்சிந்தித்தல்.

சமாதி, அகண்டாகார நித்தவியாபக சச்சிதாநந்தப பிழம்பாயுள்ள சிவபிரான் மாட்டு இரண்டறக்கலந்து இன்பம் அடைதல் (௩௯)

பரசுறு ஞானங் கற்றுட் பரசிவ பத்தி பூசை
தரிசனஞ் சைவ லிங்க தாபனஞ் செய்த லீசற்
குரியமெய் யன்பர் பூசை யுருத்திர பின்னந் தாங்க
லரியதே சிகன்பாற பத்தி யனைத்துமே சிறந்த வாகும்.

இ - ள். புகழ்ப்பெற்ற ஞானங்களுள்ளே மேலாகிய சிவபத்தி சிவபூஜை சிவதரிசனம் சிவலிங்கஸ்தாபனஞ்செய்தல் சிவபிரானுக்குரிய மெய்யன்பர்பூசை சிவசின்னமாகிய விபூதிருத்திராக்ஷங்களைத் தரித்தல் அரியசிவாசாரியரிடத்தே பத்திபண்ணல் இவையெல்லாம் சிறந்த சிவபுண்ணியங்களாகும்.—எ - று. (௪0)

எழுசீரடியாசிரியவிருத்தம்.

அறைதரு மத்தின் மாத்தமாக தரும மதிகமவை நிகமதி னுயரு
மறைவழி யறத்தி னுயர்விலே தருமா தருமங்கள் வகுத்துரைப பதினு
நிறைசிவ பிரானே பரமகா ரணனு நிகழ்த்துத றன்னினு மறையே
குறைவரு மளவை யாகுமம் மறைக்குக் கூர்மிரு தியுமது குணமாம்.

இ - ள். சொல்லுகின்ற தருமங்களில் ஸ்மிருதிகளிலேகூறுந் தருமங்கள் சிறந்தன. அவைகளினும் வேதங்களால் ஓதப்படுந் தருமங்கள் சிறந்தனவாம். அந்தவைதிக தருமங்களின் மேம்பட்டதில்லை. சிவதரும பசுதருமங்களையும் அதருமங்களையும் வகுத்துக்கூறுவதினும் பரமசிவனே (எல்லாவற்றிற்கும்) பரமகாரணமென்று கூறுவதினும் வேதங்களே பரமப்பிரமாணங்களாகும். அவ்வேதங்களுக்கு ஸ்மிருதிகளும் அநுகுணங்களாகும்.—எ - று. (௪௧)

தெருட்பெறு போகம் வீடுகா ரணமாத் திகழ்சிவ மெவற்றினு நிறைவென்
றிருட்கெட வுணர்தன் ஞானமிப் பொருளே யேற்றமா மிப்பொரு ளுமக்கு
மருட்கெடத் தெளிவ தாமென விநய வழிவழா மாதவர் நெஞ்சை
யருட்கையாற் றடவி யிலிங்கத்துட் புகுந்தா னருள்பழுத் தன்னதே சிகனே.

இ-ள். போக வீடுபேறுகளுக்கு ஏதுவாக விளங்குகின்ற பரமசிவமே எல்லாப் பொருளினும் நிறைவுள்ளதென்று அஞ்ஞானம் கெட உணாதலே மெய்ஞ்ஞானமாம். இப்பொருளே சிறந்ததாம் இந்தப்பொருள் உங்களுக்கு மயக்கங்கெடத் தெளியக்கடவது என்று கருணைகனிந்தாற்போன்ற தேசிகர் நல்லொழுக்கத்தினின்று வழுவாதமுநிவர்களது மார்பைக் கருணைக்கையாலே தடவிச சொக்கலிங்கப் பெருமானிடத்தே அந்தர்த்தானமாயினர்.—எ-று. (சஉ)

வேதத்துக்குப் பொருளருளிச்செய்தபடல முற்றியது.

ஆகச்செய்யுள் - கககூச.

---

## பதினேழாவது

# நவமணிவிற்றபடலம்.

கலிநிலைத்துறை.

சுகந்த வார்பொழின் மதுரையெம் பிரான்றன துணைத்தா
ளுகந்த வாவறு கண்ணுவ முனிமுத லோது
மகந்த வாதபே ரன்பருக் கருமறைப் பொருளைப்
பகர்ந்த வாறிது நவமணி பகர்ந்தவா பகர்வாம்.

இ-ள். மிக நல்லவாசமுள்ள சோலைசூழ்ந்த மதுரைப்பதியில் வதிந்தருளும் சுந்தரேசர், தம்முடைய இரண்டு திருவடிகளையும் பற்றி (யான் எனதென்னும் இரு) பற்றுநீங்கிய கண்ணுவமுநிவர்முதலாகக் கூறும் உளததுநீங்காத பேரன்பருக்கு அரிய வேதார்த்தங்களை உபதேசித்தருளிய திருவிளையாடல் இது. நவமணிவிற்ற திருவிளையாடலை இனி (யாம்) கூறுவாம்.—எ-று. (க)

அன்ன நாள்வயின் வீரபாண் டியறகணங் கனைய
மின்ன ரூருளைம் போகமும் விளைநில மனைய
பொன்ன னார்பெறு காளைய ரைங்கணைப் புத்தே
ளென்ன வீறினர் வான்பயிர்க் கெழுகளை யென்ன.

இ-ள். அக்காலத்திலே வீரபாண்டியனுக்குத் தேவமகளிர்போன்ற மனைவியர்களில் (கண்டு கேட்டுண் டுயிர்த் துற்றறியும்) ஐம்புலப் போகங்களும் விளையும் பூமிபோலுங் காமக்கிழத்தியர் பெற்ற குமாரர்கள் மேம்பட்ட பயிர்களுக்கு இடையூறாகத் தோன்றுங் களைகள்போல மன்மதர்களென்று சொல்லும்படி ஓங்கினர்கள்.—எ-று.(உ)

பின்ன ரும்பெறற் குமரனைப பெறுவது கருதி
மன்ன னுங்குல தேவியுங் கயற்கணி மணாளன்
றன்னை நோக்கியட் டமிசதுர்த் தசிமதி வார
மின்ன நோன்புநோற றொழுகுவா ரிறைவனின் னருளால.

இ-ள். பின்பு பெறுதற்கரிய சற்புத்திரனைப் பெறுதலைக் குறித்து வீரபாண்டியனும் அவனுடைய பட்டமகிஷியும் சுந்தரேசரைப் பிரார்த்தித்து அஷ்டமி சதுர்த்தசி சோமவாரம் இவ்விரதங்களை அநுட்டிப்பாராயினர். அச்சுந்தரேசரது திருவருளினாலே—எ-று. (௩)

சிறிது நாள்கழிந் தகன்றபின் கங்கையிற் சிறந்த
மறுவி லாவட மீன்புரை கற்பினாள் வயிற்றிற்
குறிய வாலவித் தங்குரம் போன்றொரு குமர
னிறையு நீருல கருட்குடை நிழற்றவந் துதித்தான்.

இ-ள். சிலதினஞ் சென்றபின்பு கஙகையினுஞ் சிறந்த தூய்மையுடைய அருந்ததிபோன்ற கற்புள்ள அப்பட்டமகிஷி வயிற்றிலே ஒரு சற்புத்திரன உலகத்திற்குக் கருணையாகிய குடைநிழல் செய்யும்படி தோன்றினான்.—எ-று. சிறிய ஆலவித்திற்றோன்றிய அங்குரம் பலசாகைகளாலே விரிந்து பலருக்குந் தண்ணிழல செயவதுபோல வென உவமை விரிக்க. (௪)

அத்த னிச்சிறு குமரனுக் ககங்களி சிறப்ப
மெய்த்த நூன்முறை சாதக வினைமுதல் வினையும்
வைத்த னன்பொலி வெய்துநாண மனனவ னூழ்வந்
தொத்த நாள்வர வேட்டைபுக் குழுவைகோட் பட்டான்.

இ-ள். அச் சற்புத்திரனுக்கு மனமகிழ வேதசிவாகம விதிப்படி ஜாதகர்மமுதலிய கிரியைகள் முடித்துவைத்து அப்புத்திரன் வளருங்கால், வீரபாணடியன் போகூழ்வந்து பொருந்திய காலம் வந்தமையால் வேட்டம ஆடுவானசென்று புலியினாற் பறறப்பட்டான்.—எ-று. (௫)

வேங்கை வாய்ப்படு மீனவன் விணவிருந் தாக
வாங்கு நூன்மருங் கிறக்கர மாரபெறிந தாரந
தாஙகு கொங்கைசாந தழிநதிடத் தடங்கண்முத் திறைப்ப
வேங்க மாதர்பொன் னகருளார் யாவரு மிரங்க.

இ-ள். (அங்ஙனம்) புலியின்மாட்டு அகப்பட்ட வீரபாண்டியன் வீரசுவர்க்கத்திற்கு விருந்தாகச் சென்றமையால் துவளும் நூல்போன்ற இடைமுறியும்படி கைகளினால் மார்பில் அடித்து முத்துமாலை தாஙகுந் தனங்களிற்பூசிய கலவைச்சாந்தழியப் பெரியகண்கள் நீர்த்துளிசிந்த மனைவியா அனைவரும் வருந்தவும் அழகிய நகருளார் எல்லாரும் வருந்தவும்.—எ-று. (௬)

மற்ற வேலைகா மக்கிழத் தியாபெறு மைந்த
ரற்ற நோக்கியீ தமையமென் றனைமா வாதி
யுற்ற பல்பிற பொருணிதி யொண்கல னோடு
கொற்ற மௌலியுங் கவர்ந்தனர் கொண்டுபோய் மறைந்தார்

இ-ள். அங்ஙனம் வருந்தும்பொழுது காமக்கிழத்தியர் பெற்ற பிள்ளைகள், சோர்வு நோக்கி இதுவே சமயமென்று யானை குதிரைமுதலியவும் பொருந்திய வேனைப் பலபொருள்களும் திரவியங்களும் ஆபரணங்களும் மகுடமும் ஆகிய இவைகளை அபகரித்துக் கொண்டுபோய் ஒளித்தார்கள்.—எ-று. (எ)

மன்ன னாணையா னொழுகிய மந்திரக் கிழவர்
மின்னு வேலிளங் குமரனைக் கொண்டுவிண் ணடைந்த
தென்னர் கோமகற் கிறுதியிற் செய்வினை நிரப்பி
யன்ன காதலற் கணிமுடி சூட்டுவா னமைந்தார்.

இ-ள். பாண்டியனது ஆணைவழி ஒழுகிய அமாத்தியர், விளங்கும் வேற்படை ஏந்திய புத்திரனைக்கொண்டு துறக்கம் பெற்ற வீரபாண்டியனுக்கு அந்தியேஷ்டியை முடித்து அப்புத்திரனுக்கு மகுடஞ்சூட்டத் தொடங்கி.—எ-று. அமைந்தார் முற்றெச்சம். (அ)

நாடிப் பொன்னறை திறந்தனர் நவமணி மகுடந்
தேடிக் கண்டிலர் நிதிசில கண்டிலர் திகைத்து
வாடிச் சிந்தைநோ யுழந்திவை மாற்றலர் கூட்டுண்
டோடிப் போயின வாகுமென் றுணர்ந்திது நினைவார்.

இ-ள். பொக்கிஷத்தைத் திறந்து ஆராய்ந்து நவரத்தினங்கள் அழுத்திய மகுடத்தைத் தேடிக்காணாது சில இரத்தினங்களையுங் காணாது மயங்கி வாடி மனம்வருந்தி இவைகள் பகைவர் திருடிக்கொண்டு போயினவாமென்று உணர்ந்து இதனைக் கருதுவார்.—எ-று. திறந்தனர் கண்டிலர் முற்றெச்சங்கள். (கூ)

வேறு மாமுடி செய்துமா லென்னினோ விலைமிக்
கேறு மாமணி யிலையர சிருக்கையின் றின்றேற்
றேறு நீருல கலையுமென் செய்வதிங் கென்னா
வாறு சேர்சடை யாரருள் காண்டுமென் றமைச்சர்.

இ-ள். வேறு மகுடஞ்செய்யக் கருதுவோமானால் அதிக விலைபெறும் பெரிய இரத்தினங்கள் இல்லை (மகுடமில்லையானால்) அரசிருக்கையுமில்லை அரசிருக்கை இன்றாகில் தெளிந்த கடல்சூழ்ந்த உலகம் வருந்தும் இங்கே நம்மாலே செய்யற்பாலது யாதென்று கருதிச் சுந்தரேசரது திருவருளைக் காணபோமென அமைச்சர்.—எ-று. (க0)

வளைசெ யாபபெருங் கவலைசூழ் மனத்தராய்க் கறங்கு
முரசு கணபடாக் கடிமனை முற்றநீத் தருமை
யரசி ளநதனிக் கொழுநதினைக் கொண்டுபோ யம்பொன்
வரைசெய் கோபுர வாயின்முன் வருகுவார் வருமுன்.

இ-ள். அளவிடப்படாத மிக்க துன்பமுள்ள மனத்தினராய் இராஜகிருக முற்றத்தினீங்கி இராஜகுமாரனைக்கொண்டு சென்று மேருமலைபோல் அமைத்த சிவாலயத் திருக்கோபுர வாயிலின் முன் வருவாராயினர். அவர் வருதற்கு முன்பு.—எ-று. கறங்கல் - ஒலித்தல். (கக)

எற்ற தும்புகோ வணவுடை யிடம்படப் பிறங்கத்
துற்ற பல்கதிர் மணிபொதி சுவன்மிசைத் தூங்க
மற்ற டம்புய வரைமிசை வாகுவலா விலைகள்
பெற்ற வங்கதம் பரிதியிற் போந்துபேர்ந் திமைப்ப.

இ-ள். ஒளிமிக்க கோவணமாகப்போக்கிய வஸ்திரம் விசாலமாக விளங்கவும் நெருங்கிய பல கிரணங்களையுடைய இரத்தினப்பொதி பிடரின்மீது தூங்கவும் போர்புரியும் பெரிய புயமலையில் வாகுவலயம் சூரியன்போல் விட்டுவிட்டு ஒளிவீசவும்.—எ-று. (கஉ)

மந்தி ரப்புரி நூலது வலம்படப் பிறழ
விந்தி ரத்திரு வில்லென வாரமார் பிலங்கச்
சுந்த ரக்குழை குண்டலந் தோள்புரண் டாடத்
தந்தி ரத்தரு மறைகளி னாணிலந் தோய.

இ-ள். மந்திரத்தால் அமையப்பெற்ற பூணூல் வலப்பாலிற் புரளவும் இந்திர தநுசுபோல இரத்தினமாலை மார்பில் விளங்கவும் அழகிய காதிற்குண்டலம் புயத்திலே புரண்டாடவும் சிவாகமங்களோடு கூடிய வேதங்கள (தாங்கி) மகிழ்தற்கேதுவாகிய திருவடிகள் பூமியிலே தோயவும்.—எ-று. (கங)

கலிவிருத்தம்.

பொன்னவிர் திலகக்கோ புரமுன் போதுவார்
முன்னவர் துனிவுகூர் முன்ன நீக்கிய
தென்னவர் குலபபெருந் தெய்வ மாகிய
மன்னவர் வணிகராய் வந்து தோன்றினார்.

இ-ள். திருக்கோபுர வாயிலுக்கு முன்வரும் மந்திரி முதலாயினார்க்கு எதிரே அவரது வருத்தமிக்க எண்ணத்தை ஒழிக்கச் சுந்தரேசர் வைசிய வேடம்பூண்டு வந்தருளினார்.—எ-று. (கச)

வந்தவ ரெதிர்வரு வாரை மம்மர்கொள்
சிந்தைய ராய்வரு செய்தி யாதென
முந்தையில் விளைவெலா முறையிற் கூறினார்க்
கெந்தையாம் வணிகரீ தியம்பு மாலரோ.

இ-ள். வந்த வைசியராகிய சுந்தரேசர் தம்மெதிர்வரும் மந்திரியாதியோரை (நோக்கி) மயங்கிய மனத்தினராய் (நீவிர்) வரும் செய்தியாதென்று வினவ முன்னிகழ்ந்தவைகளைக் கூறிய அவர்க்கு வைசியர் இதனைக் கூறுகின்றார்.—எ-று. (கரு)

என்பட ரெய்துகின் றீர்க ளென்வயி
னொன்பது மணிகளு முள்ள வாலவை
பொன்பதி னாயிர கோடி போனதென்
றன்புற மணியெலா மடைவிற் காட்டுவார்.

இ-ள். என்ன துன்பம் அடைகின்றீர் நம்மிடத்தே நவரத்தினங்களும் இருக்கின்றன. அவை அளவற்ற விலையுடையனவென்று விருப்பமுற அவைகளை முறையே காட்டத்தொடங்கி.—எ-று. காட்டுவார் - முற்றெச்சம். (கசு)

இருந்தனர் கீழ்த்திசை நோக்கி யிட்டதோர்
கருந்துகி லிடுவுமிந் திராதி காவல
ரருந்திசை யெட்டினு மடைவிற் செம்மணி
பெருந்தண்முத் தாதியெண் மணியும் பெய்தரோ.

இ-ள். கீழ்திசைநோக்கி இருந்து விரித்ததாகிய ஓர் கரியகம்பலத்தினது நடுவில் மாணிக்கமும் இந்திராதி எட்டுத் திக்கில் முத்துமுதலிய எண்வகை யிரத்தினமும் வரிசையினால் வைத்து.—எ-று. (கஎ)

இம்மணி வலனுடற் பின்ன மென்னவக்
கைம்மறி கரந்தவர் கூறக் கற்றநூற்
செம்மதி யமைச்சரச் செம்மல் யாரவன்
மெய்ம்மணி யாயதென் விளம்பு கென்னவே.

இ-ள். இவ்விரத்திநங்கள் வலாசுரனது உடலின் பேதமென்று மானை மறைத் துவந்த அந்த வணிகர் கூற (அதற்கு) மந்திரிகள் அவ்வலன் யாவன் அவனது சரீரம் இரத்திநங்களாகிய காரணம் யாது சொல்லுகவென்று வினவ.—எ-று. வணிகர் விடை கூறத் தொடங்கினார் என்பது குறிப்பெச்சம். (கஅ)

மேவருமவ் வலனெனு மவுணன் மேலைநாண்
மூவரின் விளங்கிய முக்கண் மூர்த்திசெஞ்
சேவடி யருச்சனைத் தவத்தின் செய்தியால்
யாவது வேண்டுமென் றிறைவன் கூறலும்.

இ-ள். (பகைவர்) கிட்டுதற்கரிய வலாசுரன் முன்னாளிலே மும்மூர்த்தியின் (மேலாக) விளங்கிய சிவபிரான் திருவடிப் பூசை செய்துவந்தமையால் அப்பிரானார் யாதுவேண்டுமென்று வினவ.—எ-று. (க௯)

தாழ்ந்துநின் றியம்புமியான் சமரில் யாரினும்
போழ்ந்திற வாவரம் புரிதி யூழ்வினை
சூழ்ந்திறந் தாலென்மெய் துறந்த மாந்தரும
வீழ்ந்திட நவமணி யாதல் வேண்டுமால்.

இ-ள். (அதற்கு அவ்வசுரன்) வணங்கிநின்று கூறத்தொடங்கி, போரில் யாவராலும் யான் பிளவுபட்டு இறவாத வரத்தை அருளும் (பின்பு) ஊழ்வினைச் செறிவால் இறந்தால் எனதுசரீரம் துறவினரும் விரும்பும்படி நவரத்திநங்களாகவேண்டும்.—எ-று.

என்றுவேண் டலும்வர மீச னல்கினா
னன்றுபோ யமர்குறித் தமரர் கோனொடு
சென்றுபோ ராற்றலுந் தேவர் கோனெதிர்
நின்றுபோ ராற்றல னீங்கிப் போயினான்.

இ-ள். என்று வரங் கேட்க, சிவபிரான் (அங்ஙனம்) அருளினார். அப்பொழுதே (அவ்வசுரன்) இந்திரனோடுபோய்ப் போர்செய்ய (அதற்கு) இந்திரன் எதிர்த்துப் போர் செய்யக் கூடாதவனாகிப் புறங்கொடுத்துப்போனான்.—எ-று. (உக)

தோற்றவா னுடவன் மீண்டு சூழ்ந்தம
ராற்றினும் வெல்லரி தழிவி லாவர
மேற்றவ னுதலா லிவனைச் சூழ்ச்சியா ற
கூற்றினு ளேற்றுதல் குறிப்பென் றுன்னியே.

இ-ள். தோல்வியுற்ற இந்திரன் திரும்பவும் (அவ்வசுரனைச்) சூழ்ந்து போர்புரிந்தாலும் வெல்லக்கூடாது (அவன்) அழிவிலாவரம பெற்றவனுதலால அவனை விரயத்தாலே கொல்வதே தகுதியென்று கருதி.—எ-று. (௨௨)

விடங்கலும் படைக்கல னின்றி விண்ணவ
ரடங்கலுந் தழீஇக் கொள வடுத்துத் தானவ
மடங்கலை வருகென நோக்கி வானவக்
கடங்கலும் யானைபோற் கரைந்து கூறுவான.

இ-ள். விடஞ்சிந்தும் படைக்கலம் இன்றித் தேவர்கள் சூழ அடுத்து அசுரசிங்கத்தை(ப் போர்க்கு) வருகவென்று அழைத்துப் பார்த்துத் தேவயானைபோல் மனமுருகிக் கூறத்தொடங்கி.—எ-று. கூறுவான் முற்றெச்சம். (௨௩)

விசயநின் றோள்வலி வென்றி மீக்கமெத்
திசையினும பரந்ததச சீர்த்தி நோக்கியுண்
ணசையுறு மகிழ்ச்சியா னல்கு வேனுனக்
கிசையவேண் டியவரம் யாது கேளென.

இ-ள். வெற்றிபெற்றவனே? உனது மிக்க புயவலியும் வெற்றியும் எங்கும் பரவினை அப்பெரும்புகழ்ச்சி நோக்கி மகிழ்ச்சியினால் உனக்குப்பொருந்த (வரம்) கொடுப்பேன் (நீ) விரும்பியவரம் யாதோ (அதனைக்) கேளென்றுசொல்ல.—எ-று. (௨௪)

கடிபடு கற்பக காடு காவலோ
னெடியுரை செவித்தொளை நுழையத் தானவ
னெடியகை புடைத்துட னிமிர்ந்து கார்படு
மிடியென நகைத்திகழ்ந் தினைய கூறுவான்.

இ-ள். இந்திரன்கூறிய வார்த்தை செவியிற்புகவும் அசுரன் கைகொட்டி உடனிமிர்ந்து இடிபோல நகைத்து இப்படிப்பட்டவைகளைக் கூறத்தொடங்கி.—எ-று. கூறுவான் முற்றெச்சம். (௨௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

நன்றிது மொழிந்தா யாரு நகைக்கநீ யெனைவெங் கண்ட
வென்றியு மதனாற் பெற்ற புகழுநின் வீறு பாடு
மின்றுநின் போரிற் காணப் பட்டவே யிசைபோ யெங்கு
நின்றதே யிதுபோ னின்கை வண்மையு நிற்ப தன்றே.

இ-ள். வெளி. வெந் - புறம். வண்மை - கொடை. (௨௬)

ஈறிலா னளித்த நலல வரமெனக் கிருக்க நின்பால
வேறுநான் பெறுவ துண்டோ வேண்டுவ துனக்கியா தென்பாற்
கூறுநீ யதனை யின்னே கொடுக்கலே னாகி னின்போற்
பாறுவீழ் களத்திற் றோற்ற பழிப்புகழ் பெறுவ னென்றான்.

இ-ள். வெளி. ஈறிலான் - சிவபிரான். இன்னே - இப்பொழுதே. 'பாதூ- பருக்து.' (உஎ)

மோதண்ட வவுணன் மாற்ற மகபதி கேட்டு வந்து
கோதண்ட மேருக் கோட்டிக் கொடும்புரம் பொடித்தான் வெள்ளி
வேதண்ட மெய்தி யாங்கோர் வேள்வியான் புரிவனீயப்
போதண்டர்க் கூட்ட வாவாய்ப் போதுவாய் வலலை யென்றான்.

இ-ள். பெரிய தண்டாயுதமேந்திய வலாசுரனது வார்த்தையை இந்திரன் கேட்டு(த் தானகருதியது கைகூடியதென்று) மகிழ்ந்து திருக்கைலாச மலையில் யான் ஒரு யாகஞ்செய்வேன் நீ அப்போது தேவர்களுக்கு அவியூட்ட ஒரு பசுவாய் விரைந்து வருவாயாகவென்றான்.—எ-று. கோதண்டம் - வில்லாக. (உஅ)

அன்றொரு தவத்தோ னென்பு வசசிர மொன்றே யாக
வொன்றிய கொடையாற் பெற்ற புகழுடம பொன்றே யென்போல்
வென்றியி னாலும் வீயா மெய்யெலா மணிக ளாகப்
பொன்றிய கொடையி னாலும புகழுடம பிரண்டுண் டாமே.

இ-ள். அக்காலத்திலே ததீசிமுனிவர் (பூதவுடம்பின) முதுகந்தண்டெலும்பு ஒன்றே வச்சிராயுதமாகக் கொடையினால அடைந்த புகழுடம்பு ஒன்றேயாம். (பிறரை வெல்லும்) வெற்றியினாலும் (பிறரால்) அழியாத (எனது பூத) உடலமுற்றும் நவமணிகளாக இறத்தலாலாகுங் கொடையினாலும் என்னைப்போலப் புகழுடம்பு இரண்டில்லை யல்லவா.—எ-று. பொன்றும் என்பதைத் தெளிவுபற்றிப் பொன்றியவென்றார். (உகூ)

மேவல னல்லை நீயே நட்டவன் மேலை வானோ
ராவரு மருந்து மாற்றா லறம்புக ழெனக்கே யாக
வாவரு வாதி யென்றா யன்னதே செய்வே னென்றா
னீவதே பெருமை யன்றி யிரக்கின்ற திழிவே யன்றோ.

இ-ள் நீ பகைவன் அல்லை நண்பனே. தேவர்யாவரும உண்ணுமுறையால், புண்ணிய கெண்ணியங்கள் எனக்கேயுண்டாகப் பசுவடிவாக வருவாயென்றாய் அங்ஙனமே செய்வேனென்றான.—எ-று. ஈதலே பெருமையன்றி இரத்தல சிறுமையே அன்றோ என்பது இந்நூலுடையார் கூற்று. (கூ0)

அதற்கிசைந் தவுணர் வேந்த னமரர்வேந் தனைமுன் போக்கி
மதாக்கடுங் குருதிச் செங்கண் மைந்தனுக் கிறைமை யீந்து
முதற்பெருங் கலையாம் வேத மொழிமா பமைந்த வானாய்ப்
புதாக்கடு வேள்விச் சாலைப் புறத்துவந் திறுத்து நின்றான்.

இ-ள். பசுவாய்வர உடன்பட்ட வலன் இந்திரனை அனுப்பிவிட்டு மதப்புடைய கொடியவுதிரம்போற் சிவந்த கண்ணுள்ள புத்திரனுக்கு அரசியலைக் கொடுத்து வேதங்கூறிய இலக்கணம்பெற்ற பசுவாய்த் தேவர்க்கு அவியுணவாக்கும் யாகசாலையின் அருகேவந்து நின்றான்.—எ-று. இசைந்தவென்னும் அகரந்தொகை. (கூக)

வாய்மையான் மாண்ட நின்போல் வள்ளல்யா ரென்று தேவர்
கோமகன் வியந்து கூறத் தருக்குமேற் கொண்டு மேரு
நேமியோ டகலும் விந்த வரையென நிமிர்ந்து வேள்விக்
காமெனே யூபத் தோடும் யாமினொன் றடுத்து நின்றான்.

இ-ள். சத்தியத்தினால் மாட்சிமைபெற்ற உலகபோற்ந்த தாதா பாவனுள்ளானென்று இந்திரன்கூற மேருமலையோடு பகைத்த விந்தமலைபோல (வலன் சிவபிரானைச் சிந்தித்து) நிமிர்ந்து யாகத்துக்குப் பயன்படும் என்னை யூபஸ்தம்பத்திலே கட்டுங்களென்று (அதனை) அடுத்து நின்றான் —எ-று. (கூஉ)

யாத்தனர் தருப்பைத் தாமபா ஞாணை பால்யாத்த சிங்கப்
போத்தென நின்றான் வாயைப் புதைத்துயிர்ப் படங்க வீட்டி
மாய்த்தனர் மாய்ந்த வள்ளல் வலனுமங் கமர மாரி
தூர்த்திட விமான மேறித் தொல்விதி யுலகஞ் சேர்ந்தான்.

இ-ள். (சிவபிரான் ஆஞ்ஞைப்படி தேவர்கள் யூபஸ்தம்பத்திலே) தருப்பைக் கயிற்றினாலே (அவ்வலாசுரனைக்) கட்டிச் சிலம்பினாலாற் கட்டப்பட்ட ஆண்சிங்கம் போலநின்ற அவனவாயைப்பொத்திச் சுவாசம் அடங்கக் கொன்றார்கள் இறந்த வலன் விமானமேறிப் பிரமலோகஞ் சார்ந்தான்.—எ-று. யாத்தனர் முற்றெச்சம். ஞாணாபி ஞாணை எனத்திரிந்து ஆகுபெயராய் நின்றது. (கூ௩)

மணித்தலை மலையின் பக்க மாய்த்தவன் வயிர வேலாற்
பிணித்துயிர் செகுத்த வள்ளற் பெருந்தகை யாவாய் வேதம்
பணித்திடும் வபையை வாங்கிப் பட்டெரி சுவைமுன் பார்க்குக்
குணித்தவா ளூட்டிக் கூட்டிக் கோதிலா வேள்வி செய்தான்.

இ-ள். கொல்லப்பெற்ற அப்பசுவின்கண் இந்திரன் வச்சிரப்படையால் வேதம் விதித்த வபையைவாங்கி முன்னே அக்கினிதேவன் சுவைபாகக (இட்டு) மதிக்கத்தக்க தேவர்களுக்கு ஊட்டி யாகத்தை முற்றுவித்தான்.—எ-று. இட்டு - சொல்லெச்சம். (கூ௪)

அத்தகை யாவின சோரி மாணிக்க மாம்பன் முத்தம்
பித்தைவை டூய மென்பு வச்சிரம் பித்தம் பச்சை
நெய்த்தவெண் ணிணங்கோ மேதந் தசைதுகிர் நெடுங்க ணீல
மெய்த்தவை புருட ராக மிவைநவ மணியின் றோற்றம்.

இ-ள். அந்தப் பசுவினது உதிரம் மாணிக்கமாகும், தந்தம் முத்தமாம், மயிர் வைடூரியமாம், எலும்பு வயிரமாம், பித்தம் பச்சையாம், நிணம் கோமேதகமாம், தசை பவளமாம், நேத்திரம் நீலமாம், கபம் புருடராகமாம், இவைகள் நவமணிகளின் உற்பத்தியாகும்.—எ-று. எய்த்த - இளைத்தற்கேதுவாகிய. (கூ௫)

இவ்வடி வெடுத்துத் தோன்றி யிருண்முகம் பிளப்பக் காலு
தைவரு மணியொன் பானுஞ் சார்விட நிறங்கள் சாதி
தெய்வத மொளிமா செள்ளிச் சோதனை செய்து தேசு
மெய்வர வணிவோ ரெய்தும் பயனிவை விதியாற் கேண்மின்.

இ-ள். இவ்வுருவெடுத்து இருட்கெட ஒளிவிடும் நவமணிகளுஞ் சார்ந்த இடம் நிறம் சாதி தெய்வம் ஒளி என்னும் இவையும் குற்றத்தை அகற்றி உடலில் அணிவோர் அடையும் பயனும் முறையாற் கேளுங்கள்.—எ-று. (கூ௬)

ஷை வேறு.

வாளவிரு மாணிக்கங் கிருதமுத லுகநான்கும் வழியே மக்கங்
காளபுரந் தும்புரஞ்சிங் களமிநான் கிடைப்படுமக் கமல ராக
மாளுநிறம் பத்தாகு மரைமாது ளமபூவித் தழல்கல் லாரங்
கோளரிய கச்சோத மாதித்த னுடுதீபவ கோப மென்ன.

இ-ள். ஒளிவிளங்கும் மாணிக்கம் - கிருதயுகத்திலே மக்கத்திலும், திரேதாயுகத்திலே காளபுரத்திலும், துவாபரயுகத்திலே தும்புரத்திலும், கலியுகத்திலே சிங்களத்திலும் முறையே தோன்றும். அம்மாணிக்கம் ஆளுகின்ற நிறம - செங்கமலமலர், மாதுளம்பூ, மாதுளம்வித்து, அக்கினி, செங்குவளைமலா, குற்றமற்ற மின்மினி, சூரியன், நக்ஷத்திரம், தீபம், இந்திரகோபம் என்னும் இவை பத்துகளின் நிறம்போலாகும்.—எ-று. (௯௭)

இந்நிறத்த பொதுவாய மாணிக்க மறையுவாமுன் னியனுற் சாதி
தன்னியலபாற் சாதரங்கங் குருவிந்தஞ் சௌகந்தி கங்க வாங்க
மென்னுமிவற் றுற்சிறந்த நான்காகு மிவ்வடைவே யிநான் கிற்குஞ் [ன்.
சொன்னவொளி பத்திருநான் கிருமூன்று நான்கவையுஞ் சொல்லக் கேண்மி

இ-ள். பொதுவாகிய இப்பத்துநிறங்களுடைய மாணிக்கம் சாதரங்கமாயின் பிராமணஜாதியும், குருவிந்தமாயின் க்ஷத்திரியஜாதியும், சௌகந்திகமாயின வைசியஜாதியும், கவாங்கமாயின் சூத்திரஜாதியும் ஆகும். இவைகட்கு முறையே ஒளி - பத்து, எட்டு, ஆறு, நான்குகளாகும். அவைகளைக் கூறுகக்கேளுங்கள்.—எ-று. கவாங்கத்தோடு நீலகந்தி ஒன்றுகூட்டிச் சூத்திரசாதியென்று வடநூல் கூறுகின்றது. (௯௮)

சாதரங்க நிறங்கமலங் கல்லார மிரவியொளி தழல்கச சோத
மாதுளம்போ ததன்விததுக குயிறகணடீ பங்கோபம் வகுத்த பத்து
மேதகைய குருவிந்த நிறங்குனறி முயற்குருதி வெள்ள லோத்தம
போதுபலா சலர்திலகஞ் செவ்வரத்தம் சிநதூர மெரிபொன் னெட்டு

இ-ள். சாதரங்கநிறம் - செந்தாமரைப்பூ, செஙகுவளைமலா, சூரியனொளி, அக்கினி, மின்மினி, மாதுளம்பூ, மாதுளம்வித்து, குயிற்கண, தீபம், இந்திரகோபம் ஆகிய இப்பத்தும்போன்ற நிறமாம். குருவிந்தநிறம் - குன்றிமணி, முயலிரததம், வெள்ளலோத்தமலர், பலாசலர், உச்சித்திலக மலர், செவ்வரத்தமலா, சிந்தூரம், நெருப்பிலிட்டஇரும்பு ஆகிய இவ்வெட்டும்போன்ற நிறமாம்—எ-று. உச்சித்திலகம், திலகமெனத் தலைக்குறை ஆயிறறு; இதனைப் பந்தூகமென வடநூல கூறும். (௯௯)

களிதருசௌ கந்திகத்தி னிறமிலவம் போதுகுயிற் கண்ண சோகந்
தளிரெரிபொன் செம்பஞ்சி யையாண மெனவாறு தருக வாங்க
வொளிகுரவு குசும்பைமலா செங்கலநொவ் வைககனியென் றொருநான் கந்த
மிளிர்பதும ராகத்தைப் பொதுமையினுற் சோதிக்க வேண்டு மெலலே.

இ-ள். சௌகந்திகநிறம் - இலவமலர், குயிற்கண், அசோகந்தளிர், நெருப்பிலிட்ட இரும்பு, செம்பஞ்சிக்குழம்பு, ஐந்திலைமாமலர் ஆகிய ஆறும்போன்ற நிறமாம். கவாங்கநிறம் - குரவமலர், குசும்பைமலா, மலையிலுண்டான செந்தாது, கொவ்வைக்கனி ஆகிய நான்கும்போன்ற நிறமாம். அந்த மாணிக்கத்தைப் பொதுவாகப் பரிசோதனஞ் செய்யுமிடத்து.—எ-று. (௱)

திண்ணியதாய் மேல்கீழ்சூழ் பக்கமுற வொளிவிடுதல் செய்தாற் செவ்வே
யண்ணியவுத் தமமதம மத்திமமாஞ் சாதரங்க மணிவோர் விச்சை
புண்ணியவான் கன்னிபயி ருளபூமி முதலான புனித தானம்
பண்ணியதும் பரிமேத யாகமுதன் மகம்புரிந்த பயனுஞ் சேர்வார்.

இ-ள். திண்ணிதாய் மேலே ஒளிவிட்டால் உத்தமமும், கீழே ஒளிவிட்டால் அதமமும், பக்கங்களில் ஒளிவிட்டால் மத்திமமுமாகும். சாதரங்க தரிப்போர், வித்தை - பசு - கன்னிகை - பயிருள்ளகழனி முதலிய தானங்கள் செய்தபயனும் அசுவமேதமாதி யாகங்கள்செய்த பயனும் பெறுவர்—எ-று. (௬௪)

குருவிந்தந் தரிபபவர்பார் முழுதுமொரு குடைநிழலிற் குளிப்ப வாண்டு
திருவிந்தை யுடனிருப்பர் சௌகந்தி கந்தரிபபோர் செலவங் கீர்த்தி
மருவிந்தப் பயனடைவர் கவாங்கந்தான் றரிப்போர்தம் மனையிற் பாலும்
பெருவிந்த மெனச்சாலி முதறபண்ட முடன்செல்வப் பெருக்கு முண்டாம்.

இ-ள். குருவிந்தந்தரிப்பவர் உலகமுழுவதும் அரசாட்சிசெய்து திருமகள் வீரமகள் இருவரோடு கூடிவாழ்வர். சௌகந்திகந்தரிப்பவர் செல்வம் புகழ்களை அடைவர். கவாங்கந்தரிப்பவர் பால் நெல்முதலிய செல்வப்பெருக்கினை அடைவர்.—எ-று. ()

எள்ளியிடு குற்றமெலா மிகந்துகுண னேர்ந்தொளிவிட் டிருள்கால் சீத்துத்
தள்ளியவிச் செமபதும ராகமது புனைதக்கோர் தம்பா லெனைத்
தெள்ளியமுக் துள்ளிட்ட பன்மணியும் வந்தொருங்குஞ் செய்யா ளோடு
மொள்ளியசெல் வங்கல்வி யொபபநெடும் பாற்கடலின் ஞெங்கு மாலோ.

இ-ள். இகழப்பட்ட குற்றங்கள் அகன்று குணங்கள்பொருந்தி ஒளிவீசி இருளைப் பற்றறகெடுத்துபபோக்கிய இசசெம்மாணிக்கத்தை அணிபவாமாட்டு வேனைய இரததினங்களும் வந்துசேரும் (அனறித்) திருமகளொடுஞ் செல்வங் கல்விகள் சமமாகப் பாற்கடலபோல வளரும்.—எ-று. (௬௫)

அறுசீரடியாசிரியவிருத்தம்.

பிறநிறச சார்பு புள்ளி புள்ளடி பிறங்கு கீற்று
மறுவுறு திராச மென்ன வகுத்தவைங் குற்றந் தள்ளி
யறைதரு பணபு சான்ற வரதன மணியும் வேந்தன
செறுநாவா லூறற மின்றிச செருமகட் கனப னாவான்.

இ-ள். அந்நியநிறஞ்சார்தல், விந்து, காகபாதம், தாரை, ஒளிசலித்தல் என்னும் ஐங்குற்றங்களையும் அகற்றி (நூலிற்) கூறும் குணமிகக இரததினங்களைத தரிக்கும் போரசன், பகைவர் படைகளால் ஊறுபாடினறி வீரமகளுக்கு நண்பினன் ஆவான்.—எ-று.

குறுநிலக் கிழவ னேனு மவன்பெருங் குடைக்கீழ்த் தங்கி
மறுகுநீர் ஞால மெல்லாம் வாழுமற் றவனைப் பாம்பு
தெறுவிலங் கலகை பூதஞ் சிறுதெய்வம் வறுமை நோய்தீக்
கறுவுகொள் கூற்றச் சீற்றங் கலங்கிட வாதி யாவாம.

இ-ள். (அவ்விரத்தினங்களை அணிபவன்) சிற்றரசனாயினும் அவனது குடைநிழலில் உலகமுற்றும் தங்கிவாழும். அவனைப் பாம்பும் கொல்லுமிருகமும் பேயும் பூத

ரும் சிறிய தெய்வங்களும் வறுமையும் நோயும் தீயும் கோபங்கொண்ட இயமனுஞ் சினமும் வருத்தஞ் செய்யமாட்டா.—எ-று. (௪௫)

முன்னவ ரென்ப கறரோர் வச்சிர முந்நீர் முத்த
மன்னவ ரென்ப துப்பு மாணிக்கம வணிக ரென்ப
பின்னவிர் புருட ராகம் வயிடூயம் வெயிரகோ மேதம
பின்னவ ரென்ப நீல மாகதம் பெற்ற சாதி.

இ-ள். கற்றவா, வயிரமும் முத்தும் பிராமணசாதியென்பர். பவளமும் மாணிக்கமும் க்ஷத்திரியசாதியெனபா. புருடராகமும் வைடூரியமும் கோமேதமும் வைசிய சாதியென்பர். நீலமும் மரகதமும் சூத்திரசாதியெனபர்.—எ-று. (௪௬)

பார்த்திவர் மதிக்கு முததம பளிங்கன்றிப் பச்சை தானுஞ்
சாத்திகங் துகிரமா ணிககய கோமேதந தாமே யன்றி
மாத்திகழ் புருட ராகம் வயிடூயம வயிரந் தாமு
மேத்திரா சதமா நீலந் தாமத மென்ப ராய்ந்தோா.

இ-ள். முத்தும் பளிங்கும் பச்சையும சாத்துவிக குணமுடையனவாம். பவளமும் பதுமராகமும் கோமேதமும் புருடராகமும் வைடூரியமும வயிரமும் இராஜதகுணமுடையனவாம. நீலம தாமதகுண முடையதாம் எனபா.—எ-று. (௪௭)

இனையவை யளந்து கண்டு மதிக்குநா ளெழுமான் பொற்றேர்
முனைவனுண் முதலா வேழே முறையினுற் பதும ராகங்
கனைகதிர் முத்தந துப்புக் காருடம புருட ராகம்
புனையொளி வயிர நீல மெனமனுா புலமை சான்றோர்.

இ-ள். சப்தாவென்னுங குதிரைபூட்டிய அழகிய தேரையுடைய சூரியனுக்குரிய ஆதிவாரமுதல் ஸ்திரவார மீறாகிய ஏழுநாட்களே முறையாக மாணிக்கமுதல் நீல மீறாகிய இவைகளை அளவிட்டு ஆராயுங்காலம் எனறு கூறுவர்.—எ-று. காருடம் பச்சை.

வெய்யவன் கிழமை தானே மேதக மணிக்கு மாகு
மையறு திங்கடானே வயிடூய மணிக்கு மாகு
மையற விவையொன் பானுமாய்பவ ரகமபு றம்பு
துய்யரா யறவோ ராயமுன் சொன்னநா ளடைவே யாய்வர்.

இ-ள். வெளி. ஐபம், யென்பது ஐ யெனக கடைக்குறை யாயிற்று. (௪௮)

அலரியம பதுமஞ் சாதி யரத்தவா யாமபல் கோடல்
வலலிசேர் மௌவற போது நூறறிதழ் மரைகா லேய
மெல்லிதழ்க கழுநீா பேழ்வாய வெள்ளைமந் தார மின்ன
சொலலிய முறையால வணடு சூழத்தம் முடிமேற சூடி.

இ-ள். செங்கமலமலர், சிறுசண்பகமலர், செவ்வாம்பன்மலா, செங்காநதண மலர், மலலிகைமலர், நூறிதழ்களுடைய வெண்டாமரைமலர், மரமஞ்சண்மலர், கழுநீர் மலர், வெள்ளைமந்தாரமலர் இவ்வொன்பதையும் (மாணிக்கமுதலாகிய ஒன்பது மணிகளுக்கும்) முறையே (உரியனவாககொண்டு) தங்கள் சிரமேற்சூடி.—எ-று. (௫0)

தலத்தினைச் சுத்தி செய்து தவிசினை யிட்டுத் தூய
நலத்துகில் விரித்துத் தெய்வ மாணிக்க நடுவே வைத்துக்
குலத்தமுத் தாதி யெட்டுங் குணதிசை முதலெண் டிக்கும்
வலப்பட முறையே பானு மண்டல மாக வைத்து.

இ-ள். வெளி. குணதிசை - கிழக்குத்திசை. பானு - சூரியன். (௫௧)

அன்புறு பதும ராக மாதியா மரத னங்க
ளொன்பதுங் கதிரோ னாதி யொன்பது கோளு மேற்றி
முன்புரை கமலப போது முதலொன்பான் மலருஞ் சாத்தி
யின்புற நினைந்து பூசை யினன்முதல வழாது செய்தல்.

இ-ள். விரும்பப்பெற்ற மாணிக்கத்திற்கு ஆதித்தனும், முத்துக்குச் சந்திரனும், பவளத்திற்குச் செவ்வாயும், பச்சைக்குப் புதனும், புருடராகத்திற்கு வியாழமும், வயிரத்திற்கு வெள்ளியும், நீலத்திற்குச் சனியும், கோமேதத்திற்கு இராகுவும், வைடூரியத்திற்குக் கேதுவும் ஆகக்கொண்டு அம்மணிகளில் அக்கோள்களை ஆவாகனஞ் செய்து, செந்தாமரை மலர்முதலிய ஒன்பதுஞ் சாத்தி அவ்வாதித்தன்முதலியவற்றைத் தியானித்து விதிப்படிபூசைசெய்க.—எ-று. (௫௨)

தக்கமுத் திரண்டு வேறு தலசமே சலச மென்ன
விக்கதிர் முத்தாந் தானம பதின்மூன்று சிப்பி யிப்பி
மைக்கரு முகில் வேய பாம்பின் மத்தகம் பன்றிக் கோடு
மிக்கவெண் சாலி நீர்வாழ் மீன்றலை வேழக் கன்னல்.

கரிமருப் பகல்வாய் மான்கை கற்புடை மடவார் கண்ட
மிருசிறைக் கொக்கின் கண்ட மெனக்கடை கிடந்த மூன்று
மரியன வாதிப் பத்தி னிறங்களு மணங்குந் தங்கட்
குரியன நிறுத்த வாறே யெனவு முறைபடக் கேண்மின்.

இ-ள். முத்து, தலசம சலசம் என்று இருவகைப்படும். இம்முத்துப் பிறக்கும் இடம் - சிப்பி, சங்கு, முகில், மூங்கில், பாம்பின்படம், பன்றிக்கொம்பு, வெண்ணெற்பயிர், மீன்றலை, வேழக்கரும்பு, யானைக்கொம்பு, சிங்கத்தின் புயம், கற்புடை மகளிரது கழுத்து, கொக்கின்கழுத்து, என்னும் பதின்மூன்றும். இறுதியிலுள்ள சிங்கத்தின் புயமுதலிய மூன்றும் அரியனவாம். முதலிலுள்ள பத்தின்நிறம் தேவதைமுதலியவும் முறையே சொல்லக் கேளுங்கள்.—எ-று. தலசம்-நிலத்திற் பிறப்பது. சலசம் - நீரிற்பிறப்பது. சிப்பி, சங்கு, முகில், மீன் இவை நீரின் சம்பந்தமுடையன. மற்றவை நிலத்தின் சம்பந்தமுடையன. (௫௩)

சேடுசேர் மதியின் வெண்மை நிறத்தது சிப்பி முத்தங்
கோடுகொள் முத்தும் வெள்ளை நிறத்தது கொண்மூ முத்த
நீடுசெம் பரிதி யன்ன நிறத்தது கிளைமுத் தாலி
பீடுசா னிறத்த ராவின் பெருமுத்த நீலத் தாமால்.

இ-ள். சிப்பிமுத்தம் ஆகாயத்திற் செல்லுஞ் சந்திரன்போலும் வெண்ணிறமுடையது சங்குமுத்தமும் வெண்ணிறமுடையது முகில்முத்தம் செஞ்ஞாயிறுபோலும் நிறமுடையது மூங்கில் முத்தம் பெருமையமைந்த கல்மழைபோலும் நிறமுடையது

பாம்பு முத்தம நீலநிறமுடையது.—எ-று. நிறத்தது நீலத்தது என்பன இடைக் குன்றயாய் நின்றன. (௫௫)

ஏனமா வாரஞ் சோரி யீர்ஞ்சுவைச் சாலி முத்த
மானது பசுமைத் தாகும் பாதிரி யனைய தாகு
மீனது தரளம் வேழ மிரண்டினும் விளையு முத்தந்
தானது பொனனின் சோதி தெய்வதஞ் சாற்றக் கேண்மின்

இ-ள். பனறிமுத்தம் உதிரநிறமுடையது வெண்ணெல்முத்தம் பசியநிறமுடையது மீன்முத்தம பாதிரிமலாபோலும் நிறமுடையது யானைமுத்தமும் வேழக்கரும்பு முத்தமும் பொனனிறமுடையன (இனித்) தெய்வங்களைச் செப்பக் கேளுங்கள்—எ-று. (௫௬)

பான்முத்தம் வருணன் முத்தம் பகன்முத்த மழலோன் முத்த
மான்முத்த நீல முத்த மாசறு குருதி முத்தங்
கான்முத்தம் பசிய முத்தங் காலன்றன் முத்தந் தேவர்
கோன்முத்தம் பொன்போன் முத்தங் குணங்களும் பயனுஞ் சொல்வாம்.

இ-ள். வெள்ளியமுத்தங்கள் வருணனுக்கும் சூரியன்போலுமுத்தங்கள் அக்கினிக்கும் நீலமுத்தங்கள் திருமாலுக்கும சிவந்தமுத்தங்கள் வாயுவுக்கும் பசியமுத்தங்கள் இயமனுக்கும் பொன்போலுமுத்தங்கள் இந்திரனுக்கும் உரிய முத்தங்களாம் (இனிக்) குணமும் பயனும் கூறுவாம்.—எ-று. (௫௭)

ஒடுக்கமி லாத சோபை யுருட்சிமா சின்மை கையா
லெடுத்திடிற் றிண்மை பார்வைக் கின்புறல் வெடிப்பி லாமை
யடுத்திடு குணமா றின்ன வணியின்மூ தணங்கோ டின்மை
விடுத்திடுந் திருவந் தெய்தும் விளைந்திடுஞ் செல்வம் வாழ்நாள்.

இ-ள். விரிந்த ஒளி உருட்சி (காற்றேறு,மண்ணேறு,கல்லேறு,நீர்நிலை என்னுங்) குற்றமில்லாமை, திண்மை கண்ணுக்கு இனிமை வெடிப்பின்மை ஆகியகுணங்கள் ஆறு. இப்படிப்பட்ட முத்துக்களை அணிந்தால் மூதேவியொடு வறுமையும் நீங்கும், இலக்குமி சேர்வள் செல்வமும் ஆயுளும் அபிவிர்த்தியாம்.—எ-று. (௫௮)

மாசறு தவத்தோ னென்பும் வலாசுர னென்பும் வீழ்ந்த
கோசலங் கலிங்க நாடு கோளிலா மதங்க தண்டங்
காசறு மிமய வெற்பு கவினுமா ராட்டி ரந்தான்
பூசலார் சௌவீ ரஞ்சொல் புண்டர மகத தேயம்.

இ-ள். ததீசிமுனிவரது எலுமபும் வலாசுரனது எலும்பும் வீழ்ந்த கோசலதேசம் கலிங்கதேசம் மதங்கதேசம் இமயமலை மாராட்டிரதேசம் சௌவீரதேசம் புண்டரதேசம் மகததேசம்.—எ-று. பூசல் - போர். (௫௯)

இவைகளின் வாகை மஞ்ச ளியன்மௌவல் வெண்மை செம்மை
செவையுறு கார்நீ லம்பொன் சேர்நிற வயிரந் தோன்றுங்
குவைபடு வாழை வாகை கூறுவேய் மலரோ போலு
மவையரி தெய்வம் வெண்மை யறுகோண மகவான் றேவாம்.

இ-ள். (என்னும்) இத்தேசங்களிலே(முறையே) வாகைமலர் மஞ்சள்மலர் மல்லிகைமலர் இவை (போன்றநிறமும்) வெள்ளை சிவப்பு கறுப்பு நீலம் பொன் ஆகிய இந்நிறமும் உள்ள வயிரங்கள் தோன்றும். வாழைமலர் வாகைமலர் பூநூல்மலர் இவை போன்ற நிறவயிரங்களுக்கு விஷ்ணு தேவதையாம். வெள்ளைநிறமும் அறுகோணமுமுடைய வயிரங்களுக்கு இந்திரன் தேவதையாம.—எ-று. இயல்-பொருந்திய. குவை-கூட்டம். (௬௦)

வேறு.

வண்டு நெய்தல் வயிரமிய மன்றே வதையா மிலவுபலா
சண்ட வாயு கோங்குமல ரலையார் வருணன றேவதையா
மண்டு நீரி னிறவயிர மதியாங் கோப மாதித்தன்
றுண்ட வழலவச் சிரந்தனக்குச் சுடரு மங்கி தெய்வதமாம்.

இ-ள்.வண்டு நெய்தல்மலர் இவைபோனறநிற வயிரஙகளுககு இயமன் தேவதையாம். இலவமலர் பலாசமலா இவைபோன்ற நிற வயிரஙகளுககு ஆகாயததை இடமாகவுடைய வாயு தேவதையாம். கோங்குமலர்போன்ற நிற வயிரததுககு வருணன் தேவதையாம். நெருங்கிய நீர்போனற நிற வயிரத்துககுச் சந்திரன் தேவதையாம். இந்திரகோபம்போன்ற நிறவயிரத்துக்குச் சூரியன் தேவதையாம். அக்கினித்துண்டம் போன்ற நிற வயிரததுக்கு அக்கினிதேவதையாம்.—எ-று. (௬௧)

படிக முயற்கண் கதலியிதழ் பதமாங் கட்கம் போன்றவிரு
மடிவில வயிர முறைமையினுன் மறையோர் முதனாற் சாதித்தா
மடைவி னணிக வவரறவோ ரனைத்தும் புனைக கோபம்போ
லுடைய குணந்தா னிலேசதா யொளியாய்த் தெளிவா வதுசிறப்பாம்.

இ-ள். படிகம்போன்ற வயிரம், பிராமணசாதியாம். முயற்கண்போன்ற வயிரம், க்ஷத்திரியசாதியாம். வாழைக்குருத்துப்போன்ற வயிரம், வைசியசாதியாம். கத்திபோனற வயிரம், சூத்திரசாதியாம். முறையே அவ்வவ் வருணத்தார் அவ்வவ் வயிரங்களை அணியககடவர். பிராமணர் எல்லாவயிரஙகளையும் அணியக்கடவர். இநதிரகோபமபோன்ற குணமுடைய வயிரம் இலேசாய் ஒளியும் தெளிவுமுடையதா யிருந்தாற் சிறப்புடையதாம்.—எ-று. (௬௨)

அருக்க னதற்குத் தெய்வதமா மளவில் விலைய தாமதுசேர்ப்
பெருக்க வரசா தமககுவென்றி பிணியின் மைகளை விளைவிக்குந்
திருக்கண் மகளிர் தாலியினிற் சிறிதும வயிர மழுத்தாம
லிருக்க வற்ப நிறமுதலைந் தேத மிலலா வயிரமதை.

இ-ள். அந்தச் சிறந்த வயிரத்துககு ஆதித்தன் அதிதேவதையாம் அளவற்ற விலையுடையதாகிய அது அணிந்த செல்வப்பெருக்கமுடைய பேரரசர்கது வெற்றி ஆரோக்கியங்களை உண்டாக்கும். அழகிய கண்ணையுடைய மடவார் மங்கிலியத்திலே சிறிதாயினும் வயிரம் அழுத்தாம லிருககக்கடவா. அற்பநிறம், கீற்று, ஒளிசலித்தல், காகபாதம், புள்ளி என்னும் ஐங்குற்றமுமில்லாத வயிரத்தை.—எ-று. (௬௩)

வேறு.

குறுநிலத் தரசுந் தாங்கிற் குறைவுதீர் செல்வ மெய்தி
யுறுபகை யெறிந்து தன்கோன் முழுதுல கோச்சிக் காக்கும்
வறுமைநோய் விலங்கு சாரா வரைந்தநா ளன்றிச் செல்லுங்
கறுவுகொள் கூற்றம் பூதங் கணங்களு மணுகு செய்யா.

இ-ள். சிற்றரசனும் அணிந்தால் நிறைந்த செல்வம்பெற்றுப் பெரிய பகைவரையும் வென்று தனது செங்கோல் உலகமுற்றுஞ் செலுத்திக் காப்பன். (அவ்வேளை) வறுமையும் நோயும் மிருகமும் அடையா. வரையறுத்த நாளில் அன்றி (இடையிலே) கோபமுள்ள இயமனும் பூதம் பிசாசுமுதலிய கூட்டங்களும் வருத்தஞ்செய்யா.—எ-று.

மாமணி மரபுக் கெல்லாம் வயிரமே முதன்மைச் சாதி
யாமென வுரைப்பர் நூலோ ரதிகம்யா தென்னி னேனைக்
காமரு மணிகட் கெல்லாந் தமரிடு கருவி யாமத்
தூமணி தனக்குந் தானே தொளையிடுங் கருவி யாகும்.

இ-ள். இரத்தினவிலக்கண நூலின்வல்லார், இரத்தின மரபுகள் அனைத்திற்கும் வயிரமே முதன்மையுடைய சாதியெனக் கூறுவர். (அங்ஙனம்) மேம்பட்டது யாது காரணத்தால் எனின் அழகிய ஏனைய இரத்தினங்களுக்கெல்லாம் தொளையிடுங் கருவியாகிய அத்தூயவயிரம் தனக்குந் தமரிடுங் கருவியாம (ஆதலால்).—எ-று. (௬௫)

மரகதத் தோற்றங் கேண்மின் வலாசுரன் பித்தந் தன்னை
யிரைதனக் காகக் கௌவிப் பறந்தபுள் ளீர்ந்தண் டிலவித்
தரைதனிற் சிதற வீழ்ந்து தங்கிய தோற்ற மாகு
முரைதரு தோற்ற மின்னும் வேறுவே றுள்ள கேண்மின்.

இ-ள். மரகதத்தோற்றத்தைக் கேளுங்கள் வலாசுரனது பித்தத்தைத் தனக்கு இரையாகக் கௌவிப் பறந்த கருடன மிகத்தண்ணிய டிலவிதேயத்திற் சிதறுதலால் வீழ்ந்து தங்கிய (இடங்களில்) உற்பத்தியாம். இன்னுமம கூறுகின்ற (அம்மரகதத்) தோற்றம் வெவ்வேறாக வுள்ளவற்றையும் கேளுங்கள்.—எ-று. (௬௬)

விதிர்த்தவே லனைய வாட்கண் வினதைமா தருணச் செல்வ
னுதித்தவான் முட்டை யோட்டை யுவணவேற் றரையில் யாப்பக்
கதிர்த்தவோ டரையிற் றப்பி வீழ்ந்தொரு கடல்சூழ் வைப்பி
னுதித்தவா றுரு மின்னு முண்டொரு வகையாற் றோற்றம்.

இ-ள். அசைத்தலுடைய வேற்படைபோன்ற ஒளிபெற்ற கண்ணுடைய வினதை என்பவள் அருணன்தோன்றிய மேலாகிய முட்டையின் ஓட்டைக் கருடனது அரையிற்கட்ட அது தவறிவீழ்ந்த ஓரிடத்தில் உதித்தவிதம் ஒன்றாகும். இன்னும் தோற்றம் ஒருவகையால் உண்டு.—எ-று. வினதை, தக்கன்புத்திரியும் காசியபமுனிவர் பத்தினியுமாயுள்ளவள். (௬௭)

முள்ளரை முளரிக் கண்ணன் மோகினி யணங்கா யோட
வள்ளரை மதியஞ் சூடி மந்தர வரைமட் டாகத்
துள்ளரி யேறு போலத் தொடர்ந்தொரு விளையாட் டாலே
யெள்ளரி தாய செந்தீ யிந்தியக் கலினஞ் செய்தான்.

இ-ள். (திருப்பாற்கடல் கடைந்து அமிர்தந்தோன்றியபோது அசுரர் பொருட்டு மோகினியுருக்கொண்ட) விஷ்ணு அம்மோகினிப் பெண்ணையோடச் சிவபிரான் மந்தரமலையளவும் ஆண்சிங்கம்போலப் பின்றொடர்ந்து ஒரு திருவிளையாட்டினுற் பழிப்பற்ற செந்தீமயமாகிய இந்திரியத்தைச் சிந்தினர்.—எ-று. வள் - வளம். காமதகனொன்பது தோன்ற, விளையாட்டாலே என்றார். (௬௮)

அப்பொழு தமல வித்தி லரிகர குமரன் கான
வைப்புறை தெய்வ மாக வந்தன னந்த விந்து
துப்புறு கருடன் கௌவிக் கட்ற்கரை துருக்க நாட்டிம
பப்புற விடுத்த வாறே பட்டது கலுழப் பச்சை

இ-ள். அக்காலத்தே நிருமலமாகிய அந்த விந்துவிலே ஐயனார் வனத்தில் வசிக்கும் தேவதையாகத்தோன்றினார். அவ்விந்துவை வலிய கருடன் கௌவிக் கட்ற்கரையினும் துருக்கதேயத்தும் பரவவிடுதத வழியிலே கருடப்பசசை தோனறியது.—எ-று. கரையினும் உம்மை தொகை. (௬௯)

வேறு.

காடமே சுப்பிரமே காளமெனக் குணமூன்றாங் கருடப் பச்சைக்
கீடறுகி னிதழ் நிறத்த காடமது சாதியினு விருவே றாகுஞ்
சாடரிய சகுணமெனச் சதோடமென வவையிரண்டிற சகுண மாறாம்
பீடுபெறு காடமொடு முலலசிதம் பேசலம்பித தகமே முத்தம்.

இ-ள். கருடப்பச்சைக்குக் காடம், சுப்பிரம், காளம் எனக குணம் மூன்றும். அம்மூன்றுள்ளே பெருமைபெற்ற அறுகின் இதழ் நிறத்தையுடைய காடம், கெடுதலில்லாத சகுணம் சதோடம் என்று இரணடு சாதியாம். அவ்விரணடிலே சகுணம் அறுவகைப்படும். காடமும் உல்லசிதமும் பேசலமும் பித்தகமும முத்தமும் —எ-று (௭0)

புல்லரிய பிதுகமென விவையாறிற் காடமது புல்லின் வண்ண
முல்லசித மெலிதாகும் பேசலமே குளச்செநெலொண் ணுதியே போலு
மல்லடரும் பித்தகமே பசுங்கிளியின் சிறைநிறத்த தாகு முத்தந்
நல்லிநிறம் பிதுகமரை யிலையினிறஞ் சதோடத்தின் குணமைந தாகும்.

இ-ள். அடைதற்கரிய பிதுகமுமென. இவையாறிலே காடம், புல்லுப்போலும் பசியநிற முடையதாம். உல்லசிதம, புல்லினிறததோடு மென்மையுடையதாம. பேசலம், செந்நெற்பயிரி னுனிபோலும் நிறமுடையதாம. பித்தகம, கிளிச்சிறைபோலும் நிறமுடையதாம். முத்தம், துளசியிலைபோனற நிறமுடையதாம. பிதுகம, தாமரையிலைபோன்ற நிறமுடையதாம். சதோடத்தின் குணம் ஐவகைபபடும்.—எ-று. பல்வளம். (௭௧)

தோடலே சாநவிதமே துட்டமே தோடமூர்ச சிதமே வெயய
தோடலே சத்தினொடு சூழ்மந்த தோடமெனத் தொகுத்த வைந்திற்
தோடலே சாங்விதஞ்சம் பிரவிலையா மலரியிலை துட்ட மாகுந
தோடதாங் கலலாரந் தோடமூரச் சிதமுளரி தோட லேசம

இ-ள். தோடலேசாநவிதம் துட்டம தோடமூர்சசிதம தோடலேசம மந்ததோடம் என (அங்ஙனம) தொகுத்த ஐந்தில், தோடலேசாங்விதம் - எனுமிச்சையிலைபோலு நிறமுடையதாம. துட்டம் - அலரியிலைபோலு நிறமுடையதாம. தோடமூர்ச்சிதம்-நீலமலரின் இதழ்போலு நிறமுடையதாம். தோடலேசம் - தாமரையிலைபோலு நிறமுடையதாம்.—எ-று. (௭௨)

மந்ததோ டங்கலப மயிலிறகி னிறமாமிவ் வகுத்த தோடஞ்
சிந்தியா துதகுண மணியணிவோர் நாற்கருவிச் சேனை வாழ்நா
ளுந்தவாழ் வார்வலன்க ணரன்கண்டி விடமிவற்று யுறன்மா நீல
மிந்திரநீ லம்மெனவு மாநீல மெனவும்வே றிரண்டுண டின்னும்.

இ-ள். மந்தநோடம் - மயிலிறகுபோலு நிறமுடையதாம். வகுத்துக்கூறிய இத்தோடங்களின்றி நீங்காத குணமுடைய மரகதமணியை அணிபவர் நால்வகைச் சேனைகளும் ஆயுளும் அபிவிர்த்தியாக வாழ்வார். வலன்கண்ணிலும் சிவபிரானது திருமிடற்றின் விடத்திலும் உண்டான நீலம் மகாநீலமாம். இன்னும் இந்திரநீலம் மாகநீலம் என்று இரண்டு உண்டு.—எ-று. (௭௩)

முந்தியவிந் திரநீலம் விச்சுவரூ பனைமகவான் முடித்த நாளி
னந்தியடு பழிதவிர்ப்பான் புரிந்தபரி மேதமதை நன்கு முற்றி
யுந்துறுகா லம்மேக வூாதியங்க மாங்கண்ணி னொழுகும் பீளை
சிந்தியவாற் றிடைப்படுமே னையநீலத் தோற்றந்தான் செப்பக் கேண்மின்.

இ-ள். முற்படக்கூறிய இந்திரநீலம், விச்சுவரூபனை இந்திரன் கொன்றகாலத்தில் உண்டாகி வருத்திய கொலைப்பாவத்தை ஒழிக்கும்பொருட்டுச் செய்த அசுவமேதத்தை முடித்திருக்கும்பொழுது அவ்விந்திரனது கண்ணினின்றும் ஒழுகியபீளை சிதறிய வழியிலே தோன்றும். ஏனைய மகாநீல வுற்பத்தியைக் கூறக்கேளுங்கள்.—எ-று. (௭௪)

சஞ்சையாம் பகற்கடவுண் மனைவியவன் கனலுடலந் தழுவ லாற்றா
தஞ்சுவா டன்னிழலைத் தன்னுருவா நிறுவிவன மடைந்து நோற்க
விஞ்சையா லறிந்திரவி பின்றொடர மாப்பரியா மின்னைத் தானுஞ்
செஞ்செவே வயப்பரியாய் மையல் பொறு திந்தியத்தைச் சிந்தினானே.

இ-ள். சஞ்சை என்னும் பெயருடைய சூரியன்மனைவி அந்நாயகனது அக்கினிமயமாகிய சரீரத்தைத் தழுவமுடியாது அஞ்சித் தனது சரீரசாயையைத் தனது வடிவமாக நிறுத்தி வனஞ்சார்ந்து தவஞ்செய்ய (அதனை) ஞானத்தால் உணர்ந்து சூரியன் பின்னே தொடர (அதுகண்டு) பெண்குதிரை வடிவங்கொண்டு ஓடும் பெண்ணைச் சூரியனும் மிகச்செவ்விய ஆண்குதிரையாய் ஓடிக் காமமயக்கத்தைச் சகியாது விந்துவைச் சிந்தினான்.—எ-று. அஞ்சுவாள் முற்றெச்சம. (௭௫)

அவைசிதறும் புலந்தோன்று நீலமா நீலமிவை யணிவோர் தேவர்
நவையறுசீர் மானவரிந நகைநீலச் சாதிதனை நவிலு கிற்பாங்
கவலரிய வெண்மைசெம்மைகருமைபொன்மைகலந்திருக்கிற்கரிதாய்முற்றும்
தவலரிதா யிருக்கிலிரு பிறப்பாளர் முதன்மொழிநாற் சாதித்தாகும்.

இ-ள். அவ்விந்திரியங்கள் சிந்திய இடங்களிலே உதித்த நீலங்கள் மகாநீலங்களாம். இவைகளைத் தேவரும் சிறந்த மானுடரும அணிவார்-ஒளியுடைய இந்நீலமணியின் சாதியைக கூறுவாம். (பிறிதொன்று) பற்றுதல் அற்ற வெண்மை (சிறிது கலந்திருந்தால்)பிராமணசாதியும் செமமை (சிறிதுகலந்திருந்தால்) க்ஷத்திரிய சாதியும் கருமை பொன்மை கலந்திருந்தால் வைசியசாதியும் முற்றுங் கரியதாய்க் கெடுதலில்லாதிருந்தால் சூத்திரசாதியும் ஆம்.—எ-று. கவ்வல் இடைக்குறையாயிற்று. (௭௬)

இலங்கொளிய விந்நீல மெய்ப்படுப்போர் நலம்பெறுவ ரொழின்மா நீலந்
துலங்குவதான் பாற்கடத்தி னூறுகுணச் சிறப்படைந்து தோற்றுஞ்சோதி
யலங்கியவிந் திரநீல மிடையினிலவச் சிரப்படைபோ லவிர்ந்து தோன்றுங்
கலங்குகட லுடைவைப்பி லரிதிந்த விந்திரன்பேர்க் கரிய நீலம்.

இ-ள். விளங்கும் ஒளியுடைய இந்நீலமணிகளை உடலின் அணிபவர் நன்மை அடைவர். விளங்குவதாகிய அழகிய மகாநீலம் பசுப்பால் (நிறைந்த) குடத்திற் (போட்

டால் அப்பால்நிறத்தைக் கீழ்ப்படுத்தி) நூறுகூறு நீலகுண மேற்பட்டு ஒளிவிளக்கும் விளங்கிய இந்திரநீலம இடையே வச்சிரப்படைபோல விளங்கித் தோன்றும். இவ்விந் திரநீலம் இவ்வுலகின்கணணே அரியதாம.—எ-று. (௭௭)

மைந்துறுசெம மணிமுத்து வாள்வயிரம் பச்சையொளி வழங்கு நீல
மைந்திவைமேற கோமேத முதற்பவள மீரூக வறைந்த நான்கு
நந்தொளிக ளுடையன வாயச சிறுவேட்கை பயப்பவழ னகுசெங் குஞ்சி
வெந்தறுகண் வலனிணங்கள் சிதறுமிடைப படுவனகோ மேத மென்ப.

இ-ள். வன்மைபெற்ற மாணிககம முததம் ஒளிபொருந்திய வயிரம பச்சை ஒளிவீசும நீலம் என்னும் இவவைந்திற்குமேல் கோமேதம புருடராகம் வைரியம பவளம ஆகிய நான்குமம குறைந்த ஒளியுடையனவாகிச் சிறியபோகங்களைத் தருவனவாம நெருப்புப்போல விளஙகுஞ் சிவநத சிகையும் வெவ்விய அஞ்சாமையுமுடைய வலாசுரனது நிணங்கள் சிநதியவிடததது உண்டாகிய மணிகள் கோமேதகஙகள் எனபர்.—எ-று.

உருக்குநறு நெயத்துளிதேன் றுளிநலலான் புண்ணியநீ ரொத்துச் சேந்து
செருக்குபசும் பொன்னிறமும பெற்றழகு தூய்த் தூய்தாயத் திணணி தாகி
யிருக்குமது தரிககினிருட் பாவமபோம் பரிசுத்தி யெயதும வென்றித்
தருக்குவலன் கபம்விழுந்த விடைப்புருட ராகமொளி தழையத் தோன்றும்.

இ-ள். உருககிய நல்ல நெய்த்துளியும தேனறுளியும் சிறந்த புண்ணியருப கோமூததிரமும போன்று சிவநது உயர்ந்த பசிய பொன்னிறமும பெற்று அழகும் தூய்மையும திண்மையும் உடைய கோமேதமணிதரித்தால் கருமையாகிய பாவம்போம் சுத்தி அடையும். வலனது கபமவிழுந்தவிடததில் புருடராகம் ஒளிபெருகத்தோன் றும.—எ-று. (௭௧)

தாழ்ந்தபிலத் திழிந்தெரிபொற் கண்ணவுண னுயிர்குடிக்குந் தறுகட் பன்றி, போழ்ந்தமுழை வாயதிறநது திசைசெவிடு படநகைத்துப் பொன் போற் கக்கி, வீழ்ந்தகபம் படுதீவி லாகுமுசசி வட்டமாய் விளங்கும் பொன் போற்,சூழ்ந் தொளிவிட் டவிர்தழல்போற றெளிவெய்தி மனஙகவர்ந்து தோற் றஞ் செய்யும்.

இ-ள். ஆழியபாதலத்திலே இறங்கி (ப்பூமியைச் சுருட்டிக்கொண்டுபோன)இரணியாக்ஷனது உயிரைப்பருகிய அஞ்சாமையுடைய விஷ்ணுவாகிய பனறி பிளந்த குகை போலும்வாயைத திறந்து திக்குகளிலுள்ளார் செவி செவிடுபடுமபடி சிரித்துப் பொன் போலஉமிழ்ந்து வீழ்ந்தகபம படிநத தீவிலும(அப்புருடராகம)உண்டாகும் உச்சி வட்டமாய் விளஙகுகின்ற பொன்போல் ஒளிவீசி அககினிபோலத தெளிந்து மனததைக் கிருகித்துவிளஙகும்:—எ-று. திசை ஆகுபெயர். (௮௦)

இந்தமணி பாரியாத் திரகிரியிற் கொடுமுடியா யிலங்குந் தெய்வ
மநதரமால் வரைப்புறஞ்சூழ் மேகலையா மயனிந்த மணியி னாலே
யந்தரநா டவனகரு மரசிருப்பு மண்டபமு மமைத்தா னிந்தச்
சந்திமணி தரிப்பவரே தரியார்வெந் நிடவாகை தரிக்க வல்லார்.

இ-ள். இப்புருடராகம பாரியாத்திர கிரியிலே சிகரமாய் விளங்கும். மந்தரமலையைச் சூழ்ந்த மேகலையாகவும விளங்கும். அசுரத்தச்சன் இமமணியினால் இந்திரனது

௩கரமும் அரசிருக்கை மண்டபமும் செய்தான். இவ்வழகிய மணியைத் தரிப்பவரோ பகைவர் புறங்கொடுக்க வெற்றிமாலை தரிக்க வல்லுநராவர்.—எ-று. (அக)

வலன்மயிராம் வயிரே மிளாவிருத கண்டம்பொன மலைமேற் றிக்கு,
பலர்புகழுங் கோசக்க, மகதஞ், சிங் களா, மலயம், பார சீக,
மிலகுதிரி கூடாதி தேயங்கள் பிறதிப மெங்குந் தோற்று
மலையூழிக் கால்கலங்குங் கடல்போற்கா ரிடிக்குமமை யத்துந் தோற்றும்

இ-ள். வலாசுரனுடைய உரோமமாகிய வைரியம் இளாவிருத கண்டத்துப் பொன்மலையின் மேலைத்திசை முதலிய இடங்களிலே தோற்றும் (உலகத்தை) அலைக்கின்ற இறுதிககாலத்திலே கலக்குகின்ற கடல்போல மேகமுழங்குஞ் சமயத்திலுந் தோற்றும்—எ-று. மலயம-பொதியமலை. (அஉ)

கழையிலைகார் மயிலெருத்தம் வெருகின்கண் ணிறத்ததாய்க் காணப பட்டு
விழைவுதரு தெளிதாகிக் கரததினுக்குக் கனத்ததாய் விளங்குமீதி
லழகுபெற வலமிடமேல் கீழொளிவிட் டான்முறையே யறவோராதித்
தழைவுறுநாற் சாதிகளாந் தினமிதனைப் பூசித்துத் தரிக்க மன்னர்.

இ-ள். மூங்கிலிலை மயிலின்பிடர் வெருகின்கண் இவைகளின் நிறமுடையதாய்க் காணப்பெற்று விரும்பத்தக்க தெளிவுடையதாய்க் கனமுடையதாய் விளங்கும். இதில் வலத்தில ஒளிவிட்டால் பிராமணசாதியும், இடத்தில் ஒளிவிட்டால் க்ஷத்திரிய சாதியும், மேலே ஒளிவிட்டால் வைசியசாதியும், கீழே ஒளிவிட்டால் சூத்திரசாதியுமாம். நாள்தோறும இதனைப் பூசிதது அரசர்கள் அணியக்கடவர்.—எ-று. (அங)

வலத்தவுணன் றசைவீழ்ந்த வழிப்படுதுப் பயன்சந்தி வடிவ மாத்தென் [ன்
புலத்தவனா விதிக்குமிடத் தவனுடன்மா சிழிபுலத்தும் புயல்போல் வண்ண
வலத்தமது கைடவனாச் குறைகுருதி வழிநிலத்து மகவான் வெற்பின்
குலத்தையிற கரிசோரி சிதறிடத்தும் வந்துகுடி கொண்டு தோன்றும்.

இ-ள். வலாசுரனது மாம்சம் வீழ்ந்தவிடதது உண்டாகிய பவளமானது பிரமா சந்தியாகால வடிவமாக விருந்து பிதிர்தேவரைச் சிருட்டிக்குமிடததே அப்பிரமாவின் உடற்களங்கம் வீழ்ந்தவிடத்தும் விஷ்ணு வலியமதுகைடவரைச் சேதித்த வுதிரம் ஒழுகியவழியிலும் இந்திரன் மலையிறகை அரிந்ததனுலாகியவுதிரஞ்சிதறியவிடத்துந் தோன்றும்.—எ-று. தாயினுற் பிளக்கப்பட்ட வுடலுடைய அருணன் உதிரம் ஒழுகிய விடத்தும் என்றுவடநூல் கூறும். (அச)

அவ்வழியிற் படுபவளங் கிஞ்சுகப்பூப் பசுங்கிளிமூக் கலர்ந்த செவ்விச்
செவ்வரத்த மலாகொவ்வைக் கனிபோலுங் குணங்குற்றஞ் சேறு கோட
லெவ்வமுறப் புழுவரித்தன் முகமொடிதல் பெருமபாலு மிப்பூணேந்தல்
பெய்வளையார் தமக்கேயாந் தரிககினமகப் பேறுமுதற் பேறுண் டாகும்.

இ-ள். அவ்விடங்களிலே தோன்றியபவளத்தின்குணம், முருக்கமலர் பசிய கிளிமூக்கு விரிந்த பருவமுடைய செவ்வரத்தமலர் கொவ்வைக்கனி இவைபோலும் நிறமுடையதாம். குற்றம், சேறுநிறம்பொருந்தல் குற்றம் பொருந்தும்படி புழுவரித்தல். முகமொடிதல் இவைகளாம்.பெரிதும் இப்பவளவணிதரித்தல் பெண்களுக்கே யுரியதாம் தரித்தால் பிள்ளைப்பேறு (ஆயுள் நோயின்மை சுகம்) முதலிய பயன்கள் உண்டாகும் —எ-று. (அரு)

இரவியெதி ரெரியிறைக்குங் கல்லுமதி யெதிர்செழுநீ ரிறைக்குங் கல்லு
முரையிடுமோன் பதிலொன்றி லுட்கிடையாய்க் கிடக்குமென வொன்பான்
மணிபுனைந்து வணிகரோ ருருகியவா னவ்வாறு வடபா லேகிப்
பரவியிருந் தருச்சித்த மணிகைக்கொண் டெதிர்மதுரைப் பரனை நோக்கா. [வேறு

இ-ள். சூரியகாந்தக்கல்லுஞ் சந்திரகாந்தக்கல்லும், கூறிய நவமணிகளுள்ளே ஒருமணியின் உட்கிடையாய் அடங்குமென்று சிறந்த வைசியவேடம் பூண்ட மகாதேவர் (தனித்)தனியே நவமணிகளின் மரபுகளமுற்றும் அருளி வடதிசைநோக்கியிருந்து இரத்தினங்களை வணங்கிப் பூசித்துக் கையிற்கொண்டு மதுராபுரேசரை எதிரே நோக்கி.—எ-று. (அசு)

அஞ்சலிசெய் தகநோக்கா விக்குமர னளவிறந்த வாயுள் செல்வம்
விஞ்சுகவென் றளித்தருள விறைமகனும் விண்ணிழிந்த விமானை நோக்கிச்
செஞ்சரணம் பணிந்திருகைத் தாமரையும் விரித்தேற்றான் செல்வ நாயகர்
மஞ்சனையும் புடைநின்ற வமைச்சரையு நோக்கிமுக மலர்ந்து சொல்வார்.

இ-ள். அஞ்சலித்துத் திருவுளக்குறிப்போடு இவ்விராஜகுமாரனுக்கு ஆயுளும் செல்வமும் அளவிறந்தனவாய் ஓங்குகவென்று வாழ்த்திக் கொடுத்தருள அக்குமாரனும் இந்திரவிமானத்தை நோக்கிச் சுந்தரேசரது திருவடிகளை வணங்கி இருகரகமலங்களையும் விரித்து வாங்கினான். செல்வமுள்ள வைசியராய்வந்தருளிய சுந்தரேசர் அவ்விராஜகுமாரனையும் அருகேநின்ற அமாத்தியரையும் நோக்கித் திருமுகமலர்ந்து கூறுகின்றார்.—எ-று. மஞ்சன - மைந்தனென்பதன் போலி. (அஎ)

இம்மணியா லிழைத்தநவ முடிசூட்டி யிச்சிங்க விளவே றன்ன
செம்மறனை யபிடேக பாண்டியனென் றியம்புமெனச் செம்பொன் றூக்கிக்
கைம்மறியில் வணிகருக்கு விலைகொடுப்பான் வருவார்முன் கருணை நாட்ட
மம்மகன்மே லிரப்பியிள நகையரும்பி நின்றாரை யங்குக்காணார்.

இ-ள். இவ்விரத்தினங்களாலே புதிய மகுடஞ்செய்துசூட்டி இந்தச்சிறந்த இளஞ்சிங்கம்போன்ற குமாரனை அபிடேகபாண்டியனென்று அழையுங்களென்று (அவ்வைசியராய்வந்தவர்) கூறியருள (அவ்விரத்தினங்களுக்கு விலையறுத்த) செம்பொன்னைத் (துலையாலே) தூக்கி மானை (மறைத்த) திருக்கையுடைய வைசியருக்கு விலையாகக் கொடுக்க ஒரு மந்திரிகள்முன்பு அக்குமாரன்மீது திருவருணோக்கம் வைத்துத் திருப்புன்முறுவல் செய்துநின்ற அவ்வைசியரை அங்கே காணாதவர்களாய்.—எ-று. காணார் - முற்றெச்சம்.

ஓருருவாய் நோநின்ற வணிகேசர் விடையின்மே லுமையா ளோடு
மீருருவாய் முக்கண்ணு நாற்கரமு மஞ்சமர ரிறவா வாறு
காருருவா யெழுமிடறுங் காட்டித்தங் கோயில்புகக் கண்டா ரின்று
பாருருவாய் நின்றவணி கேசரிவ ரெனவேபின் பற்றிப் போவார்.

இ-ள். எதிரிலே ஒரு திருவுருவாய்நின்ற வைசிய சிரேஷ்டர் (ஆகாயத்திலே) இடபாரூடராய் உமாதேவியாரோடும் இருதிருவுருவாய்த் திரிநேத்திரமும் சதுர்ப்புயமும் அஞ்சுகின்ற தேவர்கள் மரியாவாறு (விடத்தையுண்டமையால்)நீலவடிவாய் எழுங் கண்டமுங்கொண்டு தந்திருக்கோயிலிலே புகும்வண்ணம் நோக்கி இப்போது (இப்) பூமியின்கண்ணே வைசிய சிரேஷ்டவடிவராய் நின்றவர் இவரென்றே, (கீர்த்தி இராஜ குமாரன் முதலாயினார்) பின்றொடர்ந்து போவாராயினர்.—எ-று. இஃது வண்ணலங்காரம். கண்டார் - முற்றெச்சம். (அகூ)

தேன்செய்த கொன்றைநெடுஞ் சடையார்முன் றாழ்ந்தெழுந்துசெங்கைகூப்பி
யான்செய்யுங் கைம்மாறு மெம்பிராற் கொன்றுண்டோ யானுமென்ன
தூன்செயுட லும்பொருளு முயிருமெனி னவையாவு முனவே யையா
வான்செய்யு நன்றிக்கு வையகத்தோர் செய்யுங்கைம் மாறுண் டேயோ.

இ-ள். சிவபிரான் சந்நிதியிலே வணங்கி எழுந்து அஞ்சலித்துத் தேவரீர்க்கு அடியேன்செய்யுங் கைம்மாறாக ஒன்றுண்டோ ஐயரோ அடியேனும் அடியேனது உடலும் பொருளும் உயிருமோவென்றால் அவையனைத்தும தேவரீருடையனவே. மேகஞ் செய்யும் நன்றிக்கு உலகத்தார் செய்யுங் கைம்மாறு இல்லையன்றே.—எ-று. தேன் செய்த - தேன் ஒழுகிய. (௩௦)

என்றுமுன் வழுத்தலுறும்விறன்மாறன்கோக்கொழுந்தைமிகல்வேல் விந்தை
மன்றுகு மிவறகுமன வாக்கிறந்த பூரணமா மதுரை நாதன்
பொன்றூரு மணிமகுடஞ் சூடமணி நல்குதலாற் புவிய நேகம்
பன்றூளு முறைபுரியத் தக்கதென வாழ்த்தினர் பல்சான்றோரும்.

இ-ள. என்று சந்நிதியிலே துதிக்கும் வீரபாண்டியனுடைய புத்திரனை (நோக்கிப்) போர்புரியும் வேற்படைதாங்கிய வீரலட்சுமிக்குத் தலைவனாகிய இவ்வரசனுக்கு மனவாக்குகளைக் கடந்த சுந்தரேசர் அழகிதாகிய இரத்தினமகுடஞ் சூடும்படி இரத்தினங்களை அருளினமையால் உலகமுழுவதும் நெடுங்காலம் (இவ்வரசன்) செங்கோல்செலுத்துகவென்று ஆன்றோர் அனைவரும் ஆசீர்வதித்தனர்.—எ-று. (௩௧)

வதிவலங் கொண்டிருநான் கிபந்தழுவப் பெற்றோங்கி யிருக்கு மட்ட
மூர்த்திவிடை யருள்பெற்று மூவாநன் மறையாசி முனிவர் கூறப [வி
பார்த்திவன்றன் பொலன்மாட மனைபுகுந்தா னிறைமணிப்பண் பாயுங்கேள்
சாத்திரரு மந்திரரு மணிநோக்கி வியப்படைந்தார் சங்கை கூர்ந்தார்.

இ-ள். துதித்துப் பிரதக்ஷிணஞ்செய்து அஷ்டகஜங்கள் தாங்கப்பெற்ற (விமானத்தில்) வீற்றிருக்குஞ் சொக்கலிங்கமூர்த்தி அருளிய விடைபெற்று முனிவர்கள் கெடாத நல்ல வேதங்களை ஓதி ஆசீர்வதிக்க இராஜகுமாரன் பொன்மாடஞ்சூழ்ந்த தனது அரமனையிற் புகுந்தான் நவமணிகளின் நிறைந்த குணங்களை ஆராய்தற் கேதுவாகிய கேள்வியுடைய நூலின் வல்லாரும் ஏனைய மந்திரிகளும் மணிகளை நோக்கி அதிசயமுற்று ஐயங்கொண்டவர்களாய்.—எ-று. அடைந்தார் கூர்ந்தார் முற்றெச்சங்கள். (௩௨)

ஷை வேறு.

வேளென வந்த நாய்கர் சுந்தர விடங்க ராஞ
ளுள்களுங் கோளும பற்றி நவமணி யாக்கி னாரோ
தாள்களுந் தோளு மார்புங் கரித்தநீ ளுரகமீன்ற
வாள்விடு மணியோ வீந்தார் யாதென மதிக்கற் பாலேம்.

இ-ள். முருகவேளென்று சொல்லும்படி வந்த வைசியர் பேரழகினையுடைய திருவாலவாயீசரானால் நக்ஷத்திரங்களையும் கிரகங்களையும் அகப்படுத்தி நவமணிகளாக்கி (க் கொடுத்தருளி).னாரோ புயமுதலியவற்றிற் பூண்ட பாம்புகள் உமிழ்ந்த ஒளிவிடு மணிகளைக் கொடுத்தருளினாரோ (இவற்றுள்) யாதென்று எண்ணுதற் பகுதியுடையேம்.—எ-று. (௩௩)

இந்திரக் கடவு ளூட்டு மிமமணி யரிய வென்று
மந்திரக் கிழவர் நல்கி மயனினு மாண்ட கேள்வித்
தந்திரக் கனகக் கொல்லர்க் குவப்பளா ததும்ப வீசிச்
செந்திரு மார்பினற்குத் திருமணி மகுடஞ் செய்தார்.

இ-ள். இந்திரனது அமராவதி நகரத்தும் இம்மணிகள் அரியனவென்று சொல்லி(ப் பின்பு) மந்திரிகள் (அவ்விரத்திநங்களைக்) கொடுத்து அசுரத தச்சனிலும் மாட்சிமைப்பட்ட(சிற்ப)நூற் கேள்வியுடைய பொற்கொலலர்க்கு வேண்டுவனவற்றை நிறையக் கொடுத்துச் செவ்விய இலக்குமி தங்கும் மார்பினையுடைய திருமாலபோன்ற இராஜகுமாரனுக்கு இரத்திந மகுடம் இயற்றினர்.—எ-று. (௩௪)

மங்கல மரபான் மாலை மணிமுடி சூட்டி நாமஞ்
செங்கணே றுயர்த்த நாயகா செப்பிய முறையால வேத
புங்கவ ரிசைப்ப வீதி வலஞ்செய்து புனிதன் பாத
பங்கய மிறைஞ்சி வேந்தன் பன்மணிக் கோயி லெய்தா.

இ-ள். (நூலிற்கூறிய) முறையால் நல்ல முகூர்த்தத்தில் (அவ்விராஜகுமாரனுக்கு) மலர்மாலைபுனைந்த இரததிநமகுடஞ் சூட்டி இடபக் கொடியை உயர்த்திய சைவசியர் அருளிய முறையால் வேதஙகளை யுணர்நத அந்தணர் அபிடேகபாண்டியனென்று நாமங்கூற (அக்குமாரன்) அரசனாகி வீதிவலமவநது சுநதரேசரது திருவடிக்கமலங்களை வணங்கி அரமனையை அடைநது.—எ-று. வேநதன் குறிபபுமுற்றெச்சம். (௩௫)

போர்மகட் குறையு ளான புயத்தபி டேகத் தென்னன்
றேர்முதற் கருவித் தானைத் தெவ்வாகீண முடியெ லாந்தன்
வார்கழற் கமலஞ் சூட மனுமுறை பைங்கூழ் காக்குங்
காரெனக் கருணை பெய்து வையகங் காக்கு நாளில.

இ-ள். வீரமகளுக்கு இருப்பிடமாகிய புயங்களையுடைய அவ்வபிடேக பாண்டியன், பகையரசர் மகுடஙகளெல்லாம் தனது நீண்ட வீரகண்டையணிந்த பாதபங்கயங்களைச் சூடும்படி பயிாகளைக்காக்கும் மேகம்போல் மனுநூல்முறையால அருள் சுரந்து உயிர்களைக் காக்குஙகால்.—எ-று. (௩௬)

எழுசீரடியாசிரியவிருததம்.

தந்தைதன் காமக் கிழத்திய ரீன்ற தனயராய்த் தனக்குமுன் னவராய்
முந்தைநா ளரசன் பொன்னறை முரித்து முடிமுதற் பொருள்கவாந் தூட்குஞ்
சிந்தைய ராகி மறுபுலத் தொளித்த தெவ்வரைச் சிலர்கொடு விடுப்ப
வந்தவர் கவாந்த தனமெலா மீள வாங்கினு னீர்ஙகதிர் மருமான்.

இ-ள். பிதாவினுடைய காமக்கிழததியாபெற்ற புத்திரராய்த் தனக்கு முன் பிறந்தவராய் முன்னாளில் இராஜபொக்கிஷத்தின் தாழைமுரித்து மகுடமுதலிய பொருள்களை அபகரிதது அஞ்சிய மனமுடையராய் அயலிடததே புகுந்தொளித்த பகைவரைச் சிலசேவகர்கொண்டுவந்து விடுப்ப வந்தவர்களிடத்தே அபகரித்த பொருள்களையெல்லாம் சந்திரன் மரபிலவநத அவ்வபிடேக பாண்டியன் திரும்பவும் வாங்கினன்.—எ-று. (௩௭)

நவமணிவிற்றபடல முற்றியது.

ஆகச் செயயுள்-௩௨௩௩.

## பதினெட்டாவது

# வருணன்விட்டகடலை வற்றச்செய்தபடலம்.

அறுசீரடியாசிரியவிருத்தம்.

காழ்கெழு கண்டத் தண்ணல் கௌரியன் மகுடஞ் சூட
வீழ்நவ மணிக ளீந்த வியப்பிது விடையோன் சென்னி
வாழ்கரு முகிலைப் போக்கி மதுரைமேல் வருணன் விட்ட
வாழ்கடல் வறப்பக் கண்ட வாடலைப் பாடல் செய்வாம்.

இ-ள். (கரிய) ஒளிபொருந்திய கண்டத்தையுடைய சுந்தரேசர் அபிடேக பாண்டியன் மகுடந்தரிக்கும்படி விரும்புகின்ற நவமணிவிற்ற திருவிளையாடல் இது. அந்தச் சுந்தரேசர் தமது முடியிலே தங்கிய கரிய மேகங்களை அனுப்பி மதுரைப்பதியின் மீது வருணன் விட்ட ஆழியகடலை வற்றச்செய்த திருவிளையாடலை (இனியாம்) பாடுவோம்.—எ-று. (௧)

சித்திரை மதியிற் சேர்ந்த சித்திரை நாளிற் றென்னன்
மைத்திரண் மிடற்று வெள்ளி மன்றுளாற் களவு மாண்ட
பத்திமை விதியிற் பண்டம் பற்பல சிறப்ப நல்கிப்
புத்தியும் வீடு நல்கும் பூசனை நடாத்த லுற்றான்.

இ-ள். (நித்திய பூசை நடாத்தும்) அபிடேகபாண்டியன், சித்திரை மாசம சித்திரை நக்ஷத்திரத்திலே சுந்தரேசருக்கு அளவிறந்த பத்தியோடு அபிடேகத்திற்குரிய மிகச்சிறந்த பல திரவியங்களைக் கொடுத்துப் போகமும் வீடுபேறும் அருளும் பூசையைச் சிவாகமவிதிப்படி நடாத்தத் தொடங்கினான்.—எ-று. (௨)

நறியநெய் யாதி யாக நறுங்குழம் பீறு வாட்டி
வெறியகர்ப் பூரநீ ராட்டி யற்புத வெள்ளம் பொங்க
விறைவனை வியந்து நோக்கி யேததுவா னெறிநீர் வைகைத்
துறைவனீ யென்கர்ப் பூர சுந்தர னேயோ வென்றான்.

இ-ள். நல்ல எண்ணெய்க் காப்புமுதல் சந்தனக்குழம்பு ஈறாக அபிடேகிப்பித்து(ப் பின்) வாசனைவீசும் பச்சைக்கர்ப்பூரங் கலந்த தீர்த்தத்தால் அபிடேகஞ் செய்வித்து அழகின்பெருக்கு மிகுதலாலே சுந்தரேசரை நோக்கி அவ்வபிடேக பாண்டியன் அதிசயித்துத் துதிக்கின்றவன் தேவரீர் என்னுடைய கர்ப்பூர சுந்தரரோ என்றான்.—எ-று. (௩)

பூசனை புரியு மெல்லைப் பொன்னகர்க் கிறைமை பூண்ட
வாசவன் வருடந் தோறும் பூசித்து வருவா னன்ன
தூசறு மனத்தான் பூசை கழிவுறு மளவுந் தாழ்த்துத
தேசமை சிறப்பார் பூசை செய்துதன் னாடு புக்கான்.

இ-ள். (இங்ஙனம்) பூசை நடாத்தும்போது இந்திரன் வருடந்தோறும் (சித்திரை மாசம் சித்திரை நக்ஷத்திரத்திற்) பூசித்து வருகின்றவன் குற்றமற்ற மனத்தையுடைய அப்பாண்டியன் பூசை முடியும்வரை தாமசித்து (ப் பின் அச்சுந்தரேசரை) அழகிய சிறப்புப்பெற்ற பூசைசெய்து தனது அமராவதியை அடைந்தான்.—எ-று. (௪)

அன்றுநீர்க் கடவுள் வேள்வி நாயக னவையத் தெய்தி
நின்றவன் றன்னோய் தீருஞ் செவ்வியி னிகழ்ச்சி தோன்றக்
குன்றவன் சிறக ரீர்ந்த கொற்றவன் முகத்தை நோக்கி
யின்றுநீ சிறிது தேம்பி யிருத்தியா லிதென்கொ லென்றான்.

இ-ள். (அடைந்த) அப்பொழுது வருணன் இந்திரனது சபையை அடைந்து நின்றவனாகித் தனது நோய்நீங்குஞ் சமயத்தின் விளக்கந் தோன்றுதலாலே அவ்விந்திரன் முகத்தைநோக்கி நீ இப்பொழுது சிறிது வருந்தியிருக்கின்றாய் ஈதென்னையென்று வினவினான்.—எ-று. (௫)

சிலைப்படு முகிலூ ரண்ணல் செப்புவா னிருடீ ரன்பின்
வலைப்படு பெருமா னெம்மான் மதுரையெம பிரானை யன்பு
தலைப்படு பூசை செய்யத் தாழ்த்ததின் றதனா லிப்போ
தலைப்படச் சிறிதெ னுள்ள மாகுல மடைந்த துண்டால்.

இ-ள். (அதற்கு) இந்திரன் கூறுவான் நிருமலமாகிய பத்திவலையிற்படும் மதுராபுரேசரை (யான) அன்பு பெறுதற்கு ஏதுவாகிய அர்ச்சனைசெய்ய இன்று தாமசித்தது அக்காரணத்தால் இப்பொழுது எனது மனஞ் சற்றே சலனப்பட வருத்தமுற்றதுண்டு.—எ-று. சிலைப்படும - இந்திரதநுசு தோன்றும். (௬)

என்னவவ் விலிங்கந் தான்மா விலிங்கமோ வென்று முந்நீர்
மன்னவன் வினவ லோடு மகபதி மொழிவான் முன்பென்
றன்னருமப ழியும வேழச் சாபமுந் தொலைத்த தன்றோ
வன்னதை யறிந்தி லாயகொ லென்னநீ ரண்ணல கூறும.

இ-ள். என்றுகூற வருணன் அச் சிவலிங்கமூர்த்தி மேம்பட்ட சிவலிங்க மூர்த்தியோவென்று கேட்டலோடும் இந்திரன் கூறுவான. முன்னே எனது பெரும்பழியும் வெள்ளையானைச் சாபமும் (அம் மூர்த்தி) ஒழித்தாரன்றோ அவ்வதிசயத்தை நீ உணர்ந்திலையோவும் என்றுகூற வருணன் கூறுவான்.—எ-று. (௭)

அற்றது வாகிற றெய்வ மருத்துவ ராலுந் தீரச்
செற்றிட லரிதா யென்னைத் தெறும்பெரு வயிற்று நோயை
வற்றிடு மாறு தீர்க்குங் கொலலென வலாரி யைய
முற்றுநீ வினைய தென்னென் றுண்ணகை யரும்பிச் சொல்வான்.

இ-ள். அது அத்தன்மைத்தாயின் அச்சுவினி தேவராலும் முற்றக்கெடுத்தற்கு அரிதாய் என்னை வருத்தும் ஜலோதரநோயைக் கெடும்வண்ணம் (அப்பெருமான்) ஒழிப்பாரோவென்று கேட்க (அதற்கு) இந்திரன் நீ சந்தேகங்கொண்டு வினவியது என்னையென்று அகத்தில் நகைத்துக் கூறுவான்.—எ-று. (௮)

அரியய ராலுந் தீராப் பிறவிநோ யறுக்க வல்ல
பெரியவ ரிந்த யாக்கைப் பெரும்பிணி பிறவுந் தீர்த்தற்
கரியரோ வையன் செய்யுந் திருவிளை யாட்டை யின்னே
தெரியநீ சோதி யென்னத் தெண்கடற் சேர்ப்பன் சொல்வான்.

இ-ள். அரிபிரமராலும் அகலாத பிறவிப்பிணியை அகற்றவல்ல மகாதேவர் இவ்வுடற் பெருநோய் முதலியவற்றை ஒழித்தற்கு வல்லரல்லரோ அம்மகாதேவர் செய்யுந் திருவிளையாடலை இப்பொழுதே உணரும்படி சோதி (த்துப்பின் அவரைப் பூஜை செய்) யென்றுகூற (அதற்கு) வருணன் கூறுவான்.—எ-று. (௯)

கல்விற கரிந்தோ யிங்கு நான்வருங் காலை வேட்டார்க்
கெல்லையில் காம நல்குஞ் சுரபியு மின்பால் சோரப்
புல்லிய கன்று மாற்றுப் பட்டவப் போது கண்ட
நல்லசோ பனத்தா லிந்த நன்மொழி கேட்டே னென்று.

இ-ள். தேவராஜனே யான் வரும்போது விரும்பினவர்க்கு வேண்டுவனவற்றைத் தரும் பசுவும் (மடியினின்று) பாலொழுக (அப்பசுவாலே) தழுவப்பெற்ற கன்றும் வழியிலே நேர்பட்டன அச்சுப சகுனத்தினால் இந்த நல்லவார்த்தை கேட்டேனென்று கூறி.—எ-று. (௧0)

வருணனு மேகி வெள்ளி மன்றுடை யடிகள் செய்யுந்
திருவிளை யாடல் கண்டு வயிற்றுநோய் தீர்ப்பா னெண்ணி
முரசதிர் மதுரை மூதூர் முற்றுநீ யழித்தி யென்னாக்
குரைகட றன்னை வலலே கூவினு னேவினானே.

இ-ள். வருணன் சென்று சுந்தரேசர் திருவிளையாடலைக் கண்டு (பின்தன்) ஜலோதர நோயைப் போக்கக் கருதி மதுரைப்பதியை அழிப்பாயென்று கடலை விரைவாக அழைத்து ஏவினான்.—எ-று. (௧௧)

கொச்சககலிப்பா.

கொதித்தெழுந்து தருக்களிறக் கொத்தியெடுத் தெத்திசையு
மதிர்த்தெறிந்து வரைகளெல்லா மகழ்ந்துதிசைப் புறஞ்செல்லப்
பிதிர்த்தெறிந்து மாடநிரை பெயர்த்தெறிந்து பிரளயத்தி
லுதித்தெழுந்து வருவதென வோங்குதிரைக் கடல்வருமால்.

இ-ள். (ஏவியவுடனே) கடலானது கோபித்தெழுந்து மரங்கள்கெடப் பறித்தெடுத்துத் திசைகளெங்கும் ஒலித்து வீசியும் மலைகளைப் பறித்துத் திசைகளுக்கு அப்பாற்செல்லத் தூளாக்கி வீசியும் மாடவரிசைகளைப் பெயர்த்துவீசியும் முடிவுகாலத்திலே ஓங்கியெழுந்து வருதல்போல வரும்.—எ-று. (௧௨)

கந்தமலர்த் தனிக்கடவுள் கற்பத்து மழியாத
விந்தவளம் பதிக்கிடையூ றெய்தியதெம் பதிக்குமினி
வந்ததெனச் சுந்தரனை வந்திறைஞ்சி வானவருஞ்
சிந்தைகலங் கினர்வருணன் செய்தசெய றெளியாதார்.

இ-ள். பிரமகற்பத்தும் அழியாத இம்மதுரைச் செழும்பதிக்கு இடையூறு வந்துவிட்டது எங்கள் சுவர்க்கலோகத்திற்கும் இனி (அழிவு) வந்ததென்று தேவர்களும் வருணன்செய்த செய்கையை உணராதவராய் வந்து சுந்தரேசரை வணங்கி மனங்கலங்கினர்.—எ-று. (௧௩)

சூலமோ டழலேந்துஞ் சொக்கர்திரு விளையாட்டின
சீலமோ நாமிழைத்த தீவினையின் றிறமிதுவோ
ஞாலமோ வுலகமெலா மழியவரும் பேரூழிக்
காலமோ வெனக்கலங்கிக் கடிநகரம பனிப்பெய்த.

இ-ள். வெளி. சீலம் - தன்மை; செய்கையாம. திறம் - பாகுபாடு. கடி - காவல். (௧௪)

மண்புதைக்கத் திசைபுதைக்க மயங்கிருள்போல் வருநீத்தம்
விண்புதைக்க வெழுமாட வியனகரின் புறத்திரவி
கண்புதைக்க வருமளவிற் கணடரச னடுநடுங்கிப
பெணபுதைக்கு மொருபாகப பிரானடியே சரணென்று.

இ-ள். வெளி. புதைக்க - மறைய. மயஙகு - மயங்குதற்கேதுவாகிய. வியன்- பெரிய. புதைக்கும் - தங்குகின்ற சரண் - அடைக்கலம. (௧௫)

ஆலமெழுந் திமையவர்மே லடர்க்கவரும் பொழுதஞ்சு
மாலெனவுந் தன்னுயிர்மேன மறலிவரும பொழுதஞ்சும
பாலனென வுங்கலங்கிப பசுபதிசே வடியில்விழுந்
தோலமென முறையிட்டா னுலகுபுக ழுறையிட்டான்.

இ-ள். வெளி அடாக்க - நெருக்க. பாலன் - மார்க்கண்டேயர். ஓலமென - அடைக்கலமென்று. உலகுபுகழ் உறையிடல - உலகமுழுதும் புகழ் வியாபிக்கச்செய்தல். (௧௬)

முறையிட்ட செழியனெதிர் முறுவலித்தஞ் சலையென்றுக்
கறையிட்டு விண்புரந்த கந்தரசுந் தரக்கடவு
ளுறையிட்டு வருகடலைச் சுவறப்போய்ப் பருகுமெனப்
பிறையிட்ட திருச்சடையிற் பெயலுன்கும் வரவிடுத்தான்.

இ-ள். முறையிட்ட அபிடேகபாண்டியன் எதிரிலே திருப்புன்முறுவல்செய்து பயப்படாதேயென்று விடத்தை மிடற்றிலே அடக்கிக் கடவுளரைக் காத்த சுந்தரேசர் துறைகளைச் செய்துவருகின்ற கடலை வற்றும்படிபோய் உண்ணுங்களென்று சடையிலுள்ள நான்கு மேகங்களையும் அனுப்பினர்.—எ-று. (௧௭)

அறுசீரடி யாசிரியவிருத்தம்.

நிவப்புற வெழுந்த நான்கு மேகமு நிமிர்ந்து வாய்விட்
டுவர்ப்புறு கடலை வாரி யுறிஞ்சின் வுறிஞ்ச லோடுஞ்
சிவப்பெருங் கடவுள் யார்க்குந் தேவெனத் தெளிந்தோ ரேழு
பவப்பெரும் பௌவம் போலப் பசையற வறந்த தன்றே.

இ-ள். உயரவெழுந்த நான்கு மேகங்களும் கடலையுறிஞ்சின(அக்கடல்) உடனே சிவபிரானை அரிபிரமேந்திராதி தேவர்க்கும் மற்றவர்க்கும் முதற்கடவுளென்று தெளிந்தோர்களது எழுவகைத்தோற்றமாகிய பிறவிப் பெருங்கடல்போல் வற்றியது.—எ-று.

அந்நிலை நகரு ளாரும் வானவ ராதி யோருந்
தென்னவர் பிரானு மெங்கை திருவிளை யாட னோக்கிப்
பன்னரு மகிழ்ச்சி பொங்கப் பன்முறை புகழ்ந்து பாடி
யின்னறீர் மனத்த ராகி யீறிலா வின்பத தாழ்ந்தார்.

இ-ள். அப்பொழுது அனைவரும் எம்பெருமான் திருவிளையாடலை நோக்கி மகிழ்ச்சிமிகத் துதித்துத் துன்பந்தீர்ந்த மனத்தராய் முடிவில்லாத இன்பத்தில் மூழ்கினார்.—எ-று. (௧௯)

வருணன்விட்ட கடலைவற்றச்செய்தபடல முற்றியது.

ஆகச்செய்யுள்-௧௬௧௦.

---

மதுரைக்காண்ட முற்றியது.

# பரிசோதநபத்திரம்.

| பக்கம். | செய்யுள் | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| ௫ | ௧௦ | ௫ | கிரீடங் | கிரீடத்தைத் |
| ௯ | ௨௨ | ௧௧ | டார | மார்க் |
| ௧௧ | ௩௦ | ௧௦ | மகிமை | மிக்கமகிமை |
| ௧௬ | ௧௬ | ௪௦ | ஒழியுமென்னும | ஒழியுமென்பதைத் |
| ௨௧ | ௩௨ | ௬ | சங்குகளைக் | சங்குகளை( |
| ௪௯ | ௭௯ | ௬ | உதிரபோற் | உதிரமும |
| ,, | ,, | ௭ | பூஙகொதநும் | பூஙகொதநும |
| ௫௫ | ௧௦௧ | ௪ | வென்று | வென்ற |
| ௫௮ | ௩ | ௫ | தேவமகளிர் | தேவரம்பையா |
| | | | இஙஙனம, அரம்பையா அரமஙகையா என்றுவருமிடநதோறும் | தேவரமபையர்எனறுதிருத்துக. |
| ,, | ௪ | ௭ | ததிருமேனி | (ததிருமேனி |
| ௬௫ | ௨௪ | ௫ | உயர்நத | அவ்வுயர்ந்த |
| ,, | ௨௫ | ௨ | வேலெடுத்த | வேலவிடுத்த |
| ௮௪ | ௨௦ | ௩ | வார் | வார்.—எ-று. |
| ,, | ௨௨ | ௨ | ருதகிர | ருருதகிர |
| ௮௭ | ௩௭ | ௧ | அருகட்ட | அருட்கட |
| ௯௪ | ௪௫ | ௨ | றேவா | தேவர் |
| ௯௬ | ௨௬ | ௧ | தேவரர் | தேவரா |
| ௧௦௮ | ௭௭ | ௯ | ஸ்நாநன | ஸ்நாந |
| ௧௨௫ | ௨௩ | ௮ | சூழ்த | சூழ்ந்த |
| ௧௩௦ | ௪௨ | ௫ | கிரணம்போன்ற | கிரணசம்பந்த முள்ள |
| ௧௩௩ | ௮ | ௭ | கினறான் | ாத்தான் |
| ௧௩௯ | ௩௩ | ௬ | ஆடியும் | ஆடி |
| ௧௪௦ | ௩௯ | ௭ | இரத்திந | அவ்விரத்திந |
| ௧௪௫ | ௬௦ | ௭ | புகழல்லவாயிற் | புகழன்றாயிற் |
| | | | இஙஙனம் அன்று என்னும ஒருமைக்கு அல்ல என்னும் பன்மையாக முன்னும் பின்னும் வருமிடந்தோறும் | அன்றுஎன்றுதிருத்திக்கொள்க. |
| ௧௫௧ | ௮௧ | ௧ | கின்றவர் | கின்றவராய் |
| ௧௫௪ | ௧௬ | ௮ | யுண்ணவரும் | யுண்ட |
| ௧௫௬ | ௨௩ | ௪ | சிநதத் | சிந்தித் |
| ,, | ,, | ௮ | விழவும் | விழ |
| ,, | ,, | ,, | யிழக்கவும் | யிழந்து |
| ,, | ௨௪ | ௪ | தெய்வ | தெய்வத் |
| ௧௬௦ | ௪௧ | ௫ | சோந்து | சேர்ந்து |
| ௧௬௮ | ௭௦ | ௩ | மூன்ரு | மூன்று |
| ௧௭௫ | ௧௦௩ | ௯ | பதமு | கடந்து |
| ௧௮௫ | ௧௪௬ | ௧௦ | கன்மமலம் | மாயாமலம் |
| ௧௮௮ | ௧௬௧ | ௫ | முத்துக்ளைச் | முத்துகள் |

# பரிசோதனப் பத்திரம்.

| பக்கம். | செய்யுள். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|
| கஅஅ | கசுக | சு | தினைகளைச | தினைகளை |
| ,, | கசுரு | எ | உக்கிரகுமாரபாண்டியர் | உக்கிரபாண்டியர் |
| உ0கூ | உஅ | கூ | ஏ-று. | எ-று. என்றும அருளினர் சுந்தரோசா என்பது எஞ்சியது. |
| உ0சு | கச | கூ | பண்டான | யணடது |
| ,, | கரு | அ | போடடான் | போட்டது |
| உயகூ | அ | க | வருந்துங | வருந்தும் |
| உகஎ | எ | அ | தமுவஷம: | தமுஷமஹி |
| உஉக | சஉ | சு | மாமனெ | மாமனொ |
| உஉஉ | கச | ரு | (தனனைததழுவ) | தனனைத்தழு |
| உஉகூ | கச | அ | னொன்று | னொன்றுடை நூலிற் |
| உசுஎ | கூ | கசு | ஹிரெஜிரதய: | ஹிருதஜிரயம் |
| உஎஅ | கூரு | உ | நோககிக | நோக்கித (திரியும) |
| உஅக | ச | க | (வியாகிருதியும்) | (வியாகிருதியும் அநிமலகாயத் |
| உஅஎ | உரு | உ0 | ஔவத-ம | ஔவதம |
| உஅஅ | உஅ | சு | தததுவாதது | தத்துவாத்துவா. |
| உகூ0 | கூச | எ | பிரணவததைமுதலிலுடைய | பிரணவமாதி |
| உகூஉ | ,, | கசு | ஶாவஸசரம் | ஶாஸ்வசரம் |
| ,, | ,, | கஎ | ஹிரு-ப | ஹிரு-ம |
| உகூசு | ,, | ககூ | விருபினவா | விருமபினவர் |
| கூ0அ | கூஎ | கூ | பததுகளின | பததின |
| ,, | கூஅ | அ | நானகுகளாகும | நானகாகும |
| ,, | ச0 | கூ | சய்யு | செயயு |
| கூக0 | சகூ | ரு | யென்பது | எனபது |
| ,, | ரு0 | ரு | செஙகா | வெணகா |
| கூகசு | எகூ | ச | மாகநீலம் | மகாநீலம் |

உஅக-ம பக்கமுதல உஅஅ-ம பக்கம வரை பக்கத்தொகை இரட்டித்து நெடுகப்பிசகிவிட்டதால் அதைத்திருத்திக்கொள்க.